# பாரதப் போரில் பார்த்தசாரதி

டாக்டர் த. அமிர்தலிங்கம்

செல்வேள் பதிப்பகம்
B3, தாடண்டர் நகர்
வீட்டு வசதி வாரியக் குடியிருப்பு,
சைதை, சென்னை,-600015

செவ்வேள் பதிப்பக வெளியீடு
உரிமை : ஆசிரியருக்கே



முதற்பதிப்பு : டிசம்பர் 1992
I Edition : December, 1992

Tittle :
பாரதப் போரில் பார்த்தசாரதி
(Lord Krishna's Important
Role in Mahabharatha war)

Price :
விலை : ரூ. 55-00
Rupees Fifty Five Only



Publishers :
செவ்வேள் பதிப்பகம்
B-3, தாடண்டர் நகர்
வீட்டு வசதி வாரியக் குடியிருப்பு
சைதை, சென்னை-600 015.

**Chevvel Pathippagam**
B-3, Todhunter Nagar
TNHB Quarters, Saidapet,
Madras-600 015

அச்சிட்டோர் :
முவேந்தர் அச்சகம்
இராயப்பேட்டை
சென்னை-600 014.

செவ்வேள் பதிப்பக வெளியீடு
உரிமை : ஆசிரியருக்கே

முதற்பதிப்பு : டிசம்பர் 1992
I Edition : December, 1992



Tittle :
பாரதப் போரில் பார்த்தசாரதி
(Lord Krishna's Important
Role in Mahabharatha war)

Price :
விலை : ரூ. 55-00
Rupees Fifty Five Only



Publishers :
செவ்வேள் பதிப்பகம்
B-3, தாடண்டர் நகர்
வீட்டு வசதி வாரியக் குடியிருப்பு
சைதை, சென்னை-600 015.

Chevvel Pathippagam
B-3, Todhunter Nagar
TNHB Quarters, Saidapet,
Madras-600 015

அச்சிட்டோர் :
மூவேந்தர் அச்சகம்
இராயப்பேட்டை
சென்னை-600 014.

THIS BOOK

Is printed and
published with
the financial
assistance of
Tirumala-Tirupati
Devasthanams
under their scheme
"Aid to publish
religious books".

# நுழைவாயில்

சேலம் அரசினர்க் கல்லூரியில் இளங்கலைத் தமிழ்ப் மாணவனாக நான் திகழ்ந்த 1970-72 ஆண்டுகளில் ஒவ்வொரு ஆண்டும் மாதங்களில் சிறந்த மார்கழி மாதத்தில் மகாபாரத, இராமாயண இதிகாசங்களை சேலம் கருங்கல்பட்டி அருள்மிகு சித்தி விநாயகர் ஆலயத்தில் விரிவுரை செய்யும் அரிய பேற்றினை எல்லாம் வல்ல இறையருளால் நான் பெற்றேன்.

என் செஞ்சொல் விரிவுரையைக் கேட்டு இன்புற்ற என் ஊர் மக்கள் ''காவிய விரிவுரைச் செல்வன்'' எனும் பட்டமும் வழங்கி இவ்வெளியேனைச் சிறப்பித்தார்கள். அப்பொழுது என் உள்ளத்தில் கால் கொண்ட ஆசைதான் பாரதக் காவியத்தை நயம்பட விரிவுரை செய்ததைப் போலவே அதை ஒரு நூலும் ஆக்கித் தமிழ்கூறு நல்லுகம் பயன் கொள்ள வழங்கிட வேண்டும் என்பது.

காலம் ஓடியது, யான் சென்னைக்கு வந்து முதுகலைத் தமிழ் பயின்று, டாக்டர் பட்டமும் பெற்று ஒரு நல்ல பணியைத் தேடிக் கொள்ளும் முயற்சியில் என் முருகன் திருவருளை வேண்டி நின்றேன்.

எல்லாம் வல்ல முருகன் திருவருள் பொருள் சேர்க்கும் பெரும் பணிகளைப் பெறுவதை விடவும், இறையருள் சேர்க்கும் தெய்வப்பணியையே நாடுமாறு எளியேனை ஆற்றுப்

படுத்தி வந்தது. அதனால்தான் பழநிப்பாமலர் எனும் அருள் நூலை யான் 1977 இல் யாத்த போது

''அத்தனும் அன்னை மற்றும்
அன்புற வாகும் வேலோய்
சித்தரும் தேவர் நாளும்
சூழ்தரும் பழநிக் குன்றில்
பத்தியை ஊட்டும் நல்ல
புத்தியைக் கூட்டும் உன்றன்
புத்தகம் பலவும் விற்றென்
பொழுதெலாம் போற்றல் கேட்டேன்''

என்று பாடி வேண்டினேன்.

பழநி முருகன் ஒரே நேரத்தில் அரசுக் கல்லூரியில் தமிழ் உதவிப் பேராசிரியர் பணியையும், இந்து சமய அறநிலையத் துறையில் ''திருக்கோயில்'' இதழாசிரியர் பணியையும் தந்து எதைத் தேர்ந்து கொள்வது என்ற மயக்கத்தில் எனை முன் ஆழ்த்திப் பின், திருக்கோயில் இதழாசிரியர் பணியையே யான் தேர்ந்து கொள்ளுமாறும் தெளிவு செய் தனன்.

யான் 25-7-85 அன்று திருக்கோயில் இதழாசிரியர் பணி யில் சேரும் வண்ணம் என்னை ஆற்றுப்படுத்தியதில் அந் நாள் அறநிலையைத் துறையின் ஆற்றல்மிகு அமைச்சர் அருளாளர் மாண்புமிகு ஆர். எம். வீ. அவர்களுக்கும் தலையாய பங்கு உண்டு என்பதை இந்நேரத்தில் அன்புடன் தெரிவித்து அதற்காக என் மனமார்ந்த நன்றியறிதலை அவருக்கு நான் அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

யான் திருக்கோயில் இதழாசிரியர் ஆனதால்தான் 1970-ஆம் ஆண்டு முதலே என் உள்ளத்தில் ஊறிக் கொண்

டிருந்த வில்லிப்புத்தூர் ஆழ்வார் அருளிச் செய்த மகாபார தக் காவியத்தைப் ''பாரதப் போரில் பார்த்தசாரதி'' எனும் தலைப்பிட்டுத் தொடர் கட்டுரைகளாக ஒரு மூன்றாண்டுக் காலம் ''திருக்கோயில்'' இதழில் எழுத முடிந்தது.

திருக்கோயில் இதழில் இக்கட்டுரைகள் வெளி வந்த ஒவ்வொரு மாதமும் பல்லாயிரக் கணக்கான அன்பர்கள் ''மிக அற்புதம். எங்களைப் பாரத காவியம் நடைபெற்ற மிகப் பழங் காலத்திற்கே உங்கள் கட்டுரைத் தொடர் அழைத்துச் சென்று விடுகிறது. எங்கள் உள்ளங்களில் பார்த்தசாரதியும், பார்த்தனும், பார்த்தன் மகன் வீர அபிமன்யுவும், வீமனும், வீர கடோற்கஜனும், வீடுமரும், விதுரரும், விகர்ணனும், செஞ்சேற்றுக் கடனுக்காகத் தன்னையே தியாகம் செய்யும் தானசூரகர்ணனும் நீங்காத இடம் பெற்று விட்டனர். அபிமன்யு வீரப்போர் ஆற்றும் பதின்மூன்றாம் போர்ச்சருக்கமும், சயத்திரதனைப் பார்த் தன் பழிக்குப் பழிவாங்கும் பதினான்காம் போர்ச் சருக்க மும் ஆயிரம் முறை படித்தாலும் திகட்டாத அற்புதக் காவியம். தொடர்கட்டுரைகளை நூல் வடிவில் பார்க்கவும், படிக்கவும்,பாதுகாத்து வைக்கவும் பேராவலாய் உள்ளோம். உடன் நூலாக்கித் தாருங்கள்'' என்று பலப்பல அன்பர்கள் நேரிலும், அஞ்சல் வாயிலாகவும் என்னை வேண்டிக் கொண்டபோது நான் பெற்ற மகிழ்விற்கு எல்லையே இல்லை.

ஆனால் போதிய நிதி வசதி இல்லாததால் அன்பர்கள் விருப்பத்தை என்னால் உடனுக்குடன் நிறைவேற்றித் தர முடியவில்லை. 1992ஆம் ஆண்டில் திருமலை வேங்கடேசப் பெருமான் திருவருளாலும், என் மனைவியும் மக்களும் தந்த ஊக்கத்தாலும் ''பாரதப் போரில் பார்த்தசாரதி'' நூலைப் பெருமுயற்சி செய்து நூலாக வெளியிடுகிறேன்,

இந்நன்னூலுக்குத் தமிழ்ப் பெருமக்களின் ஊக்கமும் ஆக்கமும் நிச்சயம் கிட்டும் என்று நான் நம்புகிறேன். கடலுள்ள அளவும், காற்றுள்ள அளவும், மண் உள்ள அளவும் விண் உள்ள அளவும் இப்பூவுலகில் நின்று நிலவும் தகுதி இதிகாச காவியங்களுக்கே உண்டு. அக்காவியங்களால் தான் இக்காசினியில் அன்பும் அறமும் நற்பண்புகளும் மிக்க மனித வாழ்வு பெருமையடைகிறது; நிலைபேறு உடைய தாகிறது.

**''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்''**

என்பது வள்ளுவர் வாய்மொழி. அந்நிலையை நாம் அடைய நல்வழி காட்டுவனவே இதிகாசங்களின் விரிவுரைகளாக மலரும் இது போன்ற நூல்கள்.

''பாரதப் போரில் பார்த்தசாரதி'' நூல் போரின் வெறி ஊட்டும் நூல் அன்று. போரின்றிப் பூசலின்றி சகோதர ஒற்றுமையோடு, சமய ஒற்றுமையோடு எல்லோரும் இன் புற்று வாழ வழிகாட்டும் நூல்.

பதினெட்டு நாள் போரில் பதினெட்டு அக்குரோணி சேனைகள் அழிவுபட்டு கௌரவர் அணியில் கிருபன், கிருத வன்மா, அசுவத்தாமா ஆகிய மூவரும், பாண்டவர் அணி யில் பாண்டவர் ஐவரோடு பார்த்தசாரதியும் ஆக அறுவர் மட்டுமே மிஞ்சுகின்றனர். துரியோதனனும் தன் இறுதி மூச்சு நிற்கும் அந்த இறுதி நேரத்தில் போரின் கொடிய விளைவிற்குக் கலங்கிச் சமாதானமே சிறந்தது என்பதைத் தான் உணர்வதோடு உலகிற்கும் உணர்த்துகிறான்.

**''யானும் எம்பியரும் இறந்தோமேனும்**
**மானபங்கம் மறந்து உன்னெஞ்சினுக்கு**
**ஆன தம்பி அளித்தவர் தம்மொடும்**
**கோனிலம் புரக்கும் படி கூறுவாய்''**

இதுவே தன் தந்தை திருதராட்டிரனுக்குத் துரியோதனன் இறுதியில் கூறிய-தன் அனுபவத்தால் கண்டுகூறிய சமாதான அறிவுரை. உலகில் சிறந்த தானம் சமாதானமே. அதை உணர்த்தும் இந்நன்னூலை அனைவரும் கற்றுப் பயனடைய வேண்டுகிறேன்.

இந்நன்னூல் அச்சாக ஊக்கம் தந்த நண்பர்களுக்கும், முகப்போவியம் வரைந்துதவிய அருமை நண்பர் திருமிகு எம். என். இராஜா அவர்களுக்கும், சிறந்த முறையில் அச்சிட்டு உதவிய அருமை நண்பர் சிறந்த பண்பாளர் இலக்கியச்சுடர் மூவேந்தர் முத்து அவர்களுக்கும், அச்சகப் பணியாள நண்பர்களுக்கும் என் நன்றி என்றும் உரியது.

அன்புடன்,

**த. அமிர்தலிங்கம்**

# பாரதப் போரில் பார்த்தசாரதி

## 1

பன்னிரண்டு ஆண்டுக் காலம் வனவாழ்வு முடிந்து ஓராண்டுக்கால கரந்துறை வாழ்வும் முடிந்து; பாரோர் அறிய வெளிப்பட்ட பஞ்ச பாண்டவர்கள் தாம் இழந்த குரு நாட்டின் உரிமையை மீளப் பெறுவதற்காக உபப்பிலாவியம் என்ற இடத்தில் பாடி வீடு அமைத்துத் தங்கியிருக்கிறார்கள். அரவக்கொடியோன் துரியோதனன் அறம் மறந்து; முன்தான் உரைத்த வாக்கும் பிழைத்து; பஞ்சபாண்டவர்களுக்கு வீரம் இருந்தால் போர் புரிந்து அவர்களுக்கு உரிய நாட்டைப் பெற்றுக் கொள்ளட்டும் என தருமருக்குத் தூதாக வந்த உலூகன் என்ற முனிவரிடம் சொல்லி அனுப்பி விடுகிறான். இங்கே "தருமருக்குத் தூதாக நடந்த உலூகன்" என்று ஏன் குறிப்பிடப்படுகின்றது என்றால் "போரினை நாடாமல் சமாதான முறையிலேயே கேட்டு நாட்டுரிமை பெற வேண்டும்" என்பது பஞ்சபாண்டவர்களில் அவர் ஒருவருக்கு மட்டுமே கருத்தாக இருப்பதனால் தான்.

வீமன் தன்னுடைய 'சத்துருகாதினி' என்ற கதாயுதத்தால் தான் முன்னம் செய்த வஞ்சினப்படி, துரியோதனனின் தொடையைப் பிளந்து உயிர் குடித்தும்; பாஞ்சாலியின் ஆடையைக் களைந்து அவமானப்படுத்திய துச்சாதனனின் உயிர் குடித்தும், நாட்டை அடைவதையே விரும்புகிறான். அர்ச்சுனனும் அவ்வாறே தன்னுடைய காண்டீபம் எனும்

வில்லின் ஆற்றலால் கர்ணனுடைய உயிரையும், மற்ற கௌரவர்களுடைய உயிரையும் உண்டு; நாட்டை அடைவதையே விரும்புகிறான். பாஞ்சாலியும் அவ்வாறே முன்னாளில் வஞ்சினம் உரைத்திருந்தாள் அல்லவா!

''கௌரவர்களின் இரத்தத்தால் கூந்தலை நீவி, அவர்களின் என்புகளால் தலைச்சிக்கெடுத்த பின்பே கூந்தலை முடிவேன்'' என்று. அவ்விதமே போரினால் நாட்டின் உரிமையை அடைய அவளும் விரும்புகின்றாள். நகுல சகாதேவர்களும் அவ்வாறே தோள்வலியினால் நாடடைவதையே விரும்புகிறார்கள். இவர்கள் அனைவருக்கும் மாறாகத் தருமர் ஒருவர் மட்டுமே சமாதான முறைகளால் தாம் இழந்த குருநாட்டின் உரிமையை அடைய விரும்புகிறார். அதனால்தான் அவர் பொருட்டுத் தூது சென்று வந்த உலூக முனிவர், தருமரின் தூதுவர் என்று முன் குறிப்பிடப்பட்டார்.

தூது சென்று வந்த உலூகர் ''வலுவிருந்தால் அமர் புரிந்து நாட்டினைப் பெற்றுக் கொள்ளட்டும்'' எனத் துரியோதனன் கூறியதைத் தருமரிடம் எடுத்துக் கூறிவிட்ட பிறகும் கூட அவருக்குப் போரினால் நாட்டினை அடைவது விருப்பமாக இல்லை; ஆகவே தான் தம் பொருட்டுத் துரியோதனனிடம் மீண்டும் தூது சென்று, இழந்த நாட்டு உரிமையைச் சமாதான முறையிலேயே பெற்றுத் தர வேண்டும் எனக் கண்ணபெருமானிடம் கேட்டுக் கொள்கிறார்.

பஞ்சபாண்டவரில் நால்வர் போரினால் நாடு கொள்வதை விரும்ப, தருமர் மட்டும் ஏன் சமாதான முறையால் நாடு கொள்வதை விரும்புகிறார்? அவர் ஒரு கோழையோ? என்ற ஐயம் பலருக்கு உண்டாகக் கூடும். அவர் கோழையல்ல. பீமனுக்கும் அர்ச்சுனனுக்கும் எவ்விதத்திலும் சளைத்ததல்ல அவருடைய வீரம் என்பது, பாரதப் போர் நடைபெறும் சமயத்தில் அனைவருமே காணப் போவது

தான். அவர் பொறுமையின் மறுவடிவமானவர்; அருளே வடிவமானவர், ஆகவேதான் அவர் மதித்து வணங்கும் வீடுமர், திருதராட்டிரர், விதுரர், துரோணர் முதலான பெரியவர்களையும், உறவினர்களையும், தம் குலத்தில் பிறந்த துரியோதனன் முதலான தம்பிகளையும் கொன்று அரசுரிமை கொள்வதை அவர் விரும்பவில்லை. ஆகவேதான் அருள் வெள்ளம் பெருகக் கண்ணனிடம் கேட்டு கொள் கிறார்.

''முந்தூர் வெம்பணிக் கொடியோன்
முதூரில் நடந்துழவர் முன்றில் தோறும்
நந்தூரும் புனல் நாட்டின் திறம் வேண்டு
நாடொன்றும் நல்கான் ஆகில்
ஐந்தூர் வேண்டு, அவையிலெனில் ஐந்திலம் வேண்டு
அவை மறுத்தால் அடுபோர் வேண்டு
சிந்தூரத் திலகநுதற் சிந்துரத்தின்
மருப்பொசித்த செங்கண்மாலே''

(கிருட்டிணன் தூது. 11)

''அன்றைக்குக் கம்சன் ஏவிய குவலயாபீடமென்னும் யானையின் தந்தத்தை ஒடித்து வென்றவர் ஆகிய திருமாலே! சிந்தூரப் பொட்டு எப்போதும் திகழும் நெற்றியை உடையவராகிய திருமாலே!'' என்பதாக அவரை அழைத்து பெருமைப்படுத்தும் தருமர், கண்ணபெரு மானைத் துரியோதனனிடத்தில் தூதாகப் போய் தமக்கு உரிமையுடைய நாட்டைத் தருமாறு கேட்கச் சொல்லு கிறார். துரியோதனன் நாடு தர மறுத்து விட்டால், ஐவருக்கும் ஆளுக்கொரு ஊராக ஐந்து ஊர்களையேனும் தர வேண்டுகிறார். துரியோதனன் அவை கூட தராவிட்டால் ஐவருக்கு ஐந்து வீடுகளையேனும் தர வேண்டுகிறார். அதுவும் தராவிட்டால் போரை வேண்டு! கண்ணா!'' என்று போரைத் தருமர் அரைகுறையாக வேண்ட, அதுவரையி லும் அடக்க முடியாத கோபத்தை அடக்கிக் கொண்டிருக்கும்

வீமன், அதற்கு மேல் பொறுக்க முடியாமல் பொங்கி எழுகிறான்.

கோபத்தில் வீமனின் உதடுகள் துடிக்கின்றன. கண்ண பெருமானை நோக்கி, "ஞாலமெல்லாம் பூத்தோனே! பூந் விசிற் பூவை புணர்மணிமார்பா! புன்மையாவு தீர்த்தோனே" என்பதாகப் புகழ்ந்து, "ஊனமிலான் மான மிலா துரைப்பதற்கென் செய்வேன்" என்று ஆத்திரமாக சொல்லுகிறான். அண்ணன் தருமன் மேல் வீமனுக்கு மற்ற தம்பிகளுக்கும் மதிப்பு மிகுதி. அவருடைய கட்டளை பின்படிதான் பாஞ்சாலியின் துகிலை உரிந்து துரியோதனன் கேவலப்படுத்திய போதும் கூட பொறுமை காட்டி தருமருக்கு வாய்த்த தம்பிகள் போல் தரணியில் பிறருக்கு வாய்க்குமோ என்று பலரும் புகழுமாறு தருமருக்குப் பெருமை கூட்டினார்கள். ஆனால் இப்போது இனியும் பொறுக்க முடியாது என்ற நிலைக்கு வந்து, தம்பிகளில் வீமன் முதலில் எழுந்து, 'ஊனமிலான் மானமிலா துரைப் பதற்கென் செய்வேன்" என்று ஆத்திரமாகக் கூறுகின்றான். அப்போதும் அண்ணன் தருமன் குற்றமற்றவன்தான் என்ப தாக 'ஊனமிலான்' என்று வீமன் உரைப்பது குறிப்பிடத் தக்கது.

கண்ணனை நோக்கிப் பேசிய வீமன் இப்போது தம் அண்ணனையே நோக்கிப் பேசுகிறான். "அன்றைக்குப் பாஞ்சாலியின் துகிலைப் பலரறிய பாவி துச்சாதனன் களைந்து அவமானப்படுத்திய போது 'வேண்டாம் கோபம்! பொறுமை பொறுமை" என்று கூறி எங்களை எல்லாம் தடுத்து உலகுள்ளளவும் மாறாத பழியை உனக்கும், எங்களுக்கும் உண்டு பண்ணி விட்டாய்! 13 ஆண்டுக் காலம் கொடிய வனவாழ்க்கை வாழ்ந்து விட்ட பிறகும் கூட வஞ்சம் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்ற நினைவே இல்லை உனக்கு! நமக்கு உரிமை உடைய நாடு மட்டுமல்ல, துரியோதனனுடைய நாட்டையும் நொடியில் வென்று நானுனக்குத் தருகிறேன். பாவம் துரியோதனன்! நாடின்றி

என் செய்வான் என்று வருத்தப்படுகிறாயா? வருத்தம் கொள்ளாதே! அவனைக் கொன்று வானுலகத்தை அவன் ஆளுமாறு அவனை அனுப்பி வைத்து விடுகிறேன்! சொல் ஒரு வார்த்தை'' என்று வீமன் தருமனை வேண்ட, அப்போதும் தருமன் பொறுமையே பூண்டவனாகி, ''குற்றமது பார்க்குங்கால் சுற்றமில்லை, கண்மலரில் கைபடாதோ, அன்றைக்கு ஏதோ கோபத்தில் சொன்னதை வஞ்சினம் என்பதாக நெஞ்சத்தில் வைத்துக் கொள்ளலாமா?'' என்று வீமனுக்கு அறிவுரைகள் கூறுகின்றான்.

அப்போது வீமன், ''அரவுயர்த்தோன் கொடுமையினும் முரசுயர்த்தோய் உனதருளுக்கு அஞ்சினேன்'' என்பதாகக் கூறுகிறான். பாம்புக் கொடி கொண்டவன் துரியோதனன். முரசத்தைக் கொடியாகக் கொண்டவன் தருமன்; துரியோதனன் புரிந்த கொடுமைகளை எல்லாம் கூட பொறுத்துக் கொண்டு விடலாம். ஆனால் தருமனே! உன்னுடைய எல்லை கடந்த பொறுமையைப் பொறுத்துக் கொள்வது ஆகாது என்பதே வீமன் வாக்கில் உள்ள கருத்தாகும்.

அப்பொழுது கண்ணபெருமான், ''முன் பிறந்த அண்ணன்; அரச தருமத்தை எடுத்துரைத்தால் அது கேளாமல் அடம் பிடித்தல் ஆகாது'' என்பதாகக் கூறி, வீமனைக் கோபம் கொள்ள வேண்டாமென வேண்டி, அமரச் செய்கிறார். அப்போது அரிச்சுனன் எழுந்து தன் கருத்தைக் கூறுகிறான். ''கண்ணா! நீ தூது போனாலும், அண்ணன் தருமன் கருத்தின்படி நீ நாடு கேட்டுப் பின் ஊர் கேட்டு, வீடு கேட்டாலும் கூட அறிவற்றவனாகிய துரியோதனன் இணங்க மாட்டான். உவர் நிலத்தில் நெல் விளையாது. நாகப் பாம்பிற்கு அமிர்தத்தை அருந்தக் கொடுத்தாலும் அது நஞ்சைக் கொடுக்குமே தவிர, நல்லதைச் செய்யாது! தேவர்கள் ஆனாலும், அசுரர்கள் ஆனாலும், இன்னும் சொல்லப்படுகிற எவரானாலும்

எதிர்த்து வரட்டும். என் கையில் காண்டீபம் இருக்கிறது. தொலைத்து விடுகிறேன்.''

அர்ச்சுனன் இப்படி கூறி முடித்தவுடன் நகுலனும் எழுந்து, ''தருமம் தருமம் என்று சொல்லிக் கொண்டே இருக்கிறார் தருமர் ஆகிய எங்கள் அண்ணா! அரச தருமத்திலே ஆண்மையும் ஒன்றல்லவா! நாம் துரியோதன னிடத்தில் நாடும், ஊரும், வீடுமாகக் கெஞ்சி வீணே காலத்தைக் கடத்தி உலகத்தார் பழிச் சொல்லுக்கு ஆளா வதைவிட தோள் வலிமையால் வென்று நாடாள்வதே சரி, 13 ஆண்டுக் காலம் கஷ்டப்பட்டுவிட்ட தம் உடன் பிறந்தார் களாகிய பாண்டவர்களுக்கு அவர்களுடைய நாட்டைக் கொடுத்து விடுவோம் என்று, தானே உணராத துரியோ தனன், கண்ணா! நீ தூது போய் உரைப்பதனாலா உணரப் போகிறான்'' என்ற தன் கருத்தைத் தெரிவித்து அமர, கண்ண பெருமான் சகாதேவனுடைய கருத்தைக் கூறுமாறு கேட்கிறார்.

எல்லோரையும் போல தன் கருத்தை எளிதாகச் சொல்லிமுடித்து விடவில்லை சகாதேவன். ஆருடக்கலை யோடு ஆண்டவனின் தத்துவ உண்மைகளையும் தெளிந்த வனாகிய சகாதேவன் எழுந்து ''கண்ணா! தருமன் உரைத்தவாறு நீ தூது போனாலும் போகாமல் இருந்தாலும் என்ன? துரியோதனன் நாடு கொடுத்தாலும் கொடுக்காமல் போனாலும் என்ன? பாஞ்சாலி கூந்தல் முடிந்தாலும் முடிக்கா விட்டாலும் எனக்கென்ன! நான் கருத்து சொல்ல அந்தக் கருத்தின்படிதான் எல்லாம் நடக்க இருக்கிறதா என்ன? உன் திருவுளத்தில் நீ என்ன நினைத்திருக்கிறாய் என்பது எனக்குத் தெரியும். அந்தக் கருத்தே எனக்கும் கருத்துமாகும்''.

இப்படி சகாதேவன் சூழ்ச்சி வல்ல கண்ணனிடம் சூழ்ச்சியாகவே தன் கருத்தையும் சொல்ல கண்ணனும் அவனைமட்டும் தனியொரு இடத்திற்கு அழைத்துப் போய்

''என்ன நான் திருவுளத்தில் நினைத்திருக்கிறேன்! எல்லாம் எனக்குத் தெரியும் என்கிறாயே! சொல்'' என்று கூற சகாதேவன் கண்ணனின் மனக்கருத்தை

''நீபா ரதஅமரில் யாவரையும் நீறாக்கிப்
பூபாரம் தீர்க்கப் புரிந்தாய் புயல்வண்ணா
கோபாலா! போரேறே! கோவிந்தா! நீயன்றி
மாபா ரதம்அகற்ற மற்றார்கொல் வல்லாரே''

என்று கூறுகின்றான். ''பாரத போரை நடத்துவதற்கென்றே நீ அவதரித்திருக்க, நடக்க இருக்கும் போரைத் தடுக்க வல்லவர் யார்? அர்ச்சுனனைக்கொன்று பாஞ்சாலியின் கூந்தலையும் அரிந்து, உன்னையும் அங்கிங்கு நகராதபடி கட்டிப்போட்டு விட்டால், நடக்க இருக்கும் போரைத் தடுத்து விடலாம்'' என்று மேலும் சகாதேவன் வினயமாகக் கூறக் கண்ணனும் ''சகாதேவா! நீ சொல்லியதைப் போல் போருக்குக் காரணமாக இருக்கின்ற அர்ச்சுனனைக் கொல்வதும், பாஞ்சாலியின் கூந்தலை அரிந்து விடுவதும் கூட சாத்தியமாகலாம். ஆனால் என்னைக் கட்டுவது உனக்குச் சாத்தியம் ஆகுமோ?'' என்று கேட்ட படியே பதினாறாயிரம் உருவங்கள் எடுத்து, அங்கிங்கெனாத படி எல்லா இடத்திலும் வியாபித்து நிற்கிறார்.

ஆண்டவன் அன்பெனும் பிடியில் அகப்படுவன் தானே! சகாதேவனும் அன்பால் திருமாலைவணங்கி அப்பதினாயிரம் உருவங்களுக்கும் மூலமான உருவத்தை அன்பினால் தியானித்து தன்மனமாகிய கயிற்றினால் கட்டிவிட, பூதேவரும் மாதேவரும் தேடிக் காணா மலரடியேனாகிய கண்ணன் ''சகாதேவா! நின் ஆற்றலை நான் அறிவேன்; உலகத்தவர்க்கும் உன் ஆற்றலைத் தெரிவிக்கவே. என்னைக் கட்டுதல் உனக்கு ஆமோ என்று கேட்டுக் கட்ட வைத்தேன்: கட்டினை அவிழ்த்துவிடு'' என்று கேட்டுக் கொள்கிறார்.

அப்போது சகாதேவனும் நான் வேண்டும் இந்த வரத்தைத் தந்தால்தான் கட்டவிழ்த்து விடுவேன் என்று கூறி, "பாரதப் போரில் பாண்டவர் ஐவரையும் கண்ணா நீ உன் அருட்பார்வையால் ஒரு ஊறும் நேராவண்ணம் காக்க வேண்டும்" என வேண்டிக் கொள்கிறான்.

"அன்பாலின் றென்னை யறிந்தே பிணித்தனை நன்று
என்பா தந்தன்னை இனிவிடுக என்று உரைப்ப
வன்பார தப்போரில் வந்தடைந்தேம் ஐவரையும்
நின்பார்வை யாற்காக்க வேண்டும் நெடுமாலே"
(கிருட்டிணன் தூது, 39)

என்ற இப்பாடல்; சகாதேவன் தம் அண்ணன்மார்கள் மேல் கொண்டுள்ள பாசத்தைப் புலப்படுத்தி நம் கண்ணில் நீரை வரவழைக்கும். கண்ணனும் அவ்வாறே காப்பதாக வரம் அளித்துச் சகாதேவனிடம் அங்கு அந்தத்தனியிடத்தில் அவர்கள் பேசிக் கொண்டதையும், நடந்த நிகழ்ச்சிகளையும் பிறருக்கு அறிவிக்க வேண்டாமென ஆணையிட்டு ஆலோசனை நடக்கும் இடத்திற்கு அழைத்துவந்து "இப்போது உன் கருத்தைக் கூறு" எனக்கேட்டுக் கொள் கிறார். அப்போது தருமருடன் அமர்ந்திருந்த பாஞ்சாலியை நோக்கிச் சகாதேவன் "எனக்கும் சமாதானமாகப் போவது தான் சரியெனப்படுகிறத" என்கிறான்.

கண்ணனிடத்தில் தனியாகப் பேசிய போது, போரே கண்ணனின் எண்ணமாவதைத் தெரிவித்துப் போரில் ஐவரை யும் காத்தல் வேண்டும் எனக் கேட்டுக்கொண்டவனாகிய சகாதேவன் பாஞ்சாலியிடத்தில் "நான்சமாதானமே விரும்பு கிறேன்" என்று கூறுவது வேடிக்கை அல்லவா! கண்ண பெருமானும் உடனே "தருமருக்கு சமாதானம் விருப்பம். சகாதேவனுக்கும் அதுவே விருப்பம். எனக்கும் சமாதான மாகப் போவதுதான் சரி என்று படுகிறது" என்று கூறுவது வேடிக்கையிலும் வேடிக்கை அல்லவா! கண்ணனின் மனமாயை அறிய வல்லார் யார்? அதனால் தான் மாயை

வல்லானின் மாயை அறியாத பாஞ்சாலி அழத் தொடங்கு கிறாள்.

சாலக்கனகன் தனிமைந்தனைமுனிந்த
காலத்தவனறைந்த கற்றூணிடை வந்தாய்
மூலப்பேரிட்டழைத்த மும்மதமால் யானைக்கு
நீலக்கிரிபோல் முன்நின்ற நெடுமாலே
(கிருட்டிணன் தூது, 43)

கற்றைக் குழல்பிடித்துக் கண்ணிலான் பெற்றெடுத்தோன்
பற்றித் துகிலுரியப் பாண்டவரும் பார்த்திருந்தார்
கொற்றத் தனித்திகிரி கோவிந்தா நீயன்றி
அற்றைக்கு என்மானம் ஆர்வேறு காத்தாரே!
(கிருட்டிணன் தூது, 44)

மன்றில் அழைத்தெனக்கு மாசளித்த மன்னன்பாற்
சென்று தமக்கைந்தூர் திறல்வீரர் பெற்றிருந்தால்
அன்று விரித்த வறுங்கூந்தல் வல்வினையேன்
என்று முடிப்பதினி எம்பெருமான் என்று அழுதாள்
(கிருட்டிணன் தூது, 45)

பிரகலாதனுக்கு அருள் புரிந்தாய். ஆதிமூலமே என்று அறிய யானைக்கு அருள்புரிந்தாய்; அன்றைக்கு எனக்கு அவையறிய ஏற்பட்ட அவமானத்தின் போதும் கூட நீ தான் அருள்புரிந்து என்மானம் காத்தாய்! ஐந்து ஊரைக் கெஞ்சிக் கேட்டு அதுபோதும் என இவர்கள் எல்லோரும் இருந்துவிட்டால்; என்றைக்கு என்னுடைய கூந்தலை நான் முடிப்பேன்?'' என்று பாஞ்சாலி கண்ணனைக் கேட்டு அழ, கண்ணனின் தம்பியாகிய சாத்தகி ''இது பொறுக்க முடியாது. இனி போரே ஒன்றே வழி'' என்று கூறுகிறான். ''திரௌபதியின் கூந்தலை அரிந்துவிட்டால் போர் நடக்காமல் தடுத்துவிடலாம். அவிழ்ந்த அவள் கூந்தல் இருக்கும் வரை போரைத் தடுக்க முடியாது'' எனச் சகாதேவன் முன்னம் கண்ணனிடம் தனி இடத்தில் உரைத்ததன் காரணம் இப்பொழுது புரிகிறதல்லவா!

ஆகவேதான் பாஞ்சாலியின் அவிழ்ந்த கூந்தலே காரணமாகப் போர் நடப்பதை இனியாராலும் தடுக்க முடியாது என்பதனாலும், பாஞ்சாலி அழுவதை இனியும் பார்த்துக் கொண்டிருத்தல் ஆகாது என்பதாலும் கண்ண பெருமான்

''தொல்லாண்மைப் பாண்டவர்க்குத் தூது போய்
மீண்டதற்பின்
நல்லாயுன் பைங்கூந்தல் நானே முடிக்கின்றேன்
எல்லாரும் காணஇனி விரிப்ப தெண்ணரிய
புல்லார்தம் அந்தப்புர மாதரார் பூங்குழலே''
(கிருட்டிணன் தூது, 49)

என்று கூறி, அழாதே எனத் தேற்றுகிறார்.

போர்தான் வழி என்று கண்ணனே முடிவு செய்துவிட்ட பிறகு, துரியோதனன் இடத்தில் ஏன் கால்கள் நோகத் தூதுபோக வேண்டும்? இளங்கோவடிகள் தம் நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தில் கண்ணன் தூது போகிய சிறப்பினை ஆய்ச்சியர் குரவையிலே அமைத்து

''மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர் பால்நாற்றிசையும் போற்றப்
படர்ந்து ஆரணம் முழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாதா நாஎன்னாநாவே
நாராயணா என்ன நாஎன்ன நாவே''

என்று போற்றவா கண்ணன் தூதுபோகிறார்? கண்ணன் தூது தருமரின் விருப்பப்படி சமாதானத்தால் நாடு பெறுவதற்காக அல்ல; கண்ணனின் எண்ணப்படி யாவரையும் நீறாக்கிப் பூபாரத்தைத் தீர்க்கும் பொருட்டுத்தான்! பாஞ்சாலியின் அவிழ்ந்த கூந்தலை அழகுபடுத்தி முடிந்து வைப்பதற்குத்தான். அதற்குக் கண்ணபெருமானின் தூது எப்படியெல்லாம் பயன்படுகிறது என்பதை அடுத்த அத்தியாயத்தில் காண்போம்.

# 2

இரண்டு நாள் தேர்ப் பிரயாணத்திற்குப் பிறகு உபப்பிலாவியத்திலிருந்து தர்மரின் தூதுவராய்ப் புறப்பட்ட கண்ணபெருமான் தம் பரிவாரங்களுடன் அத்தினாபுரத்து எல்லையில் அமைந்திருந்த ஒரு அழகிய பூஞ்சோலைக்கு வந்து சேர்கிறார். உம்பர் நாயகனின் வரவினைக்கண்டு தும்பிகள் பாடுகின்றன. மயில்கள் ஆடுகின்றன. அவ்வழகிய இயற்கை காட்சியில் கண்ணபெருமான் மனம் மகிழ்ந்திருந்த வேளையில் அவருடைய வரவினை தூதர்கள் போய் துரியோதனனுக்கு அறிவிக்க, துரியோதனன் நகரத்தை அலங்கரிக்குமாறு ஆணையிடமக்களும்அவ்வாறே 'தொல்லை நாயகன் வந்தனன்' என்று மனமகிழ்ந்து நகரை அலங்கரிக்கின்றார்கள். மேகங்களின் பெரிய முழக்கம் போல, இசைக் கருவிகள் பல ஒலிக்க, துரியோதனன் தானே சென்று கண்ணனை எதிர்கொண்டு வரவேற்கப் புறப்படுகிறான்.

ஆனால் அங்கே தான் விதி துரியோதனனுக்கு எதிராகவும், கண்ணபெருமானுக்கு ஆதரவாகவும் சகுனியின் வடிவிலே வேலை செய்ய ஆரம்பிக்கிறது. "நீ எதற்காக அவனைப்போய் எதிர்கொண்டு அழைக்க வேண்டும். அவ்வளவு பெரியவனா கண்ணன்?" என்று சகுனி, துரியோதனனைத் தடுத்துவிட, அவனும் கண்ண பெருமானை எதிர்கொண்டு வரவேற்கச் சொல்லவில்லை. கங்கையின் மைந்தர் ஆகிய வீடுமரும், துரோணரும், வில் வித்தையில் வல்லவராகிய விதுரரும், அசுவத்தாமனும், கிருபனும் முதலான அறுபது இலட்சம் அரசர்களும் கண்ண பெருமானைஎதிர்கொண்டு வரவேற்கிறார்கள்.

தம்மை எதிர்கொண்டு வரவேற்ற மன்னர்களையெல்லாம் அருள்பொங்கப் பார்த்து, வரவேற்பினை ஏற்றுக் கொண்ட கண்ணபெருமான் அத்தினாபுரிக்குள் அடி-

யெடுத்து வைக்கிறார். ஆனால் மன்னன் துரியோதனனின் அரண்மனைக்குச் செல்லாமல், அறிவிலே சிறந்த விதுரர் வாழ்கின்ற மனைக்கு அவருடைய விருந்தாளியாக அவரும் எதிர்பாராமலே கண்ணபெருமான் செல்கிறார் என்றால் அதற்குக் காரணம் இல்லாமலா இருக்கும்? கண்ணன் தூது தருமரின் விருப்பப்படி சமாதானத்தால் நாடு பெறுவதற்காக அல்ல. கண்ணனின் எண்ணப்படி யாவரையும் நீறாக்கிப் பூபாரத்தைத் தீர்க்கும் பொருட்டுத்தான், பாஞ்சாலியின் அவிழ்ந்த கூந்தலை அழகுபடுத்தி முடிந்து வைப்பதற்குத் தான் என்று முன்பே குறிப்பிடப்பட்டது அல்லவா? அதன் பொருட்டே, அத்தினாபுரி நுழைந்த கண்ணபெருமான் துரியோதனனின் அரண்மனைக்கு நேரே செல்லாமல், விதுரர் மனைக்குச் சென்றார் என்பதை இன்னும் சற்று நேரத்தில் நீங்களும் தெரிந்து கொள்ளலாம்.

கண்ணபெருமான் தம் மனைக்கு விருந்தாக வந்ததனால் விதுரர் கொண்ட மன மகிழ்விற்கு அளவே இல்லை, கண்ணபெருமானின் திருவடி மலர்களைப் பலமுறையும் தம் தலைகளால் சூடிக்கொள்ளும் விதுரர் ஆனந்த மிகுதியால் துள்ளிக்குதிப்பதோடு, 'கண்களால் கண்ணனைக் கண்ட யான் பிறப்பினைத் தொலைத்தேன், வீடுபேறும் கொண்டேன். இனி பெறத்தக்கதாம் பேறு ஒன்றும் இல்லை' என்பதாகப் பெருமிதமும் கொண்டு

முன்னமே துயின்றருளிய முதுபயோததியோ?
பன்னகாதிபப் பாயலோ? பச்சையாலிலையோ?
சொன்ன நால்வகைச் சுருதியோ? கருதி நீயெய்துதற்கு
என்னமாதவஞ் செய்ததிச் சிறுகுடில்?

(கிருட்டிணன் தூது 80)

என்று வியந்து வினவிப் போற்றுகிறார். இதுவரை வெறும் குடிசையாக இருந்த தம்மனை கண்ணபெருமான் எழுந்தருளப் பெற்றதால் திருப்பாற்கடல் போலவும், ஆதிசேட

னாகிய திருப்பள்ளி மெத்தை போலவும், ஊழிக்காலத்தில் உலகம் அழியும்போது திருமால் குழந்தை வடிவில் துயில் கொள்ளும் பச்சை ஆலிலை போலவும், நால்வகை வேதம் போலவும் பெருமை பெற்று விளங்குவதை எடுத்துக்கூறி மகிழும் விதுரர், தேவாமிர்தம் போன்ற அறுசுவை விருந்தை அண்டர் நாயகனுக்கு ஆக்கிப் படைத்து மகிழ்கின்றார். பயணக் களைப்புடன் பசிக்களைப்பும் நீங்கப் பெற்ற பரந்தாமனாகிய கண்ணபெருமான் ரத்தின சிங்காதனத்தில் அமர்ந்திருக்க, புண்ணிய விதுரர் அவரைப் போற்றி, அத்தினாபுரிக்கு எழுந்தருளிய காரணத்தை எடுத்துரைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறார்.

பஞ்சபாண்டவர்களுக்காக நாடுகேட்டுத்தாம் தூது வந்ததாகக் கண்ணபெருமானும் காரணத்தை தெரிவிக்க துரியோதனனின் துர்க்குணத்தை அறிந்திருப்பவராகிய விதுரர் 'நிமலரே"! நீதி நீர் எடுத்துரைத்தபோதும் கொடியன் நாடுவழங்கான். போர் செய்து வாட்டினால் அன்றி துரியோதனனுக்கு அறிவு வராது'' என்று கண்ணபிரானிடம் கூறுகிறார். போர் நடப்பது உறுதி என்பதை தெளிவுபட தெரிந்திருப்பவராகிய கண்ணபெருமானும், ''துரியோதனின் வாய் வழியாக மூளை வெளியே வரும் வண்ணம் நடக்கத்தான் போகிறது வெம்போர்'' என்று கூறுகிறார். பின் விதுரர்க்கு விடை கொடுத்து மலர்ப்படுக்கையின் மீது, நாளை நடப்பதையும் முன்னமே அறிந்தவராய் மாயக்கண்ணன் அமைதியாக உறங்குகின்றார்.

மறுநாள் காலை கண்ணபெருமான் துரியோதனன் அவையை நோக்கிப் புறப்படுகிறார். அதே நேரத்தில் தம் அரசவைக்கு வரும் கண்ணபெருமானை அவமதிக்க வேண்டும் என சகுனியுடன் ஆலோசனை செய்து கொண்டிருக்கிறான் துரியோதனன். தமக்கு அடங்கிய சிற்றரசர்களை எல்லாம் ஆணவத்துடன் துரியோதனன் நோக்கி ''பாண்டவர்களின் தூதுவனாக வரும் இடையன் நம் அரசவைக்

குள் நுழையும்போது எவரும் எதிர்கொண்டோ அல்லது எழுந்து நின்றோ மரியாதை தரக்கூடாது. மீறிச் செய்வீர் களேயானால் உங்கள் ஊர்களை எல்லாம் தீயிட்டுக் கொளுத்தி விடுவேன்'' என்று அதிகார மமதையில் ஆணை பிறப்பிக்கிறான். விதிவலியாற் கெடுமதிக்கண் நல்லது தோன்றாதல்லவா?

ஆகவேதான் துரியோதனனுக்குக் கெட்ட நினைவே தோன்றுகிறது. 'இடையன்' என இறைவனையே பழித்துக் கூறிப் பாதகஞ் செய்யவும் முற்பட்டு விடுகிறான் அவன். ஆனால் அவன் பிறப்பித்த ஆணை நீர்மேல் எழுத்தாய் நொடி நேரத்தில் மறைந்து போவதை அவனே கண்டு மனம் புழுங்க நேரிடுகிறது! ஆம்! கண்ணபெருமான் அரசவையில் கால் எடுத்து வைத்தவுடன், வீடுமர், துரோணர், விதுரர் மற்றும் அவ்வவையில் இருக்கும் அரசர்கள் எல்லோருமே எதிர்சென்று வணங்கி கண்ணனை வரவேற்கலாயினர், துரியோதனனும், சகுனியும்; செஞ்சோற்றுக்கடனுக்காய் நெறிமறந்த கர்ணனும் ஆகிய மூவர் மட்டுமே கண்ணனை வணங்காதவர்கள்.

கண்ணபெருமான் தமக்குரிய ஆசனத்தில் அமர்ந்து கொள்கிறார். அவரைத் துரியோதனன் வினவும் முதல் வினாவே இதுதான். ''நேற்றே அத்தினாபுரிக்கு வந்து விட்ட நீ, எதற்காக என் மனைக்கு வராமல், விதுரன் மனையில் தங்கினாய்?'' இந்தக் கேள்வியைத் துரியோதனன் கேட்கவேண்டும் என்பதற்காகத்தானே திட்டமிட்டுக் கண்ணபெருமான் விதுரர் மனைக்குப் போய் தங்கினார், அவருக்குத் துரியோதனன் கேட்ட கேள்வி மிகுந்த மகிழ்ச்சியையே அளிக்கிறது. இருந்தாலும், தாம் விதுரர் மனையில் தங்கியதற்குக் காரணம் எதுவும் இல்லை என்பதைப் போல, 'எனக்கு எல்லா மனைகளுமே ஒன்று போலத்தான். அத்தினாபுரியில் இருக்கும் இந்த உன்மனை, என்மனை. துவாரகையில் இருக்கும் என்மனை உன்மனை. ஆகவே எனக்கு எந்த பேதமும் இல்லை. விதுரர் மனையையும், என்மனை போல் எண்ணித் தங்கினேன். மேலும் விதுரர்

என்னை எதிர்கொண்டு வந்து வரவேற்ற பெருந்தன்மையை மதித்தும், விதுரர் மனையில் தங்கினேன். இவை மட்டு மல்ல, நானோ பாண்டவர்களின் பொருட்டு வந்த தூதுவன். அவர்களுக்குத் தூதுவனாக வந்து விட்டு, உன் வீட்டில் தங்கி உன் உபசாரத்தை ஏற்றுக் கொண்டு விட்டால், அவர் களின் பொருட்டு நீதியை உன்னிடத்தில் எப்படி எடுத் துரைக்க முடியும்? அதனை எண்ணியும்தான் நான் விதுரர் மனையில் தங்கினேன்'' என்று விளக்கம் கொடுக்க கண்ண பெருமான், நரகத்தில் வாடுதற்கு உரியவர் எவர் எவர் என்பதையும் அப்பொழுது எடுத்துக் கூறுகிறார். அந்தப் பாடல் ;

''அரவமல்கிய பதாகையாய்! மதியமைச்சராய்
அரசழிப்பினும்
குரவர் நல்லுரை மறுக்கினும் பிறர்புரிந்த நன்றியது
கொல்லினும்
ஒருவர்வாழ் மனையிலுண்டு பின்னு
மவருடன் உழன்றுபொர உன்னினும்
இரவியுள்ளளவும் மதியமுள் ளளவும் இவர்களே நரகில்
எய்துவார்
(கிருட்டிணன் தூது., 109)

''மந்திரிகளாக இருந்து அரசாட்சியைக் கெடுப்பவர், பெரியோர்களின் நல்ல உபதேச மொழிகளைக் கேளாதவர்; செய்த நன்றி மறந்தவர், உண்ட வீட்டிற்கே இரண்டகம் நினைப்பவர்—அந்த நான்குக் கொடியவர்களே நரகத்தில் உழல்பவர்கள் இல்லையா துரியோதனா? அப்படியிருக்க உன் வீட்டிலே உண்டு உனக்குத் துரோகம் செய்யலாமா? என்று துரியோதனனுக்கு கண்ணபெருமான் எடுத்துரைக் கிறார். பெரியவர்களின் உபதேசங்களைக் கேளாதவனாகிய துரியோதனன் நரகமே அடைவான் என்பதையும் குறிப்பாக அவர் உணர்த்துவது மட்டும் அல்ல. உன் சிறிய தந்தையா யினும் விதுரர் நீதிமானாய் நினக்கு மாறுபட்டவராய்

விளங்கும் காரணம் பற்றியே அவருடைய வீட்டிலே நான் தங்கினேன் என்பதையும் சொல்லாமலே சொல்லிவிடும் கண்ணபெருமானின் சொற்சாதுரியத்தையும் தான் மேற் கண்ட பாடலில் காண்கின்றோம்.

நரகத்திலே நிச்சயம் இடம் பெறப் போகின்றவனாகிய துரியோதனனுக்கு 'நரகிற்குரியார் யார்?' என்ற கண்ண பெருமானின் உபதேச விளக்கம் இனிக்கவா செய்யும்? இனிக்க வில்லை. அவன் முகம் சுளித்துக் கொண்டவனாகி "சரி சரி வந்த விசயத்தைச் சொல்" என வெடுப்பாகக் கூறக் கண்ணபெருமானும்

''சூதினால் அரசிழந்து நின் துணைவர்
சொன்சொல்லும் வழுவாதுபோய்
ஏதிலார்களென நொந்து
தண்ணிழல்இல்லாத கானிடை யெய்தியும்
தீதிலாவகை குறித்தநாள்பல
கழித்துவந்தனர் செகத்தினிற்
கோதிலாத குருகுலமகிப! அவர்
உரிமை நண்பொடு கொடுத்தியே''

(கிருட்டினன் தூது 111)

என்று கூறுகிறார்.

''பாண்டவர்க்கு உரிமை உடைய நாட்டை நட்பொடு கொடுப்பாயாக. கொடுத்தால் உலகோர் உன்னைப் போற்றுவர். இல்லையேல் பழிப்பர்'' என்று அறிவுறுத்து கிறார் கண்ணபெருமான். முன்னம் பேசியது நகரம் பற்றிய பேச்சு; இப்பொழுது பேசுவது நகரம் பற்றியதும் நாடு பற்றியதுமான பேச்சு. துரியோதனுக்கோ எரிச்சல்மேல் எரிச்சல். எதிர் அமர்ந்திருக்கும் கண்ணன்மேல் வெறுப் பின்மேல் வெறுப்பு,

''யார் பழித்தாலும் என்ன? யார் திகைத்தாலும் என்ன? சூதாட்டத்தினாலே அன்று நாடு நகரங்களைப் பாண்டவர்கள் இழந்தது இழந்ததுதான். மீளக்கொடுக்க எனக்கேதும் அறிவு மழுங்கிவிடவில்லை. நான் வாக்குறுதி அன்று கொடுத்திருப்பேனேயானாலும், இன்றைக்கு அதைக் காப்பாற்ற வேண்டுமென்று என்னை யாரும் கட்டாயப் படுத்த முடியாது. பாண்டவர்கள் மீண்டும் காட்டிற்கே போக வேண்டியதுதான்! வேண்டுமானால் என்னுடன் போர் செய்து வலுவிருந்தால் நாட்டை மீட்டுக் கொள்ளட் டும். ஒரு ஈ அமரும் இடம் கூட அவர்களுக்கு நான் கொடுக்க மாட்டேன்'' என்பதாகத் துரியோதனன் சினந்து கண்ண பெருமானை நோக்கிக் கூறுகிறான். அவ்வாறு அவன் கூறுவதைக் காட்டும் பாடல் பின்வருமாறு :

**''நீ வெறுக்கிலென்? இருந்த மன்னவர்**
**திகைக்கிலென்? பல நினைக்கிலென்?**
**போய்நகைக்கிலென்? உரைத்தவுண் மைமொழி**
**பொய்த்ததென்று அமரர் புகலிலென்?**
**வேய்மலர்த்தொடையல் ஐவர் என்னுடன்**
**மிகைத்து வெஞ்சமர் விளைக்கிலென்?**
**ஈயிருக்கும் இடமெனினும் இப்புவியில்**
**யானவர்க்கு அரசினிக் கொடேன்''**

(கிருட்டிணன் தூது. 114)

துரியோதனன் இப்படித்தான் சொல்வான் என்பது கண்ணபெருமானுக்கு தெரிந்திருந்த உண்மைதான். ஆனால் தூதுவனாய் நடிக்க வந்த வேடத்தில் நல்லபடி முழுதும் நடித்துவிட வேண்டும் அல்லவா! ஆகவே துரியோதனனை வேண்டுகிறார் : ''பாண்டவர்களிடம் சூதினால் கவர்ந்து கொண்ட நாட்டின் உரிமையை முழுமையாகத் தர மனம் இல்லாவிட்டாலும் பாதியாவது வழங்கு; பாதி வழங்க உனக்கு மனம் இல்லையா? பரவாயில்லை. ஐந்து ஊர்களை யாவது வழங்கு'' என்று துரியோதனனிடம் கெஞ்சி இரக் கின்றாராம். யார் அவர்? எத்தனைச் சிறப்புக் கொண்ட

வர்? இந்த உலகங்கள் அனைத்தையும் உலக உயிர்கள் எல்லாவற்றையும் படைத்தருளும் உந்தியை உடையவராகிய கண்ணபெருமான்.

அதற்குத் துரியோதனன் என்ன பதில் சொல்கிறான்?

"காட்டிலே நேற்று வரை அலைந்து திரிந்து கொண்டிருந்தவர்களுக்கு ஊர் கொடுத்தால் வேண்டாம் என்றா மறுக்கப் போகிறார்கள்! ஊர் நான் தர முடியாது என்று மறுத்து, வீட்டைத் தருவேனேயானால், அந்த வீட்டையும் அவர்கள் என்ன மறுக்கவா போகிறார்கள்? அவர்கள் எது கொடுத்தாலும் ஏற்பார்கள். ஆனால் நானோ எதையுமே கொடுக்க மாட்டேன். போகட்டும் அவர்கள் மீண்டும் வனத்திற்கே" என்று இறுமாப்புடன் துரியோதனன் பேச கண்ணபெருமான் ஆணவத்தின் உச்சிக்கே போய்விட்ட அவனுக்குத் தம் அருள்மனம் மாறாது அறிவுரை கூறுகிறார். அந்தப் பாடல் வீடுமரின் பெருமை கூறும் வீறுமிக்கப் பாடல் :

**"தந்தைகாதலுறு தன்மைகண்டிளைய**
**தாய்பயந்த இரு தம்பியர்க்கு**
**இந்தவாழ்வும் அரசும் கொடுத்தவனும்**
**நின்குலத்தொருவன் இங்குளான்**
**முந்தமா நிலமனைத்தினுக்கும் உயர்**
**முறைமையால் உரிய அரசருக்கு**
**ஐந்துமாநகரும் நீ கொடாதொழியின்**
**என்னதாகும் உனதரசியல்"**

(கிருட்டிணன் தூது. 117)

பாண்டவர்க்கும், துரியோதனனாதியர்க்கும் பாட்டனார் ஆகிய வீடுமர், சந்தனுமா மன்னனுக்கும், கங்கைக்கும் பிறந்த குருகுலச் சான்றோர். கங்கை மறைந்தவுடன் சந்தனுமா மன்னன் செம்படவர் குலத்தில் தோன்றிய பரிமளகந்தி எனும் பாவையைக் கண்டு மனம் பறிகொடுத்தார். பரிமளகந்தியின் தந்தையோ பரிமளகந்தியின் வயிற்

றில் பிறக்கும் மக்களுக்கே அரச உரிமை தருவதாக உறுதி கூறினால்தான் பரிமளகந்தியை மணம் முடித்துத் தருவேன் என்றான். கங்கையின் மைந்தனாகிய தேவ விரதனுக்குத் துரோகம் இழைக்க விரும்பாத சந்தனு, அத்தகைய உறுதி மொழியைத் தரத் துணியவில்லை. நடந்ததெல்லாம் அறிந்துகொண்ட தேவவிரதன் ''நான் இப்பிறவியில் திருமணமே செய்து கொள்ள மாட்டேன். அரசுரிமையை என் சிற்றன்னையின் மக்களுக்கே உரிமை ஆக்குவேன். இது உறுதி'' என யாவரும் அஞ்சத்தக்க விரதம் பூண்ட காரணத் தினாலே ''பயங்கரமான விரதம் உடையவன்'' என்ற பொருள் படும் 'வீடுமன்' என்ற காரணப் பெயரையும் கொண்டு தமக்குரிய அரசைத் தியாகம் செய்த தியாக சீலராய் வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

இத்தகைய வீடுமருடைய தியாகத்தைஅவையறிய எடுத் துக் கூறிப் பாராட்டும் கண்ணபெருமான் 'அப்படிப்பட்ட உத்தமரும் இங்கிருக்க, உரிமையுடைய அரசை உரியவர்க் குத் தர மறுக்கும் நீயும் இருக்கிறாயே! என்னே உன் நீதி!'' என்று இடித்துக் கூற, துரியோதனன் மேலும் கோபத்தில் கண்களில் நெருப்புப் பொறி பறக்க ''நாடு, வீரர்களின் உரிமை. வீரமிருந்தால் பாண்டவர்கள் போர் செய்து பெற்றுக் கொள்ளட்டும்'' என்று கடுமையாகக் கூறுகிறான். முன்பு இதே துரியோதனன், ''பன்னிரண்டு ஆண்டு வன வாழ்வும், ஓராண்டுக் காலக் கரந்துறை வாழ்வும் முடித்து வந்தால் நாட்டை மீள நல்குகிறேன்'' என உறுதி கூறியவன் தான். இப்பொழுதோ ''போர் செய்து பெற்றுக் கொள்ளட்டும்'' என்கிறான். பின்னால் இந்த மொழியும் பொய்யாகப் போருக்கும் வரமாட்டேன் என்று கூறி விட்டால் என்ன செய்வது? என்று எண்ணியவராகக் கண்ணபெருமான்; ''சரி அவர்கள் போர் செய்தே அவர் களுக்கு உரிமைஉடைய நாட்டைப் பெற்றுக் கொள்வார்கள். அவர்களுடன் குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் போர் நிகழ்த்த நிச்சயம் இசைகிறேன் எனக் கையிலடித்துச்

சத்தியம் செய்'' என்று துரியோதனனிடம் கேட்டுத் கையை நீட்டுகிறார். துரியோதனனோ கண்ணனின் மேல் கையடித்துச் சத்தியம் செய்து தராமல், எதிர் இரு தூணைக் கோபத்துடன் கையினால் அறைந்தவனாய் க வார்த்தைகளால் கண்ணனை வைகிறான்.

''இடையர்களோடு காட்டிலே மாட்டு மந்தைகள மேய்த்துத் திரிந்தவனாகிய நீயா அரசர்களுக்கு அரசனாகி என்னைக் கையடித்துச் சத்தியம் செய்து தரச் சொல் கிறாய்? அன்றைக்குப் பாஞ்சாலியைத் துகில் உரிந்து அ மானப்படுத்தியபோது, ஒன்றும் செய்யமுடியாமல் பக்கத்தி இருந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த பாண்ட களுக்கு மானம் வேறு இருக்கிறதா? வனங்களிலே விலங் களைப் போல வாழ்ந்து அலைந்து, எடுபிடி வேலை செய் பிறர் இட்ட சோற்றையும் உண்டு உயிர் தாங்கிய அவர்க சிங்கமாகிய என்னை எதிர்த்துப் பொருது போரில் வெற் கொள்ளப் போகிறார்களா? நான் அதற்குக் கையிலடித்து சத்தியம் செய்து தரவேண்டுமா? பாண்டவர்களா எனக் சரி நிகரானவர்கள்? அவர்களுக்குத் தாயார் இருவர், தந் மார் ஐவர். தாரமோ ஒருத்தி. அப்படிப்பட்டவர்கள் என ஈடு! நான் கையிலடித்து சத்தியம் செய்து தரவேண்டும் என்று துரியோதனன் கடுமையான மொழிகளால் பாண்ட களையும், பாண்டவர்களின் தூதுவனையும் பழித்துப் பே கொண்டே சென்றபோது, கண்ணபெருமான் எதிர் ஒன்று பேசவில்லை. உள்ளுக்குள் சிரித்துக் கொள்கிறார். த கருதிய போர் இனி நலமாக முடியும் என்று தமக்குத் தா சொல்லிக்கொள்கிறார். தாம் இனியும் அங்கிருக்கத் தேவ யில்லை என்பதாக எழுந்து, விதுரர் வீட்டிற்கே திரும் விடுகிறார். 'சீலமற்றவர் சினந்தபோது ஒரு தீதிலாதவ செயிர்ப்பரோ?'' என வில்லிப்புத்தூராழ்வார், கண்ணன் கனிவுக்கு நியாயம் கற்பிப்பதைக் காண்கிறோம்.

கண்ணபெருமான் அவையைவிட்டு வெளியேறியதும், துரியோதனன் கோபம் கண்ணபெருமானைத் தம் வீட்டில் தங்க வைத்து உபசரித்த விதுரர் மேல் திரும்புகிறது.

''கண்ணனுக்கு ஏன் நீ விருந்து வைத்தாய்? என் இராச்சியத்தைப் பாண்டவர்கள் பறித்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசையில்தானே! என் உப்பைத் தின்றுவிட்டு எனக்கே துரோகம் புரிகிறாயே!'' என்று அவையில் பல மன்னர்கள் முன்னர் விதுரரைச் சாடும் துரியோதனன். அவருடைய பிறப்பையும் இழித்துக் கூறி,

**''முதல்விழைந் தொருவனுடன் இயைந்த**
**பொருள் பற்றி இன்புற முயங்கினும்**
**அதிகமென்ற பொருள் ஒருவன்வேறுதரின்**
**அவனையே ஒழிய அறிவரோ?**
**பொதுமடந்தையர் தமக்கு மண்ணிலிது**
**புதுமையன்று அவர் புதல்வனாம்**
**விதுரன் இன்றவனொடு உறவு கொண்டதோர்**
**வியப்பை யென்சொலி வெறுப்பதே''**

(கிருட்டிணன் தூது. 128)

எனப் பேசுவதைக் காண்கின்றோம். பொது மடந்தையின் வயிற்றில் பிறந்ததனால் விதுரர்க்குப் பொதுமடந்தையின் புத்தியே இருப்பதாக தகாத வார்த்தைகளால் துரியோதனன் பேசி ஏச, தாங்கமுடியாத கோபத்தில் எழுகிறார் விதுரர். ''என் பிறப்பைப் பழித்த உன் வாயை வாள் கொண்டு அறுத்து, உன் தலையையும் கொய்துவிடுவேன். ஆனால் குருகுலத்தில் மகனையே ஒரு தந்தை கொன்றுவிட்டான் என்று வையத்தவரும் வானத்தவரும் பழிப்பார்களே என்பதனால் அவ்வாறு செய்யாமல் விடுகிறேன். பாண்டவர்க்கு தூதாக வந்த கண்ணபெருமானுக்கு விருந்திட்டேன் என்பதனால் என்னைப் பழி கூறுகிறாயே; நேர்மையில் சிறந்தவர்களாகிய பாண்டவர்களுக்கே நான் துணையும் ஆவேனேயானால் என்னை யார் பழித்துக்கூற

முடியும்'' என்று அவனையே திருப்பிக் கேட்கும் விதுர பாண்டவர்க்குத் தாம் துணையாயினும் பார் பழிக்கா என்பதை அறிந்திருந்தும், துரியோதனனின் உப்பை உண் அந்த செஞ்சோற்றுக்கடனால் அவ்வாறு செய்யஎண்ணா தம்முடைய மிகச் சிறந்த வில்லாற்றல் கொடியவன் துரியே தனனுக்கு இனிப் பயன்படாமல் போகட்டும் என்பதா முடிவு செய்து.

> ''சொல்லிரண்டு புகலேன் இனிச் சமரில் நின்று
> வெங்கணை தொடேன்''
>
> (கிருட்டிணன் தூது 13

என்பதாகக் கூறித் தம் கையில் இருந்த திருமாலின் வில்லை வெட்டிக் கீழே எறிந்துவிட்டு அவைக்களத்தை விட்டு வே மாகச் சென்று விடுகிறார்.

விதுரர் முறித்த விஷ்ணு வில்லின் சிறப்பென்ன அவ்வில்லை முறிப்பதற்குக் கண்ணபெருமான் ஆடி நாடகத்தின் சிறப்பென்ன? தூதராக வந்த கண்ண பெருமான் மேலும் மேலும் ஆற்றப் போகும் மாயா விநே தங்கள் என்னென்ன? என்பனவற்றையெல்லாம் அடுத் அத்தியாயத்தில் காண்போம்.

# 3

பாரதத்தில் விதுரர் சிறந்த நீதிமானாகவும், சிறந்த வில்வீரராகவும் போற்றி உரைக்கப்படுகிறார். ''நீதி புனை விதுரன்'' ''வில் விதுரன்'' எனவே அவரைக் குறிப்பிடும் இடங்களில் எல்லாம் அடைமொழி கொடுத்துப் போற்றி உரைத்திருப்பதைப் பாரதம் முழுவதும் காண முடியும். துரியோதனன் அவருடைய பிறப்பை இழித்துக் கூறும் அளவிற்கு அவர் இழி பிறப்பாளரா? எனில் இல்லை இல்லை என்றே சொல்லுதல் வேண்டும். ''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமை யான்'' என்ற வள்ளுவர் வாய்மொழியே எக்காலத்திற்கும் பொருந்தும் பொன்மொழி என்பதை நன்மனத்தோர் ஒப்புவர். வியாச முனிவருக்கும் அம்பிகைக்கும் பிறந்தவர், துரியோதனனின் தந்தையாராகிய திருதராட்டிரர். வியாச முனிவருக்கும் அம்பாலிகைக்கும் பிறந்தவர் பாண்டவர்களின் தந்தையாராகிய பாண்டு. வியாசமுனிவருக்கும் அம்பிகையின் பணிப்பெண்ணிற்கும் பிறந்தவரே விதுரர்.

விதுரரின் மேன்மையை வியாசமுனிவரே

**''அம்பிக்கைக்கொடி தோழியை விடுத்தனள்**
**அவள்புரி தவந்தன்னால்**
**உம்பரிற்பெறு வரத்தினால் தருமன் வந்து**
**உதித்திடும்பதம் பெற்றான்**
**வெம்படைத் தொழில் விதுரன் என்றவன் பெயர்''**

(சம்பவச் சருக்கம். 20)

எனக் கூறியிருப்பதைக் காணலாம். அறக்கடவுளாகிய எமனே விதுரராகப் பிறந்தார் என்பது வியாசர் வாக்கு. அவருடைய அத்தகைய சிறப்பினைப் போற்றித்தான்

வீடுமரும் விதுரரையே அமைச்சராக்கி அவனி ஆ வைத்துள்ளார். அத்தகைய நீதிமானை நீசன் துரியோதன பழித்துரைத்ததும் அவன் வினையே அல்லாமல் வேறில்லை

விற்களிலே சிவனுடைய வில் ஒன்று, விஷ்ணுவினுடை வில் ஒன்று, ஆக இரண்டு விற்களே மேன்மையா விற்கள் என்று காவியங்களில் பேசப்பட்டுள்ளன சிவபெருமானுடைய வில்லை முறித்தே இராமன் சீதை மணங்கொண்டான் என்பது இராமாயணத்தால் அறி லாகும் செய்தி. மற்றொரு வில்லாகிய விஷ்ணுவின் வி பரசுமானிடம் இருந்து பின்புஇராமபிரானிடம் வந்துற்றது இராமாபிராமனிடம் இருந்த அவ்விஷ்ணு வில்லே விதுரனிடம் வந்து விளங்கியது என்பதைப் பாரதத்தா அறிகிறோம். அவ்விஷ்ணு வில்லைக் கொண்டே நிகரற் வில்வீரராக விளங்கினார் விதுரர். அவர் போர்க்களத்திலே எதிர்நிற்பாரேயானால், அர்ச்சுனனும் அவரை வெல்ல முடியாது. திருமாலின் அமிசமாகிய கண்ணபெருமானும் கூட வெல்லுதல் அரிதேயாகும். ஆகவே நடைபெறும் பாரதப் போரில் பாண்டவர் வெல்ல வேண்டுமானால், விதுரரின் கையில் இருந்த விஷ்ணு வில் முதலில் அழிந்தாக வேண்டும். பாண்டவரின் தூதராக வந்த கண்ணன் விதுரரின் வில்லை அழிக்க செய்த தந்திரம் தான், விதுரரும் எதிர்பாராமல் அவர் வீட்டிற்கு விருந்தாகச் சென்றது. அதனால் துரியோனுக்குக் கோபம் வந்து 'தாசி மகன்' என விதுரரைப்பழிக்க விதுரரும் ''வில்லிரண்டினும் உயர்ந்த வில்லதனை வேறிரண்டு ஈட வெட்டினார்'' என்பதை மேலே கண்ணுற்றோம்.

வீடுமரும், விதுரரின் வில்லின் சிறப்பை ''காரனைத்தும் விடு தாரையன்ன பலகணைகள் ஏவி அமர்கருதும் வில்'' என்று கூறி ''வீரனைப் பழுதுரைத்த நீபகையை எங்ஙனே தனிகொல் வெல்லுவாய்'' என துரியோதனனைக் கண்டிப்பதைக்காண்கின்றோம். துரியோதனன் அவையில்

இருந்த அரசர் பலரும் ''விஷ்ணு வில் முறிந்து போனதே! விசயன் போருக்கு வருவானேயானால், எந்த வில்லி எதிர் நிற்கும்?'' என்று வருந்தி உரைப்பதையும் காணுகின்றோம். ''அப்படிப்பட்ட சிறந்த வில்லை ஏன் முறித்தீர்'' எனக் கண்ணபெருமானும் தெரிந்தும் தெரியாதவரைப்போல் விதுரரை

**''இருசிலையுண்டென்றறிந்த இருநிலத்**
**தியம்பும் வில்லின்**
**ஒரு சிலை முறித்த சீற்றமென் கொலோ?''**

(கிருட்டிணன் தூது 141)

என வினவுவதைக் காணுகின்றோம்.

''உரைத்த புன்சொல் எனக்கிசையாமல் யானும் இருஞ்சிலை இறுத்தேன்'' என்று விதுரர் விடை கூறுகிறார். உடனே வில் முறிந்தது குறித்து கண்ணபெருமானுக்கு உண்மையில் வருத்தம் இருக்குமானால் தம் வருத்தத்தை அல்லவா விதுரிடம் தெரிவித்திருக்க வேண்டும். மாறாக அவர் மன மகிழ்ச்சியே கொள்கிறார்.

**''மாயனும் மகிழ்ந்து நோக்கி**
**மாசுணமுயர்த்த மன்னன்**
**போயருஞ்சேனையோடு போர்க்**
**களங் குறுகும்போது**
**நீயவனருகு நில்லா தொழியின்**
**நின்நேய மைந்தர்**
**தாயமுஞ் செல்வமுற்றும் தரணியும்**
**பெறுவர் அன்றே''**

(கிருட்டிணன் தூது. 145)

என்ற பாடலை நன்கு படித்துப் பாருங்கள். 'மாயன்' என்கிறார் கண்ணனை வில்லிப்புத்தூராழ்வார். தம்மை 'ஆயன்' என்று பழித்த துரியோதனனை மாய்க்கவே 'மாயன்' தந்திரமாய் தூது என்ற பெயரில் அத்தினாபுரி

வந்து விதுரர் வீட்டில் விருந்தாகத் தங்கி, வில்லொடிக்ச செய்தார் என்பது இப்பாடலால் தெளிவாகும். மேலும் கண்ணபெருமான் சொல்லுகிறார்.

> ''ஏற்றிய நறுநெய் வீசி
> இந்தனம் அடுக்கினாலும்
> காற்றுவந் துறாதபோது
> கடுங்கனல் கதுவவற்றோ
> நீற்றணி நிமலன் அன்ன நின்கை
> வில்இற்ற தாயிற்
> சீற்றவேல் அரசன்சேனை
> தென்புலம்படர்கை திண்ணம்''
>
> (கிருட்டிணன் தூது. 146)

'விறகுகளை அடுக்கி, நெய்யை ஊற்றி எரிய வைத்த போதும், காற்று சாதகமாக வீச வில்லையானால், மிகுந்த நெருப்பு பற்றாமல் போய்விடும். விபூதியைத் தரித்த குற்ற மற்ற சிவபெருமானை ஒத்த விதுரரே! உம் கையில் இருந்த வில்லை நீர் ஒடித்தது பாண்டவர் பக்கமாய் வெற்றி காற்றினை வீச வைத்திருக்கிறது. இனி துரியோதனன் படைகள் யமலோகம் செல்வது உறுதி' என்பதாகக் கண்ண பெருமான் தம் எண்ணத்தைத் தெளிவுபடுத்தியிருப்பதால், பாரத அமரில் யாவரையும் நீறாக்கிப் பூபாரம் தீர்க்கவே புயல்வண்ணன் சூழ்ச்சிகள் புரிகிறான் என்பதை உணரலாம். வில்லை ஒடித்த அச்சூழ்ச்சியுடன் கண்ணனின் மாயை நின்று விடவில்லை.

''துரியோதனன் மொழிந்த வெல்லாம் பொறுத்துக் கொள்'' என்பதாக விதுரரைத் தேற்றி தாம் வந்த வேலையை மேலும் தொடரக் கண்ணபெருமான் கர்ணனை பயந்த காதற்கன்னிதன் கோயில் புகுகிறார். கர்ணனைப் பயந்த காதற்கன்னி யார் என்பது கர்ணனுக்கே தெரியாத ஒன்று.

கர்ணனுக்கு மட்டுமல்ல. கண்ணபெருமான் ஒருவருக்கு அன்றி மற்ற எவருக்குமே தெரியாத மாபெரும் இரகசியமே அது. துரியோதனனுக்கு உற்ற நண்பனாகவும், பஞ்ச பாண்டவர்களுக்குக் கொடிய பகைவனாகவும் விளங்கும் கர்ணனைப் பெற்றவள் யார் என்பதைத் தெரிந்துகொள் ளும்போது அது நமக்கே விந்தையாகத்தான் விளங்குகிறது. எந்தப் பஞ்ச பாண்டவர்களை வெல்வேன் என்று கர்ணன் உறுதிபூண்டு விளங்குகின்றானோ, எந்தப் பஞ்ச பாண்டவர் களில் ஒருவனாகிய அர்ச்சுனனைத் தன் கொடிய நாகாத் திரக் கணையால் கொல்வேன் என்று கர்ணன் வஞ்சினம் பூண்டு விளங்குகின்றானோ, அந்த அர்ச்சுனன் உள்ளிட்ட பஞ்சபாண்டவர்களை ஈன்ற குந்திதேவியே, கர்ணனைப் பயந்த தாய் என்பது கண்ண பெருமானால் குந்தி தேவியிடம் அறிவிக்கப் படும்போது, அச்செய்தி குந்தியே ஆச்சரியப்படத் தக்க செய்தியாகத்தான் இருக் கிறது! அந்த விவரங்களை இனி விரிவாகக் காண்போம்.

பஞ்சபாண்டவர்கள் வனவாசத்தில் வாடிய அந்தப் பதின்மூன்று ஆண்டுக் காலமும் குந்தி அத்தினாபுரியில் தனக்கென திருதராட்டிரர் ஒதுக்கியிருந்த ஓர் அரண் மனையில் தங்கியிருந்தாள். தம்அன்பிற்குரிய மக்கள்ஐவரை யும் மருமகளையும் குந்திதேவியும் பதின்மூன்றாண்டுக் காலம் காணப்பெற்றாள் இல்லை. கண்ணபெருமான் தம் மனைக்கு எழுந்தருளக் காணும் குந்தி, தம் மக்களையே நேரில் கண்டாற் போன்ற பெருமகிழ்வு கொள்கிறாள். ''கானுறு மைந்தர் தம்மைக் கண்டனள் போன்றாளாகி'' களிப்புறும் குந்திதேவி ''யானுறை இல்லின் வந்தது என்ன மாதவம்?'' என்று கண்ணபெருமானை ஏத்தி, அதன்பின் கண்ணபெருமான் அத்தினாபுரிக்கு வந்துற்ற காரணத் தையும் வினவுகின்றாள்.

அதற்குக் கண்ணபெருமான்

**''நின்பெரும் புதல்வர் சொல்ல நெடும்புனல் நாடுவேண்டி
வன்புடை யரசர்கோமான் மனக்கருத்தறிய
வந்தேன்!
தென்புலவேந்தன் வெஃகச்செருத்தொழில்
புரிவன் என்றான்''**

(கிருட்டிணன் தூது. 150)

என்று பாண்டவர்களுக்காகத் தூது வந்ததையும், துரியோதனன் நாடு தர மறுத்துப் போரே புரிவேன் என முடிவு செய்திருப்பதையும் எடுத்துக் கூறுகின்றார். போர் நடப்பது உறுதியாகி விட்டதை அறிந்த அந்தத் தாயின் மனம் போரில் வெல்பவர் யாரோ? விதியினால் சாபவர் யாரோ? என்று எண்ணிக் கலங்குகிறது. அப்போதுதான் கர்ணனும் குந்தி பெற்ற பிள்ளையே என்ற இரகசியத்தை கண்ணபெருமான் குந்திக்கு எடுத்துரைத்து அவளை அதிசயிக்கவும், அதிர்ச்சியடையவும் செய்கிறார்.

கோபத்திற்கும் சாபத்திற்கும் பேர்போன துர்வாச மாமுனிவர் குந்திபோஜராஜனின் அரண்மனைக்கு எழுந் தருளியிருந்த காலத்தில், மன்னன் தன் மகளான குந்தியை முனிவர்க்குப் பணிவிடை செய்யுமாறு பணியில் அமர்த்தி இருந்தான். குந்தியும் அவ்வாறே ஓராண்டுக்காலம் துர்வாச முனிவருக்கு எல்லாப் பணிவிடைகளையும் சிறப்பாக நிறை வேற்றி, முனிவரின் மதிப்பிற்கு ஆளானாள். அதனால் பெருமகிழ்ச்சியுற்று துர்வாச மாமுனிவர், தேவர்களை வரவழைக்கவல்ல ஆறு மந்திரங்களைக் குந்திக்கு உபதேசித் தருளி, இம்மந்திரங்களைச் சொல்லித் தியானித்தால் அந்தந்த மந்திரங்களுக்குரிய தேவர்கள் வந்து அவளுக்கு அவர்களின் அமிசமாக விளங்கும் புத்திரர்களைத் தருவர் எனக் கூறி வாழ்த்திச் செல்கின்றார்.

முனிவர் சென்ற பிறகு, குந்தி அம்மந்திரங்களைச் சோதித்துப் பார்க்க விரும்பி சூரியனுக்குரிய மந்திரத்தைச்

சொல்லித் தியானித்தாள். உடனே சூரிய பகவானும் அம்மந்திரவல்லமையால் குந்தியின் முன் தோன்றித் துருவாசர் கூறியவாறே தம் அமிசமாக ஒரு குழந்தையையும் உண்டாக்கிக் குந்திதேவியிடம் கொடுத்து, மறைந்து போனார். அதற்குப் பிறகு தான் குந்தி, தனக்கு இன்னும் திருமணமே ஆகாத நிலையில், இப்படியொரு குழந்தைக்குத் தன் அறியாமையால் தாயாக நேர்ந்ததை எண்ணி, இவ்வுண்மை மற்றவர் அறிய நேரின் பழிவந்து சேருமே என மனம் பதைத்து, வேறு வழியின்றி ஒரு மரப்பேழையில் குழந்தையை வைத்து யமுனை ஆற்றில் விட்டுவிட, யமுனை யாறும் அக்குழந்தையைக் கங்கையாற்றில் கொண்டுபோய்ச் சேர்த்தது.

கங்கையாற்றில் மிதந்து வந்த மரப்பேழையைத் திருதராட்டிர மன்னனின் தேரோட்டியாகிய அதிரதன் அடையப்பெற்றுக் குழந்தையைக் கண்டெடுத்து தனக்குப் பிள்ளை இல்லாததால் தானே மகிழ்ந்து அதனை வளர்க்க ஆசைகொண்டு வாரி எடுக்குங்கால் கர்ணகுண்டலங்களுடன் பிறந்த இக்குழந்தையைக் கர்ணன் என அழைக்குமாறு சூரியனும் அசரீரியாக ஆகாயத்தில் நின்று ஆணையிட கர்ணனும் தேரோட்டியின் மகனாக வளர்ந்தான் என்ற விவரங்களையெல்லாம் முக்காலமும் அறிந்தவராகிய கண்ணபெருமான், குந்திதேவிக்கு எடுத்துரைத்தருளு கின்றார்.

**''கதிரவன் அருளினாலோர் கணத்திடை காதல் கூர**
**மதலையங் கொருவன் தன்னைப் பயந்த**
**பின் வடுவென்றஞ்சி**
**மிதவையம் பேழைதன்னிற் பொதிந்து நீ**
**விட அப்போது அந்**
**நதியும் மகவைக் கங்கைநதியிடைப் படுத்ததன்றே''**

(கிருட்டிணன் தூது 153)

''காதல்நின் புதல்வன் தன்னைக் கண்ணிலா அரசன் பொற்றேர்ச்
சூதன்வந் தெடுத்துக்கொண்டு சுதனென வளர்க்குங்காலை
ஆதவன் இவனை யாருங் கன்னன் என்று அழைக்கவென்றான்
தாதையும் விசும்பிற் சொன்ன நாமமே தக்கதென்றான்''
(கிருட்டிணன்தூது 154)

இவ்வாறாகக் கர்ணன் குந்திதேவியின் தலைப்பிள்ளையாவதை எடுத்துரைத்த கண்ணபெருமான் அம்மூத்தப் பிள்ளை கர்ணன், துரியோதனனின் அன்புக்குப் பாத்திரமாகி அங்க நாட்டு மன்னனாக விளங்குவதையும், அர்ச்சுனனைப் பாரதப் போரில் கொன்றே தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருப்பதையும் தெரிவித்து, அதன் பிறகு தாம் குந்தியைத் தேடி வந்த காரணம் என்னவென்பதையும் விவரிக்கிறார். பாண்டவர்களுக்கு வெற்றித் தேடி தருவதொன்றே கண்ணபெருமானின் இலட்சியம். அந்த இலட்சியம் நிறைவேற தடையாயிருந்த விதுரரின் வில்லை அவர் வீட்டில் விருந்தாளியாகத் தங்கியதன் மூலம் ஒடிக்கச் செய்து வெற்றி கண்ட கண்ணபெருமான் இத்தனைக் காலம் குந்தியின் பிள்ளை கர்ணன் என்பதைத் தெரிவிக்காமல் இருந்து, இப்பொழுது அதைக் குந்திக்குத் தெரிவிப்பதன் மூலம், பாண்டவர்களின் வெற்றிக்குப் பாடுபடுகிறார். அதனால் தான் குந்தியிடம் ''நின் மகன் கர்ணனை, பாண்டவர்கள் பக்கம் வருமாறு நீ போய் விரைவில் கூறிக் கூட்டுவிக்க வேண்டும். அதனால் கர்ணனுக்கு உண்டாகப் போகும் நன்மைகளையும் அவனுக்கு நீ எடுத்துரைக்க வேண்டும்'' என்பதாகக் கண்ணபெருமான், குந்திதேவியிடம் அறிவிக்கிறார்.

**''அந்தநின் மைந்தன் தானே அருஞ்சிலை விசயனோடு**
**வந்தெதிர் மலைய நின்றான் உறவுமற் றறியமாட்டான்**
**சிந்தையின் ஐயம் தீர இதனை நீதெளியச் சொல்லிச்**
**கொந்தவிழ் அலங்கலானைக் கூட்டுக விரைவின்அம்மா''**

(கிருட்டிணன் தூது 156)

**''தம்பியர் ஐந்துபேரும் தனித்தனி ஏவல்செய்ய**
**வம்பவிழ் அலங்கலோடு மாமணி மகுடஞ்சூட்டி**
**அம்புவி முழுதும் நீயேயாளலாம் வருக''**

(கிருட்டிணன் தூது 157)

*என்று கூறி பாண்டவர் அணியில் வருமாறு, பாண்டவர்க்கும் மூத்தவனாகிய கர்ணனைப் போய் உடன் அழைத்துவரக் கண்ணபெருமான் கேட்டுக் கொள்கிறார். அவ்வாறு அழைத்தாலும் கர்ணன் வரமாட்டான் என்பதும் கண்ண பெருமானுக்குத் தெரிந்தே இருக்கிறது. அதனால் தான் அனைத்தும் அறிந்திருப்பவராகிய கண்ணபெருமான் கர்ணனின்செஞ் சோற்றுக்கடன் சிறப்பையும் மிக நன்றாகவே அறிந்தவராகப் பாண்டவர் அணியில் வந்து சேர கர்ணன் நிச்சயம் மறுத்துவிடுவான் என்பதையும் தெரிந்த வராய், அந்நிலையில் கர்ணன் வர மறுத்தால் குந்தி தேவி என்ன வரம் அவனிடம் கேட்டு பெற்று வர வேண்டும் என்பதையும் கூறுகிறார்.*

**''எரியமுதருந்தக் கானம் எரித்தநாள் அகன்றுபோன**
**அரவினை அங்கர்கோமான் ஆசுகமாகக் கொண்டான்**
**வரிசிலை விசயன்தன் மேல் மறுகணை**
**தொடுக்கா வண்ணம்**
**ஒருவரம் வேண்டுகென்றான் உற்றவர்க்கு**
**உறுதி சூழ்வான்''**

(கிருட்டிணன்தூது 158)

*தன்னை நம்பி வாழ்பவர்களாகிய பஞ்ச பாண்டவர் களுக்கு என்ஞான்றும் நன்மையே எண்ணி, நாடியதே*

முடிக்கும் செயல்திறமும் அருட்திறமும் வல்லவராகிய கண்ணபெருமான் குந்தி, கர்ணனிடம் கோரிப் பெற வேண்டிய வரமாகத் தெரிவிப்பது என்னவென்றால் அர்ச்சுனன் காண்டவ வனத்தை எரித்து அக்கினி பகவானுக்கு அமுதாக்கியபொழுது, தப்பிப் பிழைத்த அசுவசேனன் என்ற கொடிய நாகம் கர்ணனை அடைந்து அர்ச்சுனனைக் கொல்லும் நாகாத்திரமாய் விளங்குவதால், அக்கணையை ஒரு முறைக்குமேல், அர்ச்சுனன் மேல் ஏவலாகாது என்ற ஒரு வரத்தையே கோரிப் பெற்று வருமாறு கோருகிறார்.

காண்டவ வனத்தை அர்ச்சுனன் எரியூட்டுமாறு செய்தவரும் கூட கண்ணபெருமான் தான். எப்பொழுதோ நடக்கப்போகும் பாரதப் போரை முன்கூட்டியே கணித்துக் கொண்டவராகிய கண்ணபெருமான், அப்போரில் துரியோதனாதியர்களை வெல்லுவதற்காக அர்ச்சுனன் அக்கினி பகவானிடம் காண்டீபம் எனும் ஒப்பற்ற வில்லை பெற வேண்டுமென விரும்புகிறார். அதற்காகவே இந்திரனுக்கு உரிமையுடையதான காண்டவ வனத்தை அக்கினி பகவான் தனக்கு அவ்வனத்திலுள்ள சராசரங்களுடன் எரியூட்ட வேண்டுமென வேண்டியபோதும் அர்ச்சுனனை இசைய வைத்து காண்டீபம் என்னும் ஒப்பற்ற வில்லையும், கணைகளையும் அக்கினியிடம் பெற்றுத் தருகிறார். அக்கினி அக்காண்டவனத்தைத் தன் தீ நாக்குகளால் எரித்து உண்ணும்போது அக்காட்டின் தலைவனாகிய இந்திரன் தன் பரிவாரங்களுடன் வந்து பெரும் பேய் மழையைப் பொழிவித்து தீயை அணைக்க முற்படுகிறான். ஆனால் அர்ச்சுனன் அம்புகளால் சரக்கூடம் கட்டித் தன் ஆற்றலால் மழைநீர், தீயை அணைக்க இயலாதவாறு தடுத்து விடுவதுடன், தப்பி ஓட முற்பட்ட தக்ககன் என்ற கொடிய நாகத்தின் மனைவியையும் தன் கணையால் கொன்று வீழ்த்தி விடுகிறான். இந்திரன் தன் நண்பன் ஆகிய தக்ககனின் மகன் அசுவசேனை மட்டும் அக்கினி உண்ணாவண்ணம்

காப்பாற்றி வனத்திலிருந்து வெளியேற்றி விடுகின்றான். அவ்வாறு காப்பாற்றப்பட்ட அசுவசேனன் தான் தன் தாயைக் கொன்ற அர்ச்சுனனைப் பழிவாங்கும் பொருட்டு கொடிய நாகாத்திரமாகக் கர்ணனிடம் போய் தங்கி உள்ளான்.

அக்கொடிய நாகாத்திரத்தினால் அர்ச்சுனன் உயிருக்கு நேர உள்ள அபாயத்தை அறிந்திருப்பவராகிய கண்ண பெருமான், குந்தியிடம் அக்கணையை ஒரு முறைக்குமேல் ஏவாதிருக்கக் கர்ணனிடம் வரம்கேட்டுப் பெறவேண்டும் எனத் தெரிவிக்கின்றார். அப்பொழுது குந்தி, கர்ணனை தன் புதல்வன் எனக் கண்டு கொண்டதனால் மகிழ முடியாமல், ஏன் கண்டு கொண்டோம் என்பதாகத் துன்பமே கொள்கிறாள்.

தம் துன்பத்தைக் கண்ணனிடம் கூறிப்புலம்பவும் செய்கின்றாள். ''கண்ணா! கர்ணன் என்பிள்ளை தான் என்பது உனக்கு முன்னமே தெரியும் அல்லவா! அப்படி தெரிந்திருந்தும் எனக்கு முன்னமே தெரிவிக்காமல் இப்பொழுது போரினை உண்டாக்கி வைத்துவிட்டு, இப்பொழுது வந்து கர்ணன் நின்மகன் என்று கூறி பெரிய பாரத்தை என்மீது சுமத்துகிறாயே! முன்னமே நீ எனக்கு இந்த உண்மையைத் தெரிவித்திருப்பாய். ஆனால் கர்ணனை துரியோதனனிடம் நெருங்காமல் நான் தடுத்திருப்பேனே! இப்போது நீ கர்ணனிடம் வரம் ஒன்றும் வாங்கி வரச் சொல்லுகிறாய். அந்த வரத்தை நான் கேட்டு கர்ணனிடம் வாங்கி விட்டால் அர்ச்சுனனால் நிச்சயம் கர்ணன் மாண்டு போவான். அந்த வரத்தை நான் கேட்டு வாங்காமல் போனாலோ கர்ணன் நிச்சயம் அர்ச்சுனனைக் கொன்று விடுவான். இப்படிப்பட்ட ஒரு இக்கட்டான நிலையில் என்னைக் கொண்டு வந்து நிறுத்தி விட்டாயே! கண்ணா என்ன செய்வேன். நான் செய்வேன்?'' என்பதாகக் குந்தி தேவி கூறிப்புலம்புகிறாள்.

''மன்றலங் தெரியல் வெய்யோன் மதலையென் மைந்த
னென்பது
அன்றெனக் குரைத்தாயாயின் அவனுடன் அனுக
வொட்டேன்
சென்றுயிர் ஒழிக்குமாறு செருவினை விளைத்துப்பின்னை
இன்றைக்கு உரைத்தாய் ஐயா என் நினைத்து என்
செய்தாயே!'

''கான்பட்ட கனவிற்பாயுங் கடுங்கணை விலக்கினேனேல்
வான்பட்ட புரவித்தேரோன் மகன்படும் மகவான்மைந்தன்
தான்பட்டு மடியுஞ் சென்று தடாதினியிருந்தேனாகில்
யான்பட்ட கொடுமை நன்று என்று என்பட்டாள்
இரங்கி வீழ்ந்தான்''
(கிருட்டிணன் தூது 160)

இவ்வாறாகப் புலம்பி, மயங்கி விழுந்த குந்திதேவியின் துயரம், கொடும் துயரம் தான். எத்தனையோ ஆண்டு களுக்கு முன்பு பெற்ற அந்த ஆண்மகவை, மரப்பேழைக்குள் வைத்து மானத்திற்கஞ்சி ஆற்றிலே விட்டாள். அந்தக் குழந்தை இருக்கிறதா இறந்துவிட்டதா என்பதும் தெரியா மல், துன்பத்தைப் பிறரிடம் எடுத்துக் கூறி ஆறுதல் பெறவும் முடியாத துன்பத்தில் அவள் வாடினாள்.

கண்ணபெருமான் வந்து அந்தப் பிள்ளை பிறந்த தனையும், ஆற்றில் அவள் விட்டதையும் கூறியபோது, தன் மகவு உயிருடன் எங்கிருக்கிறான் என்பதை அறிந்து கொள்ளும் ஆர்வமும் குந்திக்கு ஏற்பட்டிருக்கக் கூடும். அந்த பிள்ளை கர்ணன்தான் என்பதை கண்ணன் எடுத் துரைத்தபோது அவள் ஆர்வம் குறைந்து, அதிர்ச்சியே மிஞ்சுகிறது. இப்போது கண்ணன் உண்மையை உரைத் திருப்பதோ கர்ணனிடம் வாங்கி வந்தாக வேண்டிய வரத்தின் அவசியத்தைப் பொறுத்ததாய் உள்ளது. வரம் கேட்டு வாங்கிவந்தால் தலைப்பிள்ளையின் உயிருக்கு

ஆபத்து. வரம் கேட்டு வாங்காமல் போனாலோ செல்லப் பிள்ளை அர்ச்சுனன் உயிருக்கு ஆபத்து, இந்நிலையில் குந்தி மனத்தடுமாற்றம் கொண்டு மயங்கிவிழாமல் என்தான் செய்வாள்?

அப்பொழுது, ஆபத்சகாயனான கண்ணன் குந்தி தேவியைத் தேற்றுகின்றார். பஞ்சபாண்டவர்கள் ஐந்து தலைப் பாம்பினைப் போல உடல் ஐந்தும், உயிர் ஒன்றும் கொண்டவர்கள். அர்ச்சுனன் ஒருவன் இறந்தாலும் தருமர், பீமன், நகுலன், ச ாதேவன் ஆகிய நால்வருமே மாண்டு போய் விடுவார்கள். ஆகவே ஐவர் ஒரு சேர மாண்டுபோவது வேண்டுமா? அல்லது என்றோ ''மகனில்லை'' என்பதாகக் கைவிடப்பட்டஒருவன்-கர்ணன் மாண்டுபோவது வேண்டுமா? அறிவோடு ஆய்ந்து பார்த்து குந்தி முடிவு காண வேண்டும் என்பதாகக் கண்ணபெருமான் குந்தியைத்தேற்றும் பாரதப்பாடல் வருமாறு :

> **''பைவருந் தலைகள் ஐந்து படைத்த பன்னகமேபோல**
> **ஐவரும் படுதல்நன்றோ அங்கர்கோன் படுதல்**
> **நன்றோ?**
> **உய்வரும் சமரில் ஆவி ஒருவர்போய் ஒருவர் உய்யார்**
> **நைவரும் துயரம்மாறி நடப்பதே தருமம்''**
>
> (கிருட்டிணன் தூது 162)

என்று கண்ணபெருமான் குந்திக்குத் தேறுதல் கூறி, விதுரரின் மனைக்குப் புறப்பட்டுப் போய்விடுகிறார். இப்படியாகப் பாண்டவர்களின் வெற்றிக்கு கண்ணபெருமான் தூது வந்த வேலையுடன் வேறு பல வேலைகளில் ஈடுபட்டிருக்கும் அந்த இரவு வேளையில், துரியோதனனோ, தன் தந்தை திருதராட்டிரன், தம்பிமார்கள், கர்ணன் மற்றும் சகுனி ஆகியோருடன் ஆலோசனை மண்டபத்தில் கூடி ஒரு மாபெருஞ் சதித் திட்டத்தில் ஈடுபட்டிருக்கிறான். அந்தச் சதி பாண்டவருக்குத் தூதுவனாகத் தனித்து வந்திருக்கும் கண்ணனை எப்படியும் மாய்த்து விடவேண்டும் என்பதே. அத்தினாபுரியிலிருந்து உயிரோடு மீண்டு செல்வ

கண்ணனை விட்டு விடக் கூடாது என்பதற்காகவே அத்தனை பேரும் அந்த இரவு வேளையில் கூடிச் சதி ஆலோசனையில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களின் சதி ஆலோசனையின் பயனாய் அவர்கள் எடுக்கும் முடிவு என்ன? அந்த முடிவுக்கு ஏற்ப அவர்களால் கண்ணபெருமானை மாய்க்க முடியுமா? பாண்டவர்களின் ஆபத்தைத் துடைக்கப் பாடுபடும் கண்ணபெருமான், தமக்கே ஒரு பெரும் ஆபத்துக் காத்துக்கொண்டிருப்பதை அறிந்து கொண்டாரா? இவற்றையெல்லாம் அடுத்த அத்தியாயத்தில் இனிக்காண்போம்.



# 4

கண்ணபெருமான், குந்திதேவியிடம் கர்ணனின் பிறப் புண்மையை உணர்த்தி அவளிடம் கேட்டுப் பெற்று வரவேண்டிய வரம் என்னவென்பதையும் தெரிவித்து மீண்டும் விதுரரின் அரண்மனைக்கே வந்து, கண் அயர் கிறார். அத்தினாபுரி முழுவதுமே அயர்ந்து உறங்கிக் கொண்டிருக்கும் அந்த இரவு நேரத்தில் துரியோதனன் உறங்கவில்லை. அவன் நம்பிக்கைக்குரிய அவன் கூட்டத் தார் ஒருவரும் உறங்கவில்லை. சபா மண்டபத்தில் தந்தை திருதராட்டிரன், ஆருயிர் நண்பன் கர்ணன், மாமா சகுனி மற்றும் தன்னுடன் பிறந்த சகோதரர்கள் தொண்ணூற்று ஒன்பதின்மர்களுடன் வீற்றிருந்த நேரத்தில், அவசர அவசர மாக அவர்களை ஏன் வரவைழக்க நேர்ந்தது என்பதைக் கூறுவதைப் போல் அனைவரையும் பார்த்து,

> **''பாதவ வனத்திற் போன பாண்டவர் தம்மை**
> **மீண்டுமேதக அழைத்து நாடு வேண்டுமின் என்றுமூட்டும்**
> **யாதவன் தனித்து வந்தான் என்செய்வது இயம்பும்''**

என்று வினவுகிறான்.

''பாண்டவர்கள் தாமாக அவர்கள் இழந்த நாட்டைக் கேட்கவில்லை. கேட்குமாறு தூண்டி விடுபவன் இடையன் ஆகிய கண்ணன்; அவன் அத்தினாபுரிக்குத் துணிவாக வந்திருக்கிறான்; தனியாக வந்திருக்கிறான். இந்த நேரத்தில் நாம் என்ன செய்யலாம். சொல்லுங்கள்'' என்று துரியோதனன் கேட்கிறான். அவன் வினாவிற்கு விடையை முதலில் அளிப்பவர் அவனுடைய தந்தை திருதராட்டிரர். "கண்ணன் தனியாக வந்தனன், என்ன செய்யலாம்'' என்று கேள்வியின் அர்த்தம் விளங்காதபடி தான் வினவுகிறான்

துரியோதனன். நமக்கு அர்த்தம் விளங்கவில்லை. ஆனால் பாம்பறியும் பாம்பின் கால் அல்லவா? அதிலும் பாம்பைக் கொடியாகவே கொண்டு விளங்குகின்ற திருதராட்டிர னுக்குத் தன் மகன் கேட்ட கேள்வியின் பொருள் விளங் காமல் போகுமா? விளங்கிவிட்டது. கண்ணனைக் கொல்லு வதற்கே தன் மகன் ஆலோசனை கேட்கிறான் என்பதைத் தெரிந்து கொண்ட திருதராட்டிரன் தன் மகன் எண்ணத் தைத் தவறு எனக் கண்டித்துக் கூறியிருக்கலாம். பாண்டவர் களுக்குரிமை உடைய நாட்டைச் சமாதான முறையிலே வழங்கிவிடத் தன்மகனுக்கு ஆணையிட்டிருக்கலாம் அல்லது அறிவுரையாவது கூறியிருக்கலாம். தான் நல்லதைச் சொன்னால் அதை மந்திரமாகக்கொண்டு தன் மகன் செயல் பட மாட்டான் என்பதனாலோ அல்லது தன் மகன் நினைத் ததுதான் தனக்கும் ஏற்றது என்பதனாலோ தெரியவில்லை, திருதராட்டிரன் தன் மகன் கேட்ட கேள்விக்கு,

> ''இரும்புலி வலையிற் பட்டால் விடுவரோ எயினர் ஆனோர்
> வரம்பில் வெஞ்சேனை யோடும் வளைத்தினி மாயன் தன்னைக்
> கரும்பொழுதகலு முன்னே கொல்வதே கருமம்''
> (கிருட்டிணன் தூது 171)

என்று பதிலுரைக்கின்றான்.

''வலிமை வாய்ந்த புலி வலிய வந்தது. வலையில் மாட்டியும் கொண்டுவிட்டது. வேடர்கள் என்ன செய்வார் களோ அதைத்தான் நாமும் செய்யவேண்டும். எண்ணிலாப் படைகளோடு போய் மாயனை வளைத்துக்கொண்டு கரிய இரவு பொழுது அகலும் முன்பாகவே கரியவனைக் கொன்று விட வேண்டும்' என்று திருதராட்டிரன்-வயதில் மூத்தவன்-அன்பையும் அறத்தையும் போதிக்க வேண்டியவன் இப்படி ஒரு கருத்தைத் தெரிவித்ததைக் கேட்டுத் துரியோதனன் மகிழ்கிறான். சகுனியும் மகிழ்கிறான். துரியோதனனின் உடன் பிறந்த தொண்ணூற்றெட்டுச் சகோதரர்கள் மகிழ்

கின்றனர். ஏன் கர்ணனும் கூட கேட்டு மகிழ்கிறான் ஆனால் விகர்ணன் என்ற துரியோதனனின் சகோதரன் ஒருவன் மட்டும் அதை வெறுக்கிறான். வெறுத்ததோடு அதை மறுத்தும் தன் கருத்தைத் துணிவாக எடுத்துரைக்கிறான். தந்தை திருதராட்டிரன் "கண்ணனைக் காரிருள் விலகுவதற்குள்ளாகவே கொன்று மாய்க்க வேண்டும்" என்று கூறியவுடனே அதைக் கேட்டுக் கலகலவெனச் சிரிக்கின்ற விகர்ணன் "தூதுவராய் வந்த ஒருவரை யார் இதற்கு முன்பு கொன்று இருக்கிறார்கள்? அறிவும் அறமும் இல்லாத இத்தகைய ஆலோசனையை எங்கேயிருந்து கற்றுக்கொண்டீர்கள்" என்று கேட்டுத் தன் கோபத்தைக் காட்டுகிறான்.

மேலும் விகர்ணன், "முதியவர்கள், சிறுவர்கள், வேதம் வல்லமுனிவர்கள், நோயாளிகள், பெண்கள், தூதர்கள், அர்ச்சகர்கள் ஆகியவர்களைக் கொல்வது கொடிய பாவம் ஆகும். அத்தகைய பாவம் செய்த பாதகர்கள் நரகமே அடைவார்கள். பகைவர்களேயானாலும், நாடு தேடி வந்தவர்களைக் கொல்லலாகுமா? அப்படிக் கொல்வது ஆண்மையும் ஆகுமா?" என்று வினவி இறுதியாக, "அத்தகைய தகாத கருத்தைக் கைவிடுவதே தருமம். அதை மீறிக் கண்ணனைக் கொல்ல முயல்வீர்களேயானால் நான் சொல்வேன், கடலளவு சேனையைத் திரட்டிக் கொண்டு போவீர்களேயானால்கூடகார்மேக வண்ணன் எவருக்குமே அகப்படமாட்டான்" என்று துணிவாகத் தன் கருத்தை எடுத்துக் கூறித் துரியோதனனின் சதித்திட்டத்தை முறியடிக்க முயற்சி செய்கிறான். ஆனால் விகர்ணனுடைய முயற்சி அங்கே தோற்று விடுகிறது. அவனுடைய நியாயமான கருத்தை ஆதரிக்க அங்கே ஒருவர்கூட இல்லை. துரோபதையின் துகிலுரித்த வீரனாகிய துச்சாதனன் உடனே விகர்ணன் மேல் சீறி விழுந்து, "பொடியர்களை எல்லாம் ஏன் இந்தப் பெரியோர்கள் கூடுகின்ற அவையில் அனுமதிக்கிறீர்கள்?" என்று கூறி விகர்ணனின் அறிவுரையை அலட்சியப்படுத்தி விடுகிறான். "இந்த இரவு நேரத்திலேயே

இப்பொழுதே போய் விதுரன் மாளிகைக்குத் தீயை மூட்டி, கண்ணனோடு, வில்லொடித்துப் போட்ட விதுரனையும் பொசுக்கி விடுவோம். அனைவரும் புறப்படுங்கள்'' என்று ஆலோசனை கூறுகிறான் அவன்.

மறைந்து நின்று தீமூட்டும் இந்தச் சதியாலோசனை ஏனோ கர்ணனுக்குப் பிடிக்கவில்லை. ''நெருப்பெரிய வைத்துத்தான் கண்ணனைக் கொல்ல வேண்டுமா? ஏன் நானில்லையா? என்னுடைய வில் இல்லையா? ஒரே ஒரு அம்பினாலே நேருக்கு நேர் நின்றே கண்ணனைக் கொன்று காட்டுகிறேன். வாருங்கள் போகலாம்'' என்பதாகத் தன்னுடைய வீரத்தைப் புகழ்ந்துரைத்து துச்சாதனனின் எரிமூட்டும் ஆலோசனையை மறுத்து உரைக்கிறான் கர்ணன். ஆனால் அந்தக் கர்ணனின் ஆலோசனை துரியோதனனுக்குப் பொருத்தமான ஆலோசனையாகப் படவில்லை. துரியோதனனுக்குப் பொருந்தக்கூடிய ஆலோசனையை அவ்வப்போது அறிவிக்கின்ற திறமையும் பெருமையும் சகுனிக்கல்லவா இருக்கிறது! சகுனி தன் ஆலோசனையைத் தெரிவிக்கின்றான். ''நம்முடைய அத்தினர் புரியிலிருந்து பத்திரமாகக் கண்ணன், பாண்டவர் இருக்கும் இடம் போய்ச் சேருவானேயானால், நிச்சயம் நம்மைப் போரிலே வெற்றி அடைய விடமாட்டான். அவனை வஞ்சித்துத்தான் நாம் வெற்றி கொண்டாக வேண்டும். பெரும் பள்ளம் ஒன்றைத் தோண்டுவோம். இராக்கதர் களையும் மல்லர்களையும் மறைவாக பள்ளத்தில் இருக்க வைப்போம். மேலே ஓர் பொய்யான ஆசனத்தை அமைப் போம். காலையில் கண்ணனை வரவழைத்து ஆசனத்தில் அமருமாறு கூறினால் அமருவான்; குழியிலே வீழ்வான். உடனே விலங்கைப் போட்டுக் கொடிய சிறையிலேவைத்து விடுவோம். தூதர்களைக் கொல்லுவது வேண்டுமானால், அறம் அற்றதாக இருக்கலாம். ஆனால் தூதரைச் சிறை வைப்பது அறமானதுதான்'' என்கின்ற பொருள்பட சகுனி,

'கொல்லுவ தியற்கை யன்று குழிபறித் தரக்கரோடு
மல்லரை யிருத்தி மேலோர் ஆசனம் வகுத்து நாளை
எல்லிடை யழைத்து வீழ்த்தி இகலுடன் விலங்கு பூட்டித்
தொல்லருஞ் சிறையில் வைத்தல் தூதருக் குரிமை''
(கிருட்டிணன் தூது 179)

என எடுத்துரைக்க, அந்த ஆலோசனையையே பொருத்த மானதென ஏற்றுத் துரியோதனன் உடனே படுகுழி அமைக்கும் முயற்சியிலே ஈடுபடத் தொடங்குகிறான்.

படுகுழியைச் சகுனி உரைத்த ஆலோசனைப்படியே அமைத்து துரியோதனன் ஒரு லட்சம் போர் அரக்கர்களை அக்குழிக்குள் இருத்துகிறான். அவர்கள் போதாதென்று மேலும் மல்லர்களில் இரண்டு இலட்சம் பேரையும், பப்பர வர்கள் இரண்டு இலட்சம் பேரையும் படுகுழிக்குள் இருத்தும் துரியோதனன், அவர்களும் போதாதென்று 4 இலட்சம் வில் வீரர்களையும் படுகுழிக்குள் இருத்தி, பல ஆயுதங் களையும் கையாள வல்ல படைவீரர்கள் 40 லட்சம் பேர் களையும் கண்ணனைச் சிறை பிடிப்பதன் பொருட்டு அக்குழிக்குள்ளே இருத்துகின்றான். கண்ண பெருமான் ஒருவரை மட்டும் சிறை பிடிக்கத் துரியோதனன் படுகுழிக்குள் இருத்திய வீரர்களின் மொத்த எண்ணிக்கை மட்டும் 49 இலட்சங்கள். ஒரு படுகுழிக்குள் 49 இலட்சம் போர் வீரர்களை மறைத்து வைக்கத் தக்க அளவிற்கு பூபாரம் மிகுந்து போயிருந்த நேரத்தில், போர் மூலமே பூபாரத்தைத் தீர்க்க முடியும் என்று கண்ணபெருமான் எண்ணியிருக்கிறார் என்பதை எண்ணும்போது எல்லாம் வல்ல அவர் திருவருளை நியாயமானதாகவே போற்ற வேண்டியிருக்கிறது.

கொடியவனான துரியோதனன், கண்ணனுக்குத் தெரியாமல் படுகுழி அமைத்துவிட்டதாக எண்ணி மகிழ்ந் திருக்கிறான்; 49 லட்சம் போர் வீரர்களும் பாய்ந்து போய் கண்ணனை அசைய வொட்டாமல் அமுக்கிப் பிடித்து, அவர்

கைகளிலே விலங்கை மாட்டுவதும் உறுதி என்பதாக எண்ணி இனி தன்னை வெல்ல யாருமில்லை என்பதாக அவன் இறுமாந்திருக்கிறான். அவனுடைய தூதுவர்களும் போய் இரவு முடிந்த காலை நேரத்திலே கண்ணபெருமானைத் துரியோதனன் அவசரமாகக் காண விழைவதாகத் தெரிவிக்கிறார்கள். படுகுழி வெட்டப்பட்டதும், அதனுள் லட்சக் கணக்கான போர் வீரர்களை இருத்தியிருப்பதும் மேலே அலங்காரப் பொய்யாசனம் அமைத்திருப்பதும் எல்லாம் அறிந்திருப்பவராகிய கண்ணபெருமான் ''துரியோதனா! என்னிடம் செல்லாதடா உன்மாயை; நான் வென்று காட்டுகிறேன். உன் ஆணவப் பேயை'' என்று கூறுவதைப் போல் புன்முறுவல் பூத்த வண்ணமே அரசவைக்குப் போய், துரியோதனன் கைகாட்டிய பொய்யாசனத்தில்அமர்கிறார். ஆசனமும் நெறுநெறுவென்ற சப்தத்தோடு சிதைகிறது. கண்ணபெருமானும் படுகுழிக்குள் தொப்பென்ற ஓசையுடன் விழுகிறார். 'அகப்பட்டான் கண்ணன்'' என ஆர்ப்பரிக்கின்றனர் துரியோதனனும், அவன் கூட்டத்தார்களும். ஆனால் அதே நொடியில் மண்ணுக்கும் விண்ணுக்குமாக மாபெரும் வடிவம் எடுத்து, கண்டார் அஞ்சத்தக்க கோபத்தின் வடிவமாகக் காட்சியளிக்கிறார் கண்ணபெருமான்.

இடிகள் முழங்குவதைப் போன்ற பேரோசைகள் அங்கே தொடர்ந்து கேட்டுக் கொண்டே இருக்கின்றன. அவை அனைத்தும் கண்ணபெருமான் காலால்அரக்கரைஉதைக்கும் இடிஓசைகளே. கடலலைகள் ஊழிக்காலத்தில் ஒலிப்பதைப் போன்ற கொடிய ஓசைக்ள் அங்கே தொடர்ந்து கேட்டுக் கொண்டே இருக்கின்றன. அவையும் கண்ணபெருமான் தம் கால் விரல் நகங்களால் பப்பரவரையும் மல்லரையும் தூக்கிப் பந்தாடுவதால் உண்டாகும் ஓசைகளே. ஆயுதங்களோடு 49 லட்சம் வீரர்கள் கண்ணன் மேல் பாய, கண்ண பெருமானோ துரியோதனனுக்கு எதிராக ஆயுதம் எடுக்க மாட்டேன் என்று செய்து தந்திருந்த உறுதிமொழி தவறாமல், ஆயுதம் ஒன்றும் ஏந்தாமலே-ஆயுதம் ஒன்றும்

தேவைப்படாமலே தம் கால்களையே ஆயுதமாகக்கொண்டு கால்களால் உதைத்தே வஞ்சகர்களின் தலைகளை வானிலே சிதறுமாறும், பாதாளம் நோக்கிப் பாயுமாறும் உதைத்து வதைக்கிறார். அவருடைய சீற்றத்தின் முன் 49 லட்சம் வீரர்களும் சிற்றெறும்புகளாகி நசுங்கிக்கொண்டிருக் கிறார்கள். அதனைக்கண்டு பாதாளத்தில் வாழும்நாகர்கள் நடுங்குகின்றனர். மேல் உலக வானவர்களும் கண்ணனை நோக்கி கைகூப்பி கோபத்தில் தங்களுக்கு ஏதும் துன்பம் செய்துவிட வேண்டாம் என்பதைப்போல வணங்கி வேண்டி நிற்கின்றார்கள். காத்தல் தொழிலுக்குக் கடவுள் ஆகிய கண்ணபெருமானே விசுவரூபம் பூண்டுஅழிக்க முற்பட்டால் எந்தமலை நிற்கும்? எந்தக்கடல் தங்கும்? எந்த உலகம் தான் வாழும் என்று தேவர்களும் முனிவர்களும், வேதங்களைச் சொல்லிக் கண்ணபெருமானை நோக்கி கோபம் நீங்க வேண்டுமெனக் கும்பிட்டுக் குறையிரக்கின்றார்கள்.

**''ஆரணனே யரனே புவனங்கள் அனைத்தையும் அன்றுதவும்**
**காரணனே கருணாகரனே கமலாசினி காதலனே**
**வாரணமே பொதுவேயொரு பேரிடவந்தருளும் புயலே**
**நாரணமே முனியேல்முனியேல் என நாகர்பணிந்தனரே''**

(கிருட்டிணன் தூது. 209)

**''மாதவனே முனியேல்எமை ஆளுடைவானவனே முனியேல்**
**யாதவனே முனியேல் இதயத்தில் இருப்பவனே முனியேல்**
**ஆதவனே முனியேல் மதிவெங்கனல் ஆனவனேமுனியேல்**
**நீதவனே முனியேல் முனியேல் என நின்று பணிந்தனரே''**

இவ்வாறு நாகர்கள், வானவர்கள், முனிவர்கள் வணங்கிக் கண்ணனை நோக்கி வேண்ட, துரியோதனனின் சதியிலே பங்கு கொண்டிருந்தவர்களாகிய திருதராட்டிரன், கர்ணன் அவனுடைய தம்பிகள் பலரும்கூட தங்கள் பாவத்தைப் பொறுத்துச் சினம் தவிர வேண்டுமெனக் கண்ணபெரு மானின் பாதகமலங்களை வணங்கி வேண்டுகிறார்கள்.

''கண்ண பொறுத்தருள் வெண்ணெய்
அருந்தியகள்வ பொறுத்தருள்கார்
வண்ண பொறுத்தருள் வாம பொறுத்தருள்
வரதபொறுத்தருளீ
திண்ணமனத் துணர்வொன்று மிலாதவர்செய்த
பெரும்பிழை யென்று
அண்ணல் மலர்க்கழல் சென்னியில் வைத்தெதிர்
அன்று துதித்தனரே''
(கிருட்டிணன் தூது 212)

*''என் வில்லின் கொடுங்கணையால் ண்ணனை மாய்ப்பேன்'' என்று இரவு சதியாலோசனை கூட்டத்தில் வீரம் பேசிய கர்ணனும், 'இரும் புலி வலையிற் பட்டால் விடுவரோ எயினரானோர்'' என்று சதி ஆலோசனைகூறிய திருதராட்டினனும் மற்ற மற்ற துரியோதனனின்வஞ்சக் கூட்டணியினரும் இவ்வாறு 'பொறுத்தருள் பொறுத்தருள்'' எனக்கால் மேல்வீழ்ந்து வணங்கிக் கண்ணபெருமானைச் சாந்தப்படுத்துகிறார்கள். அவ்வாறு சாந்தப்படுத்தியிருக்கா விட்டால், பதினெட்டு நாட்கள் நடைபெற்று முடிய வேண்டிய பாரதக் கொடும்போருக்கு வாய்ப்பே இல்லாமல் துரியோதனர்கள் கூட்டம் அன்றே அப்பொழுதே அழிந்து பட்டிருக்கும். ஆனால் இவ்வளவு நடந்தும், விண்ணுக்கும் மண்ணுக்குமாக கண்ணபெருமான் கொண்ட விசுவரூபத்தைப் பார்த்தும், அங்கே தன் கண்ணெதிராகவே 49 லட்சம் போர் வீரர்கள் தலைசிதறி கைகால்கள் தனித்தனியே சிதறி இரத்தக் கடலில் துடித்ததைப் பார்த்தும் கூட துரியோதனன் ஒரு சிறிதும் மனஞ்சலிக்கவில்லையாம்.எனில் அவன் அரக்கமனத்தின் தன்மையை எப்படிஎடுத்துரைப்பது? துரியோதனனுடைய விபரீதக் காலக்கொடுமையே அவன் கண்ணபெருமானை வணங்கவும், பிழையைப் பொறுக்குமாறு வேண்டவும் முயலாதவாறு அவனைத் தடுத்தது போலும்!*

விசுவரூபம் அடக்கி, தம் மானிட வடிவை மீண்டும் கொள்ளும் கண்ணபெருமான், ''துரியோதனா! நீ உன் தீய அறிவினாலே என்னைக்கொல்ல முயன்றாய். ஆனால், நான் எண்ணியிருப்பேனேயானால், உன்னுடைய வம்சம் முழுதும் அழிந்து ஒழியுமாறு ஒரே நொடி நேரத்தில் பொடி பொடியாக்கியிருப்பேன். ஏன் நான் அப்படி செய்யவில்லை தெரியுமா? போரில் உனக்கெதிராக ஆயுதம் ஏந்த மாட்டேன் என்று என்னால் உனக்குத் தரப்பட்ட உறுதிமொழியைக் காப்பதற்காகத்தான். அதுமட்டுமல்ல; நானே உன்னையும், உன் கூட்டத்தையும் அழித்துவிட்டால் அன்றைக்குப் பாண்டவர்கள் உங்களை அழிப்பதாகச் செய்திருக்கிற சபதத்தை நிறைவேற்ற வழியில்லாமல் போய்விடும். ஆகவே தான் உன்னை அழிக்காமல் இப்பொழுது விட்டுப் போகிறேன்'' என்பதாகக் கூறி, இனியும் அங்கே நிற்பதில் யாதொரு அர்த்தமும் இல்லை என்பதாகத் துரியோதனனின் அரண்மனையை விட்டுப்புறப்படலானார். அப்பொழுது கண்ணபெருமானை வணங்கியவர்களாக நின்ற கர்ணன் உள்ளிட்ட அவ்வவையில் இருந்த அனைவருமே, கண்ணனை வழியனுப்ப ஒதுங்கி வழி விட்டு வாசல் வரை உடன் வருகிறார்கள். உடன் வந்த கர்ணனை மட்டும் தம்மருகே வரவழைத்துப் பேசும் கண்ணன், ஒரு சில வார்த்தைகளிலே அவனுடைய பிறப்பின் இரகசியத்தை அவனுக்குத் தெளிவுபடுத்துகிறார்.

**''அந்தணன் முன்தரு மந்திரம் ஐந்தினில் அறுவரையும்**
**கடவுள்**
**குந்தி பயந்தனள் யானினி யென்பல கூறுவது**
**உங்களில் நீர்**
**இந்த நிலம்பெறுவீர் தவிர்கிற் பெற யாரினி வேறுரியார்**
**வந்தினி நும்பியர் தம்மொடு சேர்கென மாயன் மொழிந்**
**தனனே''**

(கிருட்டிணன் தூது. 220)

தீயவர்களுக்குத் துணைபோய், தூய கர்ணன் பாவத்தில் பங்கு கொண்டு விடக்கூடாது என்று எண்ணிய கண்ணபெருமானின் திருவருளே இவ்வாறு 'பாண்டவர்களுடன் வந்து சேர்க' எனக் கர்ணனை நோக்கி அறிவுறுத்துகின்றது! ஆனால் அதுநாள் வரையிலும் தன்னைப் பெற்றவர் யார் என்று தெரியாமல் திகைத்து இருந்தவனாகிய கர்ணன், குந்தியே தன் தாய் என்பதை அறிந்து மேலும் திகைப்பிற்கு ஆளானதாலும், செஞ்சோற்றுக் கடனைத் தருமமாக அவன் மதித்ததனாலும் கண்ணனைப் பணிந்தவனாய்,

''கன்றால் விளவின் கனியுகுத்தும்
கழை ஆநிரையின் கணம் அழைத்தும்
குன்றால் மழையின் குலம் தடுத்தும்
குலவும் செல்வக்கோபாலா
இன்றால் எனது பிறப்புணர்ந்தேன்
என்றன்புருகி எம்பியர்பால்
சென்றால் என்னை நீயறியச்
செகத்தார் என்றும் சிரியாரோ''

(கிருட்டிணன் தூது.221)

''ஆரென் றறியத் தகாதவெனை
அரசுமாக்கி முடி சூட்டிச்
சீரும் திறமுந் தனது பெருந்திருவும்
எனக்கே தெரிந்தளித்தான்
பாரின் றறிய நூற்றுவர்க்கும் பழிதீர்
வென்றிப் பாண்டவர்க்கும்
போரென் றறிந்துஞ் செய்ந்நன்றி
போற்றா தவரிற் போவேனோ''

(கிருட்டிணன் தூது. 222)

என்று பதில் இறுக்கின்றான்.

கர்ணன் இவ்வாறே பதிலுரைப்பான் என்பதும் கண்ண பெருமான் தம் திருவருளால் ஏற்கெனவே அறிந்து வைத்

திருந்ததுதான், குந்தியிடம் கர்ணனின் பிறப்புண்மையைத் தெரிவித்து வரம் கேட்டுப் பெறக் கூறிவிட்டு, இப்போது கர்ணனிடம் அவன் தாய் யார் என்பதை ஏன் தாமும் தெரிவித்தருளுகின்றார் என்றால் கர்ணன் சிந்தித்துப் பார்ப்பதற்கு அது வாய்ப்பாக அமைய வேண்டும் என்ற கருத்தினால்தான். ஆகவேதான் ''குந்தி உன்னைத் தேடிவந்து வரம் கோருவாள்'' என்பதாக எதுவுமே கூறாமல், கர்ணன் தன்னுடைய மனக்கருத்தைத் தெரிவித்த பின், அதன்மேல் தன் கருத்தொன்றையும் கூறாமல் கண்ணபெருமானும் கர்ணனுக்கு விடை கொடுத்தனுப்பி விடுகிறார். ''தன்னைப்பெற்றவள் குந்தியே; பாண்டவர்கள் தம் தம்பிமார்களே; போரோ வந்து விட்டது. கண்ணனோ பாண்டவருடன் சேருக என்கிறார். நாமோ துரியோதனனின் உப்பை உண்டு விட்டோம். செஞ்சோற்றுக்கடனே கடன்'' என்பதாகப் பல்வேறு எண்ணங்கள் வந்து மோத, கர்ணனும் கண்ணனிடம் விடை பெற்றுச் செல்கிறான்.

அரண்மனை வாயிலைத் தாண்டி வெளியே வந்த கண்ணபெருமான் தன்னருகே வருமாறு அடுத்து அசுவத்தாமாவை அழைக்கிறார். அசுவக்கிறார் மாபெரும் வீரன். பாண்டவர், கௌரவர், ஆகிய இருசாராருக்கும் குருவாக விளங்கும் துரோணனின் ஒரே மகன். சிவபெருமானின் வரத்தாலே பிறந்தவன், அவன் போர்க் களத்தில் எதிர் நிற்பானேயானால், எத்தனை கோடிப் படை வீரர்கள் வந்தாலும், ஒரே பகலில் வெல்லக்கூடிய ஈடு இணையற்ற படைக்கலப் பயிற்சிகளைப் பெற்றவன். அத்தகைய மாபெரும் வீரன், துரியோதனனின் படைத் தலைமையை ஏற்று விட்டால் பாண்டவர்கள் வெற்றி பெறுவது எளிதல்ல என்பதை அறிந்திருப்பவராகிய கண்ண பெருமான், அசுவத்தாமாவின் பேரில், துரியோதனன் கொண்டிருக்கும் நம்பிக்கையைக் குலைக்க ஒரு நாடகம் நடத்தியாக வேண்டும் என்பதாகத் திருவுள்ளம் கூலித்தே அசுவத்தாமாவைத் தம்மருகே வருமாறு

அழைக்கிறார். தம் கை விரல் மோதிரம் தானாக நழுவித் தரையிலே விழுவதைப்போலச் செய்கிறார். அசுவத்தாமா கண்ணனின் சூழ்ச்சி புரியாமல், கண்ணபெருமானின் மோதிரத்தைக் கீழே குனிந்து எடுத்துத் தர, அதையும் உடனேவாங்கிக் கொள்ளாமல், ஆகாயத்தை அசுவத்தாமாவிடம் காட்டி, ''சூரியனை ஊர்கோள் சூழ்ந்திருப்பதைப் பார்த்தாயா?'' என ஒரு கேள்வியையும் கேட்டு, அதற்கு அசுவத்தாமாவும் தலையசைக்க, பிறகே தம் மோதிரத்தை வாங்கிக் கைவிரலில் அணிந்து கொள்கிறார். இவற்றையெல்லாம் வைத்த கண் வாங்காமல் தன்னுடைய ஆசனத்திலிருந்தே பார்த்துக் கொண்டிருக்கும் துரியோதனன், ''ஆ! அசுவத்தாமாவும் எனக்குத் துரோகம் செய்துவிட்டான். கண்ணனின் மோதிரத்தை வாங்கிச் சூரியன் சாட்சியாக கண்ணபெருமானுக்குச் சத்தியம் செய்து தந்து விட்டான். இனி அவனை நம்பவோ, அவனைப் படைத்தளபதி ஆக்கவோ நானொன்றும் ஏமாளி அல்ல. அதோ அங்கே பாருங்கள்!'' என்பதாகத் துரியோதனன் சப்தமிட, அசுவத்தாமாவும் அப்போது தான் கண்ணன் நடத்திய ஒரு நாடகத்தால் துரியோதனன் தன்மீது நம்பிக்கை இழந்து விட்டதை உணர்ந்து வருந்துகின்றான். மோதிரத்தைக் கையில் வாங்கிச் சூரியன் சாட்சியாகச் சத்தியம் செய்வது அக்காலப் பழக்கமாகும்.

விதுரனின் வில்லொடிக்க அவர் வீட்டில் விருந்தாளியாகத் தங்கிய கண்ணபெருமான், அது நாள் வரை சொல்லாமல வைத்திருந்து குந்திக்கும், கர்ணனுக்கும் அவர்களைப் பற்றிய இரகசியம் தெரிவித்த கண்ணபெருமான், இப்போதும் அசுவத்தாமாவின் வீரம் துரியோதனனுக்குப் பயன்படாமல் போவதற்காக விரலாழியை நழுவவிட்டு ஒரு நாடகம்நடத்தி வெற்றியே காண்கிறார் என்றால்தருமத்தை நிலைநிறுத்த அவர் ஆற்றிடும் தந்திரங்களின் சிறப்பை எப்படி எடுத்துரைப்பது? ''நாடகமே உலகம், மாந்தர் எல்லாம் நடிகர்கள்' என்று மகாகவி ஷேக்ஸ்பியர் தம்

காவியத்தில் வரைந்திருக்கிறார். ஆனால் நம்முடைய தமிழ்ச் சமயச் சான்றோர்கள் தான் ஆண்டவனையே நடிகனாக—மாந்தர் வாழ்க்கையெல்லாம் இறைவன் திருவிளையாடல்களாக வருணித்திருக்கிறார்கள்.

**''உலகம் யாவையும் தாம்உள வாக்கலும்**
**நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா**
**அலகு இலா விளையாட்டு உடையார் அவர்**
**தலைவர், அன்னவர்க்கே சரண் நாங்களே''**

என்று கவிச்சக்கரவர்த்திக் கம்பரும் இறைவனையே நாடகத் தலைவரா க் காட்டுவார். மகாபாரதக் காவியம் முழுவதுமே கண்ணபெருமானின் திருவிளையாடல்களைக் காட்டுவது தான், கண்ணபெருமான் அசுவத்தாமாவிடம் ஆடிய இந்த நாடகத்திற்குப்பிறகு இமையவர் வேந்தனாகிய இந்திரனை உடனே தாம் இருக்குமிடம் வருமாறு அழைக்கிறார். இந்திரனும் வந்து வணங்கி நிற்கிறான். ''நீ செய்து முடிக்க வேண்டிய வேலை ஒன்று இருக்கிறது. நான் சொல்வதைப் போல் செய்'' என்று இந்திரனுக்கு ஆணையிட்டருளுகிறார் கண்ணபெருமான். இந்திரனைக் கண்ண பெருமான் என்ன வேலை செய்து வர ஏவுகிறார்? அவ்வேலையும் கண்ணபெருமானின் மனம்போலவே நடந்து முடிகிறதா? என்பனவற்றையெல்லாம் இனிவரும் அத்தியாயத்தில் காண்போம்.

# 5

பாரதப் போரில் பாண்டவர் வெற்றிக்குப் பெரிதும் காரணமாவது கண்ணனின் சூழ்ச்சித் திறமா? அல்லது கர்ணனின் கொடைத்திறமா? என்று ஒரு கேள்வியைக் கேட்டு ஒரு பட்டிமன்றத்தை நடத்துவோம் ஆனால், இருபக்கமும் எடுத்து வைக்கத்தக்க கருத்துக்கள் ஏராளமாக உள்ளன. கண்ணனின் சூழ்ச்சித் திறத்தைப் பின்னுக்குத் தள்ளி, கர்ணனின் கொடைத் திறத்தைப் பாண்டவர் வெற்றிக்கும் காரணமாக்கிக் காட்டும் பகுதியே இப்போது நாம் காணப்போகும் கிருட்டிணன் தூதுச் சருக்கத்தின் கடைசிப்பகுதிகளாகும்.

கர்ணன் பிறக்கும்போதே மார்பில் கவசமுடனும் காதுகளில் கன குண்டலங்களுடனும் சூரியனின் அமிசமாக சூரியனின் புத்திரனாகப் பிறந்தவன். அம்மார்புக் கவசமும், கனக குண்டலங்களும் கர்ணனிடம் திகழும் வரை, எத்தனைக்காலம் போர் செய்தாலும் அவனைப் பாண்டவர்கள் வெற்றி கொண்டுவிட முடியாது என்பது மட்டுமல்ல, அர்ச்சுனனும் கர்ணனால் கொல்லப்பட்டு விடுவான். அர்ச்சுனனின் உயிரைக் காப்பதோடு, அறம் நிலைக்கப் பாண்டவர்களை வெற்றி பெறச் செய்வதற் காகவே, கண்ணன் அவதாரம் செய்திருக்கிறார். விதுரனின் விஷ்ணு வில்லை ஒடிக்கச் செய்து, துரியோதனனின் வெற்றி வாய்ப்பைக் குறைப்பதற்குக் கண்ணனின் சூழ்ச்சித் திறமே பெரிதும் பயன்பட்டது. இப்போது பாண்டவர்களின் வெற்றிக்கு மேலும் தடையாக இருப்பன கர்ணனின் மார்பு கவசமும், கனக குண்டலங்களும். இவற்றைப் பறித்தால் அன்றித் துரியோதனனை ஜெயம் கொள்வது

என்பது நடக்கமுடியாத ஒன்று. கண்ணனைத் துரியோதன னிடமிருந்து பாண்டவர் பக்கம் சேர்த்து விட்டால், வெற்றி பாண்டவர்களுக்கென்பது நிச்சயம். அதனால்தான் கண்ண பெருமானும், கர்ணன் பாண்டவர்களுக்கு உடன்பிறந்த மூத்தவன் ஆவதை உணர்த்தி, ''வந்தினி தம்பியர் தம்மொடு சேர்க'' என அறிவுறுத்தியும் பார்த்தார். ஆனால் கண்ணனோ, செஞ்சோற்றுத் தருமமே பெரிது எனக் கூறி, கண்ணனின் அறிவுரையை ஏற்க மறுத்து விட்டதைச் சென்ற அத்தியாயத்தில் பார்த்தோம்.

இப்படிப்பட்ட ஒரு நிலையில், கர்ணனின் வலிமை யைக் குலைக்க, அவனுடன் ஒட்டிப் பிறந்த மார்பு கவசத்தையும் காது குண்டலங்களையும் பறிப்பதல்லால் வேறு வழியே இல்லை என்பது கண்ணபெருமானுக்குத் தெரிகிறது. மாவீரன் ஆகிய கர்ணனிடம் வீரத்தைத் துணைக்கொண்டு அவைகளைப் பறித்துவிடவும் முடியாது. வேறு என்ன தான் வழி என்பதாகச் சிந்திக்கும் கண்ண பெருமான் கர்ணனின் கொடை உள்ளத்தையே பயன் படுத்தி எந்த ஒரு சிரமமும் இல்லாமல் யாசித்தே அவை களைப் பெற்றுவிட முடியும் என்று முடிவு செய்து கர்ணனிடம் யாசித்துக் கனகுண்டலங்களைப் பெறும் பணிக்காகத்தான் இந்திரனைத் தான் இருக்கும் இடத்திற்கு அழைக்கிறார். அவனும் வந்து வணங்கி நிற்கின்றான்.

இந்திரன் தேவர்களுக்கெல்லாம் தலைவன். கேட்ட தெல்லாம் கொடுக்கும்கற்பகத்தருவும்காமதேனுவும், அவன் வசம் இருக்கின்றன. முப்பத்து முக்கோடி தேவர்களுக்குத் தலைவன் ஆகிய இந்திரனை, கர்ணனிடம் போய் யாசித்துக் கவசகுண்டலங்களைப் பெற்று வரக் கூறினால் அவன் அதற்கு ஒப்புவானா என்றால் அவன் ஒப்பமாட்டான். வெறும் தேவர் தலைவனான இந்திரனாக மட்டுமே இருந் தால் அவன் ஒப்புக்கொள்ளத்தான் மாட்டான். ஆனால் அவனோ அர்ச்சுனனுக்குத் தந்தை, துருவாச

முனிவர் உபதேசித்த மந்திரத்தின்படி குந்தி அர்ச்சுனனை மகனாகத் தந்தவன்தான் இந்திரன். ஆக தன் மகனுக்குத்தான் வாழ்வு நல்க, இந்திரன் கர்ணனிட போய் யாசிக்க ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும்.

மேலும், கர்ணனிடம் அர்ச்சுனனின் உயிர்கொல்லு நாகாத்திரம் போய் அடைக்கலம் பெற்று தங்கி இரு தற்கும் காரணமாக அமைந்துவிட்டவனும் இந்திரன்தா அர்ச்சுனன் காண்டவ வனத்தை எரியூட்டிய போது த நண்பன் தக்ககனின் மகனாயிற்றே என்று பரிதாபப்பட் அசுவசேனன் என்ற நாகத்தைக் காப்பாற்றினான். அ நாகமோ தன் தாயைக் கொன்ற அர்ச்சுனனைப் பழிவா வேன் என்று சபதம் பூண்டு, கர்ணனிடம் போ அடைக்கலம் கோரி, நாகாத்திரமாக அமைந்துள்ள ஆகவே அன்று நாகத்தைத் தப்பவிட்டு, அர்ச்சுனன் உயிர்க் கேடு சூழ்ந்த இந்திரனே, அந்நாகாத்திரம் தஞ்சம் கொண் விளங்கும் கர்ணனிடன் போய், கர்ணனின் உயிருக் காவலாகவும் அர்ச்சுனனுடைய உயிருக்கு எமனாகவும் வி குகின்ற கவசகுண்டலங்களை யாசகமாகக் கேட்டுப் பெற் வரவேண்டும் என்பது கண்ணபெருமான் செய்த முடிவு.

ஆகவேதான், இந்திரன் வந்ததும் முதலில் அ காண்டவன தகனத்தின் போது நாகத்தைத் தப்பவிட் குற்றத்தைப் பக்குவமாக எடுத்துக் காட்டுகிறார் கண் பெருமான்.

**''கிரியின் சிறகை யரி படையோய் கேண்மோ!**
**ஆண்மைக்களமீத்**
**வரிவெஞ் சிலைக்கை விசயனுக்கு மாறாய் முனிந்து**
**வருகின்**
**எரியுங் கனல்வாய் விடஅரவுஒன்று இவனுக்குபகையா**
**அரியின் புதல்வன் தனக்கொரு பேரம்பாகியது**
**யாரறியார்**

(கிருட்டிணன் தூது 2

''அர்ச்சுனனுக்கு மிகவும் பகைவனாக விளங்கும் சூரியனுடைய மகன் கர்ணனிடம் கொடிய பாம்பு ஒன்று அம்பாக மாறி அமைந்திருப்பதை அவனியில் யார்தான் அறியமாட்டார்கள்'' என்று கூறும் கண்ணபெருமான், ''அந்தப் பாம்பைத் தப்ப வைத்து நீ தானே அந்தக் குற்றத்தைப் புரிந்தாய்'' என்பதையும் கூறாமலே கூறி விடுகிறார். அன்றைக்கு அந்தக் குற்றத்தைச் செய்த நீதான் இன்றைக்குக் கர்ணனிடம் போய் கவசகுண்டலங்களையும் யாசித்துப் பெற்று வரக் கூடிய பரிகாரத்தையும் செய்ய வேண்டும். ''நான் அமரர் தலைவன், அமர்ந்த இடத்தி லேயே எல்லாம் தரக் கூடிய கற்பக மரமும், காமதேனுவும் கொண்டவன். நான் போய் யாசிப்பதா?'' என்று இந்திரன் நினைக்கவும் கூடும் என்பதால், அவன் மைந்தன் அர்ச்சுனனைக் காப்பாற்ற வேறு வழியே இல்லை என்பதை யும் கண்ணபெருமான்,

**''மைந்தற்குறுதி நீ வேண்டின் வல்லே முனிவர் வடிவாகி**
**சந்தப்பனுவல் இசைமாலை தானாகரனை விரைந்**
**தெய்தி**
**அந்தக்கவச குண்டலங்கள் அளிப்பாய் என்றால்**
**அவனொன்றும்**
**இந்தப்புவியில் மறுத்தறியான் உயிரே எனினும்**
**ஈந்திடுவான்''**

(கிருட்டிணன் தூது 236)

என்பதாகக் கூறுகிறார். இந்திரன் சுய உருவில் போக நிச்சயம் நாணங் கொள்ளக் கூடும் என்பதனால்தான் முனிவராக உருமாறிப் போய் யாசிக்கச் சொல்லுகிறார் கண்ணபெருமான்.

கன்னனின் கொடைத்திறத்தைக் கண்ணபெருமான் மனம் திறந்து இந்திரனிடத்தில் இந்த நேரத்தில் எடுத்துக்

கூறிப் பாராட்டுகின்றார். உலகத்திலே இருக்கின்ற எந்தப் பொருளேயாயினும், அதனைக் கர்ணன் கொடுக்க மறுக்க மாட்டான். கண்ணனுடைய உயிரையே தரும்படிக் கேட்டாலும் மகிழ்ச்சியாகக் கொடுத்து விடுவான். இன்னாருக்குத்தான் தானம் புரிவது என்ற வரன்முறை கர்ணனிடம் கிடையாது. அவன் கலைஞர்களுக்கு வழங்குகின்றான். முனிவர்களுக்கு வழங்குகின்றான். தேவர்களுக்கும் வழங்குகின்றான். துறவிகளுக்கும் வழங்குகின்றான். தம் குறையைத் தேடி வந்து சொல்பவர்களுக்கு வழங்குவதோடு சொல்லாதவர்களுக்கும் வழங்குகின்றான். எல்லோருக்கும் வாரிவாரி வழங்கக் கூடிய அரிய கொடை வள்ளல் கர்ணன் ஒருவனே என்பதாகக் கர்ணனின் கொடைப் பெருமையைக் கண்ணபெருமான் எடுத்துக் கூறி ''போய் நீ கேட்டுக் கர்ணனிடன் கவசகுண்டலங்களைக் கவர்ந்து வா; தொகை தொகையாகத் தேர்களை ஊர்ந்து பூலோகத்திலுள்ள அரசர்கள் எல்லோரும் ஒரு சேர திரண்டு வந்தாலும், உன் மகன் அர்ச்சுனன் அவர்களையெல்லாம் வென்று புகழ் கொள்ளுமாறு நான் செய்கிறேன்'' என்று உறுதியளித்தவுடன், மைந்தனுக்கு உறுதி வேண்டி இந்திரனும் கிழ அந்தணன் வடிவம் கொண்டு கர்ணனின் அரண்மனை வாயிலைப் போய் அடைகிறான்.

கங்கை நீரின் நுரைபோல முடிவெளுத்து முகம் சுருங்கிய வயோதிகத் தோற்றத்துடன் கையிலே தடியூன்றியவனாய் இந்திரன் வேடன் பூண்டு, கர்ணனின் மாளிகையை அடைகிறான். ''இரவலர் சொல்லாடப் போம் உயிர்'' என்பார் வள்ளுவர். மானமுள்ள மனிதன் ஒருவன், தனக்கு ஒன்று வேண்டும் என ஒருவரைப் போய் அடைந்து ஒரு சொல் சொல்வதற்குள், அவனுடைய உயிரே அவனை விட்டுப் பறப்பது போன்ற பெரும் துன்பம் நேரும் என்பதைத்தான் வள்ளுவனார் தம் குறளில் கூறியுள்ளார். தனக்காக அல்லாமல் தான் வளர்க்கும் பசுவிற்காகக் கூட எளிதில் கிடைக்கக் கூடிய தண்ணீரையும் இரக்கக் கூடாது

என்பார் வள்ளுவர். மனிதரினும் மேம்பட்ட தேவர்களுக்கெல்லாம் தலைவனாகியவன் இந்திரன்; யாசகம் கேட்கும் பொருட்டு வேடம் பூண்டு கர்ணனின் வாயிலை அடைந்த அவனுடைய முடி கங்கை நுரைபோல் வெளுத்ததற்கும் முகத்தில் சுருக்கங்கள் விழுந்தமைக்கும் காரணம், அவன் தனக்கு இத்தகைய நிலை ஏற்பட்டதே என்று எண்ணிய கவலையால் ஏற்பட்டதாகவும் கூட இருக்கலாம். ஆகவே தான் இராஜநடை நடக்க வேண்டிய இந்திரன், நடக்க முடியாமல் தள்ளாடி, கூன் விழுந்த முதுகு மேலும் சாய்ந்து, தான் கீழே விழுந்து விடாமல், தடியூன்றியவனாய் கர்ண மாமன்னனின் வாயிலை அடைந்து வாயிற் காவலனை ஏறிட்டுப் பார்க்கிறான்.

வயோதிக அந்தணனின் வாடிய தோற்றத்தைக் கண்டதுமே, யாசகத்திற்காகத் தான் வந்திருக்க வேண்டும். என்பதைத் தெரிந்து கொள்ளும் வாயிற்காவலன், ''இத்தனை நேரமும் வந்தவர்க்கெல்லாம் வாரி வழங்கிய வள்ளல் கர்ணன், இப்பொழுதுதான் அரண்மனைக்குள்ளே சென்றார்'' என்று கூற ''நானும் அதிகாலையில் தான் புறப்பட்டேன். நடக்க முடியாத காரணத்தால் இங்கு வர இவ்வளவு காலம் ஆகிவிட்டது'' என்பதாக அந்தண இந்திரன், தன் தாமதத்திற்கான பொய்க் காரணத்தையும் பொருத்தமாகவே எடுத்துரைக்கிறான். கர்ணவள்ளலின் வான்கொடைக்குக் காலதாமதம் ஒரு தடையே இல்லை வாயிற்காவலர்கள் மூலமாக ஒரு வயோதிக அந்தணர் யாசகத்திற் ாக வந்திருப்பதைக் கேள்விப்பட்டு கர்ணனே, வாசல் வரை வந்து வரவேற்பதோடு, அவரைப் பொன்னாசனத்திலேயும் அமர்த்தி அன்புடனே பார்த்து ''என்ன வேண்டுமானாலும் கேளுங்க, தருகிறேன்'' என்பதாக உறுதி கூறுகிறான். ''எனக்கு விருப்பமானதைக் கொடுப்பது என்பது கற்பக விருட்சத்திற்கும் கடினமான தாயிற்றே!'' என்பதாக கூறி தனக்கு வேண்டியதைக் கேட்பதற்குத்

தயக்கம் காட்டுகின்றான் கிழவேதியன். உடனே, கர்ணனும், ''தயங்க வேண்டாம், என்னுயிரையேநீர் கொடுக்கும்படி கேட்டாலும் கூட மன மகிழ்வோடு தருகிறேன் நான். அப்படிக் கொடுக்கா விட்டால் போரிலே புறமுதுகு காட்டுகிறவன் போய்ச் சேருகிற நரகம், எனக்கு வாய்க்கட்டும்'' என்பதாகச் சத்தியமும் செய்கிறான் கர்ணன்.

சத்தியம் செய்பவர் தாம் பெரிதும் மதிக்கும் தெய்வத் தின் மீதோ, தெய்வத்திற்கொப்பான மாந்தர்கள் மீதோ, மற்ற பொருள்கள் மீதோ சத்தியம் செய்வதும் நம் நாட்டிலே காண்கின்ற பழக்கம்தான். தாய் மேல் சத்தியம் என்றும் தமிழ் மேல் சத்தியம் என்றும் தமக்குப் பிரியமான வற்றின் மேல் சிலர் சத்தியம் செய்து தரப் பார்க்கிறாம். வேறு எவற்றின் மேலும் எவர்மீதும் சுயநலவாதிகள் எளிதில் சத்தியம் செய்து கொடுத்து ஏமாற்றி விடக்கூடும் என்பதனால், அத்தகையவர்களிடம் தங்கள் மேல் தாங்களே சத்தியம் செய்து தரக்கேட்டு அவர்களை நம்பு வதையும் நடைமுறையிலே பார்க்கிறோம். புறநானூற்றிலே தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியப் பாண்டியன் தான் பெரிதும் மதித்த புலவர்க்ள் போற்றும் பாக்கியத்தின் மேலும், தன் செங்கோல் அரசின் மீதும் தன் கொடைக்குணத்தின் மீதும் ஒரு சேர சத்தியம் செய்தமையை,

**''அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமோ**
**டொருங்ககப் படேஎ னாயிற் பொருந்திய**
**என்நிழல் வாழ்நர் சென்னிழற் காணாது**
**கொடியனெம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்**
**குடிபழி தூற்றும் கோலே னாகுக**
**ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி**
**மாங்குடி மருதன் தலைவ னாக**

**உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்**
**புலவர் பாடாது வரைகவென் நிலவறை**
**புரப்போர் புன்கண் கூர**
**இரப்போர்க் கீயா இன்மையான் உறவே''**

**(புறம் 72)**

என்ற பாடற்பகுதி நமக்கு காட்டுகிறது.

கர்ணனின் கொடையை இதுவரை எவரும் சந்தேகித்தது இல்லை; வயோதிக அந்தணனுக்கு அத்தகைய ஒரு சந்தேகம் வந்துவிட்டதே என வருத்தம் கொண்ட வள்ளல் கர்ணன் தான் கேட்டது கொடுக்காவிட்டால் வீரம் இல்லாத கோழைகள் போரில் புறமுதுகிட்டுப் போய் அடையும் நரகத்திற்கு நானும் போகக் கடவேன் என்பதாகச் சத்தியம் செய்து ''நீ மெய்யுயிர் விழைந்திரந் தாலும் கருத்தினோடு உனக்களித்திலேன் எனில் எதிர் கறுத்தவர் கண்ணினை சிவப்ப, உருத்த போரினிற் புறந்தரு நிருபர் போயுறு பவம் உறுவன்'' என்று தான் பெரிதும் மதிக்கும் தன்னுடைய வீரத்தையே சான்று காட்டிக் கர்ணன் சத்தியம் செய்து தருவதைக்காண்கிறோம். இத்தகைய கர்ணனின் வள்ளல் தன்மையைப் பாராட்டும் விதத்தில்தான்,

**''போர்தலை மிகுந்த ஈரைம் பதின்மரோடு**
**துப்புத்துறைபோகிய துணிவுடை ஆண்மை**
**அக்குரன் அனையகை வண்மையையே''**

**(பதி. 14)**

என்று பதிற்றுப்பத்து என்ற சங்க இலக்கியமும் பாராட்டுப் பத்திரம் வாசிப்பதைக் காண்கிறோம்.

காலையில் பார்த்துக்கேட்கிறபோது மாலையில் தருவதாக உறுதிகூறி வரச்சொல்லும் வள்ளல்கள் பலர்,

மாலையில் போய்ப்பார்த்துக் கேட்கிறபோது ''எப்போது சொன்னேன்? கொடுப்பதற்கு இங்கே என்ன கொட்டி வைத்திருக்கிறதா? நான் என்ன இளிச் சவாயனா?'' என்று தம் வார்த்தையைத் தாமே மறுத்து ஏய்க்கும் கலியுகத்திலே வாழ்கிறோம் நாம். ஔவையாரும் கூட அத்தகைய கஞ்ச வள்ளல் ஒருவனிடம் கால்கடுக்க நடந்து தாம் பெற்ற அனுபவத்தை,

> **''கரியாகிப் பரியாகிக் காரெருமைதானாய்**
> **எருதாய் முழப்புடவை யாகித்–திரிதிரியாய்த்**
> **தேரைக்கால் பெற்றுமிகத் தேய்ந்து கால் ஓய்ந்தததே**
> **கோரைக் கால் ஆழ்வான் கொடை''**

எனப்பாடியிருப்பதைப்படிக்கிறோம்... அண்மைக் காலத்திலே வறுமையில் வாடிய புலவர் ஒருவர், தமக்கு வாழ்வு கிடைக்கும் என நம்பிவள்ளல் எனப்பெயர் பூண்டு விளங்கிய போலிவள்ளல் ஒருவனைப் போய்ப் பார்த்து அவனைப் பலவாறு புகழ்ந்துரைத்தார். புலவர்'' அறிஞர்க்கெல்லாம் அறிஞரே'' என்று புகழ, வள்ளலும் தம் பணியாளைப் பார்த்து ''இவருக்கு தங்கச்சங்கலி கொண்டுவந்து தா'' என்று கட்டளையிட்டார். ''மன்னர்களுக்கெல்லாம் நீங்களே மாமன்னர்'' என்று புலவர் மேலும் புகழ' வள்ளலும் தம் பணியாளிடம் ''இவருக்கு ஒரு வீட்டையும் எழுதிக் கொடுங்கள்'' என்றார். வள்ளலின் கட்டளைகளால் எல்லைமீறிய மகிழ்ச்சிகொண்ட புலவர் ''உங்களைப் போல் ஒரு குணவானைப்பார்த்ததே இல்லை'' என்பதாகப் புகழ்ந்தார். உடனே வள்ளல் ''புலவர் போகும் போது நடந்தாபோவார்! ஒரு வண்டிக்கு ஏற்பாடு செய்யுங்கள்'' என்றும் ஆணையிட்டார்.

வள்ளலின் ஆணைக்கேற்ப காரோ தேரோ வரும், வீட்டுப்பத்திரம் வரும், என்பதாகப்புலவர் கற்பனையில் மிதந்துகொண்டிருக்க, வள்ளல் ஆணையிட்ட ஒன்றும்கூட அவரைத்தேடி வரவில்லை. பொழுது

போகப்போக, புலவருக்குப்பசியும் ஏறஏற,பொறுமை மீறிய புலவர் வள்ளலிடம்'' ஐயா, தாங்கள் ஆணையிட்ட ஒன்றையும் கூட தங்கள் பணியாளர்கள் கொண்டுவந்து தரவில்லையே;'' என்பதாக முறையிட்டார்.

அதற்கு அந்த வள்ளல் சொன்னாராம். ''எப்படி அவர்கள் கொண்டு வந்து தருவார்கள்? என்னுடைய காது களுக்கு இதமாக நீங்கள் சில வார்த்தைகளைச் சொன் னீர்கள். உங்களுடைய காதுகளுக்கும் இதமாக இருக் கட்டுமே என்று நானும் சில வார்த்தைகளைச்சொன்னேன்'' என்றுகூறிப் புலவரை அதிர்ச்சியுறச் செய்தாராம். வள்ள லிடம் ஏமாந்த அந்த வயிற்றெரிச்சல் தாளாமல் புலவர், தம்குற்றம்கூறிப் பாடியதைப்போல அமைந்திருக்கும் கீழ்க் கண்ட பாடலை நீங்களும் தான் படித்துப்பாருங்களேன்!

**''கல்லாத ஒருவனை நான் கற்றாய் என்றேன்**
**காடெறியும்மறவனைநான் நாடாள்வாய்என்றேன்**
**பொல்லாத ஒருவனைநான் நல்லாய் என்றேன்**
**போர்முகத்தை அறியானைப் புலியே றென்றேன்**
**மல்லாரும் புயன்என்றேன் சூம்பல் தோளை**
**வழங்காத கையனைநான் வள்ளல் என்றேன்**
**இல்லாது சொன்னேனுக் கில்லை என்றான்**
**யானுமென்றன் குற்றத்தால் ஏகின்றேனே!''**

இப்படிப்பட்ட போலிகள் வாழக்கூடிய கலியுகத்திலே வாழக் கூடிய நமக்கு, துவாபர யுகத்திலே வாழ்ந்து விளங்கிய கர்ணனின் கொடைப் பெருமையைப் புரிந்துகொள்வது கடினம் தான். ''உயிரைக் கேட்டாலும் உறுதியாய்க் கொடுப்பேன்'' என்று சத்தியம் செய்து தரக்கூடிய வள்ளல் களை இன்றைக்கு நாம் உலகில் எங்குமே காணமுடியாது. ஆனால் அசத்தியம் செய்து தருவதில் வல்லவனாகிய துரியோதனனுக்கு உற்ற நண்பனாக விளங்கினாலும்கூட

கர்ணன், கேட்டதைத் தருவதாக வயோதிக அந்தணனுக்கு சத்தியம் செய்ந்து தருவதோடு அவ்வயோதிகன் ''கவச குண்டலங்கள் தரவேண்டும்'' என்று கேட்க ''இதோ தருகிறேன். பெற்றுக் கொள்க'' என்பதாகத் தன் சத்தியத்தில்-கொடையில் உறுதியாக திகழ்கிறான் என்றால் அந்த உத்தம குணத்தை எப்படிப்பாராட்டுவது என்பது தான் தெரியவில்லை,

தன் மார்போடு ஒட்டியிருக்கும் கவசத்தையும், காதுகளோடு ஒட்டியிருக்கும் குண்டலங்களையும், வாள்கொண்டு அரிந்துதான், கர்ணன் அவற்றை எடுத்து தந்தாகவேண்டும், மனமகிழ்ச்சியோடு, உடல் துன்பத்தையும் பொறுத்துக் கொண்டு அவற்றை வாள்கொண்டு துணிக்க முற்படுகிறான் கர்ணன். அப்பொழுது ஒரு அசரீரீ முழங்குகிறது. ''கர்ணா! வந்திருப்பவன் அமரர் தலைவன் ஆகிய இந்திரன், கண்ணனின் ஏவலால் வேடம் பூண்டு வந்திருக்கிறான். கவச குண்டலங்களை வழங்காதே! வழங்கினால் உன் உயிருக்கே ஆபத்து!''—இப்படி அந்த அசரீரீ முழங்குகிறது, அந்த அசரீரீக்குரல், ஆகாயத்திலிருந்து ஒலித்த கதிரவனின் குரலேயாகும். மகனுக்கு உறுதிவேண்டி அர்ச்சுனனின் தந்தை கவச குண்டலங்களைக் கவர முற்படும்போது, கர்ணனாகிய தன் மகனுக்கு நன்மை வேண்டி, கதிரவன் தடுக்காமல் இருப்பானா? தடுக்கிறான். ''உயிருக்கு ஆபத்து. கவசகுண்டலங்களை வழங்காதே!'' எனக் கூறித்தடுக்கிறான். திரவன், ஆனால் வந்திருப்பவன் வஞ்சக வேடதாரியாகிய இந்திரன் என்பது தெரிந்த பிறகும் கூட, கதிரவன் தடுத்தபிறகும்கூட புன்முறுவல் பூத்த முகத்தோடு கர்ணன் உடைவாளால் மார்புக்கவசத்தையும், காது குண்டலங்களையும் அறுத்து வந்து அர்ப்பணிக்கிறான் என்றால், அவன் பெருமையைப் போற்றித்தான் வான்புகழ் வள்ளுவப் பெருமான் பாடிவைத் தாரோ!

**''சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்**
**ஈதல் இயையாக் கடை''**

என்ற திருக்குறள்.

**''வந்த அந்தணன் கவச குண்டலங்களை வாங்கி நீ**
**வழங்கெனக் கென்னத்**
**தந்தனன் பெறுக என அவன் வழங்க விண்டலத்திலோர்**
**தனியசரீரி**
**இந்திரன்தனை விரகினான் மாயவன் ஏவினான் வழங்கல்**
**நீ எனவும்**
**சிந்தையின்கண் கலக்கமற்று அளித்தனன் செஞ்சுடர்த்**
**தினகரன் சிறுவன்''**

(கிருட்டிணன் தூது 242)

என்ற வில்லிபாரதப் பாடலால் கர்ணனின் அளப்பரும் கொடைப் பெருமையை நாம் அறிந்து வியக்கிறோம்.

இந்திரனுக்கு இதுவரை தான் அமரர் தலைவன் என்ற இறுமாப்பு இருந்தது. கர்ணன் வெறும் அங்கநாட்டை ஆளக்கூடிய குறுநில மன்னன்தானே என்ற தாழ்வுணர்ச்சியும் இருந்ததால்தான், தாழ்ந்தவன் ஒருவனிடம் உயர்ந்தவன் ஆகிய நான் எப்படி சுயஉருவில் போய் யாசிப்பது என்பதாக எண்ணி, வயோதிக அந்தணனாக வேடம் மாற்றி வந்து யாசித்தான். அசரிரி குரல் தடுத்த போதும் அதன் அறிவுரையை மதிக்காது, தன் வள்ளண்மையையே மதித்துக் கர்ணன் கவச குண்டலங்களை அறுத்து வந்து அர்ப்பணித்தவுடன், கர்ணன் எட்டாத உயரத்திற்கு உயர்ந்து விட்டதை உணர்ந்து கொள்ளும் இந்திரன், தான் அவன் முன் மிகவும் எளியனாகிவிட்டதையும் தெளிகிறான். உடனே தன்னுடைய சுயஉருவைக் எடுத்துக் கொள்ளும் இந்திரன் கர்ணனிடம் அற்புதக் கொடையை நெஞ்சாரப் போற்றி அதனை ஏற்றுக் கொள்கிறான். கர்ணனின்

மாபெரும் வள்ளல் தன்மையைப் பாராட்டு முகத்தான் தானும் ஒரு அற்புத வேலினை வரவழைத்துக் "கர்ணா! இக்கொற்ற வேலினைப் பெற்றுக் கொள்க. அர்ச்சுனன் மேல் இவ்வேலை நீ ஏவினால் அது பயன்படாது, கடோற்கஜன் மேல் நீ ஏவுவாய் ஆனால் அவன் உயிரை இவ்வேல் உண்டுவிடும்" என்பதாகக் கூறி வழங்க, கர்ண வள்ளலும் அவ்வேலினை வணங்கிப் பெற்றுக் கொள்கிறான்.

கடோற்கஜன் என்ற பெயரைச் சொன்னாலே வீரம் வரக்கூடிய அளவிற்கு அப்பெயரில் ஒரு கம்பீரம் இருப்பதைக் காணலாம். கடோற்கஜன் வீமனுடைய மகன். துரியோதனன் அரக்கு மாளிகை அமைத்துப் பாண்டவர் களை அழிக்க முற்பட்ட போது மிக பலவானாகிய வீமசேனன் தன் உடன் பிறந்தோரையும் தாயையும் காப்பாற்றி, இடும்பவனம் என்ற காட்டிற்கு அழைத்துச் செல்லும் போது, அவ்வனத்திலே வாழ்ந்திருந்த இடும்பன் என்ற அரக்கனைக் கொன்று, அவன் தங்கையாகிய இடும்பி என்ற அரக்கி ஆசையால் வேண்ட, அவளை மணந்து பின் ஈன்றெடுத்த வீரக் காளைதான் கடோற்கஜன். அவனுடைய வீரமும் தீரமும் மகாபாரதத்தில் மாற்றாரும் மெச்சத்தக்க தாய் அமைந்திருப்பதாகும். அத்தகு மாபெரும் வீரனை கொல்ல வல்லதான கொற்றவேலைத்தான், கர்ணனுக்கு மனம் உவந்து வழங்குகிறான் இந்திரன். கர்ணன் கவச குண்டலங்களை இந்திரனுக்கு வழங்கி அர்ச்சுனன் கையால் மாள வேண்டும் என்பதும், வீரதிர பராக்கிரம சாலியான கடோற்கஜன் இந்திரனுடைய வேலால், கர்ணனால் கொல்லப்பட வேண்டும் என்பதும் விதியே போலும்! விதியின் நாயகன் விளையாட்டை யார்தான் மீற முடியும்?

கர்ணனின் கவச குண்டலங்களைப் பெற்றுக் கொண்டு விட்ட இந்திரன் கண்ணனை அடைந்து, நடந்தவற்றை

யெல்லாம் மனம் நெகிழ எடுத்துரைக்கிறான். கர்ணனின் கொடைத் திறத்தால் தாமும் மனம் நெகிழ்ந்து போகும் கண்ணபெருமான் நெருங்கிய உறவினர்கள் வந்து கெஞ்சினாலும் அற்பப் பொருளைக் கொடுப்பதற்கும் தயங்குகின்ற பலர் வாழ்கின்ற இந்த பூமியில், எதிரிகளின் எத்தகைய சிறந்த ஆயுதமும் வந்து தாக்காமல் காக்கக்கூடிய கவச குண்டலங்களை மனமுவந்து ஈந்த கர்ணனின் பெருமைக்கு ஈடே இல்லை. கொடையாளர்கள் தம்முயிரைப் பகைவர் கேட்டாலும் மறுக்காமல் கொடுப்பார்கள் என்பதாகக் கர்ணனைப் புகழ்ந்துரைத்து இந்திரனுக்கு விடை கொடுத்து அனுப்புகிறார்.

''கர்ணனின் கவச குண்டலங்களைத்தான் பெற்றுக் கொண்டு விட்டோமே! இதுபோதும்'' என்பதாகப் பரந்தாமனின் நெஞ்சம் அத்துடன் திருப்தி கொண்டதா? என்றால் இல்லை. அவர் குந்திதேவியின் வீட்டிற்கு மறுபடியும் போய் ''கர்ணனுடைய வீட்டிற்கு உடனே நீ போய், நான் ஏவிய காரியத்தைச் செய்து முடிப்பாயாக'' என்று குந்தியைக் கர்ணனின் வீட்டிற்கு செல்லுமாறு தூண்டுகிறார். கண்ணனின் வேண்டுகோளை ஏற்றுக் குந்தி கர்ணனின் மாளிகைக்குப் போனாளா? தாயும் மகனும் பலப் பல வருடங்களுக்குப் பிறகு சந்தித்துக் கொள்ளும் அந்தப் பாசமிகு காட்சி நிகழ்கிறதா? கண்ணன் கூறியவாறே குந்தி கர்ணனின் வரம் கேட்டுப் பெற்றாரா? குந்தியைத் தன்னுடைய தாய்தான் என்பதாகக் கர்ணன் ஏற்றுக் கொண்டானா? என்பனவற்றையெல்லாம் இனி அடுத்த இதழில் விரிவாகக் காண்போம்.

# 6

''செய்வனத் திருந்தச்செய்'' என்ற பழமொழிக்கு ஏற்பவே பரந்தாமனாகிய கண்ணபெருமானும் செயல்பட்டு இருக்கிறார் என்பதைத்தான் பாரத காவியத்தின் மூலம் நாம் தெரிந்து கொள்கிறோம். இந்திரனை யாசிக்கச் செய்து, கர்ணனின் கவசகுண்டலங்களைப் பெற்றுக் கொண்டதன் மூலம் கர்ணனின் ஆற்றலைப் பேரளவிற்குக் குறைத்துவிடும் கண்ணபெருமான். மிஞ்சிக் கர்ணனிடம் எஞ்சி இருப்பதான நாகாத்திரமும் கர்ணனுக்குப் பயன்படாமல் போகச் செய்ய வேண்டும் என்பதற்காகவே குந்தியைக் கர்ணனிடம் சென்று வரம்கோரிப் பெற ஆலோசனை கூறி இருந்தார். ஆனால் கர்ணனைத் தன் மூத்த மகன் எனக் கண்டு கொண்ட தாய் குந்தியோ, கர்ணனிடம் வரம் கோரிப் பெற மனம் இடம் கொடுக்காத காரணத்தினாலோ அல்லது ''எப்படியம்மா என்னைக் குழந்தையாக இருக்கும் போதே, பெட்டியில் அடைத்து, ஆற்றில் விட மனம் உனக்கு வந்தது?'' எனக் கர்ணன் கேட்டால் அதற்குப் பதில் என்ன கூறுவது என்பது தெரியாத காரணத்தி னாலோ, மனம் மயங்கிக் கர்ணனை நாடிச் செல்லத் துணிவில்லாமல் தன் அரண்மனையிலேயே அடை பட்டுக் கிடந்தாள்.

''ஐந்து தலை நாகம் போல் ஒருவர் மடிந்தாலும், ஐவரும் மடிந்து போகக் கூடிய பாண்டவர்கள் உயிர் வாழ்வது பெரிதா? என்றோ மகனில்லை எனக் கைவிடப் பட்ட கர்ணன் ஒருவன் உயிர் வாழ்வது பெரிதா என்பதை நீயே முடிவு செய்து கொள்'' என்று கண்ணன் குந்தியிடம் கூறிச் சென்ற அந்த மொழிகளே திரும்பத் திரும்ப

காதினிலே ஒலித்து, இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஒரு தாய்ப் பசு போலவே ஒரு தீர்மானத்திற்கும் வரமுடியாதவளாகத் தவித்துக் கொண்டிருந்தாள் குந்தி.

பரசுராமரைக் குருவாகக் கொண்டு, அரிய வில்வித்தைகளை எல்லாம் கற்ற மாபெரும் வில்வீரனே கர்ணன். ஆனால் அவன் கற்ற வித்தைகள் எல்லாம் காலத்தில் பயன் படாமல் போகப் பரசுராமரே சாபம் கொடுத்து விடுவதையும், கர்ணனுடைய வரலாற்றிலே காணுகின்றோம். க்ஷத்திரிய குலத்தினரைக் கொன்று 27 தலைமுறைகளைக் கருவறுப்பதாக உறுதி பூண்டிருந்தவர் பரசுராமர். அப்படிப் பட்ட அவர் க்ஷத்திரிய குலத்தினருக்கு வில்வித்தைகளைக் கற்றுத் தரமாட்டார் என்பதைத் தெரிந்து கொண்டிருந்த கர்ணன், தன்னுடைய க்ஷத்திரிய குலத்தை மறைத்துவிட்டுப் பொய் கூறிப் பரசுராமரிடம் வில்வித்தைகளைக் கற்றுக் கொண்டு இருந்தான்.

கர்ணனின் சூழ்ச்சியைப் பரசுராமருக்கு உணர்த்த வேண்டும் என்று விரும்பிய கண்ணபெருமான் வண்டு வடிவம் தாங்கிச் சென்று கர்ணனின் தொடையைத் துளைத்து ஒரு புறத்திலிருந்து, மறுபக்கமாக வெளிவரலானார். இரத்தமோ வெள்ளமெனப் பீறிடவும், கர்ணன் தன் தொடைமீது தலைவைத்துத் தூங்கிக் கொண்டிருந்த குருநாதரின் தூக்கம் கலைந்துவிடக் கூடாது என்று கருதி தன் உடல் துன்பத்தையும் பொறுத்துக் கொண்டு, ஆடாமல் அசையாமல் இருந்தான். ஆனால் கர்ணனின் தொடையிலிருந்து பீறிட்ட இரத்தம், குருநாதரின் கைகளில் பட்டு அவருடைய தூக்கத்தைக் கலைத்துவிட்டது. கண்விழித்த பரசுராமர், அருவியென கர்ணனின் தொடையிலிருந்து பீறிடும் இரத்தத்தைக் கண்டார். அந்த இரத்த வெள்ளத்திலும் சித்தம் கலங்காமல் இருப்பது ஒரு க்ஷத்திரியனால் மட்டுமே முடியக்கூடியது என்பதனால் பரசுராமர் கர்ணனைப் பார்த்து “மறைக்காமல் சொல். நீ க்ஷத்திரியன்

தானே'' என்றார். வில்வித்தைகளைக் கற்றுக்கொள்ள விழைந்த ஆவலினாலே உண்மையை மறைத்து விட்ட கர்ணனும் 'ஆம்! நான் க்ஷத்திரியன்தான். பிழையைப் பொறுத்துக் கொள்ளுங்கள்'' என வேண்ட, பரசுராமரோ கர்ணனை மன்னிக்காமல் ''உன்னுடைய வில்வித்தைகள் உன்னையும் ஏமாற்றுவதாக! காலத்தில் அவை பயன் படாமல் போகட்டும்'' எனச் சாபம் கொடுத்து விடுவதையும், அந்தச் சாபத்திற்கும் காரணமாக வண்டுவடிவம் எடுத்துக் கர்ணனின் உடலைத் துளைத்த கண்ணனே காரணமாக இருப்பதையும் கர்ணனின் வரலாற்றிலே காணுகின்றோம்.

அவ்வாறு, கற்ற வித்தைகள் பயன்படாமல் போகக் கர்ணனைப் பரசுராமரின் சாபத்திற்கு ஆளாக்கியதும் கண்ணனே. அவன் கொண்டிருந்த கவச குண்டலங்களை யாசகமாய் இந்திரனை அனுப்பிக் கவர்ந்து கொண்ட கள்வனும் கண்ணனே. இனி, கர்ணனிடம் எஞ்சியிருக்கும் அர்ச்சுனனைக் கொல்ல வல்லதான ஒரே ஒரு ஆயுதமான நாகாத்திரமும் கர்ணனுக்கு பயன்படாமல் போகட்டும் என்று எண்ணி, அதனை ஒருமுறை மட்டுமே அர்ச்சுனன் மேல் ஏவ வேண்டும் என்ற வரத்தைக் கோரிப் பெற்று வரக் குந்தியைக் கர்ணனிடம் அனுப்புவதும் கண்ணனே. கண்ணனின் கட்டளையின்படி அந்த வரம் கேட்டுப்பெற்று வரவும், அத்துடன் தன் தலைமகன்ன மகன் என்ற உரிமையோடு ஒரே ஒருமுறையேனும் கண்டுவரவேண்டும் என்ற பாசத்தின் தூண்டுதலாலும்தான், குந்தி தன் பாத பங்கயம் சிவக்க நடந்துபோய் கர்ணனின் அரண்மனையை அடைகிறாள்.

''வந்து குந்தி நின் கோயில் எய்தினள்'' என வாயிலோர் கர்ணமாமன்னனிடம் சென்று உரைக்கிறார்கள். முந்தும் அன்புடன் எதிர்கொண்டு வந்து தாயை வரவேற்கிறான் கர்ணன். பௌர்ணமி நிலவைக் கண்டு, கடல்

எப்படி ஆரவாரித்துப் பொங்குமோ, அதைப்போல கர்ணனும் தாயைக் கண்டுப் பரவசப்படுகிறான். கர்ணனைக் கண்டு குந்தியும் பரவசப்படுகிறாள். பாச மெனும் பேருணர்வு பொங்க என்ன பேசுவது என்று இரு வருக்குமே தெரியவில்லை. குந்தி தன்னையீன்ற தாய் என்பதைக் கண்ணபெருமான் கூற, முன்னமே கேட்டிருந்த வனாகிய கர்ணனுக்கு வயோதிக அந்தணன் பின் இந்திரன் ஆனதைப் போல குந்தி தன் தாய் என்பதிலேயும், கண்ணனுடைய சூழ்ச்சி ஏதேனும் இருக்குமோ என்ற ஐயம் தோன்றுகின்றது. கர்ணன் தன்னுடைய உடமையான பொருளை யார் கேட்டாலும் கொடுக்கச் சித்தமாய் இருக் கிறான். அவனுக்கு அந்தணனும் சமமே. இந்திரனும் சமமே. உயிரைக் கேட்டாலும் தடையின்றி அவன் கொடுத்து விடுவான். ஆனால் அன்பைக் கொடுப்பதற்கு அதிலும் தன்னுடைய தாய்ப்பாசத்தைக் காட்டுவதற்குத் தன்னை உண்மையில் ஈன்ற தாய் தான் வரவேண்டும் என்று அவன் விருப்பப்படுகிறான் என்றால், அதில் தவறு ஒன்றும் இல்லை யல்லவா! ஆகவே அவனுக்கு அந்த ஐயம் தோன்றுகிறது. கண்ணனின் ஏவலால் ஏதேனும் காரியம் கருதி, குந்தி தாயாக நடிக்க வந்தாளா? அல்லது உண்மையிலேயே குந்தி தன்னை ஈன்ற தாய்தானா?

இந்த ஐயம் கர்ணனுக்கு வந்ததற்கும் காரணம் இருக்கிறது, இதற்கு முன்னும், கர்ணனை மகனாகச் சொந்தம் கொண்டாடிப் பல தாய்மார்கள் வந்திருக் கிறார்கள். கர்ணனும், அவர்களைத் தாய் எனவே நம்பி அன்பு பாராட்டிப்பின் ஏமாந்து போயிருக்கிறான். அதற்குப் பின்னாலே கர்ணனும் தன்னுடைய உண்மைத் தாயைக் கண்டுபிடிக்க தேவர்களின் உதவியை நாடி இருக் கிறான். தேவர்களும் ஒரு புதுவிதமாக அமைந்த சக்தி வாய்ந்த புடவையைக் கர்ணனிடம் கொடுத்து "இந்தப் புடவையைக் கட்டி உயிருடன் இருப்பவர் யாரோ அவரே உண்மையில் தாய், மற்றவர்கள் போலிகள்! அவர்களை

இப்புடவை எரியூட்டிக் கொன்று விடும்'' என அறிவுறுத்தியிருக்கிறார்கள். கர்ணனை மகன் என சொந்தம் கொண்டாடிய பல போலித் தாய்மார்களும், தேவர்கள் கொடுத்தபுடவையின் மகிமையைத்தெரிந்து கொள்ளாமல், அதை உடுத்தப்போய்,கருகிச்சாம்பலும் ஆகியிருக்கிறார்கள். பொருள் வேண்டும் எனக் கேட்டிருந்தால் கர்ணன் வாரி வழங்கி, வளமான வாழ்க்கையை அளித்திருப்பான். ஆனால் கர்ணனின் நாடு முழுவதும் தமக்கே ஆக வேண்டுமெனப் போலி அன்பு பாராட்ட வந்த போலித் தாய்மார்கள் பலர் தங்கள் பொல்லாத பேராசையினால், உடல் கருகி, மாண்டு போயிருக்கிறார்கள். அப்படி மாண்டு போன தாய்மார்களின் விவரம் தெரியாமல் தன்னைச் சொந்தம் கொண்டாட வந்திருக்கும் குந்தியும் ஒரு போலித் தாய்தானா? போர் ஏற்பட்டு விட்டநேரத்தில், கண்ணனின் சூழ்ச்சியால் மகனென்று பாசம் காட்டி மோசம் செய்ய குந்தி வந்திருப்பாளோ?'' என்ற பல சந்தேகங்கள் கர்ணனை அலைக்கழிக்கின்றன. இருந்தாலும், தன் மனைக்கு வந்தவரை வரவேற்க வேண்டிய கடமையினாலும், குந்தியை போலித் தாயாகக் கருத மனம் முழுதும் இடம் கொடுக்காத காரணத்தாலும், குந்தியைத் தக்க மரியாதை கொடுத்து ஆசனத்தில் அமர்த்திய கர்ணன் ''அன்னை வந்ததென் அருந்தவப்பயன். என்னை வந்தவாறு?'' என வினவுகிறான்.

''தாயே! தாங்கள் வந்தது நான் செய்த தவப்பயனே யாகும்! தாங்கள் வந்த காரணத்தைக் கூறுங்கள்'' எனக் கர்ணன் வினவ, குந்தியும் ''மகனே கர்ணா! நானே உன்னைப் பெற்ற தாய்'' என்று கூறி, துர்வாச முனிவர் மந்திரங்களை உபதேசித்ததையும், அந்த மந்திரங்களில் சூரியமந்திரத்தினால் கர்ணன் தோன்றியதையும், பழிக்கஞ்சி கர்ணனை பெட்டியில் வைத்து, ஆற்றில்விட்டது மான வரலாற்றையெல்லாம் குந்தி விவரமாகக் கர்ணனுக்கு எடுத்துரைக்கின்றாள். கண்ணனும் இதே விவரத்தைத்

தான் காலையில் கர்ணனிடம் எடுத்துக் கூறியிருந்தார். இது உண்மை வரலாறுதானா? அல்லது கண்ணன் கூறச் சொல்லிக் குந்தியும் வந்து கூறும் கற்பனை வரலாறா? என்று விளங்காதவனாகிய கர்ணன், தேவர்கள் உண்மைத் தாயைத் தேரத் தனக்குக் கொடுத்துள்ள புடவையின் துணை கொண்டே குந்தியையும் சோதித்துப் பார்த்து விடுவோம் என்பதாகத் துணிந்து, குந்தியிடம் அப்புடவை பற்றிய விவரத்தைக் கூறுகின்றான்.

**''மாயனார் விரகிதுவென மனத்தினில் மதித்து வந்தளித்**
**திடும் வள்ளல்**
**நீ அந்நாள் எனைப் பயந்தவள் என்னினும் நின்மொழி**
**நெஞ்சுறத் தேறேன்**
**பேயனார் சிலர் பேரறிவின்மையாற் பெற்ற தாயெனக்**
**கென வந்து**
**தூயநாரின் அமைந்ததோர் துகிலாற் துன்பமுற்று**
**என்புருவானார்''**

(கிருட்டிணன் தூது, 250)

தேவர்கள் தந்த புடவையின் மகிமை அறியாமல் பேராசை கொண்ட பெண்டிர் சிலர் தாய் எனக் கூறிவந்து, கருகிப் போனதை எடுத்துரைக்கும் கர்ணன் ''அடாது செய்தவர் படாதுபட்டனர்'' எனக் குந்தியிடம் கூற, ''மகனே! உனக்கு நான்தான் உண்மையான தாய் என்பதில் எந்த ஐயமும் உனக்கு வேண்டாம். அந்த ஆடையைக் கொண்டு வா! நான் அணிந்தே காட்டி விடுகிறேன்'' என்று கூறி, கர்ணன் கொண்டு வந்து தந்த புடவையை உடனே அணிந்து காட்டி ஐயமறத்தானே அவன் தாய் என்பதைக் குந்தி மெய்ப்பித்துக் காட்டுகிறாள்.

உண்மையில் குந்தியே தன்னுடைய தாய் என்பதைக் கண்டு கொண்டு விட்ட கர்ணனும், தாயன்பிற்காக ஏங்கித் துடித்த தன்னுடைய ஏக்கமெல்லாம் நீங்கி, பாசம்

கொண்டு உருகியவனாய் குந்தியின் பாதங்களைப் பணிந்து வணங்குகின்றான். ஈன்ற பொழுதிற் கண்டு, பின் மகனைப் பிரிந்தவளாகிய குந்தி, அவனைச் சான்றோன் என உலகமே போற்றத்தக்க உயர்ந்த நிலையில் காணக் கொடுத்து வைத்தாள் எனினும் "பரிந்து நான் அன்றே யுனை வளர்த்தெடுக்கப் பாக்கியம் செய்யாமல் போனேனே" என்று கூறி மகனை அணைத்துப் பரவசப்படுகிறாள். தாயும் மகனும் நீண்ட நெடுங்காலத்திற்குப் பிறகு ஒன்று சேர்ந்து பாசத்தால் உருகும் இவ்வொப்பற்ற காட்சியை வருணிப்பது யாவராயினும் கடினம்தான்.

> "இருந்த தாய் ஈன்ற அன்று போலுருகி இருதடங்
> கொங்கை பால்சொரிந்தாள்
> அருந்துவான் போல இரவிசேய் விரும்பியாதரத்துடன்
> புளகு ஆனான்"
>
> (கிருட்டிணன் தூது, 252)

என்று தாயும் சேயும் உற்ற புளகாங்கித நிலையை விவரித்திருக்கிறார் வில்லிப்புத்தூரார். தான் தாய் என்பதைக் கர்ணனுக்கு மெய்ப்பித்து காட்டிய குந்தி இனி கர்ணனின் கடமை என்னவென்பதையும் அவனுக்கு எடுத்துரைக்கின்றாள். தம்பிகள் ஆகிய பாண்டவர்கள் ஐந்து பேரும் கர்ணனின் மலர்ப் பாதங்களைத் தொழுது வணங்கி நிற்க, சிற்றரசர்கள் எல்லாம் வாயிற்புரத்தில் வந்து வணங்கி நிற்க, வீரமும் செல்வமும் மேம்பட, குருகுல அரசர்களுக்கெல்லாம் அரசனாய், கர்ணன் வாழ்ந்து சிறக்க வேண்டும் என்ற தன் விருப்பத்தைக் குந்தி தெரிவிப்பதை,

> "வருகவென் மதலாய் இளைஞர் ஐவருநின் மலரடி
> யன்பினால் வணங்கி
> உரிமையான் மனமொத்து ஏவலேபுரிய ஒரு தனிசெய்ய
> கோல்ஓச்சி

அரசெலாம் வந்துன் கடைத்தலை வணங்க ஆண்மையும்
செல்வமும் விளங்கக்
குருகுலாதிபர்க்குங் குரிசிலாய் வாழ்வுகூர்வதே
கடனெனக் குறித்தாள்''

(கிருட்டிணன் தூது, 253)

என்ற பாடலால் அறிகிறோம்.

அந்த நேரத்தில் அன்புத் தாயான குந்திக்குக் கர்ணன் அளிக்கும் அன்பான பதில், அவனை உலகம் போற்றி மலையுள்ள அளவும், கடல் உள்ள அளவும், காற்றுள்ள அளவும், சூரிய சந்திரர்கள் உள்ள அளவும் மதிக்கத்தக்க அளவிற்கு அவனுடைய உயர் குணத்தை எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளது. பதவிகள் கிடைக்குமென்றால், பாசத்தைப் பலர் உதறிவிடக் காணுகின்றோம். பழகிய நட்பினை பலர் மிதித்து விடவும் காணுகின்றோம். ஆனால் கர்ணன், தன்னுடைய தாய் அழைத்த போதும் நட்புக்காக—செஞ் சோற்றுக் கடனுக்காக, பாசத்தைப் பின்னுக்குத் தள்ளி, அரசருக்கு அரசராகும் பெரும் பதவியையும் வேண்டாம் என்று ஒதுக்கித் தள்ளி விடுவதைக் காணுகின்றோம். தாயின் மனம் நோகாதவாறு தன் செயலில் உள்ள நியாயத்தையும் அவன் எடுத்துக் காட்டுகின்றான். முருகப் பெருமான் தந்தைக்கு உபதேசித்த வள்ளல். கர்ணமா மன்னனும் தாய்க்கு உபதேசித்த வள்ளல். கர்ணன் கூறுகிறான்:

''பெற்றநீர் மக அன்பிலாமையோ அன்றிப் பெரும்பழி
நாணியோ விடுத்தீர்
அற்றைநாள் தொடங்கி என்னை இன்றளவும் ஆருயிர்த்
துணையெனக் கருதிக்
கொற்றமா மகுடம் புனைந்தரசளித்துக் கூடவுண்டு
உரிய தம்பியரும்
சுற்றமானவரும் என்னடி வணங்கத் தோற்றமும்
ஏற்றமும் அளித்தான்''

(கிருட்டிணன் தூது, 254)

''மடந்தை பொற்றிரு மேகலை மணியுகவே மாசறத்
திகழும் ஏகாந்த
இடந்தனிற் புரிந்தே நான் அயர்ந்திருப்ப எடுக்கவோ
கோக்கவோ என்றான்
திடம் படுத்திடவேலி இராசராசனுக்குச் செ முனைச்
சென்று செஞ்சோற்றுக்
கடன் கழிப்பதுவே எனக்கினிப் புகழும் கருமமும்
தருமமும் என்றான்''

(கிருட்டிணன் தூது, 255)

எனவரும் வில்லிபாரதப் பாடல்கள், கர்ணன் தன் தாய்க்கு உபதேசித்த உபதேசங்களைக் கொண்டு விளங்குகின்றன.

வள்ளுவர் பெருமான் தம் திருக்குறளில் செய்ந்நன்றி அறிதலின் சிறப்பினைச் சிறப்புற விளக்கியுள்ளார்.

''எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.'' (107)

''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு'' (110)

முதலான பல குறள்கள், நன்றி கொன்றவர்களுக்கு நல்ல வாழ்வு இல்லையாவதைக் கூறுகின்றன. தாய் குந்தி, மகன் கர்ணனுக்குச் சொல்லுகின்றாள். 'மகனே! என்னுடன் வந்து விடு! உனக்கு நல்ல வாழ்வு உண்டு.'' கர்ணன் கேட்கிறான். ''நன்றி கொன்றவர்களுக்கு நல்ல வாழ்வு எப்படியம்மா உண்டாக முடியும்?'' அதிலும் துரியோதனன் கர்ணனுக்கு எப்படிப்பட்ட நன்மைகளை எல்லாம் செய்திருக்கிறான். துரியோதனன் ஆதரித்திருக்காவிட்டால், கர்ணன் என்ற ஒருவன் வாழ்ந்தான் என்ற வரலாறே இருந்திருக்காதே! ஊர் பேர் தெரியாத அனாதையான கர்ணனை அங்கதேசத்து மன்னன் ஆக கொற்ற மாமகுடம் புனைய வைத்து, தம்பிகளும், உறவினர்களும் நண்பர்களும் தன்னை

போல் மதித்துக் கர்ணனையும் போற்ற காரணம் ஆனவன் துரியோதனனே அல்லவா! எவ்வளவு உயர்ந்த நட்பாக இருந்தாலும், பெண்களால் அந்த உயர்ந்த நட்பும் பாழாகி விடுவதை உலக வரலாறுகள் பல அறிவிக்கின்றன. கர்ணன் துரியோதனனைக் காண அவனுடைய அரண்மனைக்குச் சென்றவன், துரியோதனன் வெளியே சென்றிருந்த காரணத்தால், அவன் வரும்வரை காத்திருக்க நேர்ந்தது. அந்த நேரம் துரியோதனனின் பட்டமகிஷி பானுமதி, கர்ணனுடன் சொக்கட்டான் விளையாட உடன்பட்டு விளையாடிக் கொண்டிருந்தாள். வெளியே சென்றிருந்த துரியோதனனும் சிறிது நேரத்தில் அரண்மனைக்குத் திரும்பி வந்தான். ஆட்ட விறுவிறுப்பில் துரியோதனன் வருவதையும் கவனியாதிருந்தான் கர்ணன்.

கணவன் வர அவனுக்கு மரியாதை கொடுத்து, தன் இருக்கையை விட்டு எழுந்து நின்றாள் பானுமதி. ஆட்ட நடுவில் அவள் எழுந்ததற்கான காரணத்தை அறிந்து கொள்ளாதவனாகிய கர்ணன், ஏன் எழுகிறாய் என அவளைத் தடுத்த பொழுது அவள் இடையில் தரித்திருந்த மணிமேகலை அறுந்து, மணிகள் உதிரலாயின. அப்போது தான் துரியோதனன் ஏற்கனவே அங்கு வந்துவிட்டிருந்ததைக் கண்டான், கர்ணன். தன்னுடைய சகோதரியான பானுமதியுடன் சொக்கட்டான் ஆடுவது தவறில்லை என்பதைத் தெரிந்து தான் அவன் ஆடினான். ஆட்டம் ஆடுவது தவறானால் பானுமதியும் கூட ஆட இசைந்திருக்க மாட்டாள்.

அவள் துரியோதனன் வந்ததும் எழுந்து நின்றதும் அவனுக்கு மரியாதை செய்யும் பொருட்டேயாகும். ஆனால் கர்ணன் பானுமதியின் மேகலை அறுந்து, மணிகள் சிந்தக் கூடிய அளவிற்கு எல்லை மீறித்தான் நடந்துகொண்டு விட்டது எண்ணித்தான் மனம் துணுக்குற்றான். ஆனால் துரியோதனனோ கர்ணனின் செய்கையை எல்லைமீறிய

செய்கையாகவோ, கடிதற்குரியதோர் செய்கையாகவோ சற்றும் எண்ணாமல் ''எடுக்கவோ கோக்கவோ'' என்று கேட்டபடி, மணிகளை அவன் குனிந்து எடுக்கவும் தொடங்கி விட்டான் என்றால் கர்ணனை அவன் எவ்வளவு ஆழமாக நம்பியிருக்கிறான்; தன் ஆருயிர் நண்பனாக மதித்திருக் கிறான். அப்படிப்பட்ட துரியோதனனுக்கா துரோகம் செய்ய நினைப்பான் கர்ணன்! மாட்டான். ஆகவே தான் தன் தாயிடம் மேற்காட்டியவற்றை யெல்லாம் விரிவாக எடுத்துக்கூறும் கர்ணன் ''செஞ்சோற்றுக்கடன் கழிப்பதுவே எனக்கினிப் புகழும், கருமமும், தருமமும்'' என்று உறுதி படக்கூறுகின்றான்.

தனக்குக் கடமையும் தருமமும் துரியோதனனுக்குப் பட்டிருக்கும் செஞ்சோற்றுக் கடனை அடைப்பது தான் என்று உறுதிப்படக் கூறிவிடும் கர்ணன், மேலும் தன்தாய் அதனை மறுத்துப்பேச இடம் கொடுக்காமல் ''யுத்தமோ மூண்டுவிட்டது. இப்பொழுது என்னை மகன் என்று சொந்தம் கொண்டாடுவதில் என்ன பயன்? எதற்காக என்னைக் காண வந்தீர்களோ, அந்தக் காரணத்தை மறைக் காமல் கூறுங்கள்'' என்று தாயின் பாசத்தைத் தடை செய்து பேச,கர்ணனின் வார்த்தைகளைத் தாங்கிக்கொள்ள முடியாதவளாகிய குந்தி, கண்ணீர்விட்டுக் கதறி அழுது விடுகிறாள்.

தாய் சிந்தும் கண்ணீரை எந்தத் தனயன்தான் தாங்கிக் கொள்ள முடியும்? அதுவும் ''தாய்க்குத் தலைமகன்'' என்ற பழமொழியும் நாட்டில் வழங்கக் காணுகின்றோம் கர்ண னைப் பாசமின்றி ஆற்றிலே விட்டவள் அல்லள் குந்தி. திருமணத்திற்கு முன்னமே குழந்தை பெற்றுவிட்ட தன்னை உலகம் பழிக்குமே, அந்தப் பழியால் தன்னை ஈன்றெடுத்த பெற்றோர், ஊராரின் முன் தலை குனிந்து நிற்க நேருமே என்று, பழிக்கு அஞ்சித்தான், தான் பெற்ற குழந்தை எங்கேயிருந்தாலும் நலமாக இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு, பெட்டியில் இட்டு ஆற்றிலே விட்டாள்

குந்தி. அப்படி ஆற்றிலே விடப்பட்ட தன் மூத்த மகனே, தன் மற்ற மக்களுக்குப் பகையாக யுத்த களத்தில் நிற்பான் என்று அந்தத் தாய் ஒருபோதும் எண்ணியிருக்க மாட்டாள். ஆனால், யாரறிவார் ஈசனின் திருவிளையாடலை! "இப்பொழுது மகன் என்று சொந்தம் கொண்டாடிப் பயனென்ன?" என்று மகனே தாயைக் கேட்டு, தாய் அதனைத் தாங்க முடியாமல் கண்ணீர் விட்டுக் கதறக், கர்ணனின் மனமும்கல்மனம் அல்லவே! ஆகவே அன்னையின் கண்ணீரைத் துடைக்கின்றான். "மூண்ட வல்வினையின் பயன் அலாது யார்க்கும் முயற்சியால் வருவதொன் றுண்டோ?" என்று கூறித் தேற்றுகின்றான்.

"நீங்களும் கேளுங்கள். எது வேண்டுமானாலும் கேளுங்கள். தாயே! தருகிறேன்" என்று தன்னைத் தந்த அன்னைக்குத் தான் என்ன தரவேண்டும் என்று கேட் கிறான் கர்ணன்.

குந்தியும் விதியை நொந்து தேறியவளாய் தன் மகனிடம் தனக்கு இரண்டு வரங்கள் வேண்டுமெனக் கேட்கிறாள்.

**"பார்த்தன் வெஞ்சமரில் நின்னுடன் மலைந்தால் பகைப்**
**பெரும்பாந்தள் பகழி**
**கோத்தலும் பிழைத்தால் மடுத்து நீ விடுத்து கோறல்**
**என்றொரு வரங் குறித்தாள்**
**வாய்த்த மற்றவர்கள் இளைஞர் என்று அவரை மலையல்**
**என்றொருவரம் குறித்தாள்"**
(கிருட்டிணன் தூது, 258)

"அர்ச்சுனன் மேல், நாகாத்திரத்தை நீ ஒரு முறை ஏவி அவன் உயிர் பிழைத்துக் கொள்வானேயானால், அதனை மறுபடியும் அர்ச்சுனன் மேல் ஏவுதல் கூடாது" என்பதனைக் குந்தி தன்னுடைய முதல் வரமாகக் கர்ணனிடம் கோரு கின்றாள். கண்ணபெருமான் கர்ணனிடம் குந்தி கோரிப்

பெற வேண்டிய வரமா ; இதனையே கூறியிருந்தது நாம் அறிந்ததுதான். ண்ணபெருமான் கூறாத மற்றொரு வரத்தையும் கூட ர்ணனிடம் கோருகின்றாள் குந்தி.

''தருமன், பீமன், நகுலன், சகாதேவன் ஆகிய மற்ற நால்வரையும் உன் தம்பிமார்கள் எனக் கொண்டு அவர்களைக் கொல்லாதே'' என இரண்டாவது வரத்தையும் குந்தி கோர, முன்பின் அறியாதவர்களுக்கெல்லாம் கூட முகம் மலர்ந்து கேட்டதெல்லாம் கொடுக்கக் கூடியவனாகிய வள்ளல் கர்ணன், ''உறுதுணையொன்றே பார்த்தன் மேற்தொடுப்பன், ஒழிந்துளோர் உய்வர்'' என்று தாய் கேட்ட வண்ணமே அருள் புரிகின்றான்.

''அர்ச்சுனன் மேல் நாகாத்திரத்தை ஒரு முறை மட்டுமே ஏவ வேண்டும்'' என்பதைக் குந்தி வரமாகக் கோரியிருக்காவிட்டாலும், ''வீரனாகிய நானும் அவ்விதமே செயல்பட்டிருப்பேன்'' என்பதை எடுத்துக் கூறும் கர்ணன் ''தெறுகணையொன்று தொடுக்கவும் முனைந்து செருச் செய்வோன் சென்னியோடிருந்தால் மறுகணை தொடுப்பது ஆண்மையோ, வலியோ, மானமோ, மன்னவர்க் கறமோ'' எனத் தாயிடம் வினவுவது நெஞ்சீரத்தில் மட்டுமே அல்லாமல், நெஞ்சுரத்திலும் கர்ணன் வல்லவனே ஆவதை நமக்குத் தெளிவுபடுத்தும்.

இவ்வாறாகத் தாய் கேட்ட இரு வரங்களையும் அன்பினோடு அளித்தவனாகிய வள்ளல் கர்ணன், தானும் இரு வரங்களைத் தன் தாயிடம் கோருகின்றான். கர்ணன் கோரும் அவ்விரண்டு வரங்களும், அவன் பெரிதும் மதிக்கும் அவனுடைய தாய்ப் பாசத்தையும், செஞ்சோற்றுத் தருமத்தையுமே எடுத்துக் காட்டுவதாக இருப்பது குறிப்பிடத் தக்கது.

''பெருவரம் இரண்டும் பெற்றபின் தன்னைப் பெற்ற
தாயினைக் கரங்குவித்துத்
தருவரம் எனக்குமிரண்டுள உலகிற் சராசரங்களுக்
கெலாந் தாயீர்
வெருவருமமரிற் பார்த்தனால் அடியேன் வீழ்ந்த போது
அவனிபர் அறிய
மருவரு முலைப்பால் எனக்களித்து உந்தம்மகனெனும்
வாய்மையும் உரைப்பீர்''
(கிருட்டிணன் தூது, 260)

''உய்வருந்திறல் வெம்போர் முடிப்பளவும் உமக்கு நான்
மகனெனுந் தன்மை
ஐவரும் அறியாதவண்ணம் நீர் காப்பீர் அல்ல தங்கவர்
சிறிதறியின்
மைவரும் கடற்பார் அனைத்தையும் எனக்கே வழங்குவர்
வழங்கினால் யானென்
கைவருந் துணைவன் தனக்கலால் வழங்கேன் கடைப்பிடி
கருமமீதென்றான்''
(கிருட்டிணன் தூது, 261)

''அர்ச்சுனனால் தாயே நான் மாண்டு தரையில் விழும் போது, உலகோர் அறிய என்னை உம் மகன் என்று அறிவிக்க வேண்டும். அதுவே உலக மாதாவாகிய உம்மிடம் நான் வேண்டும் முதல் வரமாகும். மேலும் நான் உங்கள் மகன்தான் என்ற உண்மையை என் தம்பிகளிடத்தில், நான் இறப்பதற்கு முன்பாக கூறக் கூடாது. இதுவே நான் உங்களை வேண்டும் இரண்டாவது வரமுமாகும்'' என்று இரண்டு வரங்களைத் தாயிடம் கேட்கின்ற கர்ணன், தான் இரண்டாவது வரத்தைக் கோரியதற்கான காரணத்தையும் தெரிவிக்கின்றான்.

''நான் பாண்டவர்களில் மூத்தவன் என்ற உண்மை பாண்டவர்களுக்குத் தெரிந்து விட்டால், அவர்கள் போர் செய்து வெல்லவிருக்கும் நாட்டின் அரசாளும் உரிமையை

எனக்கே வழங்கி விடுவார்கள். நான் அந்த உரிமையைப் பெறுவேனேயானால், என்னுடைய உற்ற நண்பனாகிய துரியோதனனுக்கே அந்த உரிமையை வழங்கி விடுவேன். ஆகவே அது நேராமல் இருக்க வேண்டுமானால் நான் இறந்த பிறகே என்னுடைய பிறப்பின் உண்மையை உலகிற்கு உணர்த்த வேண்டும்'' என்பதாகத்தான் கோரிய வரத்திற்கான காரணத்தையும் காட்டுகின்றான் கர்ணன்.

இறந்த பிறகேனும் தான் அனாதையில்லை என்ற உண்மையை உலகிற்கு உணர்த்த விழைகிறது, அவனுடைய தாய்ப் பாசத்திற்கு ஏங்கும் அன்பு உள்ளம். தம்பிகள் நாடு கொடுத்தால், அதையும் நண்பனுக்கே காணிக்கையாக்க துணிகிறது அவனுடைய பண்பு உள்ளம். ஈன்றெடுத்த பிள்ளை, தான் இறப்பதைப் பற்றித் தன்னுடைய தாயிடமே பேச நேர்ந்தால் அதை எந்தத் தாயின் உள்ளம் தான் தாங்கிக் கொள்ளும்? குந்தியும் தாங்க முடியாத துக்கம் கொண்டவளாய் ''என்னுடைய உயிர் இப்பொழுதே பறந்து விடுவதானால், எவ்வளவு நலமாயிருக்கும்! உன்னுடைய பிரிவைக் காணும் கொடுமை நேராதே!'' என்பதாக கூறிக் கண்ணீர் விட்டவளாய் கர்ணனை அணைத்து அவன் கோரிய வரங்களின் படியே செயல்படுவதாக உறுதியும் கூறி விடை பெறுகின்றாள்.

தாயைப் பிரிய மனம் இல்லாதவனாய் கர்ணனும் குந்தியுடனே தன் அரண்மனை வாசல் வரை தொடர்ந்து வர, அவனைப் பச்சிளம் குழந்தையாய் இருந்த போது எவ்வளவு துயரத்துடன் பெட்டியில் வைத்து ஆற்றிலே விட்டுப் பிரிந்தாளோ, அதைப் போலப் பல மடங்கு அதிகமான துயரம் கொண்டவளாய் குந்தி, மைந்தனை வாசலிலேயே நிற்கக் கூறி அவனைப் பாசம் மிக மீண்டும் தழுவிப் பின் பிரிபவளாய் விடை பெற்று, தன்னுடைய அரண்மனைக்குத் திரும்புகிறாள்.

குந்தியினுடைய அரண்மனையில், அவளுடைய வருகைக்காகக் காத்திருக்கின்றார் கண்ணபெருமான்.

அவரிடம் நடந்ததையெல்லாம் நடந்தபடி எடுத்துரைக்கின்றாள் குந்தி. கண்ணனும் தான் எண்ணிய காரியம் யாவும், செம்மையாகவே முடிந்ததென்ற மனநிறைவோடு அப்பொழுதே குந்தியிடம் விடை பெற்றுப் பாண்டவர்கள் பாடி வீடு அமைத்துத் தங்கியிருக்கும் உபப்பிலாவியம் அடைகின்றார். தான் அத்தினாபுரி அடைந்ததும், விதுரன் வீட்டில் விருந்துண்டு தங்கியதும், துரியோதனனிடம் சமாதானம் பேச முயன்று தோற்றதும், விதுரன் வில்லை முறித்ததும், துரியோதனன் படுகுழி அமைத்துத் தன்னைச் சிறை பிடிக்க முயன்றதும் முதலான எல்லாவற்றையுமே பாண்டவர்களுக்குக் கண்ணன் எடுத்துரைக்கிறார். கர்ணன் குந்தியின் பிள்ளையாகும் உண்மையையும் அவனிடம் குந்தி பெற்ற வரத்தையும், அவனுக்குக் குந்தி கொடுத்த வரத்தையும் மட்டுமே கூறாமல் மறைக்கும் கண்ணபெருமான், அடுத்துப் பாரதப் போருக்குப் பாண்டவர்களைத் தயார் படுத்தலாகிறார்.

தருமரின் வேண்டுகோளுக்கிணங்கி கண்ணபெருமான் தூது போக உடன்பட்ட போது துரோபதை, தன்னுடைய அவிழ்ந்த கூந்தலைக் கண்ணனிடம் காட்டி ''எப்போது நான் இதை முடிப்பேன்'' என அழுததையும், அதற்குக் கண்ணபெருமான் ''தொல்லாண்மைப் பாண்டவர்க்குத் தூது போய் முடித்ததன் பின் நல்லாய் உன் பைங்கூந்தல் நானே முடிக்கின்றேன்'' என்று உறுதி கூறியதையும் கண்டோம். அந்தத் தன்னுடைய வாக்குறுதி மாறாமல் போரில் பாண்டவர்கள் வெல்லுவதற்கான காரியங்களையே புரிந்து, தூது சென்ற பணியைத் தம் விருப்பம் போல் கண்ணபெருமான் சிறப்பாக முடித்து வரக் கண்டு விட்டோம். இனித் தொடர்ந்து வரும் அத்தியாயங்களில் **''பாரதப் போரில் பார்த்தசாரதி''** என்ற தலைப்பில் குருசேத்திரப் போர்க்களத்தில் கண்ணபெருமான் ஆற்றவிருக்கும் அற்புதங்களையும் விரிவாகக் கண்டு நாம் பயன் அடைவோமாக.

# 7

எல்லோரும் வாழவேண்டும் என்ற நல்ல எண்ணம் எல்லோருக்கும் இருந்து விடுமானால், உலகம் அமைதிப் பூங்காவாகத் திகழ்ந்துவிடும் என்பதில் யாருக்கும் எந்த ஐயமும் இருக்க முடியாது. ஆனால் துரியோதனனைப் போன்ற மனிதாபிமானமே சிறிதும் இல்லாத கொடிய வர்கள் குடியிருக்கும் உலகில் போர் என்ற ஒன்று நிகழாமல் இறைவனாலும் கூடத் தடுத்துவிட முடியாது என்பதைத் தான் நாம் மகாபாரதக் ாவியத்தின் மூலம் தெரிந்து கொள்கிறோம்.

தன் சிற்றப்பாவின் மக்களான பாண்டவர்கள் பூமியிலே தோன்றியே இருக்கக்கூடாது என்பது துரியோதனனின் எண்ணம். அவன், பாண்டவர்களுக்கு அடுக்கடுக்காகச் செய்திருக்கும் அநீதிகளுக்கு அளவே இல்லை. துரியோ தனன், தன்னிலும் வலிமையான வீமன் சிறப்புப் பெறு வதைப் பொறுத்துக் கொள்ள முடியாமல், அவனுடைய பாலப் பருவத்திலேயே ஆற்றிலே கழுமரங்களை நட்டு வைத்து, அதிலே வீமனைக் குதிக்கச்சொல்லி வீமனுடைய உயிர் பறிக்க முயன்று, அந்த முயற்சியிலே தோற்றான். கண்ண பெருமான் வண்டுகளின் வடிவம் தாங்கிக் கழு மரங்கள் தோறும் போய் அமர்ந்து, அங்கே உள்ள ஆபத்தை வீமனுக்கு உணர்த்திய காரணத்தினாலே, ஆற்றின் வேறு பக்கமாகக் குதித்து வீமன் உயிர் தப்பினான்.

வீமன் ஒருவனைக் கொல்லக் குறி வைத்துஅம்முயற்சியில் இவ்வாறு தோற்றுப்போன துரியோதனன், பாண்டவர்கள் ஐவரையும் பூண்டோடு அழிக்கத் திட்டமிட்டு அரக்கு மாளிகை ஒன்றை அமைத்து, விருந்துக்குப் பாண்டவர்களை

அழைத்து, அவர்கள் உறங்குகின்ற வேளையிலே தீயிட்டுப் பொசுக்க முயன்றான். ஆனால் விதுரர் துரியோதனனின் வஞ்சகத் திட்டத்தை வீமனுக்கு உரிய நேரத்தில் தக்க ஆள் மூலம் எடுத்துரைத்து எச்சரித்த காரணத்தினாலே பாண்டவர்கள் அந்த ஆபத்திலிருந்தும் தப்பிப் பிழைத்துக் கொண்டார்கள்.

இனி துரியோதனன் கண் எதிரில் வாழ்ந்தாலும் தம்மைக் கொல்வதிலேயே பாவி துரியோதனன் குறியாக இருப்பான் என்பதனால்தான், அரக்கு மாளிகைச் சம்பவத்திற்குப் பிறகு பாண்டவர்கள் மாறு வேடத்திலேயே மறைந்துவாழ்ந் தார்கள். அந்த வேளையில் அர்ச்சுனனுக்கு மணம் முடித்துக் கொடுப்பதற்கென்றே துருபதராசன் பெற்ற துரோபதையின் சுயம்வர நிகழ்ச்சி வந்தது.

கண்ணபெருமானின் ஏவலுக்கிணங்க அர்ச்சுனன் தன்னை இன்னான் என்று காட்டிக் கொள்ளாமலேயே, சுயம்வரப் போட்டியிலே கலந்து கொண்டு தன்னுடைய வில் திறமை யைக் காட்டி வென்றான். வென்றவன் அர்ச்சுனனாகவே இருக்க முடியும் என்று ஐயப்பட்ட துரியோதனன், அந்த நேரத்திலும் சுயம்வரத்திற்கு வந்திருந்த கர்ணன் உள்ளிட்ட பல தேசத்து அரசர்களையும் தூண்டிவிட்டு அர்ச்சுனனைக் கொல்ல முயன்றான். ஆனால் அர்ச்சுனனும் வீமனுமாக இணைந்து தங்கள் வீரபராக்கிரமத்தைக் காட்டி தாங்கள் வென்றதோடு மட்டுமல்லாமல் துரியோதனனின் அரக்கு மாளிகை சூழ்ச்சியையும் அம்பலப்படுத்தினார்கள். அதன் பிறகுதான் பாண்டவர்களுக்குரிய குரு நாட்டுரிமையை வழங்கியாக வேண்டி கட்டாயத்தின் பேரில், திருத ராட்டிரன் தருமனுக்கு இளவரசுப் பட்டம் கட்டினார். ஆனால் அதைப் பொறுக்க முடியாமல் துரியோதனன் பொறாமை கொண்டு, தன் புகைச்சலை காட்ட,அத்தினா புரத்தில் இனித் தாம் தங்கியிருக்கவேண்டாம் எனக் கருதிப் பாண்டவர்கள் இந்திரப் பிரத்தம் என்ற புதிய நகரையே நிர்மாணித்து அங்கே தங்கி வாழ்ந்து வந்தார்கள்.

அப்போதுதான் இந்திரபிரத்த நகருக்கு வருகை புரிந்த மகரிஷி நாரதர், சொர்க்கத்தில் வாழும் பாண்டவர்களின் தந்தை பாண்டு, தம்மைந்தர்கள் இராஜசூய யாகத்தை நிகழ்த்தவேண்டும் என்றுவிரும்பியதைத் தருமரிடத்தில் தெரிவிக்க, கண்ணபெருமானின் திருவருளால், உலகம் போற்ற அவர்களும் மிகச் சிறப்பாக செய்து முடித்தார்கள். அந்த யாகத்திற்கு வருகை புரிந்து, பாண்டவர்களின் இந்திரபிரத்த நகரின் சிறப்பையும், அவர்கள் நிகழ்த்திய யாகத்தின் சிறப்பையும் நேரில்கண்டு 'பொறா' மையால் மனம் நொந்து வெந்த துரியோதனன், பாண்டவர்களை எப்படியும் இனி வாழ விடாமல், கெடுத்தே ஆகவேண்டும் என்று சகுனியின் உதவியோடு சதித்திட்டம் தீட்டி, தானும் புதிதாக ஒரு மண்டபத்தை அத்தினாபுரத்தில் அமைத்து அதைக்காண பாண்டவர்களை வரவழைத்து ''விருந்துக்கு முன் சூதாடலாமே'' என விநயமாகத் தருமரை அழைத்தான்.

சூதாட்டம் எவ்வளவு கொடியது என்பதை தரும நெறி தழைக்க வந்த தருமரும் மிக நன்றாகவே அறிவார். அதனால்தான் சூதின் தீமையை அவர்,

''அடியும் ஆண்மையும் வலிமையுஞ் சேனையும்
அழகும் வென்றியுந் தத்தம்
குடியும் மானமுஞ் செல்வமும் பெருமையும்
குலமும் இன்பமும் தேசும்
படியு மாமறை ஒழுக்கமும் புகழுமுன் பயின்ற
கல்வியும் சேர
மடியுமால் மதியுணர்ந்தவர் சூதின்மேல்
வைப்பரோ மனம் வையார்.''

(சூது போர்ச் சருக்கம் 65)

என்று கூறி மறுத்தார். ஆனால் சகுனியோ விடாமல்; ''சூதாடுவதில் வஞ்சமொன்றும் இல்லை, பாச்சிகையைத் திறமையாக உருட்டி விளையாடும் சூது விளையாட்டும் ஒரு ஆண்மைவிளையாட்டே'' என்று வற்புறுத்திக் கூறி

னான். அருகிலிருந்த கர்ணனும் ''சூது போர் புரிதற்கே அஞ்சி நடுங்குகின்றாயே, மோதுபோரில் எப்படி நடுங்கு வாயோ?'' என்று கேலி பேசினான். அது கேட்டுப் பொறுக்க முடியாமல் அர்ச்சுனன் ''தகாத சொல் கூறிய உன் வாயைத் துணிப்பேன்' என்று கர்ணன் மேல் பாய, தருமத்தின் வடிவ மாகிய தருமரும் இப்படி உண்டான வாக்குவாதத்தையும் அதனால் விளைந்த வம்புச் சண்டையையும் தவிர்க்கும் பொருட்டு, 'சரி சரி சூதாடுவோம்' என உடனே உடன்பட் டார். அப்படி உடன்பட்டுத்தான் பொன்னை இழந்து, பொருளை இழந்து, மண்ணை இழந்து, மாடம் இழந்து, தம்பிகளை இழந்து, தன்னை இழந்து, தாரமான துரோபதையும் பின் இழந்து, துரியோதனனின் வஞ்சகத் திட்டத்தால் வசைக்காளானார் தருமர்.

அரசர்களுக்கு அரசராய் இராசசூய யாகத்தைச் சிறப்புற முடித்த பாண்டவர்கள் இப்படி துரியோதனனின் பொல்லாத சூழ்ச்சியால் ஓரிரு மணி நேரங்களில், எல்லாம் இழந்த ஆண்டிகளாய் ஆனார்கள். நேரம் எப்பொழுது கிடைக்கும், பாண்டவர்களைச் சின்னாபின்னப்படுத்திச் சிரித்து மகிழ்வோம் என்று காத்திருந்த துரியோதனன், துரோபதையைச் சபை நடுவே அழைத்து வந்தும், துச்சா தனனைக் கொண்டு துகிலுரிந்தும் பலப்பல கொடுமைகள் புரிந்தான். ஆனால் பரந்தாமன் கண்ணனின் திருவருளால் ''கடவுளை நம்பினோர் கைவிடப்படார்'' என்ற மூப மொழிக்கேற்ப அதிசயம் நிகழ்ந்து பாஞ்சாலி கட்டியிருந்த ஆடை துச்சாதனன் இழுக்க இழுக்க மென்மேலும் வளர்ந்து கொண்டே இருந்தது.

''ஆறாகி யிருதடங்கண் அஞ்சனவெம் புனல்சோர
அளகஞ் சோர
வேறான துகில்தகைந்த கைசோர மெய்சோர
வேறோர் சொல்லும்

கூறாமற் கோவிந்தா கோவிந்தா என்றரற்றிக்
குளிர்ந்து நாவில்
ஊறாத அமிழ்தூற உடல்புளகித் துள்ளமெலாம்
உருகி னாளே.''

(சூது போர்ச் சருக்கம் 247)

''உடுத்த துகில் உணர்விலான் உரிந்திடவும்
மாளாமல் ஒன்றுக் கொன்றாங்கு
அடுத்தநிறம் பற்பலபெற் றாயிரமா யிரங்கோடி
யாடையாய்க்
கொடுத்தருள் புரிந்தனபட்டிருந்த பெருந்தனிக்
கூடம்கொள்ளாதோடி
எடுத்தனர்பற்பல வீரர் உரிந்தோனும் சலித்திருகை
யிளைத்து நின்றான்''

(சூது போர்ச் சருக்கம் 249)

ஆயிரம் கோடி ஆடைகள் பலவேறு வண்ணங்களில், துச்சாதனன் உரிய உரிய வளர்ந்த வண்ணமே விளங்கி, அதை அள்ளிப் போட்ட வீரர்கள் மயங்கி விழுந்தனர். துச்சாதனனும் தன்னுடைய இருகை சலித்து இளைத்து நின்றான். இந்த ஒப்பற்ற காட்சியைப் பார்த்து. அருந்ததி அனையாளாம் துரோபதையின் கற்பின்திறத்தை வியந்து, வானவர் பூமாரிப் பொழிந்தனர். வீடுமர் கைகுவித்துத் துரோபதையை வணங்கி நின்றார். விதுரர் வணங்கி நின்றார். துரோணர்தொழுது நின்றார். அப்பொழுதேனும் தன்னுடைய அடாத செயல்குறித்து அதிர்ச்சிஅடைந்தானா துரியோதனன் என்றால் இல்லவே இல்லை. ''அவளை இழுத்து வந்து என்னுடைய தொடை மீது இருத்து'' என்று நாகூசாமல், துச்சாதனனுக்குப் புதிய உத்தரவு இடலானான் அரக்கன் துரியோதனன். மண்ணின் பொறுமைக்கும் மண்ணனைய பெண்ணின் பொறுமைக்கும் கூட எல்லை யுண்டல்லவா! அதுவரையும் அழுது அரற்றிக்கொண்டிருந்த துரோபதை, துரியோதனன் தன் தொடையைக் காட்டிச்

சொல்லவொண்ணாத சொல் ஒன்றைக் கூறிய வுடனே கொதித்தாள், துட்டனைச் சபித்தாள்; "புன் தொழிலோன் யானிருக்கக் காட்டியதன் தொடைவழியே புள்வாய்க் குத்தச் சென்றிடுக ஆருயிர்" என்று சபித்த துரோபதை, துச்சாதனன் பிடித்துத் தன்னை தரதரவென இழுத்து வந்த தால் அவிழ்ந்த தன்னுடைய கூந்தலைக் காட்டி மேலும் சபதம் செய்தாள்.

"அரசவையில் எனையேற்றி அஞ்சாமற் துகில்
தீண்டி அளகந்தீண்டி
விரை செய் அளி இனம்படிதார் வேந்தர் எதிர்
தகாதனவே விளம்புவோரைப்
பொருசமரில் முடிதுணித்துப் புலால்நாறு
வெங்குருதி பொழிய வெற்றி
முரசறையும் பொழுதல்லால் விரித்த குழல்
இனியெடுத்து முடியேன் என்றாள்"

(சூது போர்ச் சருக்கம் 255)

"துரியோதனாதியாரைப் போரிலே கொன்று, ஜெய பேரிகையை முழக்கி, அவர்களுடைய உடலிலிருந்து பாயக் கூடிய இரத்தத்தை வாரி என் கூந்தலில் தடவி, அவிழ்ந்த கூந்தலை முடிப்பேனேயல்லால், அது வரை அவிழ்ந்தஎன்கூந்தலை முடிக்க மாட்டேன்" என்பது துரோபதைகூறியவீரசபதம் ஆகும்.

சத்துருகாதினி என்ற தன் கதையால் துரியோதனாதியரின் கதையை அப்பொழுதே முடித்து விட ஆவேசம் கொண்டிருந்தவனாகிய வீமனும், "துரியோதனனையும், அவன் தம்பியார் அனைவரையும் கொல்வேன். துரோபதையின் கூந்தலைப் பிடித்து இழுத்து வந்து, அவளது ஆடையைக் களைந்தவனாகிய துச்சாதனனது உடலிலிருந்து பெருகுகின்ற இரத்தத்தை வாரிக் குடித்து, என் உள்ளமும் உடலும் குளிர்வேன். அதற்கு முன்னால், என்னுடைய

கைகளினால் நீர் அள்ளிப் பருகமாட்டேன். என்னுடைய கதாயுதத்தால் நீரைமோதி மேலே தெரிக்கிற நீர்த்துளி களையே அது நாள் வரை பருகுவேன்'' என்பதாகக் கொடிய சபதம் செய்து;

**''வண்டாரும் குழல்பிடித்துத் துகிலுரிந்தோன்**
**உடற்குருதி வாரியள்ளி**
**உண்டாகங் குளிர்வதன்முன் இக்கரத்தாற்**
**புனலுண்ணேன் ஒருகால் என்கைத்**
**தண்டால்வெம் புனலெற்றி மீதெழுந்து**
**விழுந்திவலைத்தண்ணீராகக்**
**கொண்டாவி புரந்திடுவேன் இது விரதம்.''**
(சூது போர்ச் சருக்கம் 257)

எனக் கூறினான்.

கர்ணன் தருமனைக் கேலி செய்து ''சூது போருக்கே நடுங்குகிறாயே! மோதுபோரில் என்ன செய்வாயோ?'' என்று கூறிச் சிரித்தான் அல்லவா! அவன் உயிரைத் தான் தன்னுடைய காண்டீபத்தால் கொல்வேன் என்பதாக அர்ச்சுனனும் சபதம் செய்ய, பொய்ச் சூதினால் பொல் லாங்கு சூழ்ந்த சகுனியைத்தான் கொல்வதாகச் சகா தேவனும், சகுனியின் மகனைக் கொல்வதாக நகுலனும் சபதம் செய்தனர்.

திரௌபதியும், வீமன் முதலான பாண்டவர்களும் இவ்வாறு சபதம் செய்த பொழுது பூமி கிடுகிடுவென நடுங்கிப் பெரிய பூகம்பமே நிகழ்ந்தது. அதனைக் கண்டுப் பயந்துபோன திருதராட்டிரன், துரோபதையிடம் துரியோதனன் செய்த பிழைகள் அனைத்தையும் பொறுக்க வேண்டுமென மன்றாடி சூதில் பாண்டவர்கள் தோற்ற பொருள்கள் அனைத்தையும் தந்து விடத்தான் இசை வதாகவும் கூறி கெஞ்சினான். ஆனால் துரியோதனனும் சகுனியும் அதற்கு இசையாமல் பனிரெண்டு ஆண்டுக்காலம்

வனவாசமும் ஓராண்டுக் கால அஞ்ஞாத வாசமும் பாண்ட வர்கள் போய் திரும்பி வந்தால், அவர்களுடைய நாட்டின் உரிமையை வழங்குவதாக கூறினர்.

''அரிவையோ டகன்று நீவீர் ஐவரும் அடவி எய்திச்
சுரர்தினம் ஈராறு அங்கண் துன்னுதிர் மன்னு நாட்டின்
ஒருவரும் அறியா வண்ணம் ஒரு தினம் உறைதிருங்கள்
பெருவிறல் அரசும் வாழ்வும் பின்னுறப்
பெறுதிரென்றான்''
(சூது போர்ச் சருக்கம் 276)

இவ்வாறான உறுதிமொழியைத் துரியோதனன் உடன் பட்டுக் கூறிய பிறகு, தருமர் தன்னுடைய புண்ணியத்தை யெல்லாம் பணயம்வைத்து மீண்டும் சூதாடித் தம்மையும் துரோபதையையும், அச்சூதில் வென்று மீட்டுக் ; கொண்டு கானகம் போனார். பதின் மூன்றாண்டுக் காலம் பாண்ட வர்கள் கடும் துன்பங்களுக்கு ஆளானார்கள். காட்டிலே பாண்டவர்கள் வாழ்ந்த போதும் கூடத் துரியோதனன் அவர்களை வஞ்சகமாய்க் கொன்று விட பல முறை சூழ்ச்சிகளைச் செய்து தோற்றுப்போனான். இறுதியாக ஓராண்டுக்காலக் கரந்துறை வாழ்வின் போதும் பாண்ட வர்களை எப்படியேனும் கண்டு பிடித்து அவர்களை மீண்டும் கானகத்திற்கே அனுப்பிவிட வேண்டும் என்ற வஞ்சக எண்ணத்தால் அவன் செய்த முயற்சிகள் பலவும் கூட தோற்றே போயின.

இப்படிப் பாண்டவர்கள் வாழ்வதே கூடாது என்ற பகையெண்ணம் கொண்டவனாகிய துரியோதனன் எப் படிச் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டுத் தன்னுடைய உறுதி மொழிக் கிணங்க, பாண்டவர்களுக்கு உரிமை உடைய அரசாட்சியை வழங்குவான்? தருமர் பொறுமையின் சின்ன மாய் உலூக முனிவரைத் துரியோதனனிடம் தூதனுப்பிப் பார்த்தார். போர் என்ற ஒன்று நடக்குமானால், அதனால் விளையக் கூடிய பாதகங்கள் கொடியனவாக இருக்குமே

என்று எண்ணியும், தமக்கு இன்னல்கள் பல செய்த போதும் துரியோதனாதியரை தம்பியராக மதித்துப் போர் வேண்டாம் என்று தருமர் விரும்பினார். "ஐந்து ஊர் கொடுத்தால் போதும், ஐந்து தெரு கொடுத்தால் போதும், அதுவும் கொடுக்க மனம் இல்லாவிட்டால் ஐந்து வீடுகள் கொடுத்தாலும் போதும்" என்று கண்ண பெருமானையே தூதனுப்பிக் கேட்டுப் பார்த்த தருமனுக்கு கிடைத்த பதில் "ஊசிமுனை இடம் என்னும் ஈயமாட்டேன்" என்பதுதான்.

இப்படி இருசாராரில் ஒரு சாரார் எவ்வளவு தான் விட்டுக் கொடுத்துப் போனாலும், மறு சாரார் கொஞ்சமும் இணங்கி வரவில்லையானால் ஈசனே விரும்பினாலும் எப்படி போரை தடுத்து நிறுத்தி விட முடியும்? பாஞ்சாலி அவிழ்ந்த கூந்தலுடன் பதின்மூன்றாண்டுக் காலமாக அல்லல்பட்டுக் கொண்டிருந்தாள். வீமனும் கைகளால் நீர் பருகிக் காலம் பதின்மூன்றாண்டுகள் ஓடிப் போய் விட்டன. "மூளை, வாயின் வழி வெளியே வருமாறு பாடம் புகட்டா விட்டால், துரியோதனன் திருந்தமாட்டான்" என்பது அனைவருக்கும் தெள்ளத் தெளிவாகத் தெரிந்து விட்டது. ஆதலால் தான் துரியோதனனின் கொடிய பாவங்கள் அனைத்திற்கும் முடிவுகட்ட போர் நடந்தே தீரவேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விட்டது.

குருசேத்திரத்தை நோக்கி இரு தரப்புப்படைகளும் வந்து குவிகின்றன. பாஞ்சாலியின் தந்தையாகிய துருபதராசன் தன்னுடைய மருகர்களாகிய பாண்டவர்களுக்குத் துணையாக ரத கஜ துரகபதாதிகளுடன் வந்து சேர்கிறான். துரோணரைக் கொல்வதற்காகவே அவர் சிவபெருமானை நோக்கித் தவம் செய்து பெற்றெடுத்த மைந்தன் திட்டதுய்மனும், வீடுமரைக் கொல்வதற்காகவே பிறந்தவனாகிய மற்றொரு மகன் சிகண்டியும் துருபதராசனுடன் வந்து சேர்கிறான். துருபதராசனுடன் அவனுடைய உறவினர்களான மன்னர்கள், உத்தமோசா, யுதாமந்யு

ஆகியோரும் வந்தனர். பாண்டவர்கள் தங்கள் ஓராண்டுக் காலக் கரந்துரை வாழ்வின் போது தங்கியிருந்த விராட தேசத்து மன்னன் தம் மக்களாகிய சுவேதன் மற்றும் உத்தர குமாரனுடனும் வந்து சேர்ந்தனர். இன்னும் பாண்டவர் களுக்கு உதவியாக நம்முடைய தமிழகத்தை ஆண்டிருந்த சேர, சோழ, பாண்டிய மூவேந்தர்களும் கூடப் போய்ப் போரில் கலந்து கொண்டிருக்கின்றனர்.

இவர்களே அல்லாமல் அரக்கித் தந்தருள் கடோத் கஜக் காளையும் தன்னுடைய வீரத்தைக் காட்ட வந்து சேருகின்றான். அர்ச்சுனனின் மைந்தன் ''வீர அபிமன்யு'' என்று பாரோர் புகழும் பராக்கிரமனும் வந்து சேருகிறான். இவர்களுடன் அர்ச்சுனன் தன்னுடைய தீர்த்தயாத் திரையின் போது நாகக் கன்னியை மணந்து பெற்றெடுத்த இரவான் என்ற பலவானும் வந்து சேருகின்றான். பாஞ் சாலி ஈன்றெடுத்த உபபாண்டவர்கள் விந்தன், சோமன், வீர கீர்த்தி, புண்டலன், செயசேனன் ஆகிய ஐவரும் அன்னையின் கூந்தல்முடிக்க அடல் போராற்ற வந்து சேரு கின்றார்கள்.

இவ்வாறு பாண்டவர்களின் பக்கமாக தருமத்தைக் காக்கத் திரண்ட சேனையின் அளவு மொத்தம் ஏழு அக்கு ரோணிகள் ஆகும். ஒரு அக்குரோணி என்பது யானைகள் 21,870 தேர்கள்21870, குதிரைகள் 65610 மற்றும் காலாள் வீரர்கள் 100930 அடங்கியதாகும். பாண்டவர் பக்கம் இவ்வாறு திரண்ட மொத்த சேனையின் அளவு ஏழு அக்குரோணிகள், ஆனால் இவர்களை விட நான்கு அக்குரோணிகள் அதிகமாகவே மொத்தம் பதினோரு அக்குரோணி சேனைகள் துரியோதனனின் பக்கம் திரண் டிருந்தன. கொடியவனாகிய துரியோதனன், சேனை திரட்டுவதிலும் கூட அநியாயமாகவே நடந்து கொண் டான். ''தனக்கு ஆதரவாகப் படைகளுடன் வராத மன்னர் களுக்கு வாழ்வு கிடையாது' என்பதாகமிரட்டி ஓலை

யனுப்பியே படையைத் திரட்டி விட்டான். பாண்டவர்களின் இளைய தாயும் நகுல, சகாதேவர்களை ஈன்றவளுமாகிய மாத்ரிதேவியுடன் பிறந்தவனாகிய மத்திர நாட்டு மன்னன் சல்லியன் தன் மருகர்களுக்குப் போரில் சகாயம் செய்ய, படைகளுடன் புறப்பட்டு உபப்பிலாவியம் நோக்கிப் புறப்பட்டு வந்து கொண்டிருந்தான்.

சல்லியன் மாபெரும் வீரன். கண்ணபெருமானுக்கு நிகராகத் தேரும் செலுத்த வல்லவன். அவனைத்தன் பக்கமாகப் போரில் சேர்த்துக் கொள்ள வஞ்சகன் துரியோதனன், அவன் வரும் வழியில், தருமர் அமைத்தாற் போல சத்திரங்களை அமைத்து அதில் சல்லியனும் அவன் படைவீரர்களும் தங்கி உண்டு இளைப்பாறிய வேளையில், ''நானே உணவளித்தவன், எனக்கே உதவியாக வேண்டும்'' என்று கேட்டு வஞ்சகமாகச் சல்லியனின் செஞ்சோற்று நன்றிக் கடனைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு விடுகிறான். காலமறிந்து கொடுக்கப்பட்ட ஒரு வேளைச் சோற்றுக்காகவும் செஞ்சோற்றுக் கடன் ஆற்றும் நன்றியுணர்வு மிகுந்திருந்தது அக்காலத்து மன்னர்களுக்கு. இவ்வாறு பாண்டவர்களின் தாய் மாமனாகிய சல்லியனையும் தன்பக்கமாக்கிக் கொண்டான் வஞ்சகத்துரியோதனன். அது மட்டுமல்ல, கண்ணபெருமான் பாண்டவர் சகாயன் என்பது பாருக்கே நன்றாகத் தெரிந்திருந்த போதும் அவரையுமே தன் பக்கமாக வளைத்துப் போடத் துரியோதனன் சூழ்ச்சி செய்தான். அவனுடைய சூழ்ச்சியைக் கண்ணபெருமான் தம்முடைய சூழ்ச்சியால் முறியடித்து விட்டதையும் நாம் பாரதத்தில் பார்க்கிறோம். கண்ணபெருமானின் துவாரகாபுரிக்குச் சென்று தனக்கு அவர் படைத்துணையாக வேண்டும் என்று முதலில் கேட்டு விட்டால், முதலில் உதவி கேட்டவர்க்கே உதவுதல் வேண்டும் என்ற தரும நியாயத்தின்படி கண்ணன் தனக்கே உதவ வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாவான் எனக் கருதிய துரியோதனன் துவாரகாபுரிக்குச் சென்றான்.

"துரியோதனன் வந்துவிட்டான், அவன் போரில் என்னுடைய சகாயம் கோரவே வந்திருக்கிறான். 'முதலில் நான்தானே வந்து உதவி கேட்கிறேன். அதை மறுக்காமல் தரவேண்டும்' என்று துரியோதனன் வற்புறுத்தவும் கூடும், அதற்கு வழியில்லாமல் அர்ச்சுனனையும் வரவழைத்துவிட வேண்டும்" என்பதாகக் கண்ணபெருமான் திருவருள் புரிந்து உலூக முனிவரிடம் அர்ச்சுனனுக்குத் தகவலும் கூறி அனுப்புகிறார். ஆனால் அர்ச்சுனன் அத்தகவலை அறிந்து துவாரகாவுக்கு வருவதற்கு முன்பே துரியோதனன் துவாரகாபுரிக்கு கண்ணபெருமானைக்காண வந்து விட்டான். அர்ச்சுனன் வந்து சேருவதற்கு முன் துரியோதனனை வரவேற்றுப் பேச கண்ணபெருமானுக்கு விருப்பமில்லை. ஆதலால் அவரே வாயிற் காவலனை அழைத்து "என்னைக் காணத் துரியோதனன், அர்ச்சுனன் இருவருமே வருவார்கள். அவர்களின் வருகையை எனக்குத் தெரிவிக்காமலே என்னுடைய பள்ளியறைக்குள் அனுப்பிவை" என்பதாக ஆணையிட்டுப் பள்ளியறைக்குச் சென்று அறிதுயில் கொள்ளலானார்.

துவாரகாபுரியின் அரண்மனை மாடங்களில் பறந்து கொண்டிருந்த கொடிகள் "துரியோதனா, நீ வந்து முதலில் எங்கள் கண்ணபெருமானின் துணையை வேண்டினாலும், எங்கள் பரந்தாமன் பாண்டவர் தங்கட்கல்லால் படைத் துணையாக மாட்டான்" என்று கூறுவதைப்போல் காற்றில் அசைந்து கொண்டிருந்தன. அவற்றின் கருத்தை அறிந்து கொள்ள மாட்டதவனாகிய துரியோதனன்நேராகத் துவாரகா புரிக்குள் நுழைந்து காவலர் எவரின் தடையும் இல்லாமலே கண்ணபெருமானின் பள்ளியறை வரையிலும் சென்று அங்கே துயின்று கொண்டிருந்த கண்ணனைப் பார்த்தான்.

கண்ணன் பள்ளிக் கொண்டிருந்த மஞ்சத்தின் தலை மாட்டில் அழகிய வேலைப்பாடமைந்த ஆசனம் ஒன்று

போடப்பட்டிருந்தது. மாமன்னன் என்ற மமதைகொண்டு விளங்கியவனாகிய துரியோதனன், கண்ணபெருமானின் தலைமாட்டிருந்த ஆசனத்தில் நேராகப் போய் அமர்ந்து கொண்டுவிட்டான். இதனை அறிதுயிலில் இருந்தபடியே அறிந்து கொண்டவராகிய கண்ணபெருமானும் ''அர்ச்சுனன் இன்னும் வரவில்லையே'' என்பதாகக் நினைத்துக் கொண்டிருந்த அளவில் அர்ச்சுனனும், கண்ணன் ஏவலின் படியே விரைந்து வந்து, தானும் எந்த ஒரு தடையு மின்றிக் கண்ணபெருமானின் கால்மாட்டில் வந்துநின்றான்.

அர்ச்சுனன் வந்து விட்டதைத் தெரிந்துகொண்டு விட்ட கண்ணபெருமான் அதன் பிறகே கண் மலர்ந்தார். அவருடைய கண்களுக்குக் கால்மாட்டில் வந்து நின்ற அர்ச்சுனனே முதலில் தென்பட்டான். ''வா, வா, அர்ச்சுனா, எப்பொழுது வந்தாய்? ஏன் என்னை எழுப்ப வில்லை?'' என்பதாக அன்பு மொழிகள் கூறி அர்ச்சுனனை அணைத்துத் தன் கட்டிலின் மேலேயே அமர வைத்துக் கொண்டார் கண்ணபெருமான். அர்ச்சுனனே கண்ணபெருமானுக்குத் தலை மாட்டமர்ந்திருந்த துரியோ தனனைக் காட்டுகின்றான். துரியோதனன் வந்தமர்ந் திருப்பதை அப்பொழுதே தாம் பார்த்ததைப் போல் நடித்தார் கண்ணபெருமான். ''அடடா, இருவரும் வந்திருக்கிறீர்களே! என்ன காரணமாக வருகை புரிந் துள்ளீர்களோ!?'' என்று பொதுவாகக் கண்ணபெருமான் வினவச்'' ''செருவில் நீ எமக்கு வெம்போர்செய் துணை யாக வேண்டும்'' என்று இருவருமே கண்ணபெருமானை ஒரு சேரக் கேட்டுக் கொள்கிறார்கள்.

முன்னதாக வந்து கண்ணனின் துணையை வேண்டிப் பாண்டவர்களை ஏய்க்க வேண்டும் என்று வஞ்சம் செய்தான் துரியோதனன். தூங்குவதைப் போல் நன்றாகவே நடித்த கண்ணபெருமானும், அர்ச்சுனனையே தான் முதலில் பார்த்ததாக கூறிமுதலில்தன் விழிக்கு

இலக்கான அர்ச்சுனனுக்கே தாம் துணையாகப் போவதாகக் கூறியருளினார்.

''உற்றமர் உதவி செய்வான் உதிட்டிரன் தனக்கு முன்னே
சொற்றனன் ஆங்கண், ஈங்குந்துயிலுண் பொழுதுமின்று
விற்றிறல் விசயன் முந்த விழிக்கிலக்கானான் என்று
பற்றறத் துணிந்து சொன்னான் பாண்டவர் சகாயனான்',

(வாசுதேவனைப் படைத்துணையழைத்த சருக்கம் 13)

முன்னமே போரில் தாம் உதவி செய்வதாகத் தருமருக்கு வாக்களித்து விட்டபடியாலும், அர்ச்சுனனே தன் கண் காண, முதலில் தனக்குத் தென்பட்டபடியாலும், பாண்டர்வர்க்கே தாம் துணை செய்யப் போவதாக கண்ணபெருமான் தெரிவித்து துரியோதனனின்சூழ்ச்சியைத் தம் சூழ்ச்சியால் வென்ற வரலாற்றையும் இவ்வாறு மகாபாரதத்தில் காண முடிகிறது.

ஆனால், வஞ்சகன் துரியோதனன் தன் எண்ணம் இவ்வாறு முடியாமல் போய்விட்ட வேளையில் அதைத் தாங்கி ஏற்றுக்கொண்டானா என்றால் இல்லை. ''பாண்டவர்க்குத் துணையாகிவிட இசைந்தால் தான் என்ன? எனக்கு வேறொரு வாக்கு கொடு. போர்க்களத்தில் ஆயுதங்கள் எதையும் தாங்க மாட்டேன் என்ற வாக்கினை மட்டும் எனக்கு கொடு' என்று கேட்கலுற்றான் துரியோதனன். அதற்கும் கண்ணபெருமான் இசைந்து ''சரி! நீ வேண்டியபடியே எந்த ஒரு ஆயுதத்தையும் ஏற்க மாட்டேன்! என்பதாகத் துரியோதனனுக்கு வாக்கும் தந்துவிடுகிறார். ''ஆயுதம் ஏற்காத என்னால் என்ன பயன் இருக்க முடியும் அர்ச்சுனா!'' என்று அர்ச்சுனனை நோக்கிக் கண்ணபெருமான் வினவ, அர்ச்சுனனும் கண்ண பெருமானைப் பணிந்து

''செருமலி யாழியங்கைச் செழுஞ்சுடர் நின்றென் தேரிற்
பொருபரி தூண்டின் இந்தப் பூதலத் தரசர்ஒன் றோ
வெருவருமியக்கர் விண்ணோர் விஞ்சையர்
எனினும் என்கை
வரிசிலை குழைய வாங்கி மணித் தலைதுமிப்பன்''
(வாசுதேவனைப் படைத்துணையழைத்த சருக்கம் 55)

என்று கூறக் காண்கிறோம். ''ஆயுதங்கள் ஏந்திப்போர் செய்ய வேண்டாம், ஆபத்பாந்தவா! அடியேன் தேரில் அமர்ந்து தேரைச் செலுத்தினாலே போதும், நீ பக்கம் இருந்தால், பரிகளைச் செலுத்தினால் பூதலத்தரசர்களை மட்டுமல்ல, விண்ணவர், விஞ்சையர், இயக்கர், யாவரே வந்தாலும் நின் திருவருளால் வெல்வேன்'' என்று பார்த்தன் கூற பார்த்தனுக்குப் பாரதப் போரில் சாரதியாக இசைகிறார் கண்ணபெருமான்.

பாரதப் போரில் ஆயுதம் தாங்காமல் பார்த்தனுக்குச் சாரதியாக இசைந்த கண்ணபெருமான், துரியோதனனுக்குத் தன்னுடைய யாதவப்படை முழுவதையும், தம் சகோதரன் ஆன பலராமனையும் கூட இசைந்துப் படைத் துணையாகத் தர ஒப்புக் கொண்டுவிடுகிறார். பாண்டவர்களுக்குக் கண்ணன் ஒருவர் மட்டுமே போரில் துணை; பலராமன் உள்ளிட்ட யாதவப்படை முழுவதும் துரியோதனனுக்குத் துணை. அப்படியானால் அவன் பக்கம் பதினொரு அக்குரோணி சேனைகள் திரளுவதில் விந்தை என்ன இருக்க முடியும்? பதினொரு அக்குரோணி சேனைகள்தான் துரியோதனன் பக்கம் திரளட்டுமே! கண்ணபெருமான் ஒருவர் துணை நிற்க பாண்டவர் ஐவரும் சேர்ந்து தனியாகவே பொருதாலும், சத்தியத்தைக் காக்க அவர்களால் இயலும். காரணம், ஆக்கவும், அழிக்கவும் வல்ல இறைவனான கண்ணபெருமான் ஒருவரின் துணைதான் முக்கியமே தவிர, அக்குரோணி சேனைகள் முக்கியம் அல்ல. கருவிகள் ஏதுமின்றியே காரியத்தை நடத்தவல்லவர் இறைவனாகிய கண்ணபெரு

மான். அவர் போரில் எந்தப் படைக்கலத்தையும் ஏந்தமாட்டேன் என்று துரியோதனனுக்கு வாக்கு கொடுத்தமைக்கும், இறைவனின் ஆற்றலை விளக்கும் இந்த அற்புதத் தத்துவத்தைக் காட்டுவதற்கே ஆகும். மேலும் பெருகிக் கிடக்கும் அதர்ம உயிர்களின் பாரம் தாங்காத பூமியின் பாரத்தை இப்போரின் மூலமாகக் குறைப்பதே கண்ணபெருமானின் நோக்கமும் ஆவதை முன்னமே சகாதேவன்

**''நீ பாரத அமரில் யாவரையும் நீறாக்கிப்**
**பூபாரந் தீர்க்கப் புரிந்தாய் புயல்வண்ணா''**

என்று கூறியிருப்பதையும் நாம் அறிவோம். ஆகவே தான் தன்னுடைய சேனைகளையும்கூட துரியோதனன் வேண்டாமலே கண்ணபெருமான் இவனுக்கு துணையாக்குவதைக் காணுகின்றோம்.

இவ்வாறு குருசேத்திரப் போர்க்களத்தில் பாண்டவர்களின் ஏழு அக்குரோணி சேனைகள் ஒருபுறமும், துரியோதனனின் பதினோரு அக்குரோணி சேனைகள் மறுபுறமுமாகத் திரண்டுவிடுகின்றன. போரில் வெற்றி பெற வேண்டுமானால், போர்த் தெய்வமாகிய காளிக்கு உத்தம குணங்கள் நிறைந்த ஓர் ஆடவனை நல்ல நேரம் பார்த்துப் பலிகொடுத்தாக வேண்டும். களப்பலி கொடுத்ததற்குத் தகுதி வாய்ந்த ஆடவன் யார்? களப்பலி கொடுப்பதற்குப் பொருத்தமான நேரம் எது?'' என வீடுமரை வினவுகின்றான் துரியோதனன்.

'களப்பலிக்குப் பொருத்தமான உத்தம குணம் நிறைந்த ஆடவன், அர்ச்சுனன் மகனாகிய இரவானே. அவனை அடைந்து எங்களுக்குக் களப்பலியாக இசையவேண்டும் என்று கேட்டுக் கொண்டால், பகைவன் எனப் பாராது அவனும்பலியாக இசைவான். களப்பலிக்கு உரிய நேரத்தைக் கணித்துத் தர வல்லவன் தருமனின் தம்பியாகிய சகாதேவன் ஒருவனே. அவனைப் போய் நேரம் கணித்துத் தரச்

சொன்னால், அவனும் பகைவன் எனப் பாராது கணித்துத் தருவான்.'' என்று வீடுமர் துரியோதனனுக்கு அறிவுறுத்த, துரியோதனனும் இயந்திரவிமானத்தில்ஏறிப் பாண்டவர்கள் தங்கியிருக்கும் உபப்பிலாவியம் உடனே போய்ச் சேருகின்றான். துரியோதனனின் விருப்பப்படி களப்பலிக்குச் சகாதேவன் முகூர்த்தம் நிச்சயித்துக் கொடுத்தானா? அர்ச்சுனனின் மகனாகிய வீர அரவான் துரியோதனனுக்குக் களப்பலியாக உடன்பட்டானா? முள்ளை முள்ளால் களைய வல்ல ஆதிமூலமான கண்ணபெருமான் துரியோதனின் இந்த சூழ்ச்சிகளையும் வெல்ல மாற்று சூழ்ச்சி ள் ஏதேனும் புரிந்தாரா? என்பனவற்றையெல்லாம் இனி அடுத்த இதழில் விரிவாகக் காண்போம்.



# 8

வீடுமர், துரியோதனனிடம் களப்பலிக்குரிய நேரத்தைக் கணித்துத் தரவல்லவன் சகாதேவனே, களப்பலியாவதற்குப் பொருத்தம் மிகுந்தவன் அர்ச்சுனன் மகன் இராவானே என்பதை எடுத்துக் கூறியவுடன், துரியோதனன் உடனே அன்னப் பறவையின் வடிவில் செய்யப்பட்ட இயந்திர வானம் ஒன்றில் பறந்து, உபப்பிலாவியம் வந்து அடைகிறான். சகாதேவன் இருக்கும் இடத்திற்குத் துரியோதனன் செல்கிறான். வாஞ்சையுடன் சகாதேவனும் துரியோதனனை வரவேற்று, ஆசனத்தில் அமர வைத்து ''அண்ணா வந்தனம், தாங்கள் என்ன காரணம் கருதி என்னைத் தேடி வந்தீர்கள் என்பதைத் தெரிவிக்க வேண்டுகிறேன்'' என்று விநயமாக வினவுகிறான். துரியோதனனும் ''போரில் யான் வெல்வதற்குக் களப்பலி கொடுப்பதற்கான காலத்தைக் கணித்துத் தருவாயாக'' என்று கேட்டுக் கொள்கிறான்.

சகாதேவன், துரியோதனனை வரவேற்காமலே அலட்சியப் படுத்தி விரட்டியனுப்பியிருக்கலாம். ''போர்'' என்பது முடிவாகி விட்டதற்குப் பிறகு பகைவனான துரியோதனனுக்கு அவன் மரியாதை கொடுத்திருக்க வேண்டியதில்லை. ஆனால், பகைவராயினும் விடு தேடி வந்தவரை வரவேற்று உபசரிக்கும் நல்ல பண்பாடு தவறாதவனாகிய சகாதேவன், துரியோதனனை வரவேற்று உபசரிக்கும் உயர்குணம் அனைவரும் போற்றிக் கொள்ள வேண்டிய ஒன்றாகும். அதே போல் பாண்டவர்களை வெல்வதற்குக் களப்பலி கொடுப்பதற்கானகாலத்தைக் கணித்துத் தரத் துரியோதனன் கேட்ட போதும், ''கணித்துத்தர முடியாது; எங்கள் கண்களை நாங்களே குத்திக் கொள்வதா? எங்கள் மார்பிலே நாங்களே வேலைப்பாய்ச்சிக் கொள்வதா? துரியோதனா, துட்டன்

ஆகிய நீ எங்களுக்கு நியாயமாக சேரவேண்டிய நாட்டுரிமையை மறுத்து, எங்களுடனே அநியாயமாக போருக்குத் துணிந்து விட்டதற்குப் பிறகு, உனக்கா களப்பலிக்குக் காலத்தைக் கணித்துத் தருவது? இது நடவாத காரியம்'' என்று மறுத்தும் ஏசியிருக்க முடியும். ஆனால் அவ்வாறு செய்கிறானா சகாதேவன் என்றால் இல்லை. வஞ்சகத் துரியோதனனை வஞ்சகத்தினாலேயே வெல்ல சதிசெய்தும் சகாதேவன் தீமையான நேரத்தைக் கணித்துத் தந்து துரியோதனனை ஏமாற்றியிருக்கலாம். அப்படியும் செய்கிறானா சகாதேவன் என்றால் செய்யவில்லை.

''உன்னொருவனால்தானே நாங்கள் பலப்பலகொடுமைகளுக்காளானோம். எங்களை வெல்வதற்கா காலம் கணித்துத் தரக் கேட்கிறாய்? காலமும் நேரமும் பார்க்காமலே, இங்கேயே உன்னைக் கொன்று போருக்கே தேவையின்றிச்செய்துவிடுகிறேன்பார்'' என்று கூறியும் சகாதேவன் சீறிப் பாய்ந்திருக்கலாம். அப்படியாவது செய்கிறானா என்றால் அதுவும் செய்யவில்லை. பகைவனான துரியோதனனைப் பக்கம் அமரவைத்துப் பஞ்சாங்கத்தைப் புரட்டி ''நடைபெறும் மார்கழி மாதத்தில், சூரியனும் சந்திரனும் கூடும் அமாவாசை நாள் நள்ளிரவில் களப்பலி கொடுத்தால் உங்கள் வெற்றி நிச்சயம்'' என்று சகாதேவன் காலத்தைக் கணித்துக் கொடுக்கிறான் என்றால், அவனுடைய நேர்மையை நாம் எப்படி பாராட்டுவது? தீர்ப்பளிக்க வேண்டிய நீதிபதியும், வைத்தியம் பார்க்க வேண்டிய மருத்துவரும், மதிப்பெண் தரவேண்டிய ஆசிரியரும், நல்ல நேரம் கணித்துத் தரவேண்டிய ஜோதிடரும் எதிரிகளுக்கும் கூட நியாயமானதையே செய்ய வேண்டும் என்ற தொழில் தருமத்தைச் சரித்திரத்தில் முதல் முதலாய் வற்புறுத்துபவனாகச் சகாதேவனே விளங்குவதைக் காணுகின்றோம்.

சகாதேவன் இப்படி ''இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு'' என்ற

நெறிப்படியும், தொழில் தருமத்தின் படியும் முகூர்த்தம் குறித்துக் கொடுக்க, தான் வந்த வேலையில் ஒரு பாதி முடிந்தாக மகிழ்ச்சி கொள்கிறான் துரியோதனன். அர்ச்சுனன் மகன்இராவானுக்கும் தன்னுடையவருகையைத் தெரிவித்து துரியோதனன் ஆள்விட, அவனும் பண்புக்கு இலக்கணம் வகுத்த பாண்டவர் வழி வந்தவன் ஆதலால் துரியோதனனை வந்து வணங்கி, ''தந்தையே, என்னை அழைத்தமைக்கு யாது காரணம், கூறுங்கள்'' என்று கூறி வணங்கி நிற்கின்றான். ''நீ எங்களுக்காக களப்பலியாக வேண்டும்'' என்று நாகூசாமல் தான் வந்த காரணத்தைத் தெரிவிக்கின்றான் துரியோதனன். ''எங்களில் உங்களைப் போல் மறுத்து இரண்டு உரைப்பார் இல்லை கண்டாய்'' என்பதாக இராவான் துரியோதனனின் நேர்மையின்மையைக் குத்திக்காட்டி ''என்னைக் களப்பலி கொடுப்பதற்கு உடன்படுகிறேன்'' என்பதாகக் கூறி தன்னைப் பலிகொடுக்கச் சம்மதிக்கிறான். இந்திரன் கேட்க கர்ணன் கவச குண்டலங்களைக் கொடுத்துப் புகழ் கொண்டான். துரியோதனன் கேட்க இராவானோ தன்னையே தான் கொடுக்கச் சம்மதிக்கிறான் என்றால் ''ஆயிரம் கர்ணன்கள் ஒரு இராவானுக்கு இணையாவரோ'' என ஆன்றோர்கள் போற்றும் வண்ணம் இராவான் புகழின் இமயத்தைத் தொட்டுவிடக் காணுகின்றோம்.

இந்த இராவான் மகாபாரதத்தில் ஒரு மறக்கமுடியாத பாத்திரம்.

கடோற்கஜனாலும் வியக்கப்பட்ட மாபெரும் வீரன் தான் இராவான். இவனுடைய வீரத்தை வீடுமரும் கூடப் பாராட்டி,

**''ஒன்றநம் படைகள் எல்லாம் ஒருபகற்பொழு**
**திற் கொல்வான்**
**நின்றனன் இராவான் என்பான் நீயவன்தன்னை**
**வேண்டிற்**

கொன்றெனைப் பலிக்கொள் என்று கூறும்
அக்குமரற் கொன்றா
வென்றுனக் கரசும் வாழ்வும் எய்தலாம்''

—முகூர்த்த கேள்விச் சருக்கம் :

என்று இராவானின் வீரத்தையும், அருங்குணத்தையு ஒருங்கே பாராட்டி உரைப்பதைக் காணுகின்றோம் இப்படிப்பட்ட மாவீரன் இராவான் இரந்தவனுக் இல்லை என்றுரைப்பது நற்குடிப் பிறந்தார் குணமாகா என்பதனால், துரியோதனனுக்குக் களப்பலியாக உடன்ப வதை மேலே கண்டோம்.

சகாதேவன் காலம் கணித்துக் கொடுக்க, ''உன்னை போல் நாங்கள் பேச்சு மாறுகிறவர்கள் இல்லை'' என் குத்திக் காட்டினாலும், இராவானும் களப்பலிக்கு உட பட்டுவிட துரியோதனன் மகிழ்ச்சியோடு மீண்டும் இயந்தி விமானம் ஏறி அத்தினாபுரம் போய்ச் சேர்ந்து விடுகின்றா இவற்றையெல்லாம் தெரிந்து கொள்கிறார் கண்ண பெருமான். சகாதேவன் குறித்துக் கொடுத்த முகூர்த்த தில், இராவானைத் துரியோதனன் களப்பலி கொடுத் விட்டால், வெற்றி நிச்சயம் துரியோதனனுக்கே என்ப தெரிந்த பிறகும், கண்ணபெருமான் எப்படி அதை பார்த்துக் கொண்டிருக்க முடியும்? துரியோதனனி சூழ்ச்சியை மாற்றவல்ல சூழ்ச்சியைப் புரிவதற்கும் வல்லவ அவர் ஒருவரேயல்லவா? ஆகவே, தான் பௌர்ணமிக்கு பின் பதினைந்தாம் நாள் வருகின்ற அமாவாசையை பதினான்காம் நாளே வருமாறு மாற்றியருளுகிறா கண்ணபெருமான். ஆக்கவும் அழிக்கவும் வல்ல அவரா முடியாதது ஏதும் இல்லை என்பதைத்தானே அவருடை பெருமையைப் பாராட்டும் புராணங்கள் கூறுகின்றன.

மனிதருக்குத் தன்னைக் கொல்ல வலிமை ஏது என் மமதையினால், இராவணன் இறைவனை வேண்டி வ

பெற்ற போது மனிதரால் தனக்கு சாவு உண்டாகாதிருக்க வரம் வேண்டாத காரணத்தால், இராமனாக மானிட அவதாரம் எடுத்துவதைத்தவரல்லவா அந்தப்பரம்பொருள். இரவிலும், பகலிலும் தனக்கு மரணம் நேரக்கூடாதெனவும், வேறு பல விதங்களிலும் தனக்கு மரணம் நேரக்கூடாதெனவும், இரணியன் வரம் வேண்டிப் பெற அவனுக்கு அளிக்கப்பட்ட வரத்தின்படியே இரவும் பகலுமற்ற அந்திப் பொழுதில், நிலமும் நீருமற்ற இடமாகிய தம்மடியில் வைத்து, எந்த ஆயுதங்களும் ஏந்தாமல் தம் கையையே ஆயுதமாகக் கொண்டு, மனிதனும் மிருகமும் அல்லாத நரசிம்மமாகத்தோன்றி இரணியனை வதைத்தவர் அல்லவா அந்தப் பரம்பொருள் அவருக்கா அற்ப துரியோதனனின் சூழ்ச்சியை மாற்ற அமாவாசையை மாற்றத்தெரியாது.

பன்னீராயிரம் முனிவர்களை வரவழைத்து பௌர்ணமிக்குப் பின் வரும் பதின்நான்காம் நாளாகிய சதுர்த்தசியையே அமாவாசையாகக் கொண்டு, கொண்டாட வேண்டும் என்கிறார். முனிவர்களும் அவ்வாறே ''தங்கள் கட்டளைப்படியே ஆகட்டும்'' என சதுர்த்தசியை அமாவாசையாகக் கொண்டாடுகின்றனர். சதுர்த்தசி எப்படி அமாவாசையாகும் என்பது சந்திர சூரியர்களுக்கே விளங்கவில்லை. இருவரும் கண்ணபெருமானையே கேட்டுச்சந்தேகத்தைத் தெரிந்து கொள்வோம். என்பதாக எண்ணி வருகிறார்கள்.

அருகருகே ஆசனம் இட்டு, அவர்களை அமரவைக்கும் கண்ணபெருமானும், ''உங்களுக்கு என்ன ஐயமோ கேளுங்கள்'' என, அவர்கள் ''இன்று சதுர்த்தசி தானே! இன்றைக்கு எப்படி அமாவாசையைக் கொண்டாட முடியும்?'' என வினவுகிறார்கள். அதற்குக் கண்ணபெருமானும் தமக்கொன்றுமே தெரியாதவரைப் போல், ''அமாவாசை என்றால் என்ன?'' என்று கேட்க, இருவரும் ''சந்திரனும் சூரியனும் ஆகிய நாங்கள் இருவரும் கூடும் நாளே அமாவாசை'' என்று பதில் கூறுகிறார்கள்.

கண்ணபெருமானும் நகைத்தபடியே ''நீங்கள் இருவரு கூடும் நாள் அமாவாசை என்றால் இப்பொழுது இருவரு ஒன்றாகக் கூடித்தானே இருக்கிறீர்கள்'' எனக் கூறி, அவ களைச் சுட்டிக்காட்ட ''ஆமாம், நாங்கள் இருவரு கூடித்தான் இருக்கிறோம். இன்று அமாவாசைதான்' என்று அவர்கள் இருவரும் கூடத் தங்கள் இசைவை கண்ணபெருமானுக்குத் தெரிவித்து விடைபெறுகிறார்கள் பாரத காவியத்தைத் தமிழில் பாடியவில்லிப்புத்தூராருக்கு போர் என்றால் பெரு விருப்பம் போலும். கண்ணபெ மானின் தூதினை விரிவுபடப் பாடிச் சென்ற அவர் துரியோதனன் சகாதேவனிடம் முகூர்த்தம் கேட்டதையும் இராவான் களப்பலிக்கு உடன்பட்டதையும், மிக சுருக்கமாகப் பாடியுள்ளார். அவ்வாறே கண்ணபெருமா சதுர்த்தசியை அமாவாசை ஆக்கிய முக்கிய நிகழ்ச்சியினை யும் மிகச் சுருக்கமாகவும், மிக வேகமாகவும் பாடி கொண்டு போகிறார்.

இதோ பாருங்கள், ஒரு பாடலிலேயே எவ்வள வேகமாக நிகழ்ச்சிகளை அவர் விரைந்து சொல்லி செல்கிறார் என்பதை.

''கொடுத்தனன் பலிக்குத் தன்னைக் குமரன்
என்று அறிந்து குன்ற
எடுத்தவன் திதி பன்னான் கினிடை உவா இன்றாகென்
தொடுத்த நூன் முனிவரோடும் சொல்லினன்
சுடர்கள் தம்மி
அடுத்திங்கென்னை யென்ன அன்றது வாய தன்றே''

—களப்பலியிட் சருக்கம் :

இவ்வாறு சதுர்த்தசியை அமாவாசையாக்கி விடு கண்ணபெருமான், பாண்டவர்களின் அவையைக் கூட் இராவான் துரியோதனன் வேண்ட, தன்னை அவனுக்கு களப்பலி கொடுக்க உடன்பட்டு விட்டதையும் பாண்டவ

களுக்கு முன்பாகத் துரியோதனன் களப்பலி கொடுத்து விட்டால், வெற்றி நிச்சயம் அவனுக்கே கிட்டிவிடும் என்பதையும் எடுத்துக் கூறுகிறார்.

''சதுர்த்தசியை நான் அமாவாசையாகக் கொண்டாட வைத்து விட்டதை அறியாதவனாகிய துரியோதனன், மறுநாளே அமாவாசை என்று ஏமாந்திருக்கும் இந்த நேரத்தைப் பயன்படுத்தி களப்பலியை நாம் இன்றே-இன்று நடு இரவு நேரத்திலேயே கொடுத்துவிட வேண்டும். களப் பலி கொடுப்பதற்கு உத்தமகுணங்கள் பொருந்த அமைந் தவர்கள் இருவர் மட்டுமே இந்த அவையில் இருக்கிறார்கள் ஒருவன் இராவான், அவனோ பகைவன் துரியோதனனுக்குக் களப்பலி ஆக உடன்பட்டு விட்டான். களப்பலிக்குப் பொருந்தக் கூடிய உத்தம குணங்கள் வாய்க்கப் பெற்ற இருவரில் மற்றொருவனாகிய என்னை நீங்கள் களப்பலி கொடுக்க உடன்படுகிறேன். உங்கள் வெற்றி ஒன்றே என் இலட்சியம். நான் தயார், இப்பொழுதே புறப்பட்டால் தான் சகாதேவன் குறித்துக்கொடுத்த முகூர்த்தம் தப்பாது. காளிகோயிலுக்குச் சென்று அவள் முன் என்னைப் பலி தருகிறேன். புறப்படுங்கள்'' என்று கண்ணபெருமான் கூறுகிறார்.

ஆனால் பாண்டவர்களோ பரம்பொருளாம் கண்ணபெரு மான் பாதத்திலே விழுந்து, ''ஐயனே, நீர் களப்பலியாதல் கூடாது. எங்களுக்குப் போரிலே தோல்வி நேரினும் நேரட்டும், நாடு கிட்டாமல் போனாலும் போகட்டும். உம்மைப் பலிகொடுக்க இசையமாட்டோம். அப்படிப்பட்ட வாழ்வும் வளமும் எங்களுக்குவேண்டவே வேண்டாம்' என்று தொழுதும் அழுதும் கண்ணபெருமான் மேல் தாம் கொண் டிருக்கும் பெரும் பக்தியைப் புலப்படுத்துகிறார்கள். பாண்ட வர்கள் தம்மேல் கொண்டிருக்கும் பக்தியையும் பேரன்பினை யும் கண்ணபெருமானும் மிக நன்றாகவே அறிவார்.

அவர் தம்மைப் பலிகொடுக்கக் கேட்டுக் கொள்வதற்குக் காரணமே அதைத் தடுக்கும் விதத்தில் இராவான் பாண்டவர்களுக்கு பலியாக முன்வரக் கூடிய எண்ணத்தை உண்டாக்க வேண்டும் என்ற கருத்தினால்தான். அவருடைய எண்ணம் வெல்கிறது. கண்ணபெருமானின் கால்மலர்களில் விழுந்து தம் தந்தைமார்கள் கண்ணீர் சிந்துவதைத் தாங்கிக் கொள்ள முடியாதவனாகிய இராவான் ''என்னை நான் உங்களுக்காக இப்பொழுதே களப்பலி கொடுக்கச் சித்தமாக இருக்கிறேன். கவலையை விடுங்கள். துரியோதனன் வந்து கேட்டபோது இல்லை என்று சொல்வது பண்புள்ளவர்களுக்குத் தகாதே என்று அவனுக்குக் களப்பலியாக நான் உடன் பட்டது உண்மைதான். ஆனால் அவனோ அமாவாசையன்று என்னைக் களப்பலி கொள்வதாகக் கூறிச் சென்றவன் குறித்த நேரம் வந்தும் கூட என்னைப் பலிகொள்ள வராத காரணத்தால், அற்பனுக்காக போக இருந்த உயிர் என்னைப் பெற்ற அப்பன்களுக்காகப் போகட்டும், என்னைப் பலி கொடுத்து வெற்றி கொள்ளுங்கள்'' என்று கேட்டுக் கொள்கிறான்.

உடனே கண்ணபெருமானும் ''என்னினும் பொருத்தமானவன் நீயே. இனி நாம் வெற்றிபெற எந்தத் தடையும் இல்லை'' என்பதாக இசைந்து கூற சகாதேவன் குறித்துக் கொடுத்த சரியான முகூர்த்தத்தில் போர்த் தெய்வமாகிய காளிக்குக் களப்பலியாக இராவானைக் கொடுக்கிறார்கள்.

**''மெய்வரு காளிமுன்னர் மெய்யுறுப் பனைத்தும் வீரன்**
**கொய்தரு நிலையிற் கொய்து கொடுத்தனன்**
**''ஆண்டகை கன்னிமுன்னர் அவயமனைத்தும் ஈந்து**
**காண்டக மலர்ந்த தீபமென முகங்கவின நின்றான்''**

காலில் சிறுமுள் குத்திவிட்டாலும் அதை எடுக்கும் வலி தாங்க முடியாமல் அரற்றுகின்ற பலரை நாம் காணலாம். உயிரை விட்டுவிடுவது என்பது சுலபம். நோகாமல்

உயிரைப் போக்கடித்துக் கொள்ள எத்தனையோ மருந்து களும் வழிமுறைகளும் கூட உள்ளன. காளிதேவியின் முன் நின்று தன்னுடைய உடல் உறுப்புக்களை முகமலர்ச்சி மாறாமல் தானே ஒவ்வொன்றாக அறுத்து யாமளம் என்ற நூலில் முன்னோர்கள் வகுத்துத் தந்த இலக்கணத்தின் படி தருவது என்பது இராவான் என்ற பலவானுக்கு மட்டுமே ஆகும் என்பதைத்தான் மகாபாரதம் காட்டுகிறது.

முகமலர்ச்சி மென்மேலும் கூட களப்பலி கொடுக்க இருவருக்கு மட்டுமே இயலும் என்பதைக் கண்ணபெருமானும் கூறினார் அல்லவா! ''ஒன்று தாம், மற்றொன்று இராவான்'' அத்தகைய இராவானுக்குக் கண்ணபெருமான் மகிழ்ந்து இறவாத வரம் தருகிறார். களப்பலியாக இராவான் அவனைக் கொடுத்துவிட்ட போதும் அவன் இறவாதவனாகவே அவ்வுடலுடனே இருந்து, மகாபாரதப் போரினைக் காணவும், காண்பதோடு போரிலும் பங்கேற்று பகைவர்களைப் பந்தாடவும் அவனுக்கு வரம் அருளுகிறார் கண்ணபெருமான்.

இவ்வாறாக சகாதேவன் குறித்துக் கொடுத்த நல்ல முகூர்த்தத்தில் துரியோதனனுக்கு உடன்பட்ட இராவானையே களப்பலியும் தந்து, துரியோதனனுடைய சூழ்ச்சிகளைத் தம்முடைய சூழ்ச்சியால் முறியடித்து விடுகிறார் கண்ணபெருமான். ''மாபாரதத்துக் கண்ணா! மாயக் கலையின் மன்னா!'' என்று கண்ணபெருமானைச் சும்மாவா பாடிப் போற்றியிருக்கிறார்கள். நம் கவிஞர்கள்

பாரதப்போர் தொடங்கி விடுகிறது. துரியோதனன் படைக்கு வீடுமரே சேனாதிபதி.

> **''பரசுடை இராமன் பாதபங்கயம் சென்னி ஏந்தி**
> **வரிசிலை வேதங்கற்று மற்றவன் தனையும் வென்ற**
> **குரிசிலைக் கங்கை தந்த குரு குலக் கோமான் தன்னை**
> **அரசன்வெஞ் சேனைக்கெல்லாம் அதிபதி ஆக்கினானே'**

—படையெழுச்சிச் சருக்கம்; 24

பாண்டவர் அணிக்கு அஞ்ஞாதவாசத்தின் போது அவர்களைப் புரந்தவனாகிய விராட தேசத்தரசனின் மகன் சுவேதன் சேனாதிபதி. இருபடை சேனாதிபதிகளும் தத்தம் படையினரைப் பாகுபடுத்திப் பிரிப்பதிலும், வியூகம் அமைப்பதிலும் ஈடுபடுகின்றனர்.

வீடுமர் தம் சேனையிலிருக்கும் வீரர்களை அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர் எனப்பாகுபடுத்துகின்றார். அதிரதர் எனப்படுவோர் தாம் ஒரு தேரில் ஏறி நின்று தம் தேர்க்குதிரை, சாரதிகளுக்கு அழிவு வராமல் காத்துக் கொண்டு பிறர் துணை ஒன்றும் வேண்டாமலே பல்லாயிரக் கணக்கான தேர்வீரர்களைப் போரில் வெல்லக்கூடிய மகா வலிமை படைத்தவர்கள் ஆவர். அதிரதரை விடச் சற்றுத் தாழ்ந்தவர் மகாரதர். இவர்கள் தாம் ஒருவராகவே பதினோராயிரம் தேர் வீரர்களோடு போர் செய்து வெல்பவர் ஆவர். சமரதர் எனப்படுவோர் ஒரே ஒரு தேர் வீரரை மட்டும் எதிர்க்க வல்ல வலிமை பெற்றவர் ஆவர். அர்த்தரதர் என்பவர் மிகக் குறைந்த வலிமை படைத்தவர். அதாவது நேருக்கு நேர் போரிடும் ஒரே ஒரு தேர்வீரனையும் வெல்ல முடியாமல் தோற்றுப் போய் விடுபவரே அர்த்தரதர் ஆவர்.

இத்தகைய அர்த்தரதர்களில் ஒருவனாகக் கர்ணனை வீடுமர் வகைப் படுத்தும்போது, கர்ணனுக்கு ஆத்திரம் எப்படி வராமல் போகும்? வீடுமர் தன்னையும் துரோணர், துரோணர் மகன் அசுவத்தாமா, பூரிசிரவஸ் ஆகியோரை அதிரதர் எனவும், சோமதத்தன், பகதத்தன், துர்மர்ஷன் ஆகியோரை மகாரதர் எனவும், கிருதவர்மன், சகுனி, சல்லியன், சயத்திரதன் ஆகியோரைச் சமரதர் எனவும் வகைப்படுத்தி, தம்மையும் காத்துக் கொள்ளத் திறமையில்லாத அர்த்தரதர்கள் என்ற வகையில் துரியோதனனின் தம்பியர் தொண்ணூற்றொன்பதின்மரையும், கர்ணனையும் வகைப்படுத்த, கர்ணன் வீடுமரைச் சுட்டுப் பொசுக்கி

விடுவதைப் போன்ற கோபத்துடன் வீடுமர்மேல் பாய்கிறான்.

''உன்னுடைய உயிரைப் பறித்துவிடுகிறேன். நானா அர்த்தரதன்? நான் அர்த்தரதனா? அதிரதனா? என்பதை இப்போழுதே காட்டி விடுகிறேன். ஏய் கிழவா! உனக்கு வீரமிருந்தால், உன்னுடைய உயிரைக் காத்துக்கொள், பார்ப்போம்'' எனக் கர்ணன் வீடுமன் மேல்பாய, இடையில் வந்து துரியோதனன் கர்ணனைத் தடுத்துச் சமாதானப் படுத்துகின்றான். துரியோதனனுக்காகக் கர்ணன் தன் மாளாக் கோபத்தை அடக்கிக்கொண்டாலும், ''இனி நான் இங்கே நிற்பதில் அர்த்தமே இல்லை. இந்த அர்த்தரதன் போரில் கலந்துகொண்டு என்ன சாதிக்கப் போகிறான்? துரியோதனா! இந்த வீடுமன் உயிரோடு இருக்கும் வரையில் நான் உனக்காகவும் போர் செய்யப்போவதில்லை. இது சத்தியம்'' என்று சபதம் செய்தவனாக யாருடைய சமாதானத்திற்கும் காத்திருக்காமல், போர்க்களத்தை விட்டே புறப்பட்டுப் போய் விடுகிறான் கர்ணன்.

துரியோதனனுக்குப்போர் தொடங்குவதற்கு முன்னமே தோல்விமேல் தோல்வி, அடிமேல் அடி. பாண்டவர் பக்கத்தில் இத்தகைய குழப்பங்கள் ஏதும் இல்லாமல் வீரர்கள் வகைப்படுத்தப்பட்டு, படைகளும் அணிவகுக்கப் படுகின்றன.

''செங்கண்மால் உயிர், தருமன் மார்பு, சுவேதன் ஆனனம், இருபுயம்
வெங்கண் வீமனும் விசயனும், திறல்வில் மருத்துவர் மைந்தர் தாள்,
அங்கண்மா முடியரசர் மற்றும் அவய ஆதிகள் ஆகவே
தங்கள் பூமியிலானபோதொரு வடிவ மொத்தது தானையே''

—அணிவகுப்புச் சருக்கம்: 16

போரில் வெற்றி பெறுவதற்கு இன்றியமையாத முதல் தேவை போர் வீரர்களிடம் காணப் படக்கூடிய ஒழுங்கும் கட்டுப்பாடும். அந்த ஒழுங்கும் கட்டுப்பாடும் பாண்டவர் படையில் காணப்படுகிறது என்பதைத்தான் வில்லிப்புத் தூரார் மேற் கண்ட பாடலில் மிக நேர்த்தியாகச் சித்தரிக்கிறார்.

பாண்டவர் தளபதியான சுவேதன் படைக்கு முகமாக இருக்கிறான். தருமர் மார்பாகத் திகழ்கிறார். வீமனும் விசயனும் இருதோளாக விளங்குகின்றனர். மற்ற அரசர் ள் உடலின் பிற உறுப்புக்களைப் போல ஒழுங்குபட்டு விளங், பாண்டவர் படையாகிய உடலுக்கு உயிராகக் கண்ணபெரு மான் திகழ்கிறார் என்கிறார் வில்லிப்புத்தூரார்.

இவ்வாறு குருசேத்திரப் போர்க்களத்தில் பாண்டவர் கள் மற்றும் துரியோதனன் படைகள் போருக்கு ஆயத்த மாகி அணி வகுத்து நிற்கின்றன. போர் முரசம் முழங்கி யதும் போரும் தொடங்க வேண்டியது தான். அதற்குள் நேர்ந்து விடுகிறது பாண்டவர் அணியில் ஒரு மாபெரும் சங்கடம். பாண்டவர், துரியோதனன் படைகளுக்கு நடுவில் கண்ணபெருமான் தேரினைக்கொண்டு வந்து நிறுத்துகிறார். தேரில் அமர்ந்தவாறே தான் வெல்ல வேண்டிய எதிரியின் படையை முழுமையாக ஒரு பார்வை பார்க்கிறான் அர்ச்சுனன்.

அப்படையில் இருப்பவர் அனைவரும் தனக்கு உறவினர் களாகவும், நண்பர்களாகவும், வேண்டப்பட்டவர்களாகவும் விளங்குவதைக் காணும்அர்ச்சுனன் மனம் தளர்ச்சியடைந்து "நான் போர் செய்யமாட்டேன். எனக்கு நாடும் வேண்டாம், நகரமும் வேண்டாம். தாத்தாவைக் கொன்று தம்பிகளைக் கொன்று, கல்வி கற்பித்த ஆசிரியரைக்கொன்று நண்பர்களைக் கொன்று நாடு கொள்வதில் எனக்கு நாட் டமே இல்லை. என்னால் போர் செய்ய முடியாது. என்னை விட்டு விடுங்கள். நான் மறுபடியும் வேண்டுமானாலும்

காட்டுக்கே போய்விடுகிறேன்'' என்பதாகக் கூறித் தன்கையிலிருக்கும் காண்டீபத்தையும் கீழே போட்டுவிடுவதைக் காணுகின்றோம். காண்டீபத்தைக் அர்ச்சுனன் கீழே போட்டுவிட்ட இந்த நிலையில், கண்ணபெருமான் என்ன செய்கிறார்? அர்ச்சுனன் மனம் தெளிந்து, காண்டீபத்தைக் கையில் மறுபடியும் எடுப்பானா? யுத்தம் தொடங்குமா அல்லது நின்று போகுமா? என்பனவற்றை யெல்லாம் அடுத்து வரும் அத்தியாத்தில் காண்போம்.



# 9

தேவர்களின் தலைவன் இந்திரனாலும் வெல்ல முடியாத வலிமையும், வரமும் பெற்று விளங்கிய நிவாத கவச அரக்கர்கள் மூன்று கோடிப் பேரையும், காலகேய அரக்கர்கள் அறுபதினாயிரம் பேரையும் வெற்றி கொண்ட மாபெரும் வீரனே அர்ச்சுனன். அவனிடத்தில் சிவபெருமான் தந்த பாசுபதாத்திரம் உண்டு. அக்கினி பகவான் அளித்த காண்டீபம் உண்டு. இராவணனின் அடல் அழித்த அனுமனே தேர்க்கொடியாகி நிற்கும் துணைப்பலமும் உண்டு.

இத்தனைக்கும் மேலாக கண்ணபெருமானே பார்த்த சாரதியான பாக்கியமும் அவனுக்கே உண்டு. இத்தனை இருந்தும் துரியோதனனுக்காகத் திரண்டிருக்கும் பதினோரு அக்குரோணி சேனைகளை ஒரு சேரப் பார்வையிட்டுக் காண்டீபத்தைச் கைநழுவ விட்டான் என்றால், அதற்கு அச்சமா காரணம்? அச்சம் என்ற வார்த்தையையே அறியாதவன் - அதனை மதியாதவன் மாபெரும் வீரன் ஆகிய விசயன். ''எனக்கு நாடும் வேண்டாம், நகரும் வேண்டாம், போர் நான் செய்யமாட்டேன், என்னை விட்டு விடுங்கள், நான் காட்டிற்கே போய் விடுகிறேன்'' என்று இருபடைகளும் அணி வகுத்து மோதப் போகின்ற அந்த இறுதி நேரத்தில் அப்படியொரு திடீர் முடிவுக்கு வந்தான் என்றால் அதற்கு என்ன காரணம்? பெரியவர்களைப் போற்றும் அர்ச்சுனனுடைய அருங் குணம் தான் அதற்குக் காரணம்.

துரியோதனனையும், அவனுடைய தம்பிமார்களையும், சகுனியையும், க◌ணனையும் வெல்லவும், கொல்லவும் அர்ச்சுனனுக்குத் தயக்கமும் இல்லை. மயக்கமும் இல்லை.

இதை அஞ்ஞாத வாசத்தின் இறுதியில் துரியோதனனால் கவரப்பட்ட விராடமன்னனின் ஆநிரைகளை பிருகந்நளை என்ற பேடி வடிவத்தில் மீட்க வந்து, பின் அஞ்ஞாத வாசம் நிறைவு பெற்று விடுகிறபடியால், தன்சுய வடிவில் வெளிப்பட்டு, துரோணர் வீடுமர் முதலான தம்மரியாதைக்குரிய பெரியோர்களிடம் போரிட நேர்ந்த சந்தர்ப்பத்திலேயே அர்ச்சுனன் கூறுவதைக் காணுகிறோம்.

> ''யாதுமொன் றறியாவென்னை இவனலா திலை என்றிந்த
> மேதினி மதிக்குமாறு இன்முதற் படைகள் யாவும்
> தீதறத் தந்த வுண்மைத் தெய்வநீ என்றால் பஞ்ச
> பாதகந் தன்னிலொன்றுன் பதயுக பிழைப் பதையா''
>
> —நிரை மீட்சிச்சருக்கம். 88

இது அர்ச்சுனன், துரோணரை நோக்கி கூறிய பணிவு மொழியாகும். துரோணராலேயே ''வில்லுக்கு விசயன்'' என்று உலகம் புகழ்ந்துரைக்குமாறு தான் ஆற்றல் பெற்றதை அன்புடன் எடுத்துக் காட்டிய அர்ச்சுனன், துரோணரை ''உண்மைத் தெய்வம்'' என்று போற்றி. அவருடன் போர் செய்வதும், அவருக்குத் தீங்கு இழைப்பதும் பஞ்சமா பாதகங்களில் ஒன்றாய் விடும் என்ற தன் அச்சத்தைத் தெரிவிக்கிறான். மேலும் துரியோதனன் அல்லாத துரோணர், கிருபர், அசுவத்தாமன், வீடுமர் ஆகியோருடன் போர் புரிவது நிச்சயம் பாவமே ஆகும் என்ற தன் பயத்தையும் அர்ச்சுனன்,

> ''மன்னொடு சூழநின்ற மாசுணம் உயர்த்த கோவை
> மின்னொடும் உருமேறென்ன வெகுண்டமர் புரிவதல்லால்
> நின்னொடுங் கிருபனோடும் நின்மகனோடும் முந்தை
> தன்னொடும் புரியேன் வெம்போர்; தக்கதோ சரதம் பாவம்''
>
> —நிரை மீட்சிச் சருக்கம்: 89

என எடுத்துரைப்பதையும், அதற்குத் துரோணர் ''நாங்கள் செஞ்சோற்றுக்கடன் கழிப்பதற்காகத்துரியோதனனுக்காகப் போர்புரிய வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். ஆகவே நீ எங்களை எதிர்த்துப் போர் செய்தே ஆக வேண்டும்'' என வற்புறுத்துவதையும், அதற்குப்பிறகு மனம் தெளிவு பெற்று அர்ச்சுனன் போர் செய்து துரோணர், வீடுமர், அசுவத்தாமா, கிருபர், கர்ணன் முதலான அனைவரையும் வென்று, துரியோதனன் மகுடத்தையும், தன் அம்பினால் சிதைத்து, மகுடபங்கப்படுத்தி ஆநிரைகளை மீட்டு வெற்றி கொள்வதையும், விராட பருவத்தில் மிக விரிவாகக் காணுகின்றோம்.

அப்பொழுதிலிருந்தே அர்ச்சுனன் மனத்தை வாட்டிக் கொண்டிருக்கும் மிகப் பெரிய கவலை, ஆசிரியரை எதிர்த்தும், தாத்தாவை எதிர்த்தும், தனக்கு எந்த வகையிலும் தீமை செய்யாத வணக்கத்திற்கும், மரியாதைக்குமுரிய பெரியவர்களை எதிர்த்தும், போர் செய்வதும், அவர்கள் உயிரை வதைப்பதும் கொடிய பாவமே ஆகும் அல்லவா என்ற சிந்தனையேயாகும். பாவம் செய்தவன் துரியோதனனும் அவனுடைய தம்பிமார்களும். அவர்களைக் கொல்வது நியாயமே.

ஆனால் அவர்களுக்காக திரண்டு நிற்கும் 11 அக்குரோணி சேனைகளையும் கொல்வது எப்படி நியாயமாகும் என்றே மயங்குகிறது அவன் நெஞ்சம். அர்ச்சுனனின் அந்த மயக்கமே போர் தொடங்கப் போகும் அந்த இறுதி நேரத்தில் அவனைத் தடுமாற வைக்கிறது; காண்டீபத்தைக் கையிலே பிடிக்காமல் களத்திடை விழச் செய்கிறது. இவ்வாறு அர்ச்சுனன் மனம் தடுமாறிப் போர்புரிய மாட்டேன் என்று மறுக்கும் நேரத்தில் கண்ண பரமாத்மா அர்ச்சுனன் மனம் தெளிய அவனுக்குப் பல உண்மைகளை உபதேசிக்கிறார். அவ்வாறு உபதேசிக்கும் உபதேசங்களே ''பகவத் கீதை'' எனப் பாருலகம் முழுவதும் போற்றப் படுகிறது.

"அர்ச்சுனா! தந்தை, தாய், மக்கள், தாரம், நண்பர், பகைவர் என்ற பலப்பல எண்ணங்கள் மாயையின் பாற்பட்டவை. மாயையை வென்று வாழ்வதே அறிஞர்கள் தம் கடமையாகும். ஆத்மாக்களுக்கு உடல்களை அளிக்கும் பரம்பொருள் வேறுயாருமல்ல. நானேதான். உடல்கள் அழியுமே தவிர ஆத்மாக்கள் (உயிர்கள்) அழிவதில்லை. மறுபடி பிறக்கக் கூடிய ஆத்மாக்கள் இழக்கக் கூடிய உடல்களுக்காக வருந்துவது வீண் செயலாகும். ஐம்பெரும் பூதங்களால் ஆகிய உடல்களை உயிர்களுக்கு வழங்கி அவ்வுயிர்கள் தோறும் பாலுக்குள் நெய்யைப்போலஇருந்து செயல்படக் கூடிய பரம்பொருள் நானாக இருக்க, என் கட்டளையை ஏற்றுக் காரியம் ஆற்றவேண்டுவதே உன் கடமையாகும்.

கடமையை யாற்று. பலன்களைப் பாராதே. பரம்பொருளாகிய என்னுடன் நீயும் பிரிவொன்றின்றி இணைந்தே என்னுடைய அவதாரங்கள் தோறும் செயல்பட்டு வந்திருக்கிறாய். அப்படியிருக்க இப்பொழுது மட்டும் உன்னை மாயை மறைப்பது ஏன்?

ஒரு அவதாரத்தில் நான் நாராயணன், நீ நரன். மற்றொரு அவதாரத்தில் நான் இராமன், நீ இலட்சுமணன், இப்பொழுது இந்த அவதாரத்தில் நான் கிருட்டிணன், நீ அர்ச்சுனன். உலகிலுள்ள உயிர்க்குலங்களின் நன்மைக்காகவே அவதாரங்களை எடுத்து நாம் செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம். இப்பொழுது இந்த யுத்தம் நடப்பதும் கூட உயிர்க்குலங்களின் நன்மைக்காகவே. ஆகவே, உன் மயக்கம் ஒழித்து நீ மறுபடியும் காண்டீபத்தைக் கையில் எடு. போர் செய்" என்று கண்ணபெருமான் அர்ச்சுனனுக்கு உபதேசிக்கிறார். அவருடைய அரிய அந்த உபதேசங்களை வில்லிபுத்தூராரின் திருவாக்கினாலும் நாம் காணலாம்.

''மாயையென்றொருத்தி தன்பால் மனமெனும் மைந்தன் தோன்றித்
தூயநல்லறிவன் தன்னைத் தோற்றமின்றாக்கிவைத்தான்
தாயொடு தந்தை மக்கள் தாரம் என்றிவர்பால் வைத்த
நேயமும் அவன்தனாலே நிகழ்ந்ததோர் நினைவு கண்டாய்.

—முதற்போர்ச் சருக்கம் 2

அந்த நல்லறிவன் தன்னை யறிந்தவர் அறிஞராவார்
தந்தையால் வகுக்கப்பட்ட சராசரப் பொருள்கள் தோறும்
வந்தஆன் தீம்பால் நெய் போல் உயிர்க்கு யிராகி வாழும்
பந்தமதுணர்ந்து நேரே பார்க்குங்காற் பகை யார்? நண்பார்?

—முதற் போர்ச் சருக்கம் 4

உம்பருமுனிவர் தாமும் யாவரும் உணரா வொன்றை
இம்பரின்றுனக்கு நானே இசைவுறவுணர்த்தாநின்றேன்
ஐம்பெரும்பூதத்தாலும் அமைந்தன உடலம்யார்க்கும்
நம்பன் ஒருவன் உள்ளே ஞானியாய் நடத்துகின்றான்

—முதற்போர்ச் சருக்கம்

என்னைநீ புகலக்கேண்மோ எங்குமாய் யாவுமாகி
மன்னியபொருளும் யானே மறைக்கெலாம் முடிவும்யானே
உன்னையான் பிறிவதில்லை ஒருமுறைபிறிந்து மேனாள்
நன்னிலா வெறிக்கும் பூணாய் நரனுநாராயணனு மானோம்

—முதற்போர்ச் சருக்கம் 6

பின்னொரு பிறப்பில்யாமே இராமலக்குமப் பேர் பெற்றோம்
இந்நெடும் பிறப்பில் நீயும்யானுமாய் ஈண்டு நின்றோம்
நின்னிடை மயக்குமிந்த நேயமும் ஒழிகவென்று
தன்னிலை யவற்குக் காட்டித்தத்துவம் தெளிவித்தானே''

—முதற்போர்ச் சருக்கம் 7

இவ்வாறு உபதேசித்து, பரம்பொருளாம் தன்னுடைய உண்மை சொரூபத்தையும் அர்ச்சுனனுக்குக் காட்டுகிறார் பார்த்தசாரதி. அச்சொரூபத்தை ஊனக் கண்ணால் காண்பது இயலாதாகையால், அர்ச்சுனனுக்கு ஞானக் கண்களையும் தந்து காண வைக்கிறார். பரம்பொருளின் உண்மை சொரூபத்தைப் பார்த்துத் தெளிவு கொள்ளும் பார்த்தன், நழுவவிட்ட தன்காண்டீபத்தை மீண்டும் கையில் எடுத்துக்கொண்டு போருக்கும் ஆயத்தமாகிறான். அப்பொழுது அவனுடைய தேர்க்கொடியில் வந்து நின்று கூத்தாடுகின்றான் வீர அனுமான்.

**''செருச்செய்வான் வருசேனை வெண்டிரையையுங் கடப்பான்**
**பருச்சிலம்பினின் றுகைதரு பாவனை போல**
**உருச்செழுங்குடரெறிப்ப நின்றுலாவினன் உண்மைக்கு நின்று**
**அர்ச்சுனன் தடந்தேர் கொடியாடையில் அனுமன்''**

அர்ச்சுனனின் கொடித்துணியில் உண்மையாகப் பிரத்தியட்சமாகி, முன் மகேந்திர மலைக்கும் இலங்கையின் பவள மலைக்கும் இடைப்பட்டிருந்த கடலைத் தாவிய பாவனையில் நின்று அனுமன் ஆரவாரம் செய்கின்றான். அனுமன் அர்ச்சுனனின் தேர்க்கொடியாவதற்கு இசைந்த அந்த வரலாறும் சுவையானதொன்றாகும்.

ஒருசமயம் அர்ச்சுனன் இராமேஸ்வரம் சென்று சேதுசமுத்திரத்தில் நீராடிக் கடற்கரையில் சிறிது நேரம் உலாவிக் கொண்டிருந்தான். அப்பொழுது அங்கே இருந்த ஒரு சிறிய குன்றின் மேல், சாதாரண குரங்கின் வடிவத்தில் அனுமன் அமர்ந்து இராமநாமத்தை ஜெபம் செய்து கொண்டிருந்தான். அனுமனை இன்னான் என அறிந்து கொள்ளாதவனாகிய அர்ச்சுனன் ''ஏ குரங்கே, நீ யார்? இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று வினவினான்.

அர்ச்சுனனின் கேள்விக்கு விடை கூறிய அனுமன் "எவனுடைய பிரதாபத்தால் இராமபிரான் இச்சேதுவில் நூறு யோசனை தூரத்திற்குக் கற்களால் அணை கட்டினாரோ. எவனைச் சகாயமாகக் கொண்டு இராவணனாதி அரக்கர்களை வென்றாரோ, அவனே யான். என் பெயர் அனுமன்' என்பதாகப் பதிலைக் கூறினான். செருக்குடன் இவ்வாறு அனுமன் கூற, அர்ச்சுனனும் ஆஞ்சநேயரை நோக்கி 'இரகுராமர் சிறந்த வில்லாளியாயின், தம் அம்புகளினாலேயே அணை கட்டியிருக்கலாமே! நானாக இருந்திருந்தால் அம்பினாலேயே அணை கட்டியிருப்பேன்' என்று செருக்குடன் தன்னுடைய வில்லாற்றலை மிகுதிப்படுத்திக் கூறினான்.

உடனே அனுமன், "என்னைப் போன்ற வானர வீரர்களின் பாரத்தினால் அம்பினால் கட்டப்படும் அணை அமிழ்ந்து போகும் என்றெண்ணியே இராமர் அவ்வாறு செய்யவில்லை. வேண்டுமானால் அர்ச்சுனா, அம்பினால் நீ இங்கே ஒரு அணையைக் கட்டிப் பார். என் கால் கட்டை விரல் கொண்டே அணையைக் கடலில் மூழ்கடித்துக் காட்டுகிறேன்" என்றான். அதனைக் கேட்ட அர்ச்சுனன் "நான் அம்பினால் இதோ அணை கட்டுகிறேன். அது உன் பாரத்தால் மூழ்காவிட்டால் எனக்கு என்ன தரப்போகின்றாய்?" என்று கேட்க "என் பாரத்தால் அணை, கடலுக்குள் அமிழ்ந்து போகாவிட்டால் உன் தேர்க்கொடியின் கண் நின்று யுத்த காலங்களில் உனக்கு வேண்டிய உதவியைப் புரிகின்றேன். ஆனால் என் பாரத்தால் அணை அமிழ்ந்து போகுமானால் நீ என்ன செய்யப் போகிறாய் என்பதை நீ எனக்குக் கூறு" என அர்ச்சுனன் 'யான் அக்கினி பிரவேசம் செய்து உயிர் விடுகிறேன்' என்று உறுதி கூற அவர்களுக்குள் போட்டி ஆரம்பமானது.

அர்ச்சுனன் தன் காண்டீபத்தை எடுத்து வளைத்து கணக்கற்ற கணைகளை ஏவி, நெருக்கமாகவும், உறுதியாகவும் ஓர் அணையைக் கடலின் மேல் கட்டினான். அனு

மனும் கண நேரத்தில் தன் கால்கட்டை விரலால், அந்த அணையை அமிழ்த்திக் கடலில் மூழ்குமாறு செய்தான். அனுமனின் ஆற்றலுக்கு முன், தான் தோற்றுப் போனதை எண்ணி அவமானப்பட்ட அர்ச்சுனனும் தன் உறுதி மொழி மாறாமல் அக்கணமே விறகுகளை அடுக்கித் தீமூட்டி, அதில் பாய்ந்து உயிர்விட முற்பட்டான். அப்பொழுது அங்கே வந்து சேர்ந்த அந்தணர் ஒருவர், தீபாய முற்பட்ட அர்ச்சுனனைத் தடுத்தார்.

''எதற்காக தீபாய்கிறாய்'' என அவர் வினவ, அர்ச்சுனனும் காரணத்தைக் கூறினான். ''இந்தச் சிறுகுரங்கா அம்பினால் கட்டப்பட்ட அணையை அமிழ்த்தியது. இதை நான் நம்பமாட்டேன்'' என்றார் அந்த அந்தணர். அனுமனுக்குக் கடுங்கோபம் வந்தது.

''மீண்டும் அர்ச்சுனன் அணையை அமைக்கட்டும். நான் என் காற்பெருவிரலால் அமிழ்த்துக் காட்டுகிறேன்'' என்று அனுமன் கூற அர்ச்சுனனும், மீண்டும் ஒருமுறை அணையை அம்புகளால் அமைத்தான்.

''எங்கே உன் பராக்கிரமத்தைப் பார்ப்போம். அணையைக் கடல்நீரில் அமிழ்த்து பார்க்கலாம்'' என்று அனுமனிடம் அந்தணர் கூற, அனுமனும் அனாவசியமாகப் போய் தம் காற்பெருவிரலால் அணையை அமிழ்த்த முயன்றான். என்ன விந்தை! முன்பு சடாலென நொறுங்கி அமிழ்ந்துபோன அணை இப்பொழுது உறுதியாக நின்றது. காற்பெருவிரலால் அழுத்திப் பார்த்து, அணையைச் சிதைக்க முடியாத அனுமன் தன் இருகால்களைக் கொண்டு உதைத்தும் கூட அணையைச் சிதைக்க முடியவில்லை. தன்தேகபலம் முழுவதையும் பிரயோகித்தும் கூட அணை சிதையவில்லை.

''இது எப்படி?'' என்பதாக அர்ச்சுனனும், அனுமனும் அதிசயிக்க, வந்த அந்தணர் தம்முடைய சுய வடிவத்தைக் காட்டினார். அனுமனும், அர்ச்சுனனும் அவரைக் கண்ண

பெருமானாகக் கண்டு வணங்கினர். அணையின் நடுவில் தாம் வைத்திருந்த சக்கரத்தைக் கண்ணபெருமான் எடுத்துக் கொள்ள அர்ச்சுனன்அமைத்த அம்பினால் ஆகிய அணையும் பின் சிதைந்து கடலில் மூழ்கிப் போனது. இவ்வாறு அர்ச்சுனனும் அனுமனும் தத்தம் ஆற்றலின்பால் கொண்டிருந்த செருக்கை இலையாக்கி, அர்ச்சுனனின் உயிரையும் காப்பாற்றி, அனுமன் அர்ச்சுனனின் தேர்க்கொடியில் நின்று சேவை செய்யவும் திருவருள் புரிந்தவர் கண்ணபெருமானே ஆவார். (வனவாசத்தின் போது மந்தார மலர் பறிக்கச் சென்ற வீமனுக்கு வழங்கிய வரத்தின்படியும் அனுமன், அர்ச்சுனனின் தேர்க் கொடியில் வந்து கூத்தாடலானார் என்பதாகவும் ஒரு வரலாறு கூறப்படுகிறது.)

இவ்வாறு தாம் கொடுத்த வரத்தின்படியே அர்ச்சுனனின் தேர்க்கொடியில் நின்று பாண்டவர்களின் வெற்றிக்காக அனுமன் ஆரவாரம் செய்த வேளையில் துரியோதனனின் கொடியில் இருந்த அவனுடைய சின்னமாகிய பாம்போ அர்ச்சுனனைக் கண்டு பயந்து நடுங்குவது போல், வீசியகாற்றில் பின்னிடுகிறது. முன்னம் காண்டவவன தகனத்தின் போது வனத்திலிருந்த பாம்புகள் எல்லாவற்றையும் எரியுண்ணச் செய்த அர்ச்சுனன், இப்பொழுதும் எங்கே தன்னையும் தன் இனத்தையும் அழித்துவிடக் கூடுமோ என்பதாக அஞ்சி துரியோதனன் கொடியிலிருந்த பாம்பு நடுங்குகிறது என்பதாக வில்லிப்புத்தூரார் நயம்பட,

> **''வெறிகொளு உருமுத்துவசன் மதலை விதலைச் சமரின்**
> **இறுதியை விளைக்குமென்றோ**
> **வறைவளி எதிர்த்துவர வெருவொடு புறக்கிடு வரசன்**
> **உரகத்துவசமே''**

எனப் பாடியிருக்கிறார்.

இவ்வாறு இருசாராரும் யுத்தத்திற்கு ஆயத்தமாகி விடும் அந்நிலையில், இன்னும் ஒரு விந்தை நடக்கிறது. தருமர் தம் ஆயுதங்களை எல்லாம் கீழே வைத்து, தாம்

மார்பில் அணிந்திருந்த கவசத்தையும் கழற்றி வைத்துத் தம்முடைய தேரிலிருந்து இறங்கிக் கௌரவப் படைகளின் சேனாதிபதியான வீடுமர் இருக்கும் இடத்திற்கு விரைந்து செல்லலுற்றார். அண்ணனின் செய்கைக்கான அர்த்தம் விளங்காமல் வீமன் அர்ச்சுனன் நகுல சகாதேவர்களும்கூட தருமரைப் பின் தொடர்ந்து செல்லலாயினர்.

அப்பொழுது, அர்ச்சுனனுக்கு வந்த தயக்கமும் மயக்கமும் தருமருக்கும் வந்துவிட்டதோ எனப் பலர் ஐயப் படுகின்றனர். தருமர் அல்லவோ ஆரம்பம் முதலே யுத்தம் வேண்டாம் என்று மறுத்தவர். "யுத்தம் வேண்டாம் என்பதற்காக தருமர் செல்லவில்லை. யுத்தத்தில் பெரியோர்களின் ஆசியைப் பெறுவதற்கே தருமர் அவ்வாறு செல்கிறார்" என்பதைத் தெரிந்து கொண்டு விடும் கண்ண பெருமான் அவர் செயல் பொருத்தமானதே என்பதாகப் பாராட்டித் தாமும் பாண்டவர்களுடன் போய், வீடுமரை முதலில் கண்டு வணங்குகிறார். யுத்தத்தில் பாண்டவர்கள் வெல்ல நல்லாசி கோருகிறார். "பிதாமகரே! தாங்களே பாண்டவர்களுடன் எதிர்த்துப் போர் செய்வீர்களாயின், இவர்கள் எவ்வாறு வெற்றி பெற இயலும்" எனக் கண்ண பெருமான் வினவ வீடுமரும்,

> "நின்றனை யருளொடாங்கே நீலமா மேனியோய் நீ
> வென்றி மற்றிவரேயல்லால் வேறுயார் எய்துகிற்பார்"
>
> —முதற்போர்ச் சருக்கம் 16

> "தருமராசன் மைந்தனே யவனிக்கெல்லாம்
> கொற்றவன் ஆகும்"
>
> —முதற்போர்ச் சருக்கம் 12

என்று கண்ணபெருமான் துணை நிற்க பாண்டவர்களே வெல்வர் என்று கூறித் தம் நல்வாழ்த்துகளை நல்குகின்றார். அதற்குப் பிறகு துரோணரைப் போய்ப் பாண்டவர்கள் வணங்கி ஆசிகோர அவரும் "மன்மகன்

தருமன் வென்று வையகம் எய்த நிற்பான்'' என்று தம் வாழ்த்தினைக் கூறுகின்றார். இவ்வாறு நல் வாழ்த்தினைத் தெரிவிப்பதோடு வீடுமரும், துரோணரும், தம்மைப் பாண்டவர்கள் வெல்வதற்கு என்ன உபாயம் என்பதையும் கூட அந்நேரத்தில் எடுத்துரைக்கின்றனர் என்றால் அவர்கள் பாண்டவர்கள் பால் கொண்டிருக்கும் பேரன்பினை என்னவென்பது! பாண்டவர்கள்பால் பேரன்பு கொண்டிருந்தாலும், துரியோதனனுக்காக உயிர்விடத் துணிந்து அவனுக்காக போர் செய்ய நிற்கிறார்கள் என்றால் அவர்களுடைய செஞ்சோற்றுக்கடன் சிறப்பையும் என்ன வென்று பாராட்டுவது.

பத்தாம்நாள் போரின் போது, தன்னைக் கொல்வதற்காகவே பிறந்திருக்கின்ற சிகண்டி என்ற அலியைத் தனக்கு முன் நிறுத்தினால், தான் கணையேனும் தொடுக்க மாட்டேன் என்பதையும், அந்நேரம் அர்ச்சுனனும் சிகண்டியுடன் அம்பெய்தால் அர்ச்சுனன் அம்பால் தான் மாண்டு படுவேன் என்பதையும் வீடுமர்,

> **''பன்னுசீர் யாகசேனன் குமரனைப் பத்தா நாளில்**
> **என்னெதிரமரிற் காட்டில்யான் படையாவுந் தீண்டேன்**
> **பின்னவன் வெகுண்டு செய்யும் பெருமிதம் கண்டுமீண்டு**
> **கண்ணனை வெல்ல நின்ற காளைக் கைக்கணை**
> **யால் வீழ்வேன்''**
>
> —முதற் போர்ச் சருக்கம் 11...

என்று கூறுகிறார். துரோணரும் தம் மகன் அசுவத்தாமா மாண்டான் என்ற செய்தியை நம்பத் தகுந்தவர் யாரேனும் தம்காதுபடக் கூறுவார்களேயானால் தாம் அதற்குப்பின் வில்லினைக் கையால் தொடப் போவதில்லை எனவும் அந்நேரம் தம்மைக் கொல்லப் பிறந்திருப்பவனாகிய திட்டத்துய்மன் அம்புவிட்டால் தம் மரணம் நேரும் என்பதையும்

**''என்மகன் எனக்கு முன்னே இறந்தனனென்று வானில்**
**விண்மகபதியை யொக்கும் வேந்தர்முன் சொல்லிற்**
**......பின்னைச் சாபமென்றெடுக்கிலேனே''**

—முதற்போர்ச் சருக்கம் : 14

**''என்பெருஞ்சாபங் கைவிட்டுயான் எதிர்நிற்ற லானும்**
**நின்பெருஞ் சாபத்தாலுஞ் சமரிடைத் திட்டத் துய்மன்**
**வன்புடன் எனக்குக் கூற்றாய் மலைகுவன்**
**மலைந்தவன்றே**
**நின்பெருங் கருத்து முற்றும்''**

—முதற்போர்ச் சருக்கம் 15

என்று எடுத்துரைக்கின்றார். சிகண்டியும், திட்டத் துய்மனும் வீடுமரையும் துரோணரையும் முறையே கொல்வதற்குப் பெற்ற வரங்களின் வரலாறுகளைப் பின்னாலே நாம் விவரமாகக் காணலாம்.

பாண்டவர்கள் கிருபர், சல்லியன் முதலான பெரியோர் களையும், நாடிச் சென்று, அவர்களின் நல்லாசியை கோரிப் பெறுகின்றனர். வில்லுக்கு விதுரர் என்ற போற்றப் பட்ட பாண்டவர்களின் சிறிய தந்தை, ஏற்கெனவே கூறிய படி துரியோதனனிடம் கோபம் கொண்டு, தம்விட்டுணு வில்லையும் உடைத்தெறிந்து விட்டுப் போரில் எந்தவொரு அணியிலும் சேராமல் தீர்த்தயாத்திரைக்குப் புறப்பட்டுப் போய் விட்டிருந்தார். அவருடன் தீர்த்தயாத்திரையில் கண்ணபெருமானின் தமையனார் பலராமரும் இணைந்து கொண்டார். பலராமரையும், யாதவ சேனைகள் அனைத்தையும் துரியோதனன் வேண்ட, அவனுக்கு சகாயம் ஆக்கியிருந்தார் கண்ணபெருமான். ஆனால் தம்பி கண்ணனுக்கு எதிராக நின்று போரிடச் சற்றும் விருப்பம் கொள்ளாதவராகிய பலராமர், தம்முடைய யாதவ சேனைகள் அனைத்தையும் துரியோதனனுக்குத் துணையாக்கி விட்டு விதுரருடன் தீர்த்தயாத்திரைக்குப் புறப்பட்டுப் போய்விட்டிருந்தார்.

மற்ற பெரியோர்கள் அனைவரிடமும் பாண்டவர்கள் நல்லாசிகளைப் பெற்று மீள்கின்றனர். அதன் பிறகு போர் முரசங்கள் முழங்குகின்றன. சங்குகள் ஒலிக்கின்றன. உடனே யுத்தமும் தொடங்குகின்றது! துரியோதனனின் 11 அக்குரோணி சேனைகளுடன், பாண்டவர்களின் 7 அக்குரோணி சேனைகள் எதிர்த்துப் போர் செய்யத் தொடங்குகின்றன. பாண்டவர்களின் சேனை மலைபோல் வடிவு அமையும்படி அணி வகுக்கப்பட்டிருக்கிறது. நால்வகைச் சேனைகளையும் அசலவியூகமாக வகுத்தால் சிறிய அளவுள்ள சேனையைக் கொண்டே பேரளவுள்ள சேனையை வெல்வது எளிதாகும் என்பதால், பாண்டவரின் சேனை அசலவியூகமாக வகுக்கப் பட்டிருக்கிறது.

பாண்டவர் அணியின் தூசிப்படை, துரியோதனன் அணியின் தூசிப்படையுடன் மோதத் தொடங்குகிறது. இரண்டு அணிகளிலும் இருக்கும் நால்வகைப்படைகளும் மோதிக் கொள்ளப் போர்த் தொடங்குவதை

''சென்றுதேர்களும் தேர்களும் சேர்ந்தன
வென்றிவேழமும் வேழமும் ஊர்ந்தன
நின்றவாசியும் வாசியும் நேர்ந்தன
வென்றிவீரரும் வீரரும் மேவினார்''

—முதற்போர்ச் சருக்கம் 20

''பாரவாளமும் வாளமும் பாய்ந்தன
கூரவேல்களும் வேல்களும் குத்தின
வீரசாபமும் சாபமும் வீக்கின
தூரவாளியும் வாளியும் தோய்ந்தவே''

—முதற்போர்ச் சருக்கம் 21

என்று வில்லிபுத்தூரார் வருணிக்கத் தொடங்கி மிகச் சிறப்பாகப் பாரதப் போரை வர்ணித்துச் சொல்கின்றார்.

இருதிறத்து அணிகளிலும் இணையில்லா வீரம் படைத்தவர்கள் மோதுகின்றனர். வெற்றி அல்லது

வீரமரணம் என்ற ஒரே முடிவில் போருக்கு வந்திருக்கும் வீரர்கள் உயிரைத் துச்சமென மதித்து ஆற்றிடும் இந்த போரைக் காண ஒவ்வொருவருக்கும் பிரமன் ஆயிரம் கண்களை யாவது கொடுத்திருத்தல் வேண்டும். இதோ இங்கே ஒரு வீரன் தான் கொண்டு வந்திருக்கும் அம்புகள் யாவும் தீர்ந்துபோன நிலையில் என்ன செய்கிறான் பாருங்கள்? ''பகைவர் எய்ததனால் மேனியில் பாய்ந்திருக்கும் அம்புகள் இருக்கின்றனவே'' என்று அவற்றை ஆர்வமுடன் உதிரம் கொட்ட கொட்ட தன்னுடலிலிருந்து ஒவ்வொன்றாகப் பறித்தெடுத்து தன் வில்லில் பூட்டி எதிரிகள் மேல் தொடுக்கிறான். இங்கே இன்னும் ஒருவீரன் தன் வலக்கையை எதிரிகள் வெட்டி வீழ்த்தி விட்ட நிலையிலும் சற்றும் கலக்கம் கொள்ளாமல் பற்களினால் அம்புகளை எடுத்தெடுத்து வில்லில் பூட்டி இடதுகையால் எதிரிகள் மேல் அம்பு செலுத்துகின்ற இந்த வீரக்காட்சியைப் பார்த்தால் நமக்கு மெய்சிலிர்க்கிறது. இதோ இங்கே இருவீரர்கள் எதிர் எதிர் நின்று வாள் கொண்டு பொருகின்ற ஒப்பற்ற காட்சியைப் பாருங்கள். ஆஹா! இதோ ஒரு வீரனின் தலையைச் சீவுகின்ற அதே நேரத்தில் தலையற்ற முண்டமாகத் தரையில் சாய்வதற்கு முன்னம், வீழ்த்தியவனின் தலையைத்தானும் வெட்டி வீழ்த்தி இருவருமாக ஒருசேர சாய்கின்ற ஒப்பற்ற காட்சி.

இரு அணியிலும் உள்ள வீரர்கள் இவ்வாறு வீரம் காட்டிப் போரிடும் நேரத்தில் கௌரவசேனையின் தளபதியான வீடுமரும், அர்ச்சுனனும் நேருக்கு நேர் நின்று மோதுகின்றார்கள். அர்ச்சுனனின் காண்டீபத்திற்கு ஆற்றாது. வீடுமரும் பின்னடைய துரியோதனனின் கட்டளையால் வீடுமருக்கு உதவியாக, சகுனியும், சல்லியனும் துரியோதனனின் தம்பிகள் சிலரும் வந்து அர்ச்சுனன்மேல் அம்புகளைத் தொடுக்கின்றனர். அர்ச்சுனனுக்குத் துணையாக வீரவீமனும், வீர அபிமன்யுவும் வந்து சேர்ந்து கொள்ள வீடுமரின் மார்புக் கவசத்தின்மேல், வீமன் விடும் ஒன்பது

பாணங்கள் சீறிச் செல்கின்றன. சகுனி, சல்லியன் மற்றும் துரியோதனன் தம்பிமார்களையும் அஞ்சி ஓடச் செய் கின்றன வீமனின் வில்லிலிருந்து சீறிவரும் அம்புகள்.

அபிமன்யு, தான் தொடுத்த அம்புகளால் வீடுமரின் தேர்க்குதிரைகள் நான்கையும் எமனுலகிற்கு அனுப்பிவைத்து ஆரவாரம் செய்கின்றான். விராட மன்னனின் வீரமைந்தன் உத்தரன்,சல்லியன் மீது அம்பு மழையைப் பொழிகின்றான். உத்தரன் விடும் அம்புகள் சல்லியன் தேர்க்குதிரைகளையும், தேர்ப்பாகனையும் சாகடிக்க, சல்லியன் உத்தரனின் வீரத்திற்காற்றாமல் தடுமாறுகிறான். அடுத்து உத்தரன் விடும் அம்பு சல்லியன் உயிரைக் குடிக்கச் சீறிவரும் வேளையில் சட்டென ஒதுங்கிக் கொண்டு சல்லியன், தான் ஒருவேலை எடுத்து உத்தரன்மேல் வீசுகிறான், அந்தவேல் உத்தரன் மார்பைத் துளைத்து அவன் உயிரையும் குடித்து விடுகிறது. அந்தோ! உத்தரனால் வானுலகம் போய்ச் சேர்ந்திருக்க வேண்டிய சல்லியன் உத்தரனை வானுலகிற்கு அனுப்பிவிடுகிறான்.

**''வாவிமேல் வருபுரவி வீழவும் வலவன்வீழவும், மற்றுளார்**
**ஆவி வீழவும் அவனெடுத்த வில்அற்று வீழவும்**
**அமர்செய்தான்**
**பாவியோடினி வில்லெடுப்பது பாவம் என்றொரு**
**பாரவேல்**
**ஏவினான் எதிர்சென்று சல்லிபன்! இவனும்**
**வானகம் ஏறினான்''**

—முதற்போர்ச் சருக்கம் 40

பாரதப் போரில் முதல்நாள் போரின் முற்பகல் போரிலேயே பாண்டவர் அணியைச் சேர்ந்த விராட மன்னனின் வீரமகன் உத்தரன், சல்லியன் வேலுக்குப் பலியாகி மாண்டுவிடுகிறான். இத்தனைக்கும் அவன்உடன் பிறந்த அண்ணன் சுவேதனே பாண்டவர் அணிக்குத் தளபதியாக இருந்தும் கூட அவன் தன் தம் தம்பியையே பலிகொள்ளக்

கொடுத்துவிடும் சோகம் நிகழ்ந்து விடுகிறது. தம்பி உத்தரனின் ஆவி பறித்த சல்லியனின் ஆவியைப் பறித்தால் அன்றித் தன் ஆவேசம் அடங்காதெனச் சீறிவருகிறான் சுவேதன்.

**''தம்பிபட்டனன் என்று கொண்டெழு சாகரத்**
**தெழு தழலென**
**தும்பையுற்று மிலைச்சி ஈசன் அளித்த வில்**
**லொடு தோன்றினான்''**

—முதற்போர்ச் சருக்கம் 48

**''எங்கு நின்றனன் எங்கு நின்றனன் மத்திரத்**
**தரசென்று போய்**
**அங்கு நின்ற மகிபர் வென்னிட அவனை**
**முந்துற அணுகினான்''**

சுவேதன் எதிர்த்தவர்களை எல்லாம் வெட்டி வீழ்த்தி மத்திர நாட்டு மன்னன் சல்லியன் இருக்குமிடம் அடைந்து அவன் மேல் ஆவேசமாகப் பாய்கிறான்.

தன் தம்பியைக் கொன்ற சல்லியனைக் கொல்ல சுவேதனால் முடிகிறதா? உத்தரனைப் பலிகொடுத்துத் தோல்வியை எடுத்த எடுப்பிலேயே சந்திக்க நேர்ந்த பாண்டவர்கள் பிறகு நடந்த முதல்நாளின் பிற்பகல் போரிலேனும் வெற்றியைக் காண முடிகிறதா என்பன வற்றையெல்லாம் இனி அடுத்த அத்தியாயத்தில் விரிவாகக் காண்போம்,

# 10

மன்னன் விராடனின் வீரமைந்தனான உத்திரன் பாண்டவர்களாலும் மைந்தனாகப் பாவிக்கப்பட்டு பாசம் பாராட்டப்பட்டவன் ஆவான். விராடனுடைய மச்ச தேசத்தில் ஓராண்டுக் காலம் பாண்டவர்கள் தம்மை இன்னார் என்று வெளிக்காட்டிக் கொள்ளாமல் மாறு வேடங்களில் வேறு பெயர்களில் வாழ்ந்து கொண்டிருந்த போது அவர்கள்பால் உத்தரன் காட்டிய அன்பும், உத்தரன் பால் பாண்டவர்கள் காட்டிய அன்பும் அளவிட முடியாத தாகும்.

கங்கபட்டர் என்ற பெயரில் துறவியாகத் தருமரும், பலாயனன் என்ற பெயரில் சமையல்காரனாக வீமனும், பிருகந்நளை என்ற பெயரில் நாட்டியம் கற்பிக்கும் பேடியாக அர்ச்சுனனும், தாமகிரந்தி என்ற பெயரில் குதிரைகளைப் பராமரிப்பவனாக சகாதேவனும், விரதசாரிணி என்ற பெயரில் ஒப்பனை மகளாக துரோபதையும் மச்ச நாட்டில் அஞ்ஞாதவாசம் புகுந்த போது அவர்களுக்கு அடைக்கலம் தந்து அன்பு பாராட்டியவர்கள் விராடனும் அவன் இளைய மகன் உத்தரனுமே.

சிவபெருமானை நோக்கிக் கடும் தவம் புரிந்து பாசு பதாத்திரம் பெற்ற அர்ச்சுனன், தன் தந்தை இந்திரனின் விருப்பத்திற்கிணங்க அமராபுரி சென்று சில நாட்கள் தங்கி இருந்த நேரத்தில். அவன் ஊர்வசியால் பேடியாகச் சபிக்கப் பட்ட சம்பவம் நிகழ்ந்தது. கண்டோர் காதல் கொள்ளும் கட்டழகனான அர்ச்சுனனைக் கண்ட ஊர்வசி, அவன் மேல் மையல் கொண்டாள். தனிமையில் அர்ச்சுனனைச் சந்தித்துத் தன் காதலை வெளியிட்டாள். தன் தந்தை

இந்திரனின் அன்பிற்குரியவளான ஊர்வசி தனக்கும் தாயே ஆவாள் என்பதைத் தெரிவித்து அர்ச்சுனன், ஊர்வசியின் காதலைத் தகாது எனக் கூறி நிராகரித்தான். அப்பொழுது அர்ச்சுனன் மேல் ஆத்திரம் கொண்ட ஊர்வசி அவனைப் பேடியாகுமாறு சபித்தாள்.

அர்ச்சுனனும் ஊர்வசியின் சாபத்தால் பேடியாக உருவம் மாறித் தன்னுடைய அறையிலிருந்து வெளியே வர முடியாமல் முடங்கிக் கிடந்தான். நடந்த சம்பவத்தை அறிந்து கொண்ட இந்திரன் பின் ஊர்வசியை அழைத்து, அவள் கொடுத்த சாபத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளு மாறு கேட்டுக் கொண்டான். ஊர்வசியும் அர்ச்சுனன் விரும்பிடும் போது மட்டும் அவனுடைய வடிவம் பேடிவடிவ மாகுமாறு சாபத்தை மாற்றி உதவினாள். 12 ஆண்டுக் கால வனவாசம் முடிந்து, பாண்டவர்கள் அஞ்ஞாத வாசம் பற்றிச் சிந்தித்த போது அர்ச்சுனன் தனக்கு ஊர்வசி இட்ட சாப விவரத்தைத் தெரிவித்து, ஓராண்டுக் காலம் நான் பேடி வடிவத்தில் பிருகந்நளை என்ற பெயரில் விராடன் மகள் உத்தரைக்கு நாட்டியம் கற்றுத் தரப் போவதாகத் தெரிவித்து, அவ்வாறே செய்யலானான்

இவ்வாறு மாற்றுருவம் பூண்டு, பாண்டவர்கள் விராடனுடைய தேசத்தில் மறைந்து வாழ்ந்த நேரத்தில் தான், துரியோதனன் தன் தூதுவர்களை நாலா தேசங் களுக்கும் அனுப்பிப் பாண்டவர்களைக் கண்டு பிடித்து மீண்டும் அவர்களைப் பன்னிரண்டு வருட காலத்திற்கு வனவாசம் அனுப்பிவிடத் துடித்தான். பாண்டவர்களைத் தேடிச் சென்ற தூதுவர்கள் திரும்பி வந்து, துரியோதன னிடம் விவரம் தெரிவித்தார்கள். ''பாண்டவர்கள் எங்குத் தேடியும் கிடைக்கவில்லை. மச்ச நாட்டில் விராட மன்னனின் மைத்துனன் கீசகன். மிகப் பலசாலியான அவனை, யாரோ இரவில் கொன்று விட்ட செய்தி எங்களுக்குக் கிடைத்தது. அவனைக் கொல்லத்தக்க வலிமை வீமன் ஒருவனுக்கு மட்டுமே உண்டு என்பதால், மச்ச

நாட்டில் பாண்டவர்கள் மறைந்து வாழக் கூடும்.'' தூதுவர்களின் இந்தத் தகவலைக் கேட்ட பிறகுதான், பாண்டவர்களை அடையாளம் காணும் பொருட்டு, மச்ச நாட்டின் மேல் படை எடுத்து வந்தான் துரியோதனன்.

துரியோதனனின் நட்பு, மன்னனான திரிகர்த்தராசன் மச்ச நாட்டின் தெற்கெல்லையை முற்றுகையிட்டு, விராடனுடைய ஆநிரைகளைக் கவர்ந்து கொண்டான். அத்தகவலைக் கேள்விப்பட்டு விராடன் மிகவும் வருத்தம் கொண்டான். ''எதிரிகள் பலருக்குச் சிம்ம சொப்பனமாக இருந்தானே என் மைத்துனன் கீசகன். அவன் உயிரோடு இருந்திருந்தால் எனக்கிந்தத் துன்பம் வந்திருக்குமா?'' என்று விராடன் வேதனை கொண்டான்.

விராடனின் மைத்துனன் ஆகிய கீசகனைப் பிறர் அறியாதபடி துவந்த யுத்தம் செய்து கொன்று போட்டவன் உண்மையில் வீமனே ஆவான். விராடனின் மனைவி சுதேட்டிணைக்கு ஒப்பனை மகளாகப் பணியாற்றிய துரோபதையின் மேல் காமம் கொண்டு, அவளிடத்தில் அவன் தகாத முறையில் நடந்து கொண்ட காரணம் பற்றியே சுதேட்டிணையின் தம்பியும், மச்ச நாட்டின் தளபதியுமான கீசகனை வீமன் கொல்ல நேர்ந்தது. கீசகன் இறந்து விட்டபடியால் இனி எதிரிகளை வெல்வது எப்படி சாத்தியமாகும் என்று வருத்தப்பட்ட விராடனுக்கு கங்கபட்டராக மறைந்து வாழ்ந்த தருமரே ஆறுதல் கூறினார். ''கவலை வேண்டாம்! நான் இப்பொழுது துறவியாக இருந்தாலும் ஒரு காலத்தில் போர்க்களப் பயிற்சிகள் பெற்றுப் பல யுத்தங்களில் போர் செய்தவனே. பலாயனன், தாமகிரந்தி, தந்திரிபாலன் ஆகிய இவர்களையும் அழைத்துக் கொண்டு போய், எதிரியை வெல்லலாம்' என்று தருமர் விராடனுக்கு ஆறுதல் கூறிப் பின், அவ்வாறே அனைவரும் புறப்பட்டுப் போய் தெற்கெல்லையை முற்றுகையிட்டிருந்த திரிகர்த்தனுடன் போர் புரிந்து வெல்லலானார்கள்.

திரிகர்த்தன் மச்ச நாட்டின் தெற்கெல்லையில் போர் செய்து கொண்டிருந்த அதே நேரத்தில், துரியோதனன் தானும் தன்னுடைய படைகளோடு வந்து, மச்ச நாட்டின் வடக்கெல்லையை முற்றுகையிடலானான். பாண்டவர்கள் மச்ச நாட்டில் மறைந்து வாழ்வார்களானால், மச்ச நாட்டை பல புறங்களிலும் தாக்கினால் பாண்டவர்கள் வெளிப்பட்டு நிச்சயம் போரிட வந்தே தீருவார்கள் என்பது துரியோதனனின் கணிப்பு.

துரியோதனன் மச்ச நாட்டின் வடக்கெல்லையை முற்றுகையிட்டு விராடனின் ஆநிரைகளைக் கவர ஆரம்பித்த வுடனே, தூதுவர்கள் விரைந்து வந்து சுதேட்டிணையிடம் விவரத்தைத் தெரிவித்தார்கள். அப்பொழுது சுதேட்டி ணைக்குத் துணையாக அரண்மனையில் அவனுடைய இளைய மகனும் சிறுவனுமாகிய உத்தரன் மட்டுமே இருந் தான் என்பது குறிப்பிடத் தக்கது. உத்தரன் இளையவ னாக இருந்தாலும் வீரத்தில் மிகவும் பெரியவனாக விளங்கி னான் என்பதைத்தான் நாம் இங்கே காணப் போகிறோம்.

''வடக்கெல்லையைத் துரியோதனன் முற்றுகையிட்டு விட்டான்'' என்பதைக் கேட்ட அளவிலே உத்தரன் வீரம் பொங்கத் தன் தாயிடம், ''அம்மா! எதிரிகளின் கடலளவு படையை நான் ஒருவனே எதிர்த்து, கண் இமைக்கும் நேரத்தில் புறமுதுகிட்டு ஓடச் செய்வேன். எனக்கு இப்பொழுது தேர் செலுத்த ஒரு சாரதி மட்டுமே தேவை'' என்று கூறினான்.

**''கனைகடற் படையுடன் நிரைக் கணங்கவர்ந்தவரே**
**முனைபடப் பொருதிமைக்குமுன் முதுகு கண்டிடுவேன்**
**வினை முகத்தினை அறிந்து தேர் விசையுடன் விட என்**
**நினைவொ டொப்பதோர் சாரதி நேர்ந்திலன் என்றான்''**

(நிரை மீட்சிச் சருக்கம், 30)

வயதில் இளையவனாக இருந்த போதிலும், தன் நாட்டைக் காக்கத் துடித்து எழுந்த உத்தரனின் வீரத்தை எப்படிப் புகழ்வது? அவனுடைய வீர உரையைக் கேட்ட சுதேட்டிணையும், அவனை ஈன்ற பொழுதினும் பெரிதும் மகிழ்ந்து பூரித்துப் போனாள். சுதேட்டிணையுடன் அங்கே அப்பொழுது இருந்தவளாகிய விரதசாரிணி (துரோபதை) ''இளவரசே! கவலை வேண்டாம்! உத்தரைக்கு நாட்டியம் கற்பித்து வரும் பேடியளாகிய பிருகந்நளை நன்றாகத் தேர் ஓட்டக் கூடியவள் என்று பிறர் கூற நான் கேட்டிருக்கின்றேன். அவளையே தாங்கள் தேரோட்டியாகக் கொள்ளலாம்'' என்று கூறப் பிருகந்நளையையே தேரோட்டியாகக் கொண்டு துரியோதனனை வெல்லப் புறப்பட்டான் விராடனின் வீரமகனாகிய உத்தரன்.

பிருகந்நளை எனும் பெயரில் உத்தரனுக்குத் தேரோட்டியான அர்ச்சுனனும், சிறுவன் உத்திரனின் துணிவைக் கண்டு பெருமிதம் கொண்டான். பிருகந்நளை தேரோட்ட உத்தரனும், துரியோதனன் முற்றுகையிட்டிருந்த வடக்கெல்லையை வந்து அடைந்தான். அங்கே திரண்டிருந்த துரியோதனன் படையையும், வீடுமர், விதுரர், துரோணர், கிருபர், அசுவத்தாமா, கர்ணன் போன்ற மாபெரும் வீரர்களையும் பார்த்த மாத்திரத்தில் பாலனின் வீரம் பறந்து போய் விட்டது. பயத்தினால் உத்தரன் கைகளும் கால்களும் நடுங்க மயங்கி விழப் போனான். அப்பொழுது உத்தரனைப் பிருகந்நளை தேற்றினாள்.

''அஞ்சல் அஞ்சல்நீ பகைவரை ஆருயிரடுதல்
துஞ்சல் என்றிவை இரண்டலால் துணிவு வேறுண்டோ?
வெஞ்சமர் தனில் வந்து புண்படா தினிமீண்டால்
வஞ்ச நெஞ்சுடை வஞ்சியர் என்சொலார் மறவோய்''

(நிரை மீட்சிச் சருக்கம் 37)

''வீரனே!'' என்று உத்தரனை விளித்து பிருகந்நளை ''பகைவரைக் கொல்ல வேண்டும், இல்லாவிட்டால் வீரமரணத்தை அடைய வேண்டும். இந்த இரண்டில் ஒன்றைச் செய்து, மேனியில் விழுப்புண்களைப் பெறாவிட்டால், மங்கையர்கள் நகைக்க இடமாகுமே!'' என்பதாக உத்தரனின் வீரவுணர்ச்சியைத் தூண்டியும் கூட உத்தரனின் பயம் தெளிந்த பாடில்லை. உத்தரன், தனக்கு வீரம் உரைப்பவள் ஒரு பேடி தானே என்று எண்ணியவனாய், மேலும் தேரில் இருப்பது ஆபத்தாகும் என்று அஞ்சித் தேரை விட்டு இறங்கி, ஓட்டமும் பிடித்தான். ''ஓடாதே! நில்!'' என்பதாகப் பிருகந்நளையும் உத்தரனை விரட்டிப் போய் பிடித்து வந்து, அவனைத் தேரிலேயே நிற்க வைத்து, அவன் ஓடிப் போகாமல் இருக்கக் கயிறு கொண்டும் கட்டினாள்.

இந்த வேடிக்கையைத் துரியோதனனின் படைகள் இப்படிப் பார்க்கவும் நகைக்கவும் கேலிக்காளான உத்தரன், பிறகு பிருகந்நளையை அர்ச்சுனன் என்பதாகத் தெரிந்து கொண்டு, அதன் பின் பெரு வீரனாகத் தானும் மாறிப் போனான் என்பதுவே நாம் இங்கே குறிப்பிடத்தக்கது. அஞ்ஞாத வாசத் தொடக்கத்தின்போது பாண்டவர்கள் மச்ச நாட்டெல்லையில் அமைந்திருந்த வன்னி மரம் ஒன்றின் பொந்தினில் தங்களுடைய ஆயுதங்களை எல்லாம் கட்டி மறைத்து வைத்திருந்தனர்.

உத்தரனைத் தேரில் கட்டிப் போட்ட பிருகந்நளை தானே அந்த வன்னி மரத்தை நோக்கித் தேரைச் செலுத்திக்கொண்டு போய் நிறுத்தினாள். உத்தரனின் கட்டுக்களை அவிழ்த்துவிட்ட, பிருகந்நளை வன்னி மரத்தின் பொந்தினில்இருந்த காண்டீபத்தை எடுத்துவரக்கூறி, உத்தரனும் அவ்வாறே எடுத்த வந்த பின், தான் அர்ச்சுனன் என்ற உண்மையையும் உத்தரனுக்கு உணர்த்துகின்றாள் பிருகந்நளை. அர்ச்சுனனே பிருகந்நளை என்பதைத் தெரிந்து கொண்ட பிறகு உத்தரனின் பயமும் தெளிகிறது. அதன் பிறகே உத்தரன் உண்மையில் வீரனாக, அர்ச்சுனனுக்குத்

தேரோட்டும் சாரதியாகச் செயல்பட்டு, துரியோதன னின் படைகளை அர்ச்சுனன் வெற்றி கொள்ள உற்ற துணைவன் ஆகிறான்.

> ''அறிந்து தாள் விழுந் தெழுந்து பின் ஆங்கவண் அருளால்
> செறிந்தமால் பெருஞ் சிறப்பே இச்சிறுவனும் பெற்றுப்
> பிறிந்த பற்பல பேரணி நால்வகைப் படையும்
> முறிந்துபோக அத்தேர் விடு தொழிலினில் மூண்டான்''
> (நிரை மீட்சிச் சருக்கம், 46)

என்று வில்லிப்புத்தூரார், அர்ச்சுனனுக்குச் சாரதியாகும் பேறு திருமாலுக்கு வாய்த்தது போல் சிறுவனாகிய உத்தர னுக்கும் வாய்த்தது என்று கூறிப் பாராட்டுவதைக் காணு கின்றோம்.

இவ்வாறு அர்ச்சுனனால் வீரனாக்கப்பட்ட உத்தரனே பாரதப் போரின் முதல்நாள் போரில் அர்ச்சுனனுக்குத் துணையாகப் போரிட்டுச் சல்லியனை எதிர்த்துத் தன்னு டைய வீரத்தைக் காட்டிச் சல்லியன் மேல் அம்பு மழையைப் பொழிந்து இறுதியில்சல்லியன் எறிந்த வேலால் வீரசொர்க் கம் அடைந்ததைச் சென்ற அத்தியாயத்தில் கண்டோம். இவ்வாறு உத்தரன் மிகச் சிறிய வயதில் பெரியசெயல்கள் எல்லாம் செய்து நம்முடைய நெஞ்சங்களில் எல்லாம் நீங்காத ஒரு இடத்தைப்பெற்று மாண்டு போய் விடுகிறான். அவனுடைய மரணத்தால் பாண்டவர்கள் கொண்ட துன்பம் பெரிது. பாண்டவர்களின் தளபதியான சுவேதன் கொண்ட துன்பமோ பெரிது பெரிது.

தன் தம்பியைக் கொன்ற சல்லியனைக் கொல்வதன் மூலம் தன் துயரத்தைத் தணித்துக் கொள்ளத் துடிக்கிறது ஆத்திரம்கொண்ட அவன் ஆவேசமனம். அவனும் அர்ச்சுன னைப் போலவே நீண்ட நெடுங்காலம் சிவபெருமானை நோக்கித் தவமிருந்து சிவபெருமான் அளித்த வில்லை வரமாகப் பெற்றவன். தன் தம்பியைக் கொன்றவனைக்

கொல்லப் பயன்படாமல் போகுமோ சிவன் வில் என்று ஆத்திரம் கொண்டு, எதிர்ப்பட்டவர்களையெல்லாம் எமனுலகிற்கு அனுப்பி வைத்தவாறே, சல்லியனையும் கண்டுபிடித்து, அவனையும் தன் தம்பி சென்ற எமன் உலகிற்கே அனுப்பி வைப்பதற்காக அம்புகளைத் தொடுக்கின்றான் சுவேதன்.

சுவேதனுடைய வில்லிலிருந்து சீறிடும் அம்புகள் சல்லியனின் உயிரைக் குடிக்கத் துடிக்கின்றன. சல்லியனும் மாபெரும் வீரனாகையால் எதிர்க் கணைகளைத் தொடுத்துச் சுவேதனின் தாக்குதலைச் சமாளிக்கிறான். எனினும் சுவேதனுக்கு ஈடுகொடுக்க முடியாமல் சல்லியன் தடுமாறுவதையும், எந்த நேரமும் சல்லியன் சாவை அணைத்துக் கொள்ளநேரிடலாம் என்பதையும் அனுமானிக்கும் துரியோதனன், தன்னுடைய தம்பிகள் அறுவரை அவசரமாக அழைத்துச் சல்லியனைப் பாதுகாத்துப் போரிடுமாறு அனுப்புகிறான். அறுவர் என்ன? அறுபது பேர் திரண்டு வந்தாலும் அடங்குவதோ சுவேதனின் ஆத்திரம்! சுவேதனின் வில்லிலிருந்து புறப்படும் அம்புகள், துரியோதனனின் தம்பிமார்கள் அறுவரின் வில்லையும் இரண்டிரண்டாக்கி முறித்துப் போடுகிறது என்றால் என்னே அவன்தன் வில்லாற்றல்!

''முரண்கெடதிரு மன்னவர் முரண்கொள்
சிலையோரொன்று
இரண்டு சிலையாக ஒரு வீரன் இவைசெய்தான்
திரண்டுவரு மன்னர் முடிசிந்தியுடன் மண்மேற்
புரண்டுவிழ வாளிமழை தூவு புயல்போல்வான்''
(முதற்போர்ச் சருக்கம் 53)

எப்படிப் பெரும்புயலில் மரங்கள் பல வேரற்றுச் சாயுமோ அப்படி சுவேதனை எதிர்ப்பவர்கள் எல்லாம் முடிசிந்திச் சாய்கின்றனர். சுவேதனின் ஆவேசத்தினால் துரியோதனனின் படைகள் அனைத்தும் அன்றைய நாள் மாலைப் பொழுதிற்குள்ளேயே முழுவதும் மடிந்துபோய் விடுமோ

என்று அஞ்சத்தக்க அளவிற்குச் சுவேதன் வடவாக்கினியைப் போலக் கொதித்தெழுந்து போர் செய்கின்றான்.

துரியோதனனின் தம்பிகள் அடுத்தடுத்து ஓடி வந்து சல்லியனைக் காக்கச் சுவேதனோடு போர் செய்து சிறிது நேரம் கூட நின்று போர்செய்ய முடியாமல் வந்தவழியே திரும்பி ஓடிவிடுகிறார்கள். இக்கட்டான இந்த நிலையில் சல்லியனின் உயிரைக் காக்கத் துரியோதனனின் படைத் தளபதி வீடுமரே வந்து முன்நின்று போர்செய்ய வேண்டிய நிலை ஏற்படுகிறது.

வீடுமரின் வில்லாற்றல் வையம் அறிந்த ஒன்று. பரசுராமரிடம் படைக்கலப் பயிற்சி பெற்ற பெரும் வீரராகிய வீடுமர், தம்முடைய குருவையே மிஞ்சிய சீடர். ஒரு சமயம் பரசுராமரே அவருடன் போர் செய்ய வந்தபோது, அவரையே தம்முடைய வில்லாற்றலால் தோற்று ஓடிப் போக வைத்தவர். அத்தகைய வில்லாற்றல் வாய்ந்த வீடுமரே அன்றைக்குச் சுவேதனிடம் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல.

மத்திர நாட்டு மன்னன் சல்லியன். மச்ச நாட்டு இளவரசன் சுவேதன். வீடுமர் தன்னுடன் போர்புரிய முன்வந்ததும் சல்லியனை விட்டு வீடுமருடன் பொருகின்றான் சுவேதன். சுவேதன் விடும் முதல் அம்பே, வீடுமரின் வில்லை இரண்டாக்கி முறித்து விடுகிறது. புலி போன்ற வலிமை வாய்ந்த வீடுமர் சுவேதனுக்காற்ற முடியாமல் சித்திரம்போல் திகைத்து நிற்கிறாராம். இதனை வில்லிப்புத்தூரார்.

**''மத்திரனை விட்டு மிசைவந்த மகிபதிமேல்**
**அத்திரமும் விட்டு அவன் அடற்சிலைய றுத்தான்**
**சித்திரம் எனும்படி திகைத்தனன், விராடன்**
**புத்திரன் விடும்கணை பொறாது புலிபோல்வான்''**

(முதற்போர்ச் சருக்கம் 66)

என்று பாடியிருக்கக் காண்கிறோம்.

போர்க்களத்தில் வீரர்கள் தம்முடைய தேரில் ஒன்றுக்கு மேற்பட்ட விற்களையும், வாட்களையும், கதாயுதங் களையும், கணக்கற்ற அம்புகளையும் வைத்திருப்பார்கள். அவ்வாறே அவர்கள் ஏறி நின்று போர் செய்யப் பயன் படுத்தும் தேர்களும் கூட ஒன்றுக்கு மேற்பட்டனவாக அவர் களுக்கு உதவ தயார் நிலையில் வைக்கப் பட்டிருக்கும். வீடுமர் தன்னுடைய வில்லைச் சுவேதன் முறித்த அளவில் வேறொரு வில்லைப் பாய்ந்து எடுக்கிறார். ஆனால் அவர் அந்த வில்லை எடுத்தாரோ இல்லையோ, சுவேதன் அதனையும் தன் அம்பால் இரண்டாக்கி விடுகிறான்.

சுவேதனின் வில்லிலிருந்து பலப்பல அம்புகள் பாய்ந்த வண்ணம் இருக்கின்றன. அவற்றில் ஒன்று வீடுமரின் தேர்க் கொடியை அறுத்துத் தள்ளுகிறது. மற்றொரு அம்பு தேர்ப் பாகனைக் கொல்கிறது, மற்றும் பல அம்புகள் தேர்க் குதிரைகள் மேல் பாய்ந்து அவற்றை யெல்லாம் கொன் றழிக்கின்றன. துரியோதனன் சல்லியனைக் காப்பாற்ற வீடுமரை அனுப்பப் போய், இப்பொழுது வீடுமரையே காப் பாற்ற பல மன்னர்களை அனுப்ப வேண்டி இருக்கிறது.

வீடுமரைக் காப்பாற்ற குகுரதேசத்தரசனையும், மற்றும் ஐந்து நாட்டரசர்களையும் அனுப்பி வைக்கின்றான் துரியோதனன். சுவேதனோ சற்றும் சளைத்திடாமல் தன்னை எதிர்த்து வந்த மன்னர்கள் எல்லாம் புறமுதுகிட்டு ஓடும்படியாக அம்புகளைத் தொடுத்த வண்ணமாக இருக் கின்றான். சுவேதனின் வீரத்தை அன்றைக்குப் பாராட்டிப் பேசாதவர்களே கிடையாது என்று கூறும்படியாக அவனைப் பாண்டவர் அணியினரும் பாராட்டுகிறார்கள். துரியோ தனன் அணியினரும் பார்த்து மெய்சிலிர்க்கிறார்கள். பாரதப் போரினை வானில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும் தேவர்கள் எல்லோரும்கூட சுவேதனின் வீரத்தைக் கொண்டாடுகிறார்கள்.

இவ்வாறான தேவர்களில் சிலர் சுவேதனைக் கொல் வதற்கு வஞ்சகமான ஒரு ஆலோசனையையும் வீடுமரிடம்

கூறுகிறார்கள். ''சுவேதன் கையில் வைத்திருப்பது சிவ பெருமான் கொடுத்த வில். அந்த வில் அவன் கையில் இருக்கும் வரையில் அவனை வெல்லுவது இயலாது. அவனை வேறு வகையில் வஞ்சகமாகத்தான் கொல்ல வேண்டும்'' என்று தேவர்கள் சிலர், வீடுமருக்கு ஆலோசனை கூறுகிறார்கள். வீடுமரும் சுவேதனும் நேருக்குநேர் நின்று போர் செய்து கொண்டிருக்கும் போது வீடுமருக்கு மட்டும் இத்தகைய ஆலோசனையைத் தேவர் கள் வழங்குகிறார்கள் என்றால் அதற்கான காரணத்தை நாம் இங்கே தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம் ஆகும்.

முற்பிறப்பில் வீடுமர் மனிதர் அல்ல. அவரும் தேவரே. அத்வரன், அநலன், அநிலன், ஆபன், சோமன், துருவன், பிரத்யூஷன், பிரபாஷன் இவர்கள் அஷ்டதேவர்கள் ஆவர். இவர்களுள் பிரபாஷன் என்ற தேவனாகப் பிறந்திருந்தவரே வீடுமர். தன்னுடைய மனைவியின் தகாத வார்த்தையைக் கேட்டு வசிட்ட மகரிஷியின் வசமிருந்த காமதேனுப் பசுவைக் களவாடிய குற்றத்தைப் புரிந்தான் பிரபாஷன். அவனுடன் மற்றைய ஏழுதேவர்களும் காமதேனுவைக் களவாடத் துணைபுரிந்தனர். வசிட்ட மகரிஷி காமதேனு வைக் களவாடிய குற்றத்திற்காக எண்மரையும் சபித்தார். மனைவியின் தூண்டுதலால் குற்றம் புரிந்த பிரபாஷன் பெண் இன்பம் அற்று, நீண்ட நெடுங்காலமாக பூமியில் மனிதனாய் பிறந்து வாழவேண்டும் என்பதும், மற்றைய ஏழு தேவர்கள் பூமியில் பிறந்தவுடனே இறந்து மீண்டும் தேவராகலாம் என்பதும் வசிட்டர் தந்த சாபம்.

இவ்வாறு சபிக்கப்பட்ட பிரபாஷன் என்ற தேவனே தேவவிரதனாகப் பூமியில் வந்து கங்கையின் வயிற்றினில் தோன்றினான். கங்காதேவி பூமியில் பிறக்க நேர்ந்ததும் ஒரு சாபமே. ஒரு சமயம் பிரமதேவனால் கூட்டப் பெற்ற ஒரு கூட்டத்தில் கங்கை போய் கலந்து கொண்டிருந்தாள். அப்போது ஆன்றோர்கள் பலரும் கூடியிருந்த அந்த அவையில் வருணன், கங்கையைக்

காதலுடன் நோக்க, கங்கையும், வருணனையக் காதலுடன் நோக்கினாள். அவைக்கு நாகரிகம் அல்லாத அவ்விருவரின் செயலைக் கண்ணுற்ற பிரமதேவன், ''பூமியில் மானிடராய் பிறக்கக் கடவீர்'' எனக் கொடுத்த சாபத்தால், வருணன் சந்தனு மன்னனாகப் பிறந்தான். கங்காதேவியும் கங்கை என்ற பெயரில் பூமியில் மங்கையாகத் தோன்றினாள். சந்தனு மன்னன் ஒரு நாள் வேட்டைக்குப் போனபோது கங்காநதிக்கரையில் கங்கையைக்கண்டு காதல்கொண்டான். கங்கையை மணக்க விழைவதாகச் சந்தனு தன் விருப்பத்தைத் தெரிவிக்க, கங்கையும் அவனை மணக்க உடன்பட்டு ஒரு நிபந்னையை விதித்தாள். ''திருமணத்திற்குப் பிறகு நான் எத்தகைய கொடிய செயலைச் செய்தாலும் கூட, அதை ஏன் எதற்காக செய்கிறாய். என என்னிடம் கேட்பதில்லை என்று சத்தியம் செய்து தருவாய் ஆனால் உன்னை மணப்பேன்.'' என்றைக்கு நீ என்னுடைய எந்தவொரு செயலையும் தடுத்துக் காரணத்தையும் கேட்கிறாயோ அன்றைக்கே நான் உன்னைவிட்டு நீங்கிவிடுவேன். இதற்குச் சம்மதமானால் மட்டுமே உன்னை நான் திருமணம் செய்து கொள்வேன்'' என்பதாகக் கங்கை கூற சந்தனுவும் கங்கையின் மேல் கொண்ட எல்லையற்ற காதலால் அதற்கு இசைந்து, திருமணம் புரிந்து கொண்டான்.

சந்தனு—கங்கை இல்லறத்தின் பயனாக ஆண் மகவொன்று பிறந்தது. ''குலம் தழைக்க கோமகன் பிறந்தான்'' என்று மன்னனும் மக்களும் மகிழ்ந்திருந்த நேரத்தில் கங்கையானவள் பிறந்த குழந்தையை உடனே தூக்கிச் சென்று கங்கையாற்றில் அமிழ்த்தி அக்குழந்தையைப் பிறந்தநாளிலேயே கொன்றுவிட்டாள். இவ்வாறு முதல் குழந்தையைக் கொன்றதோடு நில்லாமல் இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழாவதாகப் பிறந்த குழந்தை எல்லாவற்றையுமே கங்கையாற்றில் மூழ்கடித்துப் பிறந்த சற்றுநேரத்திற்கு எல்லாம் கொன்று விட்டாள். எட்டாவது குழந்தை பிறந்தவுடன் அக்குழந்தை

யையும் கொல்வதற்காகக் கங்கை தூக்கிச் சென்ற பொழுது சந்தனுமன்னன், முன் தான் அவளுக்குச் செய்து கொடுத் திருந்த சத்தியத்தையும் மீறி ''நீ யார்? பெண்ணா பேயா? ஏழு குழந்தைகளைக்கொன்று தீர்த்த நீ அரக்கியும்தானோ? நீ யாராயினும் இக்குழந்தையைக் கொல்ல அனுமதிக்க மாட்டேன். எதற்காக இப்படி எல்லாம் நடந்து கொள் கிறாய்'' என்று கங்கையைத் தடுத்துக் காரணத்தை வினவியபோது தான், முன்கூறப் பட்ட பிரமதேவன் மற்றும் வசிட்ட மகிரிஷியின் சாப வரலாறுகளை எல்லாம் சந்தனு மன்னனிடம் கங்கை எடுத்துக்கூறி ''பிரபாஷன் என்ற தேவனே இப்பொழுது என் வயிற்றில் பிறந்த இந்த எட்டாவது குழந்தை'' என்ற விவரத்தையும் தெரிவித் தாள்.

கங்கை, திருமணத்திற்கு முன்பு சந்தனு மன்னனிடம் விதித்திருந்த நிபந்தனையின் படியே தன் செயலைத் தட்டிக் கேட்டுவிட்ட மன்னனுடன் தான் இனி சேர்ந்து வாழ இயலாதென்பதையும் தெரிவித்து, தன்னுடைய எட்டாவது குழந்தையைச் சிறிதுகாலம் தானே வளர்த்துப் பின் வேந்தனிடம் ஒப்படைப்பதாக உறுதியும் கூறிக் குழந்தையுடன் கங்கையாற்றிற்குள் மாயமாக மறைந்து போனாள். மகனுடன் மறைந்த கங்கை ''தேவவிரதன்'' என்ற பெயரை அவனுக்கு இட்டு யாருடைய சாபத்தால் அவன் பூமியில் பிறக்க நேர்ந்ததோ அதே வசிட்ட மகரிஷி யிடம் அறிவு நூல் பயிற்சியும், பரசுராமரிடம் அத்திரப் பயிற்சியும் அளித்து அவனை வாலிபனாக்கிப்பின் மறுபடியும் சந்தனு மன்னனிடமே கொண்டு வந்து ஒப்படைத்தாள்.

**''வேந்தகேள் இவனுன் மதலையே தேவவிரதன் என்றிவன்**
**பெயர்பல்லோர்**
**ஆய்ந்த நூல் வெள்ளம் கடந்தனன் கரைகண்**
**டருந்ததிபதி திருவருளால்**

**பூந்துழாய் மாலைப்போர் மழுப்படையோன் பொன்னடி**
**பொலிவுற வணங்கி**
**ஏந்துநீள் சிலையும் பலகணை மறையும் ஏனைய படை**
**களும் பயின்றான்''**
(குருகுலச் சருக்கம், 87)

என்று கூறி, கங்கை தேவவிரதனைச் சந்தனுவிடம் ஒப்படைத்துத்தான் பூமியில் வாழ்ந்து கழித்தாக வேண்டிய காலக்கெடுதீர்ந்து போனபடியால்மறுபடியும் அமராபதிக்கே சென்று சேர்ந்து விடுகிறாள்.

கங்காதேவியால் தெரிவிக்கப்பட்ட இந்த வரலாறுகளின் படி பிரபாஷன் என்ற தேவனே, தேவவிரதனாகப் பூமியில் பிறந்திருப்பதை நாம் தெரிந்து கொள்கிறோம். இந்தத் தேவவிரதனே தன் தந்தையான சந்தனுமன்னன் மீண்டும் யோசனகந்தி என்ற செம்படவர் குலத்தில் தோன்றிய மங்கை ஒருத்தியின் மேல் மையல் கொள்ள, அவளைத்தன் தந்தைக்கு மணமுடித்து வைக்கும் பொருட்டு, யோசன கந்தியின் பெற்றோர் விதித்த நிபந்தனைகளுக்கெல்லாம் உடன்பட்டு ''யோசனகந்திக்குப் பிறக்கும் மக்களே மகுடம் பூணுவர். நான் எனக்குரிய அரசுரிமையைத் தியாகம் செய்து விட்டேன். நான் திருமணம் செய்து கொண்டால், என்மக்கள் வருங்காலத்தில் அரசுரிமையைக் கேட்கவும் கூடும் என்பதால், நான் ஆயுள் முழுவதும் திருமணமே செய்து கொள்ளாமல் பிரம்மச்சரியம் பூண்டு நிற்பேன்'' என்று சத்தியம்செய்து தந்து, 'செயற்கரிய சத்தியம் செய்து தந்தவன்'' என்ற பொருளில் 'வீடுமன்' என விண்ணோரும் மண்ணோரும் வாழ்த்தி வழங்கிய சிறப்புப் பெயரையே பின் தம் பெயராகக் கொள்ளுவதைக் காண்கிறோம்.

இவ்வாறு முற்பிறப்பில் பிரபாஷன் என்ற தேவனாக வாழ்ந்திருந்தவர் வீடுமர் என்பதனாலேயே ''இனம் இனத் தோடு சேரும்'' என்ற பழமொழிக்கேற்ப, தேவர்கள் வேதனை வஞ்சனையால் வெல்லுமாறு வீடுமருக்கு ஆலோ

சனை கூறுகிறார்கள். முற்பிறவியில் மனைவியின் தீய ஆலோசனையால் காமதேனுப் பசுவைக் கவர்ந்து சாபத்துக் காளான வீடுமரே, இப்பிறவியிலும் தேவர்கள் சிலரின் தீய ஆலோசனைக்கிணங்கித் தீராத பழிக்கு ஆளாகப் போவதை இனிக் காணப்போகிறோம்.

''சுவேதா! உனக்கு வில்வித்தை ஒன்றுதான் தெரியுமோ? இரண்டுமுறை என்னுடைய வில்லை முறித்து விட்டாய் என்ற மமதையில் இருப்பவனே! உனக்கு வீரம் இருந்தால் வாளெடுத்து வந்து என்னோடு மோதி உன் ஆற்றலைக் காட்டு பார்க்கலாம்.'' வீடுமர் இவ்வாறு கூற, மாபெரும் வீரனும், வாள்வலிமையிலும் வல்லவனான சுவேதன், வீடுமர் விரும்பியவாறே தன்னுடைய வாள்வலிமையைக் காட்ட விரும்புகின்றான். சிவபெருமானால் அளிக்கப்பெற்ற வில்லினைத் தேரிலே வைத்து விட்டு வாள், ஒன்றை ஏந்தியவனாக ''வீடுமரே வாரும்! வந்து என் வாளாற்றலையும் பாரும்!'' என்பதாகக் கூறித் தேரிலே இருந்து குதிக்கின்றான் சுவேதன்.

வலக்கையில் வாளேந்தி சுவேதன் வீடுமரை நெருங்கி வர, வீடுமரோ தாமும் வாளெடுத்துப் போர் புரிவதற்குப் பதிலாக, புதிய வில்லொன்றை எடுத்து, அதிலே கணையினைப் பூட்டி, சுவேதன் மேல் தொடுத்து, அவனுடைய வாளேந்திய வலக்கையைக் கொய்து வீழ்த்துகிறார் என்றால் அந்தக் கொடுமையை என்னவென்று சொல்லுவது? தன்னுடைய வலக்கை அற்று வீழ்ந்ததோ அல்லது வீடுமரின் வீரமும் புகழுமே அற்று வீழ்ந்ததோ என்பதாக எண்ணிச்சுவேதன் ஒரு நொடி நேரம் திகைத்து நிற்கிறான்.

''வலக்கை போனால் என்ன? இடக்கை இருக்கிறதே! இடதுகையினாலேயே வீடுமருக்கு வாள் வீரத்தைக் காட்டலாம்.'' என்பதாக எண்ணி இடக்கையினால் வாளினை மீண்டும் எடுத்துக் கொண்டு, வீடுமரை நோக்கிப் பாய்

கிறான் சுவேதன். அப்பொழுதேனும் வீடுமர் வில்லை விடுத்து வாளெடுத்து வந்து, சுவேதனுடன் பொருதாரா என்றால் இல்லை. மீண்டும் மீண்டும் சுவேதன் மேல் அம்பு களையே ஏவிடும் வீடுமர், சுவேதனின் ஆருயிரையும் அநியாயமாகப் பறித்துக் கொள்கிறார்.

**''எடுத்தவடி வாளினொடு எண்ணில் பலபாணம்**
**தொடுத்துவரு வீடுமனை மாமுடி துணிப்பான்**
**அடுத்துவரு போதவன் அழன்றொரு சரத்தால்**
**நடுத்தகை உறாமல்அவன் நல்லுயிர் கவர்ந்தான்''**

(முதற்போர்ச் சருக்கம். 68)

இவ்வாறு வஞ்சகத்தால் சுவேதனுடைய நல்லுயிரை வீடுமர் கவர்ந்து, அவர்மேல் பலரும் கொண்டிருக்கும் பெருமதிப் பைப் பாழாக்கிக் கொள்கிறார். தம்பி உத்தரனைக்கொன்ற சல்லியனைப் பழி தீர்க்க முற்பட்ட சுவேதன், தன்னுடைய முயற்சியில் தோற்று வீடுமரின் வஞ்சகத்திற்குத் தன் ஆரு யிரையும் பறிகொடுக்கும் சோகத்தோடு முதல்நாள் போர் இவ்வாறு நிறைவு பெறுகிறது.

முற்பகல் போரில் உத்தரனையும், பிற்பகல் போரில் சுவேதனையும் பலி கொடுத்த பாண்டவர்களுக்கு முதல் நாள் போர் தோல்வியையே தந்தது என்றாலும், ''தருமத்தின் வாழ்வதனை சூது கவ்வும், தருமம் வெல்லும்'' என்பதை இனிவரும் போர்களில் நாம் பொறுத் திருந்து பார்க்கத்தானே போகிறோம்.

# 11

பாரதப் போரின் முதல்நாள் போரில் பாண்டவர்களின் தானைத் தளபதியான சுவேதனும், அவன் உடன் பிறந்த தம்பி உத்தரனும் இறந்துபட, பாண்டவர்கள் மிகுந்த துயரத்திற்கு ஆளாகிறார்கள். மக்கள் இருவரை ஒரே நாளில் பறிகொடுத்த மச்ச நாட்டு மன்னன் விராடனின் துன்பமும் அளவிட முடியாததாகவே உள்ளது. கண்ணபெரு மானும், பாண்டவர்களும் பாண்டவர் அணியைச் சார்ந்த மற்ற பிற மன்னர்களும் விராடனுக்கு ஆறுதல் கூறுகிறார்கள்.

''வஞ்சகத்தால் அல்லவா சுவேதனை வீடுமர் கொன்று விட்டார். வீடுமருக்கு அது பெரும் பழி, சுவேதனுக்கு அதுவே பெரும் புகழ், வீரமரணம் அடைந்த சுவேதனும் உத்தரனும் விண்ணவர்க்கு விருந்தினர் ஆகும் சிறப்பு பெற்ற மையை எண்ணி நாம் ஆறுதல் அடைய வேண்டுமே அன்றித் துயரம் கொள்ளலாகாது'' என்று விராடனைத் தேற்றுகிறார் கண்ணபெருமான்.

அப்பொழுது தருமரும் விராடனை அணைத்து அவன் கண்ணீரைத் துடைத்து ஆறுதலைக் கூறுகிறார். ''காடுகளில் பேய்களைப் போல அரசினை இழந்து அலைந்து கொண் டிருந்த எங்களுக்குத் தாயைப் போல அன்பு காட்டி ஆதரவு அளித்தாய். உன்னுடைய மக்கள் இருவரையும் இன்று எங்க ளுக்காகவே போரில் பலிகொடுத்து விட்டாய். உன்னுடைய வீர மைந்தர்கள் தேவர்களின் வணக்கத்திற்குரியவர்கள் ஆகிவிட்டார்கள். நீ எங்களுக்குச் செய்திருக்கும் பேரு தவிக்கு நாங்கள் என்ன கைமாறு செய்யப் போகிறோம்'' என்று தருமர் கூறி விராடனைத் தேற்ற, மக்கள் இருவரைப்

றிகொடுத்த விராடன், அந்தச் சோகத்திலும், பாண்டவர்
ளுக்குக் கூறும் உறுதிமொழி நாம் எண்ணி எண்ணிப்
ாராட்டத்தக்கதாய் இருப்பது குறிப்பிடத்தக்கது.

**''உன்னுயிர்போல் நீ வளர்த்த உத்தரன் தன்னுயிரும்,**
**உருத்தெழும் சுவேதன்**
**தன்னுயிரும் பேரரசர் தாமிருந்து கொண்டாடச்**
**சமரிலீந்தார்**
**என்னுயிரும் நினதன்றி யாரதுஇனி? சதுர் முகத்தோன்**
**ஈன்றபாரின்**
**மன்னுயிர்க்கு உயிரனையாய்எனவுரைத்தான் வளமலிசீர்**
**மச்சர்கோமான்''**

(முதற்போர்ச் சருக்கம், 87)

ிரம்மதேவனால் படைக்கப்பட்ட அனைத்துயிர்களுக்கும்
ிரைப் போன்ற தருமரே! உம் உயிரைப் போல உம்மால்
சம் காட்டி வளர்க்கப்பட்ட உத்தரனும், போரென்றால்
ாங்கியெழக் கூடிய சுவேதனும், உமக்காக உயிர் கொடுத்
புகழ் கொண்டு விட்டார்கள். இனி எஞ்சியிருக்கக் கூடிய
னுயிரும் உமக்கே உரியது. அதனையும் உம்பொருட்டே
தல்லால் வேறென்ன செய்யப் போகிறேன் நான்?''
று கூறிப் புகழின் உச்சிக்கே விராடன் போய்விடுவதைப்
த்து நாமும் புளகாங்கிதம் அடைகிறோம்.

நம்முடைய பாரத பூமி பழம்பெரும் பூமி; வீரமும்
ம் இம்மண்ணோடு பிறந்த பெருமை உடையவை.
 சமாதானத்திற்கு உயிர் உண்டாகுமானால் அது
 மண்ணிலேதான் உருவாகும். உலுத்தர்கள் சிலர்
ந்த வெறிபிடித்துப் போருக்குச் சிந்து பாடுவார்களே
ால், அவர்களின் தலைக்கனம் தீர வீரத்தின் இலக்
ம் உரைக்கப்படுமானால் அதுவும் இந்த மண்ணிலே
 உருவாகும். அப்படிப்பட்ட ஆண்மை பூமியே இந்த
 பூமி. முறத்தால் புலியை விரட்டிய வீரப் பெண்கள்

அறத்தோடு மறம்காத்த அற்புத சரித்திரங்கள் ஒன்றல்ல ஓராயிரம் இம்மண்ணுக்கே உரியவை.

தமிழ்ச்சங்கம் தழைத்திருந்த நம் தமிழகத்தில் தோன்றி வாழ்ந்திருந்த ஒரு தமிழ் நங்கை முன்னாளில் நடைபெற்ற போரொன்றில் முகம் மலர்ந்து தன்னை யீன்ற தந்தையை முதல் நாள் போரில் பலிகொடுத்தாள். தன்னுடன் பிறந்த சகோதரனையும் பலிகொடுத்தாள் மறுநாள் போரில். மூன்றாம் நாள் போரில் அவளுடைய அங்கம் தழுவிய ஆண்மைக் கணவனையும் பலிகொடுத்தாள்.

தந்தையை, சகோதரனை, கணவனை அடுத்தடுத்த நாட்களில் நாட்டிற்காகப் பலிகொடுத்துவிட்ட அந்த நங்கையின் வீரம் அவள் கொண்ட சோகத்தால் சிறிதும் மட்டுப்பட்டுவிட வில்லை. நான்காம் நாள் காலையிலும் போர்ப்பறை முழங்கக் கேட்டாள் அந்தத் தமிழ் நங்கை. வீட்டு வாசலில் விளையாடிக் கொண்டிருந்த ஐந்து வயதும் நிறையாத தன் வாரிசான ஒரே மகனை வாரி அணைத்துக் கன்னத்தில் முத்தமிட்டு, அவனுக்குப் போர்க் கோலமும் தானே புனைந்து, கையிலே வாளும் கேடயமும் கொடுத்து, ''மகனே போருக்குப் போய் வா, மாற்றானை வென்று மண்ணின் மானம் காத்து வா,'' என்று ஆர்வமுடன் கூறி அனுப்பிவைத்தாள். அத்தகைய வீரக்காட்சிகள்—பிற நாட்டிலக்கியங்களில் எளிதில் காணக்கிடைக்காத ஏற்ற முறும் காட்சிகள் எத்தனையோ உண்டு நம்முடைய இலக்கியங்களிலே. இந்த மண்ணில் பிறந்த மங்கையர்க்கே இத்தகைய வீரம் இருக்குமானால், ஆடவர்களின்வீரத்தைக் கேட்கவா வேண்டும்? அத்தகைய வீரர்களில் ஒருவனாகிய விராடன் தன்னுடைய புத்திரர்களின் உயிர்போனமைக்குச் சற்றும் கலங்காமல் தானும் தன்னுயிரைப் பாண்டவர்களுக்காக அர்ப்பணிக்கத் தயார் எனக் கூறுவதைக் கேட்டு நாமும் அகம் மகிழ்ந்து போகிறோம்.

அன்றைய இரவில் பாண்டவர்கள் அணியில் ஒருவருக் மே உறக்கம் வரவில்லை. ஐந்துநாள் நடைபெறும் கிரிக் கட்டுப் போட்டியில் முதல் நாள் விளையாட்டில் அத் னை மட்டையாளர்களையும் இழந்து சொற்ப ஓட்டங் ளையே எடுத்திருக்கும் அணி, மறுநாள் விளையாட்டிலே ும் தம்பகை அணியைப் பழிதீர்க்க எண்ணித் துடிதுடித்துத் ூங்காமல் எப்போது விடியும் என எதிர் பார்த்திருக்கும் ல்லவா ! அதைப்போலவே முதல் நாள் போரில் தோல்வி யக் காணநேர்ந்த பாண்டவர் அணியினரும் துரியோதனா யரைப் பழி தீர்க்க எப்போது விடியும் எனத்துடித்துக் காண்டிருக்கின்றனர். வெற்றி எவர்பக்கம் என்பதைக் ண்டறியும் ஆசையால், ஆதவனும் சீக்கிரமாகவே தோன்றி ர இரண்டாம் நாள் யுத்தமும் ஆரம்பிக்கிறது. பாண்டவர் ணிக்குப் பாஞ்சால மன்னன் துருபதனின் மகனாகிய ட்டதுய்மனைத் தளபதியாக்குகிறார் கண்ணபெருமான்.

**''சோனை மேகமென்ன வாளிதூவு திட்டதுய்மனைச்**
**சேனை நாதனாகி நீ செருச்செய்கென்று செப்பினான்**
**வானை யாதி பூத பேதமாகி மாயையாய்**
**ஏனைஞான ரூபியாகி யாவுமாய எம்பிரான்''**

—இரண்டாம் போர்ச்சருக்கம்-2

ஞ்சாலன் மகனாகிய திட்ட துய்மனைப் பார்த்தசாரதி கிய கண்ணபெருமான் பாண்டவர் அணிக்குத் தளபதி க்குவதற்கும் முக்கிய காரணம் இருக்கின்றது. திட்ட ்மன் துரோணரைக் கொல்வதற்காகவேசிவபெருமானின் நளால் தோன்றியவன். அவன் தோன்றிய அந்த லாற்றை நாம் இந்த நேரத்தில் தெரிந்துகொள்ள வேண் ுது அவசியமாகிறது.

துரோணரும், பாஞ்சால நாட்டு இளவரசன் ஆகிய கசேனனும் ஒருசாலை மாணாக்கர்கள். அங்கிவேசன் ற முனிவரிடத்தில் இருவரும் ஒன்றாகப் படைக்கலங்

களைப் பயின்றவர்கள். அவ்வாறு பயின்ற காலத்தில் யாக சேனனுக்குத் துரோணர் உற்ற நண்பராக விளங்கி, அவனுக்கு எளிதில் கைவராத ஆயுதக் கலைகளை எல்லாம் அன்போடு கற்பித்து வந்தார். யாகசேனனும் துரோணரி டத்தில் நன்றி பாராட்டித் தான் பாஞ்சால தேசத்தின் மன்னன் ஆனவுடன் தன் நாட்டில் பாதியைத் துரோண ருக்கு வழங்குவதாக உறுதி கூறினான். படைக்கலப் பயிற்சிகள் நிறைவு பெற்றவுடன் இருவரும் தம்தம் ஊர்களுக்குப் போய்ச் சேர்ந்தனர். தந்தைக்குப்பின் பாஞ்சால நாட்டின் மன்னன் ஆனான் யாகசேனன். துரோணரும் கிருபி என்ற மங்கையை மணந்து ''அசுவத் தாமன்'' என்ற ஆண்மகவிற்குத் தந்தையானார். குழந்தைக்குப் பாலும் வாங்கி ஊட்ட இயலாத வறுமைத் துன்பத்திற்கு ஆளானார் துரோணர்.

இவ்வாறு கொடிய வறுமையில் வாட நேர்ந்தபோது தான் அவருக்கு யாகசேனன் தன்னுடைய நாட்டில் பாதிவழங்குவதாகக் கூறிய உறுதிமொழி நினைவிற்கு வந்தது. காடு மலைகளைக் கடந்து பல நாட்கள் நடந்து போய் பாஞ்சால மன்னனாய்க் கோலோச்சிய யாகசேன னைக் கண்டார் துரோணர். நீண்ட நெடு நாட்களுக்குப் பின் தன்னைத் தேடிவந்த துரோணரை யாகசேனன் நடத்திய விதம் அவருக்கு அதிர்ச்சியாக இருந்தது. அங்கிவேச முனிவரிடத்தில் ஒன்றாகப் படைக்கல பயிற்சிகள் பெற்றதையும் துரோணரின் உதவியால் தானும் வித்தை களில் தேறியதையும் நினைவு கொள்ளாமல் துரோணரை அவமானப்படுத்துவதைப் போல ''நீ யார்?'' என்று வினவினான் யாகசேனன்.

துரோணர் யாகசேனனின் ஆணவத்தைக் கண்டு அதிர்ச்சியுற்றாலும் ''யாகசேனா! நீ அன்றைக்கு உறுதி கூறிய பாதி நாட்டை நான் பெற வந்திருப்பதாக எண்ணியா அச்சப்பட்டு 'யார் நீ' என்று என்னையே தெரியாதவன் போல் வினவுகிறாய்? நீ தந்த வாக்குறுதியை

நீ மறந்தாலும், என்னால் அடைந்த நன்மைகளை நீ மறவாதே! எனக்கு நாடு வேண்டாம். என் மகன் பசியால் நலிகிறான். அவனுக்கு பாலூட்ட ஒரு பசுவினை எனக்கு அளித்தால் அது எனக்குப் போதும்'' என்று வேண்டினார் துரோணர். ஆனால் மன்னனாகி விட்ட மமதையில் மனிதாபிமானமும் மறந்துபோன யாகசேனன் ''யானோ மன்னன்; நீ ஏதுமில்லாத முனிவன். உனக்கும் எனக்குமா நட்பு? நீ உதவி செய்ய நான் வித்தை கற்றேனா?'' என்று ஏகத்தாளமாக நகைத்து, துரோணரை ஏசி இகழ்ந்ததோடு ''உளறுகின்ற இந்த பித்தனை ஊரைவிட்டுத் துரத்துங்கள்'' என உத்தரவு இடலானான்.

யாகசேனனின் நன்றி கொன்ற செயலுக்கு நல்ல பாடம் புகட்ட விரும்பிய துரோணர், ''என்னால் வித்தைகளைப் பயின்று இன்றைக்கு என்னையே அவமானப்படுத்தும் உன்னை நான் வாளாவிட மாட்டேன். என்னிடம் வித்தை கற்கும் மாணவனைக் கொண்டே உன்னை வென்று உன்னைத் தேர்க்காலில் கட்டி வரச்செய்வேன். உன் அரசை யும் கவர்வேன், இது உறுதி'' என வஞ்சினம் செய்தார். அதன் பிறகே அத்தினாபுரம் அடைந்து வீடுமரால் பாண்டவர்களுக்கும் துரியோதனாதியர்க்கும் படைக்கலப் பயிற்சியளிக்கும் ஆசானாய் அமர்த்தப் பெற்றார்.

துரோணர் தாம் செய்தசத்தியம் பொய்க்காத வண்ணம் அர்ச்சுனனுக்குத் தாம் பயின்ற வித்தைகளை எல்லாம் கற்பித்து அர்ச்சுனனைக் கொண்டே பின் யாகசேனனையும் வென்று, தேர்க்காலில் கட்டிவரச் செய்தார். அர்ச்சுனனும் துரோணருக்குத் தன்னுடைய குருதட்சிணையாக இவ்வாறு யாகசேனனை வென்று, தேர்க்காலில் கட்டி வந்து அவனைத் தன் குருவிடம் சேர்ப்பித்தான். முன்னொரு நாளில் பாஞ்சால நாட்டில் தம்மை அவமானப்படுத்திய யாகசேனனைப் பின்னொரு நாளில் தம் முன் அவமானப் பட வைத்த துரோணரும், அர்ச்சுனனால் தமக்கு அளிக்கப் பட்ட பாஞ்சால நாடு முழுவதையும் தானே ஏற்றுக்

கொள்ளாமல் அங்கிவேசனிடம் பயின்ற காலத்து அவன் உரைத்த உறுதிமொழிப்படியே பாதியைத் தான் ஏற்றுக் கொண்டு மற்ற பாதி நாட்டை யாகசேனனே ஆள அவனுக்கு அளித்து அவனை உயிரோடு அனுப்பி வைத்தார்.

இவ்வாறு துரோணரால் பாடம் புகட்டப் பெற்ற யாகசேனன், துரோணரைக் கொன்று அவரை பழிதீர்த்துக் கொள்வதற்கு ஒரு மகனையும், தன்னையே வெற்றி கொண்ட சிறுவனான அர்ச்சுனனைப் பாராட்டும் முகத் தான் அவனுக்கு மணம் செய்து வைக்க ஒரு மகளையும் பெறுவதற்காக மாபெரும் புத்திரகாம யாகத்தைச் செய்தான். அவ்வாறு செய்யப்பட்ட யாகத் தீயிலிருந்து துரோணரைக் கொல்வதற்கென்று தோன்றியவனே திட்டதுய்மன். அதே யாகத் தீயில் தோன்றியவளே பாஞ்சாலி. அந்த பாஞ்சாலியைத்தான் அர்ச்சுனன் உள்ளிட்ட பாண்டவர்கள் ஐவரும் மணந்திருக்கின்றனர். பாண்டவர்களின் மைத்துனனும், துரோணருக்கு எமனும் ஆன திட்டதுய்மனைத்தான் சுவேதனின் மறைவுக்குப் பிறகு பாண்டவர்களின் தளபதி ஆக்குகிறார் சூழ்ச்சித் திறம் வல்லவரும், பாரதப் போரின் சூத்திரதாரியும் ஆன நம் கண்ணபெருமான்.

இரண்டாம் நாள் போரில் வீடுமர், தம்முடைய படையைக் கருடவியூகமாக வகுக்கிறார். கருடனது வடிவம் போலப் படை வகுக்கப்படுவது கருட வியூகமாகும். கருட வடிவத்தின் வாயிடத்தில் வீடுமர் நிற்க, கண்களிடத்தில் துரோணரும் கிருதவர்மாவும் நிற்கின்றனர். அசுவத்தாமா கிருபர் ஆகியோர் தலையிடத்திலும், பூரிசிரவன் சல்லியன், பகதத்தன், ஜயத்திரதன் ஆகியோர் கழுத்திடத்திலும் நிற்கின்றனர் . மாகதரும் கலிங்கரும் வலச் சிறகென அணிவகுத்து நிற்க, பிருகத்பலனும் காருசரும் இடச் சிறகென நிற்கின்றனர். துரியோதனனும் அவனுடைய தம்பிமார்களும் கருடனின் வால்புறமெனப் படையின் இறுதி இடத்தில் இருக்கின்றனர். துரியோதனனுக்கு ஒரு

துன்பம் நேராமல் அவனைக் காத்து நிற்கும் பொருட்டே, கருட வியூகமாகத் தம்படையை அணிவகுத்து நிற்கச் செய்து கடைசியாக இருக்கும் வால்புறத்தில் துரியோதனனை வீடுமர் இருக்கச் செய்கின்றார்.

வீடுமர் இவ்வாறு கருட வியூகம் வகுக்க, கண்ண பெருமான் திட்டதுய்மனிடம் பாண்டவர் படையை அர்த்தசந்திர வியூகமாக வகுக்கக் கூறுகிறார். பாதிச் சந்திரனது வடிவம் போலப் படை வகுக்கப்படுவது அர்த்த சந்திர வியூகமாகும். பிறையின் வலப் பக்கத்துக் கொம்பில் வீமனும், இடப்பக்கத்துக் கொம்பில் அருச்சுனனும் நிற்க, அபிமன்யு, கடோத்கஜன், திட்டதுய்மன், விராடன், துருபதன், சிகண்டி, சாத்யகி ஆகியோர் பிறைச் சந்திரனின் நடுவில் நின்று போர் புரிய ஆயத்தமாக இருக்கிறார்கள். கருட வியூகத்தைக் கலைப்பதற்கும், கண்ணாக நிற்கும் வீடுமரை இருபுறமாக வளைத்துத் தாக்குவதற்கும் ஏதுவாக இருக்கும் என்பதனாலேயே அர்த்தசந்திர வியூகத்தை அமைக்கக் கூறினார் கண்ணபெருமான்.

இரண்டு கடல்கள் மோதிக் கலப்பதைப் போன்ற பெருத்த ஆரவாரத்தோடு பாண்டவர் படையும், துரியோதனன் படையும் மோதிக் கலக்கின்றன. அப்பொழுது பார் முழுவதும் வாழும் அனைத்துயிர்களும் செவிடாகிவிடுமோ என்று அஞ்சத்தக்க அளவிற்குப் பேரொலி எழுகின்றது. இருபுறத்துச் சேனைகளாற் கிளப்பப்பட்ட மிகுந்த மண் புழுதி, மேலேழுந்து விண்ணவர் கண்களை மறைக்கின்றது. போரின் போது ஒலிக்கப்படும் அநேக வாத்தியங்களின் முழக்கங்களும் இடிபோல் ஒலித்து மண்ணகத்தே வாழும் மற்றைய மக்களை அஞ்சவைக்கின்றன.

கருட வியூகத்தின் கண்ணாக நிற்கும் வீடுமரை அர்த்த சந்திர வியூகத்தின் இடக் கொம்பில் நிற்கும் அர்ச்சுனன் நெருங்கிப் போரிட, அர்த்தசந்திர வியூகத்தின் வலக் கோடி

யில் நின்றிருக்கும் வீமன் துரியோதனனை நெருங்கிப் போரிடுகின்றான். வீமனால் துரியோதனனுக்குத் துன்பம் நேரிடுமோ என்று வீடுமர், வீமன் பக்கம் திரும்ப, அர்ச்சுனன் அப்பொழுது துரோணர், கிருதவர்மா, அசுவத் தாமா; கிருபர், ஆகியோர் மேல் அம்புகளைப் பொழிய, சலையாது எனக் கருதப்பட்ட கருட வியூகம் போர் ஆரம்பித்த சற்று நேரத்திற்கெல்லாம் கலைந்து போய் விடுகிறது.

துரியோதனனுடன் வீமன் அன்றைக்கு ஆற்றிய போர் மிக அற்புதமாக இருக்கிறது. அவனுடைய ''சத்துரு காதினி'' என்ற கதாயுதம் எதிரிகளுக்கு எமனாகி எதிர்ப் பட்டவர்களை எல்லாம் கொல்லுகின்றது. முதல்நாள் போரில் அடைந்த தோல்விக்குப் பழி தீர்த்துக் கொள்ள விரும்பிய வீமனின் ஆத்திரத்திற்கு ஆற்றமாட்டாமல் துரியோதனனும் அவனுடைய தம்பிமார்களும் புறம் கொடுத்து ஓட, வீமனை எதிர்த்து வலிய தன் யானைப் படையுடன் வந்து மோதுகின்றான் கலிங்க மன்னன் சக்கர தேவன்.

**''உக்ரமாக வீமன் வந்த உறுதிகண்டுஅ நேகபோர்**
**விக்ரமாம தத்த டக்கை வேழவீரர் தம்முடன்**
**வக்ரசாப மழைபொ ழிந்து வடகலிங்க மன்னவன்**
**சக்ரதேவன் முகிலெ றிந்த வுருமெனத் தலைப்**
**பெய்தான்''**

—இரண்டாம் போர்ச் சருக்கம் 12

வீமன் ஒருவனே பதினாயிரம் யானை பலம்கொண்டவன். அவன் இடும்பன், பகாசூரன், ஜராசந்தன், கீசகன் முதலான இராட்சத பலம் படைத்தவர்களையெல்லாம் தன்னுடைய புஜபல பராக்கிரமத்தால் வெற்றி கொண்டவன். அவனுடைய பலத்தைப் பற்றிப் பெருமையாகக் குந்தி தேவியே ஒருமுறை தருமரிடம் இவ்வாறு சொன்னதுண்டு.

"தருமா! வீமன் சிறுகுழந்தையாக இருந்தபோது அவனை நான் என்னுடைய தோளில் எடுத்து வைத்து வேடிக்கை காட்டிக் கொண்டிருந்தேன். அவனோ தோளில் நிற்காமல் திமிற நானும் கைதவறிக் கீழே விட்டு விட்டேன். வீமன் விழுந்த இடத்தில் அம்மிக்கல் ஒன்று இருந்ததால் குழந்தைக்கு என்ன ஆயிற்றோ என்று பதறிப் போய் நானும் பார்த்தேன். வீமன் அம்மிக்கல்லின் மீது விழுந்ததனால் அம்மிக்கல் நொறுங்கித்தூள் தூளாகிப் போனதே தவிர, வீமனுக்கு ஆபத்து ஒன்றும் உண்டாக வில்லை. ஆகவே அப்படிப்பட்ட பலவானாகிய வீமனைப் பயப்படாமல் பகாசூரனிடம் அனுப்பு. அவன் பகாசூரனை வதம் செய்து வென்று வருவான்" இப்படிக் குந்தி உரைத்த உறுதிமொழிப்படியே பகாசூரனையும் மற்றமற்ற வீரர் களையும் வெற்றி கொண்டிருப்பவனாகிய வீமனைச் சக்கரதேவனுடைய யானைப்படை என்ன செய்து விட முடியும்?

யானைப் படைகள் தன்னுடன் மோத வந்ததும், வீமனுக்கு முன்னையிலும் உற்சாகம் பதின் மடங்கு அதிகரிக்கிறது. தன்னுடைய கதாயுதத்தைத் தேரிலேயே வைத்து விட்டு வீமன் எகிறிக் குதித்து வெளியே வருகிறான். அவன் தன்னுடைய வலிமை வாய்ந்த கரங்களால் யானை களின் துதிக்கையைப் பிடித்துக் கரகரவெனத் தலைக்கு மேலே சுற்றி, மற்ற மற்ற யானைகளின் மேலும், கலிங்க மன்னன் மேலும் அவனுடன் வந்த பகை மன்னர்கள் மேலும் வீசி, அவர்களை எல்லாம் கதிகலங்க வைக்கிறான்.

கதிக்கிடுந் தேரினின் றிழிந்து காலிங்கன்
மதிக்குமும் மதகரி வந்த யாவையும்
துதிக்கைவன் கரங்களாற் சுற்றி எற்றினான்
விதிக்கொரு விதியனான் வீம சேனனே

—இரண்டாம் போர்ச் சருக்கம் 13

ஒரு காலத்திலே மலைகள் எல்லாம் சிறகுகளையுடையன வாக இருந்துள்ளன. அவை தாம் விரும்பிய போது விரும்பிய இடத்திற்குப் பறந்து போய் அங்கங்கே அமர்ந்த போது அங்கிருந்த ஊர்களும் மக்களும் நாசமாகியுள்ளனர். மலைகளால் நேர்ந்த இந்தத் துன்பத்தை முனிவர்கள் தேவேந்திரனிடம் எடுத்துக் கூற, அவனும் தன் வச்சிரா யுதத்தால் மலைகளின் சிறகுகளை எல்லாம் வெட்டி வீழ்த்தி, அவை ஒரே இடத்தில் நிலையாக நிற்குமாறு செய் துள்ளான். தேவேந்திரனின் வச்சிராயுதத்தால் சிறகுகள் வெட்டப்படாத நிலையில் மலைகள் எவ்வாறு பறந்தனவோ அவ்வாறே வீமனால் வீசியெறியப்பட்ட யானைகளும் பறக்கின்றன என்று அக்காட்சியை அழகுற வருணித்துள் ளார் வில்லிப்புத்தூரார்.

கழனி பொலங் கழற் காளை கைகளால்
எழஎழ மதகரி எடுந்து வீசலின்
விழுவன வன்றி மேல் விசையிற் போவன
பழையகற் சிறகுடன் பறப்ப போன்றவே

—இரண்டாம் போர்ச் சருக்கம் 17

இவ்வாறு யானைப் படைகளையெல்லாம் நாசப்படுத்தித் தன்னுடைய மாவீரத்தால் வீமன் இன்றைக்குத் துரியோ தனன் படைகளை எல்லாம் கதிகலங்க வைக்கிறான். அவனுடைய தினவெடுத்த தோள் வலிமையால் அவனை எதிர்த்து வந்த கலிங்க மன்னன் சக்கரதேவனும் அவனுடைய மைந்தர்களும், அவனுடைய அளவிலாத சேனைகளும் கூண்டோடு கயிலாயம் செல்கின்றனர். தம் படைகளுக்கு வீமனால் ஏற்பட்ட மாபெரும் நாசத்தைத் தடுக்க வீடுமரே விரைந்து வந்து வீமனோடு மோதுகின் றார். வீமன் தன்னுடைய தேரிலிருந்து ஒரு வேலா யுதத்தை எடுத்து, வீடுமரின் தோளைக் குறி பார்த்து வீசு கின்றான். வீடுமர் தன்னை எதிர்கொண்ட வீமனின் வேலை தானும் ஒரு தோமரம் எடுத்து வீசி வெட்டி வீழ்த்தி

விடுகிறார். தோமரம் என்பது இரும்பினால் செய்யப் பெற்ற உலக்கையின் வடிவினால் அமைந்த ஒரு ஆயுத மாகும்.

வீடுமர் தன்னுடைய வில்லெடுத்து அம்புகளைச் செலுத்தி, வீமனின் தேரில் பூட்டியிருக்கும் குதிரைகள் நான்கையும் ஒரே நேரத்தில் கொன்று விடுகிறார். வீமனும் தன்னுடைய கதாயுதத்தை எடுத்துப் பாய்ந்து சென்று ஒரே அடியால் வீடுமரின் தேர்ப்பாகனை அடித்து சாய்த்து விடுகிறான். அடுத்து கதாயுதத்தால் வீடுமரையும் ஓங்கி அடிக்க வீமன் முற்படுகையில், வீடுமரைச் சார்ந்த துணைப் படைகள் எல்லாம் ஒருசேர வந்து வீமனை வளைத்து, அவன் மேல் ஆயுதங்களைச் செலுத்துகின்றன. வீமனோ சற்றும் மலைத்திடாமல் தான் ஒரு கையில் வைத்திருக்கும் கதாயுதத்தால், பகைவர்களின் தலையை மோதியும், மறுகையினால் பகைவர்களின் தேர்களைத் தூக்கிப் பந்தாடி யும் தன்னுடைய வீர சாகசங்களைக் காட்டுகின்றான்.

இவ்வாறான வீர சாகசங்களை வீமன் செய்ய, அவனுக்குத் துணையாக அபிமன்யுவும் சேர்ந்து கொண்டு எதிரிகள் மேல் வில்லை வளைத்துச் சீறிச் செல்லும் அம்பு களைச் சரமாறிப் பொழிகின்றான். வீமனும் அபிமன்யுவு மாகச் சேர்ந்து செய்கிற போரினால் ஊழிக்காலம் வந்து உற்றதோ என்று அஞ்சி ஓடுகின்றனர் துரியோதனனின் வீரர்கள். அஞ்சி ஓடுகின்ற வீரர்களை ஓடா வண்ணம் தடுத்து நிறுத்தித் துரியோதனன் கடுங்கோபத்துடன் மறுபடியும் போர் செய்யுமாறு ஆணையிட, அவ்வாறே அவர்கள் எல்லாம் வந்து வீமனையும், அபிமன்யுவையும் வளைத்து நின்று போர் செய்கின்றனர். அதே நேரத்தில் கண்ணபெருமான் தன்னுடைய தேரையும் ஓட்டி வந்து வீமனும், அபிமன்யுவும் போர் புரியும் இடத்திற்குக் கொண்டு வந்து நிறுத்த, அவ்விருவருடன் அருச்சுனனும் சேர்ந்து கொள்கிறான். வீமன் ஒருவனுக்கே ஆற்ற மாட்டாத துரியோதனனின் அற்பப்படை, அபிமன்யுவும்

அர்ச்சுனனும் புலியும் அதன் வலிய குட்டியும் என வந்து சேர்ந்து போர்புரிய அத்தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் திண்டாடுகிறது.

நிவாத கவசர் எனும் அசுரர்கள் மூன்று கோடி பேரையும், காலகேயர் எனும் அசுரர் அறுபதினாயிரம் பேரையும் தான் ஒருவனாகவே தனித்து நின்று வெற்றி கொண்ட மாபெரும் வில்வீரன் அர்ச்சுனன். தந்தைப்புலி எட்டடி பாய்ந்தால் குட்டிப்புலி பதினாறடி பாயும் என்பதற்கொப்ப அர்ச்சுனன் பெயர் சொல்லப் பிறந்த மாபெரும் வீரன் அபிமன்யு; இவர்களுடன் பதினாயிரம் மதயானைகளின் பலம் ஒருங்கு கொண்ட மாவீர வீமன்; இம்மூவரும் ஒன்று சேர்ந்து போரிடுவார்களானால் அவர்களை வெல்ல மூவுலகத்திலும் யாரும் இருக்க முடியாது என்பதே இன்றைக்கு அனைவரும் கண்கூடாகக் காண நேர்கின்ற உண்மை.

அதனால்தான் வீடுமர் உள்ளிட்ட துரியோதனனின் படைகள் எல்லாமும் ''தலை தப்பித்தால் போதும்'' என தம்முடைய பாசறையை நோக்கி ஓடுகின்றனர். சூரியனும் அந்த நேரம் அஸ்தமனம் ஆகத் தொடங்குவது அவர்களுக்குப் பெருத்த ஆறுதலாகவே அமைகிறது எனலாம். ''தான் இனி தலைகாட்டினால் அர்ச்சுனன், தன்னையும் கொல்லக் கூடும் என்பதாக அஞ்சி மேலை வானத்தில் ஓடி மறைய முற்பட்டான் சூரியன்'' என்பதாக சூரிய அஸ்தமனத்தை வருணிக்கிறார் வில்லிப்புத்தூரார்.

இவ்வாறு இரண்டாம் நாள் போர் கலிங்க மன்னன் உள்ளிட்ட துரியோதனனின் கணக்கற்ற படைகள் அழிவு பெறுவதோடு நிறைவு பெறுகிறது. துரியோதனன், இரண்டாம் நாள் போரில் தனக்கேற்பட்ட பெருத்த தோல்வியைக் கண்டு தன்னுடைய தானைத் தளபதியான வீடுமரையே கோபித்துக் கொள்கிறான்.

''பரசுராமரை வென்ற வீடுமரின் வீரம் எங்கே-போயிற்று? அர்ச்சுனன் மேல் பாசம் காட்டி, பாண்டவர் மேல் பரிவு காட்டி, பதுங்கிக் கொண்டதோ உம்முடைய வீரம்? இதுதானா உம்முடைய செஞ்சோற்றுக் கடன்?'' என்று வீடுமரையே பழித்து ஏசுகின்றான் துரியோதனன். அவ்வாறே அவனைச் சார்ந்த மன்னர்களை எல்லாம் கூட மிரட்டுகின்றான். ''நாளைய போரில் பாண்டவர்களுக்கு அஞ்சி யாரேனும் புறம் கொடுப்பீர்களானால் உங்களை நானே கொன்று விடுவேன்.''

துரியோதனனின் இத்தகைய கடும் கோபத்திற்காளான வீடுமரும் மற்ற மற்ற மன்னர்களும் மூன்றாம் நாள் போரில் பாண்டவர்களிடம் போரிட்டு அவனுக்கு மனமகிழ்வு உண்டாகும் வகையில் பாண்டவர்களை வெற்றி கொள்கிறார்களா? அல்லது மாண்டு மடிகிறார்களா? என்பதை இனி அடுத்த அத்தியாயத்தில் விரிவாகக் காண்போம்.

# 12

முதல் நாள் போரில் பாண்டவர் அணியில் உத்தரனும் சுவேதனும், மாண்டுபட இரண்டாம் நாள் போரில் பழிக்குப் பழி என்ற முறையில் மிக உக்கிரமாக வீமனும், அர்ச்சுன னும், அபிமன்யுவும் போரிட்டுத் துரியோதனனின் படை களைச் சேதப்படுத்தியதைக் கண்டோம்.

முதல் நாள் போரில் வெற்றி கண்டு ஆரவாரித்த துரியோதனன், இரண்டாம் நாள் போரில் கலிங்க மன்னன் சக்கரதேவனும், அவனுடைய புதல்வர்களும், அளவிலாத சேனைகளும் வீமனின் கதைக்கும், அர்ச்சுனன் அபிமன்யு இருவரின் கணைகளுக்கும் பலியாகத் தோல்வியால் துவண்டு போய் விடுகிறான்.

''நாளைய போரில் பாண்டவர்களைப் பதிலுக்குப் பதில் நாசப்படுத்தி ஆக வேண்டும்'' என்று துரியோதனன் வீடுமருக்கும் துரோணருக்கும் மற்ற மன்னர்களுக்கும் கட்டளையிட்டு விட்டு அன்றைய இரவுப் பொழுதைப் பாசறையில் அமைதியின்றிக் கழிக்கிறான்.

பொழுது விடிகிறது. மூன்றாம் நாள் போரும் தொடங்குகிறது. இரண்டாம் நாள் போரில் வகுத்திருந்த கருட வியூகத்தையே மறுபடியும் வகுக்கிறார் வீடுமர் பாண்டவர் தளபதியான யாகசேனனை மறுபடியும் அர்த்த சந்திர வியூகத்தையே அமைக்கச் செய்கிறார் கண்ண பெருமான்.

**''ஏலா அமரின் மூன்றா நாள் இரண்டு படையுந்திரண்டேறக்**
**காலார் திண்டேர் வீடுமனும் வகுத்தான் கருங் காருட**
**வியூகம்**

**மேலார் வென்றிப் பாண்டவர்தம் வெஞ்சேனையைக்**
**கொண்டேஞ்சாமற்**
**தோலா அர்த்தசந்தரப் பேர் வியூகம் வகுத்தான்**
**துளவோனே''**

—மூன்றாம் போர்ச் சருக்கம் 12

பெயருக்குத்தான் யாகசேனன் பாண்டவர்களின் தளபதியே தவிர பாண்டவர் படையை நடத்தும் சூத்ரதாரி கண்ணபெருமானே என்பது நமக்குத் தெரிந்த ஒன்றுதான். அதனால்தான் அர்த்தசந்திர வியூகத்தைக் கண்ணபெருமானே அமைத்ததாகக் கூறி வில்லிப்புத்தூரார் ''அர்த்த சந்தரப்பேர் வியூகம் வகுத்தான் துளவோனே'' எனப் பாடி இருக்கக் காண்கிறோம்.

இருதரப்புப் படைகளும் இருபெரும் கடல்கள் மோதிக் கலப்பதைப் போல் ஆரவாரித்துக் கலந்து போர் புரியத் தொடங்குகின்றன. துரியோதனனின் வசைக்கு ஆளான வீடுமரும், துரோணரும், துரியோதனன் இன்று தாம் ஆற்றும் வீரப் போரினால் மனமகிழ்ச்சி கொள்ளச் செய்து விடவேண்டும் என்ற ஆவேசத்தோடு போரிடுகிறார்கள். காண்டீபத்தின் ஆற்றலினால் முந்தின நாள் தம்மை விரட்டி விரட்டியடித்த வீரனாகிய அருச்சுனனையும், கண்ண பெருமானையும் வளைத்துக் கொண்டு வீடுமரும், துரோணரும் ஒரு புறத்தில் போரிட்டுக் கொண்டிருக்க துரியோதனனும், அவனுடைய தம்பிமார்களும் சகுனியும் சேர்ந்து கொண்டு மறுபுறம் வீமனுடன் சமர் செய்கின்றனர். எண்ணிக்கையில் மிகுந்த யானைக் கூட்டம் ஒன்று சிங்கம் ஒன்றை வளைத்துக் கொண்டால் எப்படி இருக்குமோ அப்படியிருக்கிறதாம் வீமனைத் துரியோதனாதியர்கள் வளைத்து நிற்கும் காட்சி.

''சூரர்க்கெல்லாம் முதலெண்ணும் துரியோதனனுந் தம்பியரும்
ஆரக்கவிகைக் காந்தாரன் முதலாவுள்ள அவனிபருஞ்
சேரத்திரண்டு கரிகளொடு சிங்கம் வளைத்த தெனச் சிங்க
வீரத்துவசனின்றுழிப்போய் வளைத்தார் சமரம் விளைத்தாரே''

—மூன்றாம் நாள் போர்ச் சருக்கம்-15

அபியன்யு எப்படி தன் தந்தையைக் காட்டிலும் ஆற்றல் மிக்க வீரனோ, அப்படி கடோத்கஜனும் தந்தை வீமனை யும், விஞ்சிய மாவீரன். தந்தை யொருவரைச் சுற்றிச் துரியோதனாதியர்கள் கூட்டமே வளைத்து நிற்க, தாவிக் குவித்து வரும் கடோத்கஜனும், தன்னுடைய கதையினால் அனைவரையும் மோதி விரட்ட நேரமாகக்கூடும் என்பதால், வில்லினில் அம்புகளைத் தொடுத்துச் சீறும் அம்புகளால் அனைவரையும் சிதறி ஓடச் செய்கிறான்.

துரியோதனனைச்சூழ்ந்து நின்று காவல் செய்யும் கணக் கற்ற வீரர்களின் தலைகளைச் சீவிக்கொண்டு பறக்கின்றன கடோத்கஜன் விடும் அம்புகள். ஆகாயமே தெரியவில்லை. எங்கு நோக்கினும் கடோத்கஜனின் அம்புகளால் சிதறுண்ணும் துரியோதனனின் படை வீரர்களின் தலை களே தெரிகின்றன. அத்தலைகளிலிருந்து கொட்டும் இரத் தமே வெள்ளப் பெருக்கினைப்போல அந்தக் குருசேத்திரப் போர்க்களம் முழுதும் ஓடிக்கொண்டும் இருக்கிறது.

பிறைச் சந்திரனின் வடிவில் அமைத்த கடோத்கஜனின் அம்புகள், துரியோதனனின் தேர்க்கொடியைவீழ்த்தித்தேரில் பூட்டியிருக்கும் குதிரைகளை வீழ்த்தி, இரத்தினம் பதித்த துரியோதனனின்பொற்கவசத்தை ஊடுருவிதுரியோதனனை யும்தாக்க, அவனும் அந்தக்கணமே மூர்ச்சித்து விழுகிறான்.

''துவசம்பிளந்து தேரூருந் துரகம் பிளந்து சுடர்மணிப் பொற்
கவசம் பிளந்து மார்பகமும் பிளந்துருவக் கடோற்கசன் தான்
நவசந்திரமா முனைவாளி தொடுத்தான் தொடுத்த நாழிகையின்
அவசம் பிறந்து தம்பியர் முன் விழுந்தான் ஒருவர்க் கழியாதான்''

அண்ணன் கடோத்கஜனுக்குத் துணையாக அங்கு வேகமாக வந்து சேர்ந்து கொள்ளும் தம்பி அபிமன்யு, தானும் ஒரு வேல் எடுத்து, துரியோதனனின் தேர்ப்பாகன் மீது செலுத்த அவனும் மடிந்து சாய்கின்றான். இவ்வாறு கடோத்கஜனும் அபிமன்யுவுமாகச் சேர்ந்து கொண்டு, வீமச்சிங்கத்தை வளைத்து நின்ற துரியோதன யானைக் கூட்டத்தை விரட்டியடித்துக் கொண்டிருக்கத் ''துரியோதனன் சாய்ந்தான்'' என்ற சேதி போய் எட்டுகிறது வீடுமருக்கு.

அர்ச்சுனனுடன் போர் புரிவதை விட்டுவிட்டு உடனே ஓடிவருகிறார் வீடுமர் துரியோதனன் இருக்கும் இடத்திற்கு. துரியோதனனை எடுத்து மடியில் வைத்துக் கொண்டு அவனுடைய புண்பட்ட மார்பைத் தடவிக் கொடுத்து அவனுடைய மயக்கம் தெளிவதற்கு மருந்தையும் கொணர்ந்து அவனுக்கு வாயில் ஊட்டுகிறார் வீடுமர். துரியோதனனும் மருந்தினை உட்கொண்ட அளவில்மயக்கம் நீங்கி எழுகிறான். ''துரியோதனா! சற்றே நீ பாதுகாப்பாக இருந்து இளைப்பாறு. உன்னைக் காயப்படுத்திய பாண்டவர்களுக்கு நான் பாடம் புகட்டி வருகிறேன்'' என்பதாகக் கூறி வீடுமர் தம் வில்லுடன் மீண்டும் போர் புரியத் தொடங்குகிறார்.

தன்னுடைய காவலை மீறிப் பாண்டவர்கள் துரியோதனனைத்தாக்கிக்காயப்படுத்தும்அளவிற்குப்போய்விட்டதே என்ற கவலை வீடுமருக்கு. இதற்காகவும் போர் முடிந்த

இரவில் பாசறையில் வைத்துத் தன்னை என்னென்ன வைவானோ துரியோதனன் என்ற பயமும் அதில் கலந்து கொண்டது. பாண்டவர் படைகளை இனியும் சும்மா விடலாகாது என்ற வெறி, அவருக்கு மிகுந்துவிட அவருடைய வில்லிலிருந்து கிளம்பிடும் அம்புகள் அக்கினியைப்போல் சிவக்கின்றன. புயலினைப் போல் சீறுகின்றன.

கோபத்தில் கொதிக்கும் வீடுமரை அப்பொழுது கண்ட அனைவரும், அவருடைய தோற்றத்தைக் கண்டே அஞ்சி நடுங்குகிறார்கள். அவருடைய கையில் இருப்பது வில்லல்ல, மேருமலை. இவரும் வீடுமர் அல்ல, திரிபுரத்தை அழிக்க எழுந்த பரமசிவன் என்பதாக பாண்டவர் படை வீரர்கள் பலரும் நடுங்கி ஓடுகின்றனர்.

திருப்பாற்கடலைக் கடைந்தபோது மந்தரமலை சுழன்றதைப் போல வீடுமரும், சுழன்று சுழன்று பாண்டவர் படை வீரர்களின் மார்புகளிலும், தோள்களிலும் முகங்களிலும், கண்களிலும் அம்புகளை எய்து அவர்களைக் கொன்று குவிக்கத் தொடங்குகிறார். வீடுமரின் வீரத்திற்கும் கோபாவேசத்திற்கும் பாண்டவர் படையின் பெரும் பகுதி செத்து மடிய நேரிடுகிறது. வீடுமரிடமிருந்து பாண்டவர் படைகளைக் காக்க வேண்டும் என்ற உணர்வு அன்றைக்கு ஏனோ அர்ச்சுனனிடம் ஏற்படவில்லை.

வீடுமர் இருக்கும் இடம் நோக்கிச் செல்லாமலே, மற்றொரு பக்கமாக அர்ச்சுனன் படைவீரர்களுடன் போர் செய்து கொண்டிருக்க கண்ணபெருமான் வீடுமரை நோக்கிப் பலமுறையும் தம்முடைய தேரைத் திருப்பி ஓட்ட முயன்றும் அர்ச்சுனன் ''வேண்டாம்'' எனத் தடுக்க, கண்ணபெருமானுக்கே அர்ச்சுனன்மேல் கோபம் உண்டாகிவிடுகிறது. ''என்ன அர்ச்சுனா, என்ன உனக்கு நேர்ந்தது? வீடுமர் அங்கே நம்முடைய படைகளை நாசப்படுத்திக் கொண்டிருக்க, இங்கே நீ ஏதோ போர் புரிவதைப்போல, பாவனை செய்து கொண்டிருக்கிறாயே தவிர வீடுமர் மேல் ஏன்

அம்பை எய்யமறுக்கிறாய்? வீடுமர் இருக்கும் இடம் நோக்கித் தேரையும் செலுத்த வேண்டாம் எனத் தடுக் கிறாய். இதுதானா உன் வீரம்? இனியும் உன்னை நம்பிப் பயனில்லை. நானே வீடுமரை எதிர்த்துப் போர் செய் கிறேன்'' என்பதாகக் கூறி அர்ச்சுனனுடைய பதிலுக் காகவும் காத்திராமல் தம்முடைய சக்கராயுதத்தை ஏந்தித் தேரிலிருந்து தரையில் குதிக்கிறார்.

கண்ணபெருமான் தேரிலிருந்து இறங்கி, வீடுமரை நோக்கி விடுவிடென்று முன்னேற, அர்ச்சுனன் தேரிலிருந்து தானும் இறங்கிக் குதித்து, கண்ணபெருமானின் தாள்களைப் பணிந்து, தன்னுடைய தவற்றைப் பொறுக்குமாறு வேண்டு கிறான்.

**''ஆழியெடுத்தனன் வீடுமனைப் பொருதாவி**
**அழித்திடுவான்**
**ஊழிமுகக் கனல் போல் எழும்அப்பொழுதோடியருச்**
**சுனனும்**
**தாழி தனக்குமுன் வீடு கொடுத்தருள் தாளிணையைப்**
**பிடியா**
**வாழி உனக்கிவரோ எதிர் வித்தக மாயனெனத்**
**தொழுதான்''**

—மூன்றாம் போர்ச்சருக்கம்-18

''கண்ணா! மணிவண்ணா! எளியேன் செய்த பெரும் பிழையை மன்னித்து விடு, நானே என் காண்டீபத்தால் வீடுமரை எதிர்கொள்கிறேன். எல்லாம் வல்ல உனக்கு இவரா சமமாவார்? அன்றைக்கு ஆயுதம் கையில் எடேன் என்று நீ செய்த உறுதி பொய்க்க நானா காரணமாவது. அந்தப் பழி இந்த அர்ச்சுனன் கொள்ள கண்ணா நீ காரண மாகலாமா? என் மீது கொண்ட கோபத்தை அருள் கூர்ந்து மாற்றிக்கொள். உன் உள்ளம் அன்பின் பெருவெள்ளம். பாலகனாய் இருந்தபோது, உன் அடியான் ஒருவர் கேட்டுக் கொள்ள அவன் வீட்டுத் தாழிக்கும் அருள்புரிந்த வள்ளலே!

நான் உன் அன்புமிக்க மைத்துனன் அல்லவா! எனக்கு நீ அருள் புரிதல் ஆகாதோ'' என்று அர்ச்சுனன், ஆபத்பாந்தவனாகிய, அனாதை இரட்சகனும், தீனதயாளனுமாகிய கண்ணபெருமானின் திருவடிகளில் வீழ்ந்து அந்த குருச்சேத்திரப் போர்க்களத்தில் அனைவரும் காண வேண்டுகிறான்.

கோகுலத்தில் கண்ணன் செய்த பாலலீலைகளைப் பொறுக்க இயலாத அன்னை யசோதா, கண்ணனை விரட்டி வர, ததிபாண்டவன் மனையில் கண்ணன் ஒளிந்து கொண்டான். கண்ணன் ஒளிந்து கொண்டிருப்பதைத் தாயிடம் கூறாதிருக்க வேண்டுமானால், தனக்கும் தனக்குச் சொந்தமான வீட்டிலிருப்பவர்களுக்கும், தன் வீட்டிலிருக்கும் தயிர் பானைக்கும் கூட முத்திதர வேண்டுமென வேண்டினான் ததிபாண்டவன். கண்ணன் அவ்வாறே அருளினார். கண்ணனின் இத்தகைய கருணை உள்ளத்தை எடுத்துக் காட்டித் தன் தவற்றை மன்னிக்குமாறு வேண்டுகிறான் அர்ச்சுனன்.

கண்ணபெருமான் ஆழி ஏந்தித் தன்னை நோக்கி வருவதைக் கண்ட வீடுமரும் கண்ணபெருமானால் சம்ஹரிக்கத் தக்கபெரும் பாக்கியம் தனக்கு வாய்க்கப் போகிறதே என்று பேரானந்தம் கொள்கிறார். அவரும் தன்னுடைய தேரிலிருந்து இறங்கி கண்ணபெருமானை நோக்கி ஓடி வருகிறார். மாயவனைப் போற்றுகிறார்.

''ஆரணகற்பித மாதவ அச்சுத ஆழியிடைத்துயிலும்
காரண சிற்குண ரூபமலர்க்கொடி காதல் மனத்துறையும்
நாரண அற்புத வானவருக்கொரு நாயக நிற்பணியும்
வாரமுத்தி விசாலதலத்திடை வாழ்வுற வைத்தவனே''

—மூன்றாம் போர்ச் சருக்கம்.17

''ஆவி அழித்தனை தூணிலுதித்திடல் ஆடகனைத்தலை நாள்
மாவலியைச் சிறு மாணுருவத்துடன் வார்ச்சிறை வைத்தனையால்
ஏவிலரக்கனை வீழஅடர்த்தனை யானோரிலக்கெனவே
நீவலியிற் சின மூளுமனத்தொடு நேமியெடுத்ததுவே''

—மூன்றாம் போர்ச்சருக்கம்-18

''வானரசிற் புகுதாமல் எனக்குயர் வானுலகை தருவான்
நீ நினைவுற்றது போன பிறப்பிலென் நீடுதவப்பயனே
யானுமினிப் பிறவாமல் அளித்தருள் ஈசன் எனப்பரவா
ஞானமனத்தொடு நாகுழறப் பல நாடியுரைத்தனனே''

—மூன்றாம் போர்ச் சருக்கம் 19

''கண்ணபெருமானே! முன் ஒரு அவதாரத்தில் நரசிங்கமாகத் தோன்றி இரணியனையும், பின் ஒரு அவதாரத்தில் வாமனராகத் தோன்றி மாவலியையும், மற்றுமொரு அவதாரத்தில் இராவணனையும் மாய்த்த பரம்பொருளே! என்னையும் ஒரு இலக்காய்க் கொண்டு அழிக்கக் கருதுவாய் ஆனால், அது நான் முன் பிறப்பில் செய்த தவம் அல்லாமல் வேறில்லை. அன்றைக்கு ஆதிமூலமே என்று உனையழைத்த ஆனையைக் காக்க ஆழி எடுத்து முதலையைக் கொன்று முத்தியழித்தாய். எனக்கு இன்று நீ முத்தியளிக்க முன்வந்தாய் என்றால் அதற்கு நான் பெரும் பாக்கியமே செய்திருக்க வேண்டும். ஆழியை விட்டு என் ஆவியை ஏற்றுக் கொள் கண்ணா! பிறவியினி இல்லாத முத்தி நிலையை எனக்கருளிச் செய்'' என முகமும் அகமும் மலர்ந்து வீடுமர் கண்ணபெருமானை வேண்டிக் கொள்கிறார்.

வீடுமர், திருமாலே கண்ணபெருமானாகத் தோன்றியிருக்கும் அவதாரச் சிறப்பை நன்கு உணர்ந்தவர். திருமாலின் பரம பக்தர். அப்படிப்பட்ட பக்தராகிய வீடுமர்

பரம்பொருளாகிய கண்ணபெருமானின் திருக்கைகளால் தாம் இரட்சிக்கப் படுவதை விழையாமல் இருப்பாரா? உண்மையில் கண்ணபெருமான்தம் கையில் சக்கரத்தை ஏந்தி வீடுமரை நோக்கிப் பாய்ந்ததும் கூட வீடுமரின் வாக்கைக் காப்பதற்கே ஆகும்.

கண்ணபெருமான் பாரதப்போரில் பார்த்தனுக்குத் தாம் சாரதியாக மட்டும் பணிசெய்வதல்லாமல், படைக் கருவிகள் ஏதும் எடுப்பதில்லை' யென, முன்பு துரியோதனன் தன் சகாயம் நாடி துவாரகைக்கு வந்தபோது, துரியோ தனனுக்கு வாக்களித்திருந்தார். துவாரகையில் இருந்து அத்தினாபுரிக்கு மீண்ட துரியோதனன் கண்ணபெருமான் தனக்குக் கொடுத்த உறுதியினை அரசவையில் அறிவித்த பொழுது வீடுமர், 'கண்ணபெருமான் ஆயுதம் எடேன் என் றாரா? அவரை ஆயுதம் எடுக்க வைப்பான் இந்த வீடுமன். மிகக் கடுமையாகப் போர் புரிந்து பாண்டவர் படைகளை நாசப்படுத்தி கண்ணபெருமானையும் ஆயுதம் எடுக்கவைப் பேன்' என்று வீடுமர் அன்று உரைத்திருந்த உறுதி மொழியை அறிந்திருந்தார் கண்ணபெருமான்.

தன் வாக்கு பொய்த்தாலும் பொய்க்கலாம். தன் அடியவனின் வாக்கு பொய்க்கலாகாது என்று விழைகிறது கண்ணபெருமானின் திருவுள்ளம். அதனால்தான் இன்றைய மூன்றாம் நாள் போரில் சக்கராயுதத்தை வீடுமர்மேல் தொடுப்பதாகக் கூறி கண்ணபெருமான் ஆழியை எடுத்து இந்தத் திருவிளையாடலையும் புரிந்தார் என்று சொல்ல வேண்டும். ''இன்ன தன்மையன் என்று அறிவொண்ணா எம்மானை, எளிவந்த பிரானை'' என்று இறைவனின் தன்மையைப் பாடுவார் சுந்தரமூர்த்தி நாயனார்.

பக்தர்களின் பக்தி உள்ளத்தை மெச்சி, அவர்கள் விழைந்த வண்ணமாக அருள் புரிவது கடவுளின் கருணை உள்ளமாகும். அத்தகையகருணை உள்ளத்தால்தான் கண்ணபெருமான் தாம் செய்து தந்திருந்த சத்தியத்தையும்

மறந்து வீடுமருக்காகத் தம் சக்கரத்தை எடுத்தார் அருச்சுனன் தன் தவற்றைப் பொறுத்தருள வேண்டி தான் பணிந்து வேண்டிய படியாலும், வீடுமரும் துதித்துக் கண்ண பெருமானிடம் முத்தி தந்தருள வேண்டிநின்ற படியாலும், தம் சினம் தணியும் கண்ணபெருமான் மறுபடியும் தேரில் ஏறிப் பார்த்தசாரதி யாகவே பூபாரம் தீர்க்கும் தம்முடைய பணியைத் தொடர்ந்து ஆற்ற முற்படுகிறார். அர்ச்சுனனும் ''யாரெதிர் நிற்கினும், யாவர் தடுப்பினும் யானினி இப்பகலே சேர முடுக்குவன்,'' என்று உறுதி கூறிமறுபடியும் போரில் வேகம் காட்டுகின்றான்.

கண்ணபெருமானே ''வேகம் போதாது'' என்று கருதும்படியாக மெத்தனமாகத்தான் போர் விரிந்து விட்டதை எண்ணி வெட்கப்படுகிற அருச்சுனன், தன்னுடைய வில் திறமையை மேலும் கூட்டிப் போர் செய்யத் தொடங்க, ஆயிரம் ஆயிரமான அம்புகள் அர்ச்சுனனின் வில்லிலிருந்து சீறிப் பாய்கின்றன; பகைவர்களின் மணி மகுடங்களைப் பொடியாக்குகின்றன பல அம்புகள். துரியோதனன்படை வீரர்களின் தலைகளிலிருந்து மூளைகள் சிதறிப் போர்க்களமே சேறு ஆகும்படியாகப் பாய்ந்து அவர்களைக் கொல்லுகின்றன பல அம்புகள். பகைவர்களின் உடல்கள் தோறும் பாயும் அம்புகளால் அங்கே பலப்பல இரத்தஅருவிகள் பீறிட்டுப் பாய்ந்து ஓடுகின்றன.

வீடுமர் ஒருவர் மட்டுமே அர்ச்சுனனின் ஆற்றலுக்கு ஈடு கொடுத்துத் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடிகிறதே தவிர, மற்றவர்கள் எல்லாம் மேனி புண்பட, இன்னுயிர் இருக்குமோ பறக்குமோ என்பதாக அஞ்சி, மனம் நடுங்கித் துடிக்கிறார்கள். ''சாது மிரண்டாலே காடு கொள்ளாது'' என்பார்கள். அர்ச்சுனன் மிரண்டால் குருக்ஷேத்திரம் கொள்ளுமோ?

மலைப் பாம்புகளோ என்று மலைக்கும்படியாக அங்கங்கே யானைகளின் அறுக்கப்பட்ட துதிக்கைகள் கிடக்கின்றன.

இறந்து கிடப்பவர்களின் அறுபட்ட தலைகளை கௌவிக் கொண்டு நரிகள் பல ஓடிக்கொண்டிருக்க, மனித தலை கொண்ட அதிசய மிருகங்களாக அவைகள் காட்சியளிக் கின்றன. மாண்டு கிடப்பவர்களின் மகுடங்களைக் கையில் எடுத்துக் கொண்டு, அவற்றைத் தாளமாகத் தட்டிக் கொண்டு மூன்றாம் நாள் போரில் முகுந்தனின் மைத்துனன் அர்ச்சுனன் காட்டிய பராக்கிரமத்தைக் கொண்டாடிப் பேய் களும் நடனமாடிக் களிக்கின்றன. கௌரவர்கள் சிந்திய இரத்தம் ஆதவன் மேலும் பட்டு, அவனுடலைக் கறைபடச் செய்து விட்டதால், கதிரவனும் தன் கறையைப் போக்கிக் கொள்ள மேற்குக் கடலில் மூழ்க, எங்கும் இருள் பரவிக் கொண்டிருக்கிறது.

பாண்டவர் படையினர் அருச்சுனன் ஆற்றிய வீரப் போரை ஆரவாரித்துப் போற்றவும், துரியோதனன் படை யினர் தம் பக்கத்தில் மாண்டுபட்ட மன்னருக்காக அழுது அரற்றவும் மூன்றாம் நாள் போர் நிறைவுற்றது என்கிறார் வில்லிபுத்தூரார்.

**''தருமன்மா பெருஞ்சேனை தன்னுளார் தங்களாதரத்**
**தொடு தனஞ்சயன்**
**பொருவில் ஆண்மையும் வீமன்மாமகன் பொருத வீரமும்**
**புகழ்ந்துபாடினார்**
**அரவகேதனன் சேனை தன்னுளார் அழிந்த மன்னருக்கு**
**அழுது அரற்றினார்**
**இருவர் சேனையும் கண்படாதால் அன்றிரவு பட்டதென்**
**னென்று இயம்புவாம்,**

—மூன்றாம் போர்ச் சருக்கம்-29

# 13

நான்காம் நாள் போரில் குறிப்பிடத்தக்க முக்கிய நிகழ்ச்சி துரியோதனனின் தம்பிகள் ஐவரை வீமன் விண்ணு லகிற்கு அனுப்பி வைக்கும் வீர நிகழ்ச்சியாகும். பாண்ட வர்கள் ஐவரையும் நாட்டை விட்டுக் காட்டில் வாடுமாறு அனுப்பி வைத்தான் துரியோதனன். அவனுடைய செய லுக்கு மாற்றுச் செய்வதைப் போல வீமனும் நான்காம் நாள் போரில் துரியோதனனின் தம்பிகள் ஐவரை வானகத்திற்கே அனுப்பி வைத்து விட்டான் என்று இந்நிக்ழ்ச்சியை வருணிக் கிறார் வில்லிப்புத்தூரார்.

**''சேனாவிந்து சுதக்கணன் பொற்றேர்ப் பிங்கலசன்**
**சலாசந்தன்**
**ஆனா வீம வாகுவெனும் அடல்வாள் நிருபர் ஐவரையும்**
**வானாடாளும்படி விடுத்தான் வன்பால்தம்மை ஐவரையும்**
**கானாள் கென்ற காவலனைப் போல்வான் வீரக்**
**கழல் வீமன்''**

(நான்காம் போர்ச் சருக்கம்)

வஞ்சகச் சூதினால் பாண்டவர்களின் நாடு நகரங்களைக் கவர்ந்து கொண்டதோடு, துரியோதனன் துரோபதையின் துகிலையும் உரிந்து அவமானப்படுத்திய அன்று வீமன், துரியோதனனையும் அவன் தம்பிகள் தொண்ணூற்றொன்ப தின் மரையும் தான் ஒருவனாகவே வதைத்து அழிப்ப தாக வீரசபதம் செய்திருந்தான். அந்த வீரசபதத்தை நிறை வேற்றி மகிழும் முதல் கட்டமாகச்சேனாவிந்து, சுதக்கணன், பிங்கலசன், சலாசந்தன், வீமவாகு ஆகிய துரியோதனனின் தம்பிகள் ஐவரை ஐந்து அம்புகளை ஏவிக் கொல்லுகிறான் வீமன்.

திருதராட்டிரனும் காந்தாரியும் போர் முடிந்த முன் இரவில் தம் மக்கள் ஐவர் மாண்டுபட்ட செய்தியை அறிந்து கலங்கித் துடிக்கிறார்கள். பாண்டவர்கள் ஐவரைக் குந்தி தேவி பெற்றெடுத்த போதும் "எனக்கு இளையவளான குந்திக்கு எனக்கு முன் பிள்ளைகள் பிறப்பதா?" எனப் பொறாமை கொண்டு, தன் வயிற்றைக் கல்லினால் அறைந்து கொண்டவள்தான் காந்தாரி.

**"...அருந்தவப் பயனால் மைந்தர்**
**பெற்றனள் குந்தியென்னும் பேருரை கேட்ட அன்றே**
**உற்றனள் பொறாமை, கல்லால் உதரமுட் குழம்புமாறு**
**செற்றனள் தனது கேடும் ஆக்கமும் சிந்தியாதாள்"**

(சம்பவச் சருக்கம், 0

"தான் கருவுற்று ஆண்டுகள் இரண்டுக்கு மேல் ஆகியிருந்தும் எனக்குப் பிள்ளை பிறக்கவில்லை. குந்தி மாத்திரம் ஆண் மக்கள் ஐவரைப் பெற்று விட்டாளே" என்று பொறாமை கொண்டவளாய்க் காந்தாரி, தான் இன்னது தான் செய்கிறோம் என்பதையும் மறந்து, கல்லினால் வயிற்றை அறைந்து கொண்டாள். அவளுடைய கருப்பையும் கருவோடு சிதைந்து வெளியே விழுந்தது.

அப்பொழுது அத்தினாபுரிக்கு வருகை புரிந்த வியாச முனிவர் 101 தாழிகளில் அக்கருப்பிண்டங்களைச் சேமித்து வைக்கச் கூறினார். அப் பிண்டங்களே துரியோதனாதியர் நூறு பேரும், அவர்களின் ஒரே தங்கை துச்சலையுமாகத் தோன்றுவதற்குக் காரணமானது. அன்றைக்கு எப்படிப் பொறாமையினால் வயிற்றில் காந்தாரி அறைந்து கொண்டாளோ, அப்படியே வீமனால் தன்னுடைய மக்கள் ஐவர் மாண்டு மடிய நேரிட்ட இன்றைக்கும் கூட வயிற்றில் அறைந்துகொண்டு அழுகிறாள். "குந்தி பெற்ற மக்கள் மட்டும் உயிரோடு இருக்க, நான் பெற்ற மக்கள் மடிவதா?" என்பதாகக் காந்தாரி புலம்புவது காலம் மாறியும் மாறாத அவளுடைய பொறாமை குணத்தையே காட்டுகிறது.

''கொன்னே குந்தி மைந்தர் இருக்கக் கொலையுண்டீர்
முன்னே முன்னும் முன்னம் முடிந்த தின்றென்னா
மின்னே யென்ன மெய்குலையா மண்மிசை வீழ்ந்தாள்
என்னே என்னே யென்றினையா நின்றென் செய்தாள்''

(நான்காம் போர்ச் சருக்கம், 40)

காந்தாரி கற்பெனும் குணத்தால் வீறு சான்றவளே. திருதராட்டிரனை அவள் மணம் கொண்ட நாளில், தன் கணவனுக்குக் கண் பார்வை கிடையாது என்பதைத் தெரிந்து கொண்ட அளவிலேயே, தன் கணவன் காணக் கொடுத்து வைக்காத உலகைத் தானும் காண வேண்டாம் என்பதாக உறுதி பூண்டு இயற்கையில் தான் குருடி அல்லாத போதும், துணிகளைக் கொண்டு தன் கண்களை இறுகக் கட்டிக் கொண்டு, அன்றிலிருந்து குருடியாகவே தன் ஆயுள் முழுதும் கழிப்பவளாகிய காந்தாரி, கற்பினால் வீறு சான்றவளே. ஆனாலும் பொறாமை மிகக் கொண்டவள். தன் மக்கள் தீய வழியில் செல்வதைத் தடுக்காத தாயவள். தன்னைப் போன்ற பெண்ணாகிய துரோபதைக்குத் தம் மக்கள் புரிந்த அவமானத்தையும் தட்டிக் கேளாத அரக்கியே காந்தாரி. அவளுடைய அந்தப் பாவத்திற்குத் தண்டனைதான் அவளுடைய மக்கள் நூறு பேரும் ஒருவர் பின் ஒருவராகவே அவள் காண மடிய நேரும் இச்சோகமாகும். புத்திர சோகத்தில் அடியெடுத்து வைக்கும் காந்தாரி, இனி அந்தத் துயரத்திலிருந்து மீளப் போவதே இல்லை.

''வீறார் கற்பின் மின்னனையாளை விறல் மைந்தர்
ஏறா மன்றிலேற்றவும் ஆம்அன்று எண்ணாதாள்
ஊறா வன்பிற் கண்ணறை மன்னன் ஒருதேவி
ஆறா வெள்ளத் துன்புற அன்றே அடியிட்டாள்''

(நான்காம் போர்ச் சருக்கம்-41)

ஐந்தாம்நாள் போரில் பாண்டவர் படை மகரவியூகமாக வகுக்கப்பட, துரியோதனன் படை கிரௌஞ்ச வியூகமாக

வகுக்கப்படுகிறது. ஆறாம் நாள் பாண்டவர் படை சர்ப்ப வியூகமாக வகுக்கப்பட, கௌரவர் படை சகடவியூகமாக வகுக்கப்படுகிறது. ஏழாம் நாள் கௌரவர் படை கூர்ம வியூகமாக வகுக்கப்பட, பாண்டவர் படை அசுவவியூகமாக வகுக்கப்படுகிறது. வியூகம் எப்படி வகுக்கப்பட்டாலும் என்ன? வீமனுக்கும் அர்ச்சுனனுக்கும் ஈடு கொடுக்க வல்லதோ கௌரவப் படை? நாளுக்கு நாள் கௌரவர் படை சிதைந்து கொண்டும் குறைந்து கொண்டும் வருகிறதே அல்லாமல், அவர்களால் வெற்றியைக் காண முடியவில்லை.

தருமத்தின் காவலும், தருமத்தின் வடிவமான கண்ண பெருமானின் காவலும் துணை நிற்கும் போது, பாண்டவர்களின் வெற்றியை யாரால் தடுக்க முடியும்? வீரதுரோணரும் கூட அர்ச்சுனனின் வில்லாற்றலுக்கு ஆற்ற மாட்டாமல் ஒவ்வொரு நாளும் போரிட்டுத் தளர்ந்து போகிறார். நரகாசூரனின் மகனாகிய பகதத்தன் தன்னுடைய சுப்பரதீகம் என்ற யானையில் அமர்ந்து போர் செய்து, தன் பராக்கிரமத்தைத் காட்டிப் பாண்டவர் படையைச் சிறிது நாசப் படுத்துகிறான். ஆனால் கடோற்கசன் தன் மாயா வலிமையினால் ஆயிரக் கணக்கான யானைகளை உண்டாக்கி, அவை அனைத்தின் மீதும் தன்னுடைய மாயா வடிவங்களைத் தாங்கிப் போர் செய்யும்போது பகதத்தனும் தோற்று ஓடிப் போகிறான்.

மாவீரனாகிய சல்லியன், பாண்டவர் படையை எதிர்க்க, அவனுக்கும் தோல்வியே கிட்டுகிறது. எதிரிகளின் யானைகளையே தம் கைகளால் தூக்கியெறிந்து வீரப் போர் செய்யக் கூடியவனான வீமன் சல்லியனோடு அவனுடைய தேரையும் யானையைப் போலத் தூக்கி எறிந்து நாசப் படுத்துகிறான். தன் தம்பிமார் புடைசூழ துரியோதனன் வீமனை நெருங்கிப் போர் புரிவதும், வீமன் நன்றாகப் புடைத்து வருத்தத் துரியோதனன் தோற்றோடுவதுமாக நாளும் போர் நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன.

வீடுமர் ஒருவர்தான் கௌரவர் சேனையில் அர்ச்சுனனைத் தடுத்துப் போர் செய்யக்கூடிய பேராற்றல் வாய்ந்தவராகத் திகழ்கிறார். அவர் ஒருவர் மட்டும் இல்லையானால் துரியோதனனின் படைகளைத் தூசியென ஊதிவிட்டிருப்பான் அர்ச்சுனன். வீடுமர், தாருகாசுரன், மற்றும் இராவணனைப்போல் போர் புரிய, அர்ச்சுனன் முருகப் பெருமானைப் போலவும், இராமரைப் போலவும் போர் புரிகிறான் என இருவரையும் ஒப்பிட்டுக் காட்டுகிறார் வில்லிப்புத்தூரார்.

இவ்விருவர் செலுத்தும் அம்புகளால் காயப்படாத யானைகளும் இல்லை. கலக்கப்படாத தேர்களும் இல்லை. வெட்டுப்படாத குதிரைகளும் இல்லை. செத்து மடியாத பாகர்களும் இல்லை. நரனின் அவதாரமான அர்ச்சுனனும், வசுவின் அவதாரமான வீடுமரும் இவ்வாறு ஆற்றக் கூடிய வீரப்போரினைச் சொன்னாலும் நா நடுங்குமானால் காண நேர்ந்தால் என்னவாகும்?

''கரியணிக்குள் எக்கரிகள் புண்படா
கடவுத்தேரில் எத்தேர் கலக்குறா
பரிநிரைக்குள் எப்பரி துணிப்புறா
பாகர்தம்மில் எப்பாகர் வீழ்கலார்
நரனும் வெற்றிகூர் வசுவுமுற்றபோர்
நவிலுகினும் நா நடுங்குமால்''

(ஏழாம் போர்ச் சருக்கம், 17)

''வேறு போரினிப் பொருதல் வேண்டுமோ
விசயன் வீடுமன் என்னும் வீரர்தம்
சீறுபோரிடைத் திசையடங்கலும்
சிவந்தகோல மெய்க் கவந்தமாடுமால்

கூறுபோர் பொரக் கருதி வெங்களம்
கொண்டு தங்களிற் கொல்லலுற்ற நாள்
ஆறுபோரினும் பட்ட போரினும்
ஆறுமடங்குபேர் அன்று பட்டதே''

(ஏழாம் போர்ச் சருக்கம், 18)

ஏழாம் நாள் போரில் வீடுமரும் அர்ச்சுனனும் ஆற்றிய வீரப் போரினைக் கண்டு, தலையில்லாத முண்டங்களும் கூட எழுந்து நின்று ஆட்டம் போடுகின்றன. அன்று ஒரே ஒரு நாளில் மட்டும் இறந்து படுபவர்களின் தொகை, முதல் ஆறு நாட்களின் போரிலும் இறந்துபட்ட வீரர்களின் மொத்தத் தொகைக்கு இணையாக இருக்கிறது என்றால், ஏழாம் நாள் போரின் கடுமையை எப்படி வர்ணிப்பது?

எட்டாம் நாள் போர் வீமனுக்குக் கொண்டாட்டமான போர் என்றே சொல்ல வேண்டும். அன்றைய ஒரு நாளில் மட்டும் துரியோதனனின் தம்பிகள் பதினைந்து பேரை எமனுலகிற்கு வீமன் அனுப்பி வைக்கிறான். முற்பகலில் நடைபெறும் போரில் சுந்தரன், விசாலக் கண்ணன், வீரவாசி, பௌதுண்டன், மகோதரன், மாகவிந்து, அபயன், ஆதித்த கேது ஆகிய துரியோதனனின் தம்பிகள் எண்மரை ''துரியோதனனுக்கு நீங்கள் முதலில் போய் இடம் பிடித்து வையுங்கள்'' என்பதாகக் கூறிச் சாகடிக்கிறான். பிறகு அன்றைய தினமே பிற்பகலில் நடைபெற்ற போரில் குண்டலபோசன், அனாதியக்கன், தீர்க்கநயனன், திம்ம வாகு, குண்டலன், குண்டலாதரன், கனகத்துவசன் ஆகிய எழுவரை எமனுலகிற்கு அனுப்பி வைக்கிறான்.

தம் தம்பிகள் இவ்வாறு வீமனால் கோரமாகக் கொல்லப்படுவதைத் தடுக்க முடியாத துரியோதனன், விழி களில் இரத்தம் கசிவதைப் போன்ற துன்பம் பெருக, வீடுமரிடம் போய் முறையிடுகிறான். ''தாத்தா! நீங்கள் தானைத் தலைவராக இருப்பதனால் எனக்குத் தோல்வி

யில்லை என்று நினைத்திருந்தேனே! ஆனால் நடந்து கொண்டிருப்பது என்ன? என் தம்பிகளைக் குழுவினராகக் குழுவினராகப் பிரித்து, வீமன் சாகடித்துக் கொண்டிருக் கிறானே! என் தாயாகத் தந்தையாகத் திகழும் உங்களிடம் அல்லாமல் என் குறையை யாரிடம் போய் முறை யிடுவேன்?''

இவ்வாறு வருத்தப்பட்டுக் கொள்ளும் துரியோதனனை வீடுமரும் தேற்றுகிறார். ''வருந்த வேண்டாம் துரியோ தனா! வருந்த வேண்டாம். போரே வேண்டும் என்று அடம் பிடித்ததும் நீதான். கண்ணன் சமாதானத்திற்காகத் தூது வந்த போது, ஆண்மையிருந்தால் பாண்டவர்கள் இழந்த நாட்டை அவர்களே போர் செய்து பெற்றுக் கொள்ளட்டும் என்பதாக அன்று ஆண்மை பேசினாய்! இப்பொழுதோ தம்பிகள் சாகிறார்களே என்று வந்து கலங்கித் துடிக்கிறாய்! போரில் வெற்றியும், வீர மரணமும் உண்டாவது சகஜம்தானே! இயன்ற அளவு பகைவரைக் கொல்ல வேண்டும். இயலாத போது நாமும் நம் தலை வேறு, உடல் வேறாக வீரமரணம் அடைதல் வேண்டும். விரமரணம் பெறுதலாகிய பெறுதற்கரிய பேற்றினைத் தானே உன் தம்பிகள் பெற்றிருக்கிறார்கள். இதற்காக வருந்தித் துன்பம் கொள்ளல் ஆமோ?''

''துரியோதனா! உனக்கு இன்னும் சில நான் சொல்ல விரும்புகிறேன். அவை உன் செவிகளுக்கு கேட்கக் கசப்பாகக் கூட இருக்கலாம். நீ அருந்ததிக்கு ஒப்பான கற்புக்கரசி துரோபதையின் கண்ணீரைப் பெருகச் செய்தாய்! அந்தப் பாவத்திற்கான தண்டனைகளே இவை. பெரியோரின் அறிவுரைகளை துச்சமென மதித்த நீ, நம்பியதெல்லாம் கர்ணனையும் சகுனியையும் உன் தம்பி துச்சாதனனையும் தான். நீங்கள் நால்வரும் செய்த பாவம் இன்னும் என்னென்ன துன்பங்களை உண்டாக்கப் போகிறதோ? விதுரனை வசைபாடி வில்லொடுத்துப் போகச் செய்து

விட்டாய்! கர்ணனோ நான் உயிரோடு இருக்கும் வரையில் வந்து போரில் கலந்து கொள்ள மாட்டான்! அங்கே வீமனும் விசயனும் ஆற்றக்கூடிய வீரப் போருக்கு நிகராகப் போர்புரியக் கூடியவர்கள் இங்கேயார் இருக்கிறார்கள்? அறம் வளர்க்கும் தருமன் இருப்பதும் அங்கே, துளபமாலை திருநெடுமால் இருப்பதும் அங்கே. அவர்களுக்குத் தோற்றுப் பலியாகக் கூடியவர்கள் தானே அனைவரும் இங்கே! அப்படியிருக்க வீணாகக் கவலை கொள்வது எதற்குத் துரியோதனா எதற்கு? தைரியமாகப் போர் புரிவோம்வா! மரணம் வருமானாலும் தைரிய மாக ஏற்றுக் கொள்வதே வீரர்களுக்கு இலட்சணம்''

வீடுமர் இவ்வாறு விரிவாகத் துரியோதனனுக்கு அறிவுரை கூறுவதற்கும் காரணம் இருக்கிறது! அவர் இன்னும் இரண்டே நாட்கள்தான் துரியோதனனின் தானைக்குத் தளபதியாக இருக்கப் போகிறார். பத்தாம் நாள் போரில் அவர் களத்தில் அர்ச்சுனன், சிகண்டி இருவரின் அம்புகளுக்கு இலக்காகிச் சாயப் போகிறார். வீடுமர் விரும்பினால் ஒழிய மரணம் அவரை அணுகாது. இது வீடுமருக்கு அவருடைய தந்தை சந்தனு வழங்கிய வரம். ஆனால் வீடுமர் போர் தொடங்கிய முதல் நாளில் கண்ணபெருமானிடம் பத்தாம் நாள்போருடன் தம்முடைய பணியை முடித்துக் கொண்டு விடுவதாக உறுதி கூறியதை முன்னமே பார்த்தோம் அல்லவா! ஆகவேதான் துரியோ தனனுக்குப் புத்திமதிக் கூற இனி ஒரு சந்தர்ப்பம் வாய்க் காது என்பதனாலேயே வீடுமர் இதுவரைத்தான் அடக்கி வைத்திருக்கும் மனக்குமுறலை எல்லாம் துரியோதனனிடம் கொட்டி விடுகிறார். எவ்வளவு எடுத்துரைத்தாலும் துரியோதனன் போரைக்கைவிடான் என்பதும் வீடுமருக்குத் தெரிந்தே இருக்கிறது. அதனால்தான் ''சரி சரி வா, போரைத் தொடர்ந்து செய்து வீரமரணம் அடைவோம்'' என்று துரியோதனனிடம் கூறக் காண்கிறோம்.

இவ்வாறான ஆறுதல் மொழிகளைக் கூறி, வீடுமர் தளர்ந்து போன துரியோதனனையும் அவனுடைய படைகளையும் உற்சாகமூட்டிப் போரில் ஈடுபடுத்துகிறார். வீமனின் வீரமைந்தன் கடோற்கஜனும், அர்க்சுனனின் அன்பு மைந்த்ன் இராவானும், தம்முடைய மாயா வலிமைக் காட்டி ஆயிரக்கணக்கான வடிவங்கள் தாங்கித் துரியோதனனின் சேனைகளைத் துவம்சம் செய்வது, பார்த்துப் பரவசமடையத் தக்கதாய் திகழ்கிறது.

**''காயிருங் கயிற்றின் மேலான் கடோற்கசக் காளை தானோர்<br>ஆயிரம் வடிவமாய் முந்தி அரசர் பேரணியை எல்லாம்<br>தோயிருட் பிழம்போ டுற்ற சோனையம் புயலிற் தோன்றி<br>மாயிரு விசும்பிற் தாரா கணமென மாய்த்து வந்தான்''**

**''ஒருபுடை இவன் போர் செய்ய ஒருபுடை உரககன்னி<br>அருளுடை மைந்தன் எண்ணில் ஆயிரம் உருவமாகி<br>இருபுடை யினும் போர்வேந்தர் எலிகள்போல் ஏங்கி அம்ற்பா<br>பொருபுடை உருண்டு போகப் பொருவில் வெம்பூசல் செய்தான்''**

(எட்டாம் போர்ச் சருக்கம் 17, 18)

கடோற்கஜனும் இராவானும் ஒரு வடிவத்துடன் போர் செய்தாலே கௌரவர் சேனை கதிகலங்கிப் போகும் என்றால், அவர்கள் ஆயிரம் ஆயிரம் வடிவங்களைத் தாங்கிப் போர் செய்வார்கள். ஆனால், கௌரவ சேனைகளின் நாசத்திற்கு கேட்கவா வேண்டும். நட்சத்திரக் கூட்டமென மிகுந்திருக்கும் துரியோதனனின் சேனைகளைப் புயல்போல் சீறி அழித்து மாய்க்கிறான் கடோற்கஜன். நாகக் கன்னியின் மகனான இராவானும் பகைமன்னர்களை எலிகளைப் போல் சிதறி ஓடிப் போகுமாறு வதைத்தழிக்கிறான்.

சிதறி ஓடும் கௌரவப் படைகளை எல்லாம் ஓட வாறு தடுத்தி நிறுத்தி இராவானைக் கொல்வதாக வீ பேசி அவர்களை மறுபடியும் போருக்கு அழைத் வருகிறான் அலம்புசன் என்ற அரக்கன். இவ்வரக்கன் வே யாருமில்லை. வீமனால் முன்பு வேத்திரகீய நகர சாகடிக்கப்பட்ட பகாசூரன் என்ற அரக்கனின் தம்பிதா இந்த அலம்புசன்.

பகாசூரன் வேத்திரகீய நகருக்குப் புறத்தே இருந் தொரு வனத்தில் வசித்து வந்தான். இவன் தனக்குப் ப உண்டான நேரத்தில் எல்லாம் நகருக்குள் நுழைந்து எதிர் பட்டவர்களை எல்லாம் கொன்று பசியாறி வந்தா இவனால் வேத்திரகீயத்து மக்கள் எல்லாம் தினந்தோறு சாவை எண்ணிப் பயந்து நடுங்கிக் கொண்டிருக்க நேர்ந்தது ஒரு நாள் துணிவாக வேத்திரகீயத்து மக்கள் எல்லா பகாசூரன் பசிதீர்ந்து அவனுடைய குகையில் இளைப்பாறி கொண்டு இருந்த நேரத்தில் அவனிடம் போய் ''பக சூரரே! தினந்தோறும் உமக்கு வேண்டிய ஒரு வண்டி சோற்றையும் மாமிசமாக உண்ண உயிரோடு ஒரு ஆளை யும் நாங்களே முறைவைத்து அனுப்பி விடுகிறோம். நகருக்குள்ளே வரவேண்டாம்'' என்று கேட்டுக் கொண்டார் கள். பகாசூரனும் தான் நோகாமல் புசிப்பதற்கு அந்த யோசனை நன்றாகவே இருந்ததால் அதற்கு ஒத்துக் கொண்டான். வேத்திரகீய மக்களும் ஒவ்வொரு வீட்டிற்கும் ஒரு நாள் முறை வைத்துப் பகாசூரனுக்கு ஒரு வண்டிச் சோறும் அவன் கடித்துருசிப்பதற்கு வாட்டசாட்டமான ஒரு ஆளையும் தவறாமல் அனுப்பி வைத்துக் கொண்டிருந் தார்கள். இப்படியான நேரத்தில் தான் பாண்டவர்கள் தம் தாயார் குந்தி தேவியுடன் துரியோதனனின் அரக்கு மாளிகைச் சதியிலிருந்து தப்பி வேத்திரகீய நகருக்குச் சென்றார்கள். துரியோதனனுக்குத் தாங்கள் உயிரோடு இருப்பது தெரியக் கூடாது என்பதனால் பாண்டவர்கள்

அந்தணர் வடிவம் தாங்கி பார்பினி ஒருத்தியின் வீட்டில் வாழ்ந்து கொண்டிருந்தபோது தான் பகாசூரனைப் பற்றிய வரலாறு அவர்களுக்குத் தெரிய வந்தது.

அன்றைய தினம் பகாசூரனுக்குப் பலியாகப் பார்ப்பினி தன் ஒரே ஒரு மகனை அனுப்ப வேண்டுமே என்று வருத்தப் பட்டு அழுது கொண்டிருந்தாள். அவளுடைய துயரத்தைக் கண்ட குந்தி தன் மகன் வீமனைப் பகாசூரனிடம் அனுப்பு வதாகக் கூறி அவளைத் தேற்றினாள். பகாசூரன் உண்ண வேண்டிய ஒரு வண்டிச் சோற்றைத் தான் உண்ண ஒரு நல்ல வாய்ப்பு கிடைத்ததே என்பதால் வீமனும் மகிழ்ந்து அதற்கு ஒத்துக் கொண்டான், பகாசூரனுக்காகத் தயாரிக்கப் பட்ட உணவுகளை எல்லாம் வண்டியில் வைத்து எடுத்துக் கொண்டு வீமனே பகாசூரனின் குகைக்குப் போனான். பகாசூரனிடம் தன்னையும்; உணவுகளையும் ஒப்படைக்க வேண்டிய வீமன், அதற்கு மாறாக ஒரு மரநிழலில் அமர்ந்து ஒரு வண்டிச் சோற்றையும், சாம்பாரையும் விட்டுப் பிசைந்து கறி பதார்த்தங்களுடன் ''ஆஹா! இப்படிச் சாப்பிட்டு எவ்வளவு நாட்கள் ஆகிறது!'' என்பதாக எண்ணி மகிழ்ச்சியுடன் உணவை வயிற்றுக்குள் அனுப்பும் வேலையில் தீவிரமாக ஈடுபட்டான்.

குகையை விட்டு அப்பொழுது வெளியே வந்த பகாசூரன் தன்னுடைய உணவை எவனோ ஒருவன் உண்டு கொண் டிருப்பதைக் கண்டு வெகுண்டு ''ஏய் யாரடா நீ? புலிக்கு அனுப்பப்பட்ட இறைச்சியைப் பூனை அபகரித்து உண்பதைப் போல உண்டு கொண்டிருக்கிறாய்?'' என்ப தாக ஆரவாரம் செய்து, வீமனுடைய பிடரிகளில் மாறி மாறிப் பல குத்துக்களையும் விட்டான். வண்டிச் சோற்றை வயிற்றுக்குள் அனுப்பும் வேலையை அப்பொழுதும் கை விடாதவனாகிய வீமன்''சாப்பிட்டு முடிவதற்குள் என்னடா சண்டைக்கு மிகவும் அவசரப்படுகிறாய்? இதோ வரு கிறேன்'' என்பதாகக் கூறி, ஒரு பருக்கையும் மிச்சம்

இல்லாமல் உண்டு முடித்த பிறகே பகாசூரனுடன் மல்யுத்தம் செய்யலானான்.

மரத்தை வேரோடு பிடுங்கி வீமனும் பகனும் சண்டை செய்தார்கள். அவர்கள் பாறைகளைத் தூக்கியெறிந்தும் போர் செய்தார்கள். வாயு குமாரரானான வீமன் தன் தந்தையை விடவும் பலம் வாய்ந்தவன். வீமன் உதைத்த உதைகளால் பகாசூரனின் விலா ஒடிந்தது. பரந்த மார்பும் முறிந்தது. முதுகும் முறிந்தது. இரண்டு கன்னங்களும் ஒடிந்தது. பற்கள் அத்தனையும் சிதறிப் போக பகாசூரனின் வாயில் இரத்த வெள்ளமே வழிந்தது. பகாசூரனை கீழே தள்ளி அவன் மார்பின் மேல் மண்டியிட்டு அமர்ந்து பகாசூரனுடைய கழுத்தை 'நற நற' வெனத் திருகி, அவனை வதைத்தழித்தான் வீர வீமன்.

அப்படி வீமனால் மாய்த்து ஒழிக்கப்பட்ட அரக்கன் பகாசூரனின் தம்பிதான் அலம்புசன் என்ற இந்த அரக்கன். தன் அண்ணனை வதைத்த வீமனைப் பழிதீர்க்க வேண்டும் என்பதற்காகத் துரியோதனனுடைய அணியில் சேர்ந்து அவன் சமர் செய்து கொண்டிருக்கிறான். ''இராவானை நான் அழிக்கிறேன்'' என்பதாக அந்த அலம்புசன் தான் இப்பொழுது ஆர்ப்பரித்துத் தோள் தட்டுகிறான். அவனும் கடோற்கசன், இராவானைப் போல மாயைப் புரிந்து ஆயிரம் ஆயிரம் வடிவங்களை எடுக்க வல்லவனே. இந்த அலம்புசனும் இராவானும் செய்யக் கூடிய யுத்தத்தைக் கண்டு களிப்பதற்காகத் தேவர்கள் எல்லாம் வந்து வான வெளியில் திரண்டு நிற்கிறார்கள். இவ்விருவரின் வீரப் போரை நாமும் வரும் அத்தியாயத்தில் விரிவாகக் கண்டு களிக்கலாமே!

# 14

அர்ச்சுனனின் வீரமைந்தன் இராவானும் பகாசூரனின் அன்புத் தம்பி அலம்புசனும் எட்டாம் நாள் போரில் தங்கள் தோளாற்றலுடன்,மாயா ஆற்றலையும் காட்டிப்பொருவது தேவர்களாலும் பாராட்டப்படும் அற்புதமாக அமைந் திருக்கிறது. ஆயிரம் யானைகளாக இராவான் மாறிப் போரிட அலம்புசனும் ஆயிரம் யானைகளாகி மோது கின்றான். சம ஆற்றல் படைத்தவைகளான யானைகள் எளிதில் சளைத்து விடாமல் போர் புரிகின்றன. இராவான் தன்னுடைய தோற்றத்தைச் சிங்கங்களாக மாற்றிக் கொள்ள அலம்புசனும் சிங்கங்களாகிப் போரிடுகிறான். இரண்டு சிங்கக் கூட்டங்கள் சீறிப் போரிடும் காட்சி, தளத்தில் உள்ள அனைவரையும் கதிகலங்க வைக்கிறது. சிறிது நேரத்தில் அலம்புசன் ஆயிரம் ஆயிரம் புலிகளாகிப் பொருகிறான். தேவர்கள் கண் இமைத்தல் இல்லாதவர்கள். அவர்கள் பெற்ற பேறு தமக்கும் வாய்த்திலதே இராவானும் அலம்புசனும் ஆற்றக்கூடிய இந்த அற்புதமான போரைக் காண்பதற்கு என்று இரு திறத்து படைவீரர்களும் எண்ணி வருந்துமாறு தம்முடைய மாயா ஆற்றலைக் காட்டிப் போரிடுகின்றனர் அலம்புசனும் இராவானும்.

மாயாப் போரில் இராவானின் ஆற்றலே மேம்பட்டு விளங்க துரியோதனனுக்காக போரிட வந்த அலம்புசன் முதலில் தோல்வியைக் காணுகின்றான்.

> ''வலம்புரித் தாம வேந்துக்காகவே மலைவான் வந்த
> அலம்புச னோடுஞ் சென்றோர் அடங்கலும்அரக்கர்மாயக்
> குலம்பழுதற்ற மைந்தன் கொண்டபல் லுருவத்தோடும்
> புலம்புறப் பொருதான் அந்த அரக்கனும் புறந்தந்தானே''
>
> —எட்டாம் போர்ச் சருக்கம் 21

அலம்புசன் இவ்வாறு இராவானுடன் போரிட்டுத் தோற்றோட, பாண்டவர் படைகளும் வெற்றி ஆரவாரம் புரிகின்றனர். ''நாகக்கன்னியின் மைந்தன் நடுங்கச் செய்தான் அலம்புசனை'' என்று கூறிப் பலரும் பாராட்ட இராவானும் தன்னுடைய குலத்தின் பெருமை தோன்றத் தானும் ஆயிரம் ஆயிரம் நாகங்களாக உருமாறி காட்சியளிக்கிறான் அந்தக் களத்திலே. மறைந்து ஓடிப் போன அலம்புசன் அதுதான் சமயமெனத் தானும் ஆயிரமாயிரம் கருடன்களாகத் தோன்றிப் பறந்து வந்து இராவான் எனும் நாகத்தை அசைய விடாது கடித்து காயப் படுத்த, இராவானும் தன் வலிமையொடுங்கி நிற்க, கருடனாக வந்த அலம்புசன் உடனே தன்னுடைய சுய அரக்க வடிவத்தைக் கொண்டு கூரிய வாளாயுதத்தை வீசி, இராவானைக் கொன்றே விடுகிறான். இவையெல்லாம் கண்ணிமைக்கும் நேரத்தில் நடந்து விடுவதால், அலம்பு சனின் மாயையை வெல்ல இராவானாலும், பாண்டவர் களாலும் இயலவில்லை என்கிறார் வில்லிபுத்தூரார்.

**''அஞ்சினன் போனபின்னர் அரவினை அடக்கும் மாய**
**வெஞ்சினக் கழலுனாகி உருமென மீளவந்தான்**
**நஞ்சினை உமிழும் வெவ்வாய் நாகங்கள் அனைத்தும் ஒன்றாய்**
**எஞ்சினபோல் நின்றான் நிருதருக் கிறுதி செய்தான்''**

**''நின்றவன் தன்னை அந்த நிருதனும் வடிவாள் ஓச்சிக்**
**கொன்றனன் கொன்றான் ஆகக் குருகுலத் தரசன் சேனை**
**வென்றனன் அரக்கன் என்று விரிகடல் போல ஆர்த்தது**
**அன்றவன் அடர்த்த மாயம் ஆர்கொலோ அடர்க்க வல்லார்''**

—எட்டாம் போர்ச் சருக்கம் 22, 23

அருங்குணச் செல்வனாகிய இராவான், அலம்புசனால் கொல்லப்பட்டது பாண்டவர்களுக்குப் பேரிழப்பேயாகும். ''இராவானோ களப்பலி கொடுத்தற்கேற்ற குணங்களால்

நிறைந்தவன்'' என்று வீடுமர் பாராட்டி உரைத்ததைக் கண்டோம். பகைவனாகிய துரியோதனன் வந்து களப்பலி யாக இராவானை வேண்டிய போது ''உம்மைப் போல சத்தியம் தவறுபவர்கள் நாங்கள் இல்லை'' என்பதாகக் கூறிக் களப்பலி ஆதற்கு உடன்பட்ட இராவானின் கருணை யையும் கண்டோம். சதுர்த்தசியைக் கண்ணபெருமான் அமாவாசையாக்கித் தன்னைக் களப்பலி கொடுக்கப் பாண்டவருக்கு ஆலோசனை கூறியபோது ''முன் துரியோ தனனுக்காகக் களப்பலி என்னைக் கொடுக்க இசைந்தேன். அவன் கோரிய காலத்தில் என்னைக் களப்பலி கொள்ளாமை யால் அவனுக்காகவும் இசைந்த நான் உங்களுக்காகப் பெருமையுடன் என்னைக் களப்பலியாக்க இசைகிறேன்'' என்று கூறி, தன்னுடைய முகமலர்ச்சி கொஞ்சம் கூட மாறாமல் காளிக்குத் தன் அங்கங்களைத்தானே அறுத்துப் பலிகொடுத்துக் கொண்டதையும் கண்டோம். அத்தகைய தியாகத்தை மெச்சித்தான் கண்ணபெருமான் மேலும் சில நாட்கள் வாழ்ந்து பாரதப் போரைக் காண்பதோடு போரிலும் ஈடுபடவுமான வரத்தைக் கொடுத்தார்.

அப்படி ஆற்றலாலும், அன்பாலும், பண்பாட்டாலும், தியாகத்தாலும் சிறந்து விளங்கும் இராவான் இறந்து பட்டமைக்கு யாரே கண்கலங்காமல் இருக்க முடியும்? பாண்டவர்கள் அனைவரும் கலங்குகின்றார்கள். அவனை ஈன்ற தந்தை அர்ச்சுனன் கொள்ளும் சோகத்திற்கும் அளவில்லை. கண்ணபெருமான் தான் பாண்டவர்களைத் தேற்றுகிறார்.

**''அன்றே களத்திற் பலியூட்டிய ஆண்மைவீரன்**<br>
**இன்றே இறந்தான் இதற்கு உன்னி இரங்கலீர் என்று**<br>
**ஒன்றே மொழியும் உரவோன் முதல்ஐ வருக்குங்**<br>
**குன்றே கவித்த குடைக்கோவலன் கூறினானே''**

—எட்டாம் போர்ச் சருக்கம் 38

''போருக்கு முதல்நாளே அவனை நாமாக விரும்பிப் பலிகொடுத்தோம். அவன் இத்தனை நாள் நம்மிடையே வாழ்ந்திருந்தற்காக மகிழ்ச்சி கொள்ள வேண்டுமே தவிர மாண்டான் எனத் துயர் கொள்ளலாகாது'' என்று கண்ணபெருமான் தேற்றுகிறார்.

தன் சகோதரன் இராவான் மாண்டது காணும் அபிமன்யு, ஆத்திரம் கொண்டு துரியோதனன் படைகளை அன்றைய தினம் பிற்பகல் நடந்த போரில் வாட்டியெடுத்து விடுகிறான். வீமனோ இராவான் இழப்பை ஈடுகட்டும் விதத்தில் துயோதனனின் தம்பிகள் எழுவரின் தலைகளைக் கணைகளைத் தொடுத்துக் கொய்து எறிகிறான். வானத்தில் நின்று இப்போரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும் இந்திரன் மற்ற தேவர்களைப் பார்த்து, ''இந்த ஏழு தலைகள் தனியே பறந்து வரும் காட்சி எப்படியிருக்கிறது?'' என்று கேட்க தேவர்களும் ''வீரஇலக்குமி அம்மனைக்காய் களைத் தூக்கி எறிந்து விளையாடுவது போல் இருக்கிறது'' என்று கூறுகின்றனர்.

**''இப்பேரெழுவர் சிரமேழும் எழுந்து துள்ளி**
**மைப்பேரெழிலி யகல் வானிடைவந்த வெல்லை**
**ஒப்பேதென வாசவன் கேட்டலும் ஓங்கல் விந்தை**
**கைப்பேரெழில் பைங்கழங்கென்றனர்கண்டவானோர்,''**

—எட்டாம் போர்ச் சருக்கம் 31

போர் முடிந்த அந்த எட்டாம் நாள் இரவில் துரியோதனன் ஒரு அற்பத்தனமான காரியத்தைச் செய்கிறான். தன் தம்பி துச்சாதனனை அனுப்பிக் கர்ணனைப் பாசறைக்கு அழைத்து வரச்செய்கிறான். வந்த கர்ணனும் துரியோதனனின் மறைந்துபட்ட தம்பிகளுக்காகத் தன் மனவருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறான். ''படைத் தலைவரான வீடுமரின் வில்லாலும் பயனில்லை, துரோணரின் ஒரு வில்லாலும் பயனில்லை. நீ வந்து போர்க் களத்தில் நின்று வில்லெடுத்துப் போர் செய்தால்தான்

நாங்கள் பிழைக்க முடியும்'' என்று துரியோதனன் கர்ணனிடம் வேண்டுகிறான். கர்ணன் உடனே அதற்கு ஆத்திரமாக ''உன் பாட்டன் வீடுமர் என்னை அர்த்தரதன் என்று கூறி அவமானப்படுத்தியதை மறந்துவிட்டாயா? அவர் யுத்த களத்தில் நிற்கும் வரை நான் போரிட மாட்டேன். அவர் மடியட்டும், அதற்குப் பிறகு பாண்டவர் களையும், கண்ணபெருமானையும் நானே வந்து வதைத் தழிக்கிறேன்'' என்று வாய் வீரம் பேசுகிறான்.

துரியோதனன் கர்ணனை அழைத்து ஆலோசித்ததை யும், பாண்டவர்களை வெல்ல போரில் ஈடுபடுமாறு வேண்டிக் கொண்டதையும் நாம் தவறு சொல்வதற்கில்லை. ஒரு தலைவன் ஆற்ற வேண்டிய அவசியக் கடமைதான் அது. ஆனால் அவன் அதற்குப் பிறகு செய்த ஒரு காரியம்தான் நல்ல உள்ளங்களை நோகச் செய்கிறது. துச்சாதனனை அழைத்துக் கர்ணன் கூறியதை வீடுமரிடம் போய் கூறி வா என்று கட்டளையிடுகிறான் துரியோதனன். அந்த மதிகெட்ட துச்சாதனனும் உடனே போய் வீடுமரிடம் ''நீங்கள் மடிவீரானால் கர்ணன் போர் செய்து பாண்டவர் களை வெல்வானாம்'' என்று கூற, வீடுமரும் பேரன் சொல்லைக் கேட்டுப் புன்சிரிப்பு செய்கிறார். ''நீ சாவா யாக'' என்று பேரனே வந்து தாத்தாவிடம் சொல்லும் போது, தாத்தா சிரிக்காமல் சபிக்கவா முடியும்?

பரசுராமரையும் வென்ற தம் வீரப் பராக்கிரமத்தைக் காட்டிக் கடந்த 8 நாட்களாக பாண்டவர் படைகளைக் கதிகலங்கச் செய்து கொண்டிருப்பவர் வீடுமர் ஒருவர்தான். துரியோதனனிடம் உண்டு விட்ட உப்பிற்காக அவன் செய்து வரும் தப்புகளை எல்லாம் தாங்கிக் கொண்டு, ஒப்பிற்காக அல்லாமல் மெய்யாகவே தம் மேனியெலாம் புண்பட விழுப்புண்களைத் தாங்கி வீரப் போர் ஆற்றிவரும் வீடுமரிடம் ''நீ செத்தால் கர்ணன் ஜெயிப்பான்'' என்ப தாகக் கூறும் போது எதையும் தாங்கிக் கொள்ளும் அந்த ஆண்மை நெஞ்சம் இதையும் தாங்க இயலுமா என்பதுதான்

என்னுடைய கேள்வி. அத்தனை நாள் அரணாக நின்று பாடு பட்ட வீடுமரின் உண்மை வீரத்தையல்லவா பழிக்கிறான் துரியோதனன். "கர்ணன் ஆக இருந்திருந்தால் வென்று இருப்பான். உன்னால் கையால் ஆகவில்லை" என்பதை யல்லவா கூறிக் கேலி பேசுகிறான் துரியோதனன். "நீ எப்போது தொலைவாய்?" என்றல்லவா கேட்டு துச்சாதனனைத் தூது அனுப்பி விசாரிக்கிறான் துரியோ தனன்! ஒருவர் கஷ்டப்பட்டுக் காரியங்கள் ஆற்றும்போது தட்டிக் கொடுத்து மேலும் மேலும் காரியங்களை ஆற்றிக் கொள்ள வேண்டும். நன்றியை மறந்து அவர் நெஞ்சிலே உதைக்கக் கூடாது. கர்ணன் தன்னுடைய வீரப் பிரதாபத்தை முழக்கினான். உடனே அதைக் கேட்டு "நீ இன்னும் ஏன் சாகாமல் இருக்கிறாய்?" என்று கேட்டு ஒரு தியாக உள்ளத்தை உடன் நோகச் செய்து சாகடிக்கிறான் துரியோதனன்.

துரியோதனனின் இந்த அறமற்ற செயலை அற்பத்தன மான செயல் என்று வருணிக்காமல் எப்படி நாம் அவனை வாழ்த்த முடியும்? கவியரசர் கண்ணதாசன் இந்த ஒரு காட்சிக்குப் பாட்டெழுதப் புகுவாரானால் "வளர்த்த கடா முட்ட வந்தால், வைச்ச செடி முள்ளானால், போன ஜென்மப் பாவம் அடி நம்மாளு" என்றுதான் பாடுவார். தியாக சீலரான வீடுமரோ பொறுமையாக துச்சாதனனிடம் "இத்தனை நாள் பொறுத்தீர்கள், ஒரே ஒரு நாள் பொறுத்துக் கொள்ளுங்கள். நீங்கள் சொன்னபடி நான் செத்து போகிறேன். அதற்குப் பிறகு கர்ணன் வரட்டும். போர் செய்யட்டும். இந்தப் பெரிய உலகைக் கட்டிக் காப்பாற்றி, நீண்ட நாள் இருந்து நீங்கள் வாழுங்கள். சரி தானே" என்பதாகக் கூறித் துச்சாதனனைத் துரியோதன னிடம் அனுப்பி வைக்கிறார்.

''ஒருநாளு நீவிர் பொறுமின்கள் நும்மை உலகாளுவிக்க
வருவோர்
வருநாள் தொடங்கி அமர்செய்து தெவ்வை மடிவிப்பர்
சொன்ன வகையே
குருநாடு மற்றைவள நாடும் எய்தி நுமரோடியைந்து
குழுமிப்
பெருநாளிருந்து நனிவாழ்திரென்று விடை நல்கி...''

—ஒன்பதாம் போர்ச் சருக்கம், 18

நல்ல நெஞ்சங்களை ஒரு நாளும் நோகச் செய்தல் கூடாது, வீடுமரின் வீரத்தையும் தியாகத்தையும் வீணன் துரியோதனன் அவமதித்து விட்டான். ஆனால் வீடுமரோ அப்போதே அதையெல்லாம் மறந்து வழக்கம் போலவே தம்முடைய பணியை ஒன்பதாம் நாள் போரிலும் உற்சாகமாக ஆற்றுகிறார் என்றாலும் துரியோதனன் செய்த பாவங்கள் அவனுக்கு அடுத்தடுத்து தோல்விகளையே வழங்குகின்றன. ஒன்பதாம் நாள் போரில் அவனுக்கு ஏற்படும் இழப்பு அலம்புசன் மறைவு.

''என் அண்ணன் பகாசூரனைப் பலியாக்கியவனைக் கொன்று பழிவாங்குவேன்'' என்று வீரம் பேசி, எண் திசைகளையும் நடுங்க வைக்கும் கர்ச்சனையைச் செய்து கொண்டு வீமனுடன் போரிட வருகிறான் அலம்புசன். தன் அன்பு மகன் இராவானைக் கொன்றவனைக் கொன்று பழிதீர்க்க வேண்டும் என்பதாக எண்ணி ஆவேசத்தோடு அலம்புசனை எதிர்கொள்கிறான் வீமன். இவ்வாறு போர் செய்வதற்காக நிற்கின்ற இவ்விருவருடைய தோற்றமே இந்திரன் முதலான தேவர்களை எல்லாம் நடுங்க வைக்கிறது.

''இந்திரனும் ஏனை இமையோர்களும் நடுங்க
அந்தரமும் எண்திசையும் நின்றதிர அதிரா
வெந்திறல் அலங்கல்புனை வீமனுடன் மலைவான்
வந்தனன் அலம்புசன் வலம்புனை புயத்தான்'.

—ஒன்பதாம் போர்ச் சருக்கம்.

இருவரும் அவரவர் தேரிலிருந்து குதித்து முதலில் வா
போர் புரிகிறார்கள். வீமன் "சத்துருகாதினி" எனு
தன்னுடைய கதாயுதத்தைக் கொண்டு பகைவர்களை எம
உலகிற்கு அனுப்பி வைப்பதில் வல்லவனாய் இருத்தலோடு
விற்போரிலும் மிக வல்வனாய் இருப்பதைக் கண்டோம்
இதுகாறும் அவனால் கொல்லப்பட்ட துரியோதனனி
தம்பிகள் அனைவரும், வீமனுடைய விற்போரினாலே
வீர சுவர்க்கம் புகுந்தார்கள். அலம்புசனோடு வாட்போரு
புரிந்து தன் ஆற்றலைக் காட்டும் வீமன், அலம்புசனின் ஒ
பக்கத்துத் தோளை அப்படியே ஆட்டினை வெட்டுவ
போல் வெட்டிச் சாய்த்து விடுகிறான். அதற்குப் பிற
ஒற்றைத்தோளுடன் அலம்புசன்'மற்போர்புரிவோம்'என்
வீமனைமல்லுக்கு அழைக்கஇருவரும் மற்போர்புரிகின்றன

வீமனும் அலம்புசனும் கையால் ஒருவரை ஒருவ
குத்திக் கொள்கிறார்கள். வீமன் அலம்புசனை அலாக்காக
தூக்கி அப்படியே கரகரவென்று சுழற்றுகிறான். மலையை
போன்ற தோள்களால் இருவரும் ஒருவரை ஒருவர் மோதி
கொள்கிறார்கள். புலிகளைப் போலப் பாய்ந்தோடி வந்து
மார்பினோடு மார்பு அழுந்துமாறு கட்டிப்பிடித்து
சண்டை செய்கிறார்கள். ஆட்டுக்கிடாக்கள் சண்டை
செய்யுமானால் ஒன்றையொன்று தலையினாலேயே முட்டி
கொள்ளும். அப்படி வீமனும் அலம்புசனும் ஆவேச
பொங்கத் தலையினோடு தலையை முட்டிக் கொண்டு
போர் செய்கிற அந்தக் காட்சியை ஆயிரம் கண்படைத்
இந்திரன் ஒருவன்தான் முழுமையாகப் பார்க்கிறா
மற்றவர்கள் ஓரளவே பார்க்கிறார்கள்.

இப்படி வீமனும் அலம்புசனும் போர் செய்து கொ
டிருக்க அலம்புசன், வீமனை இவ்வாறான போர்களா
வெல்ல முடியாது என்று எணித்து, இராவணனை வென்ற
போல் மாயையால்தான் வெல்ல வேண்டும் என்று முடி
செய்து உடனே களத்திலிருந்து காணாமல் மறைந்
விடுகிறான். அலம்புசனைக் காணாமல் வீமன் திகைக்க

நிமிடமே பெரிய மலையொன்றைக் கையில் ஏந்தியவனாய் வந்த அலம்புசன், ஆகாயத்தில் இருந்தபடியே அந்த மலையை வீமனின் தலையைக் குறிவைத்து வீசுகிறான். நல்ல வேளையாக அபிமன்யு வீமனை வீழ்த்த வரும் மலையைத் தன் கணைகளால் துளைத்துப் பொடியாக்கி விடுவதனால் வீமனும் பிழைக்கக் காண்கிறோம். அபிமன்யு மட்டும் மலையைப் பிளக்காதிருந்திருப்பானேயானால் வேக மாக அலம்புசனால் வீசி எறியப்பட்ட மலை வீமனை இராவான் இருக்குமிடத்திற்கு அனுப்பி வைத்திருந்தாலும் இருக்கும் என்றுதான் கூற வேண்டும்.

''எறியுமளவிற் குரிசில் இளவல் திருமைந்தன்
குறியினொடு வெஞ்சிலை குனித்தருகு நின்றான்
பொறியிலவன் வீசிய பொருப்பொரு அணுவாகி
முறியும் வகை பல் பகழிமுகிலென விடுத்தான்''

—ஒன்பதாம் போர்ச் சருக்கம், 23

''வீமன் தொலைந்தான்'' என நினைத்து அலம்புசன் எறிந்த மலையை அபிமன்யு தன் அம்புகளால் பொடியாக்கி விட, அலம்புசனும் திகைத்து ஒரு நிமிட நேரமே அசையாமல் ஆகாயத்தில் நிற்க, இவனை விட்டு வைத்தால் தனக்கு ஆபத்து என்றுணர்ந்த வீமன் உடனே வலிமை வாய்ந்த வேல் ஒன்றை எடுத்து அலம்புசன் மேல் எறிகின் றான். அந்த வடிவேலும் அலம்புசனின் பரந்த மார்பைத் துளைத்து முதுகின் வழியாக வெளிவருகிறது. அலம்புசனும் மாண்டுப் பிணமாகி வானத்திலிருந்து வந்து மண்ணில் விழுகிறான். உடனே வானவர்கள் எல்லாம் வீமனைப் புகழ்ந்து கரகோஷம் செய்கிறார்கள்.

''முற்பகலில் மைந்தனை முருக்கிய அரக்கன்
பிற்பகலில் வீழ வடிவேல் கொடு பிளந்தான்
சொற்பகல் இலான் இளவல் என்றனர் துதித்தார்
அற்பகல் இலா உலகில் வாழ் அமரர் எல்லாம்''

—ஒன்பதாம் போர்ச் சருக்கம், 27

பத்தாம் நாள் காலை வழக்கம் போல் வீடுமர் எழுந்து நீராடி முடித்து சூரிய பகவானையும் தொழுது போர்க் கோலங்கள் புனைந்து சம்பீரமாகத் தேரிலேறிக் களத்திற்கு வருகிறார். கண்ணபெருமான் அர்ச்சுனனுக்கு வீடுமரை காட்டி "அர்ச்சுனா! இன்று வீடுமருக்கு விமானம் அளிப்பா யாக" என்று கூற அர்ச்சுனனும் முதல் நாள் போரின் போது மயக்கமும் குழப்பமும் கொண்டு தாத்தாவைக் கொல்வதா? ஆசானை எதிர்ப்பதா? நண்பர்களை வதைப்பதா? என்று மறுத்துக் கூறி காண்டீபத்தை கைநழுவ விட்டதைப் போல் இப்போது செய்திடாமல் மனத் துணிவோடு,

> "எந்தையாக துணைவராக தனயனாக எந்தை தன்
> தந்தையாக நீ யுரைக்கில் யாரையுந் தறிப்பன்யான்
> முந்தை ஆரணங்களுக்கு முடிவினின்ற பொருளை என்
> சிந்தையார முற்றுவித்து வினையறுத்த செம்மலே"
>
> —பத்தாம் போர்ச் சருக்கம், 10

என்று கண்ணபெருமானைப் போற்றித் துதிக்கிறான். கண்ணபெருமான் விழைந்தவாறே அர்ச்சுனனால் பத்தாம் நாள் போரில் வீர வீடுமருக்கு விமானம் அளிக்க முடிகிறதா என்பதை இனிவரும் அத்தியாயத்தில் விரிவுபடக் காண்போம்.

# 15

தந்தையானாலும் தாத்தாவானாலும் நண்பர்களானாலும் உடன் பிறந்தார் யாவரே ஆனாலும் கண்ணபெருமான் உரைத்தால் எவரையும் தான் அழிப்பதாக அர்ச்சுனன் உறுதிகூறி வீடுமருக்கு எதிராகவில்வளைத்து நின்றதை முன் அத்தியாயத்தில் கண்டோம். 'என்கையில் இருக்கும் காண்டீபமும் அதன் கணைகளும் அக்கினி பகவான் அளித்தவை. தேரில் கொடியாக நின்று ஆரவாரிப்பவன் வாயு மைந்தன் ஆகிய அனுமன். தேர்ப்பாகனாக நின்று என்னைப் பாதுகாத்துக்கொண்டிருப்பதோ எல்லாம் வல்ல எம்பெருமானும் கண்ணபெருமானும் ஆகிய நீ. நிலவுலகத்திலுள்ள அரசர்கள் மட்டுமே அல்லாமல் தேவர்களும் அசுரர்களும் ஒரு சேர எதிர்த்து வந்து போர் செய்தாலும் அவர்கள் அனைவரையும் நான் வதைத்து அழித்து விடுகிறேன்' என்பதாக மேலும் அர்ச்சுனன் கண்ணபெருமானிடம் உறுதி கூற, அவரும் மகிழ்ந்து வீடுமரை நோக்கிப் பார்த்தனின் தேரைச் செலுத்துகிறார்.

பத்தாம் நாள் போருடன் தம்முடைய பணியை முடித்துக் கொள்வதாக வீடுமரே உறுதி அளித்திருந்தபடியால் அன்றைய தினம்வரை அவரைக் கண்டால் ஓடி ஒளிந்து கொண்டிருந்த பாண்டவர் சேனையிலிருந்த பலப் பல மன்னர்களும் அன்று ஆர்வமாக முன்வந்து வீடுமருடன் போர் புரிகின்றார்கள்.

துருபத, மகத, கலிங்க, கருணாடக, சோனக, சிங்கள, கடார, கோசல நாட்டு மன்னர்கள் இவ்வாறு வீடுமர் மேல் ஒரு சேர வந்து அம்புகள் ஏவ, வீடுமரும் அவற்றையெல்லாம் தன் மேனியில் தாங்கி ஆரம்பத்தில் தளர்ந்தே போய் விடுகிறார். என்றாலும் சிறிது நேரத்திலேயே தம்மைச்

சமாளித்துக்கொண்டு சிங்கம்போல் சீறி அவர்களை எல்லாம் பொருது விரட்டி விரட்டி அடிக்கிறார்.

"தான் சாய்ந்தாலும் தன் வீரம் யாருக்கும் எந்நாளிலும் சாயக் கூடியதல்ல" என்பதைத்தான் இன்றைக்கு வீடுமர் நிலை நிறுத்திக் காட்டுகிறார். பெருங் காற்றினால் வீசி எறியப்படும் புழுதியைப் போல, பேரிடியினால் தளர்ந்து போகும் பாம்புகள் போல இன்றைய தினம் வீடுமரை எதிர்க்கும் பாண்டவர் படையினர் பயந்து ஓடி, வந்த வழியே திரும்புகிறார்கள். வீடுமருடைய வில் வீரத்திற்கு முன்னால் விசயனுடைய வில் வீரமும்கூட நிற்க வல்லதன்று; அதுவும் இறுதி நாளாகிய இன்று என்பதே இன்றைக்குக் காண நேரும் உண்மை.

**"ஒருத்தன் ஓட என்னிதென்று அநேகர் அஞ்சி ஓடுவார்**
**விருத்தன் வில்வளைத்த ஆண்மை விசயனுக்கும்**
**இசையுமோ?"**

என்கிறார் வில்லிப்புத்தூரார்.

வீடுமருக்குத் துணையாக அப்போர்க்களத்தில் சோழ வேந்தனும், கிருபாச்சாரியனும், துரோணரும், அசுவத்தாமனும், செயத்திரதனும், சகுனியும், பகதத்தனும், சல்லியனும் துரியோதனனுடைய தம்பிமார்கள் பலரும் வந்து சேர்ந்துவிட பத்தாம் நாள் போரில் மிகப் பெரிய ஆதாயத்தை எதிர்நோக்கியிருக்கும்கண்ணபெருமான்,மிகப்பெரிய இழப்பினையே காணும்படியாக, பாண்டவர் படையினர் பலரும் மாண்டு மடிய நேர்கிறது என்றால் பத்தாம் நாள் போரின் கடுமையை என்னவென்று கூறுவது? வீடுமரால் வதைத்தழிக்கப்பட்ட தலைகள், மலை போலும் தோள்கள், தாமரை மலர் போலும் கைகள், கொடிபோல் சுற்றிய குடல்கள், எலும்புகளின் வரிசைகள், அழகிய துடைகள் இவற்றையெல்லாம் எண்ணி எண்ணி மாளாது, எண்ணவும் நம் நெஞ்சம் தாளாது.

''எத்தனை முடித்தலைகள் எத்தனை புயக்கிரிகள்
எத்தனைக் கரக் கமலம் வேறு
எத்தனை உடற்சுமைகள் எத்தனை உறுப்பின் நிணம்
எத்தனை கொடிக்குடர்கள்
எத்தனை நிணத்தடிகள் எத்தனை நரம்புவகை எத்தனை
எலும்பு நிரை மேல்
எத்தனை மணித்தொடர்கள் எத்தனை மலர்க்கழல்கள்
இற்றன களத்தினிடையே''

—பத்தாம் போர்ச் சருக்கம் 25

தாம் எண்ணியதற்கு மாறாகப் போர் வெற்றி திசையில் அன்றி வேறு திசையை நோக்கிச் சென்று கொண்டிருப் பதைக் காணுகின்ற கண்ணபெருமான், உடனே தம்முடைய பாஞ்சசன்னியத்தை எடுத்துத்தம் திருவுதடுகளில் வைத்து முழக்குகிறார். அவருடைய சங்க நாதமே, தளர்ந்து போன பாண்டவர்களுக்குப் புது வேகத்தையும், வெற்றிச் செருக் கோடு திரியும் வீடுமருக்கும் துரியோதனன் படைகளுக்கும் பயத்தையும் ஊட்டி அர்ச்சுனனுக்கும், வீமனுக்கும் புதிய தெம்பினை உண்டாக்குகின்றது.

காண்டீபத்தில் அர்ச்சுனன் ஏவும் ஒரு அம்பு, நூறு நூறு அம்புகளாகச் சீறிச்சென்று, வீடுமருக்குத் துணையாக வந்த வேந்தர்களை எல்லாம் அஞ்சி அகலும்படிச்செய்கிறது. அதே நேரத்தில் வீமனும் தன்னுடைய ''சத்துரு காதினி'' கதைக்கு நல்ல பசி எடுத்துவிட்டதுபோல் பாய்ந்து பாய்ந்து தாக்கித் துரியோதனன் படையை மாய்த்தழிக்கிறான்.

''தாத்தாவுக்குப் பேரர்கள் சற்றும் சளைத்தவர்கள் இல்லை'' என்பதை வீமார்ச்சுனர்கள் தம்முடைய போர்த் திறத்தால் வீடுமருக்கு உணர்த்துகின்றார்கள். அந்தப் பத்தாம் நாள் போரில் சோழனும் கிருபனும் துரோணரும் அசுவத்தாமனும் செயத்திரதனும் சல்லியனும் சகுனியும் துரியோதனனின் தம்பிகளும் வீடுமரைக் காக்க வந்தவர்கள்

இப்பொழுது தங்களை காத்துக் கொள்ள வேறு வழி இல்லாமல் 'எங்கே அர்ச்சுனனின் காண்டீபம் நோக்குமோ?' 'எங்கே வீமனின் சத்துருகாதினி தாக்குமோ?' என்பதாக அஞ்சி, நின்றாலும் ஆபத்து, நடந்தாலும் ஆபத்து, ஓடினாலும் ஆபத்து என்று எண்ணி பறக்கின்றார்கள் களத்தை விட்டே.

''அர்ச்சுனா! வீடுமரை வதைத்தழிக்க இதுதான்சமயம். தொடு கணையை, சிகண்டியை முன் நிற்கச் செய்' என்பதாகக் கண்ணபெருமானும் காலமறிந்து உடன் கட்டளையிடுகிறார். அர்ச்சுனனும் சிகண்டியை உடன் அழைத்து வீடுமருக்கு முன்னே நிற்குமாறு செய்து தானும் வீடுமர் மேல் அம்புகளைப் பொழிகிறான்.

**''பேர்பெறும் சிகண்டி தலையாக முன்பு கொண்டு உலகு**
**பேரும் அன்றும் இன்றுகொல் எனப்**
**போர்தொடங்கி வென்றிபுனை வீடுமன் தடங்கண்**
**எதிர்போயினன் தனஞ்சயனுமே''**

—பத்தாம் போர்ச்சருக்கம் 30

வீடுமர், களத்தில் சிகண்டியானவன் தனக்கு எதிர் வரப் பார்த்தவுடன் ''ஆதி அம்பை பகை இன்று மூள வந்தது'' என்று கூறியவாறே தம்முடைய ஆயுதங்களை எல்லாம் கீழே போட்டு வெறுங் கையோடு நின்றுவிடுகிறார். அதே நேரத்தில் சிகண்டியின் கணைகளும் அர்ச்சுனன் கணைகளும் வீடுமர் மேல் பாய்ந்தவண்ணம் இருக்கின்றன. யார் இந்த சிகண்டி? இந்தச் சிகண்டியைக் கண்டவுடன் வீடுமர் ஏன் ஆயுதங்களை எல்லாம் கீழே போட்டு நிராயுதபாணியாக நிற்கிறார் என்பதற்கான காரணங்களை எல்லாம் இப்பொழுது நாம் தெரிந்து கொள்ள வேண்டிய நிலையில் இருக்கிறோம்.

தேவ விரதன் என இயற்பெயர் கொண்டவரான வீடுமரின் வரலாற்றை இதற்கு முன்னும் நாம் ஓரளவு

கண்டிருக்கிறோம். விண்ணுலகில் வாழ்ந்திருந்த அட்டவசுக்களில் ஒருவனாகிய பிரபாசன், தன் மனைவியின் துர்போதனைக்கிணங்க, மற்றவசுக்கள் எழுவருடன் போய், வசிட்ட முனிவரிடம் இருந்த காமதேனுவைக் களவாட முயன்று வசிட்ட முனிவரின் சாபத்துக் காளானான். 'பிரபாசனும், மற்ற வசுக்கள் எழுவரும் மண்ணுலகில் மானிடராய்பிறக்கக் கடவர், பிரபாசன் தன் மனையியின் தூண்டுதலின் காரணமாகவே களவாட முற்பட்ட காரணத்தால் அவன் ஒருவன் மட்டும் மங்கை இன்பம் அற்று, நீண்ட நெடுங்காலம் பூமியில் வாழ, மற்ற வசுக்கள் பிறந்தவுடனே இறந்து விண்ணகம் வரக் கடவர்'' என்பது அன்றைக்கு வசிட்ட மாமுனிவர் இட்ட சாபம்.

இதே நேரத்தில் பிரமனுடைய சத்திய லோகத்தில் வருணபகவானும், கங்காதேவியும் பலரும் காணக் காதல் கொண்டு நின்ற காரணத்தால் பிரமனின் சாபத்துக்காளாகி பூமியில் பிறக்க நேர்ந்தது. வருணன், சந்தனு மன்னனாகவும், கங்காதேவி ஒரு மங்கையாகவும் பூமியில் பிறக்க சந்தனு, கங்கையைக் கண்டு காதல் கொண்டு அவளை மணமும் புரிந்து தன்னுடைய அத்தினாபுரி அரண்மனைக்கு அழைத்து வர, கங்கையின் வயிற்றில் வசிட்டரின் சாபப்படி வசுக்கள் எழுவரும் பிறந்து, பிறந்தவுடனே அவளால் கொல்லப் பட்டும் விண்ணகம் அடைய, வசிட்டரால் கடுமையாகச் சபிக்கப்பட்ட பிரபாசன் மட்டும் கங்கா தேவியின் எட்டாவது மைந்தனாகத் தோன்றி கங்காதேவியிடமே வளர்ந்து பரசுராமரிடம் அத்திரவித்தைகளைப் பயின்று பின் சந்தனு மன்னனிடம் ஒப்படைக்கப்பட்டான். கங்கை தன் மைந்தனாகத் தோன்றிய பிரபாசனுக்குத் தான் இட்ட பெயர் தேவ விரதன் என்பது ஆகும்.

தேவ விரதனை வளர்த்து ஆளாக்கிச் சந்தனு மன்னனிடம் ஒப்படைத்தபின் தன் சாபக்காலம் பூர்த்தியடைந்து விட்டபடியால் கங்கை மட்டும் சத்தியலோகம் தனியே

சென்று விட, சந்தனு மன்னன் மீளவும் மச்சகந்தி என்ற செம்படவ நங்கையைக் கண்டு காதல் கொண்டான். அவளை மணம் புரியும் தன் விருப்பத்தைப் மச்சகந்தியின் வளர்ப்புத் தந்தையான செம்படவர் தலைவனிடம் கூற, அவனோ 'தேவ விரதனுக்கும் அவனுக்குப் பிறக்கும் மைந்தர்களுக்குமே அத்தினாபுரியின்அரசு, உரிமை உடைய தாக இருக்கிறது. அவர்களுக்கு அவ்வாறு அத்தினாபுரியின் அரசுரிமையை நல்காமல் மச்சகந்தி பெறும் மைந்தர்களுக்கு நல்குவதாக உறுதி அளித்தால் மட்டுமே மச்சகந்தியைச் சந்தனு மன்னனுக்கு மணம் செய்து தர இயலும்.'' என உறுதியாய் கூறிவிடுகிறான்.

தேவவிரதனுக்குத் துரோகம் செய்து இத்தகைய உறுதி மொழியை அளித்து மச்சகந்தியை மணம் புரிய சந்தனு மன்னன் விரும்பவில்லை. அதே நேரத்தில் மச்சகந்தியின் பால் கொண்ட காதலையும் மறக்க முடியாமல் அவன் நாளுக்கு நாள் உடல் மெலிந்து உளமும் வாடுகிறான். இந் நிலையில் தன் தந்தையை வாட்டும் துன்பம் இன்னதென் பதைத் தேர்ப்பாகனிடம் கேட்டுத் தெரிந்துகொண்டு விடுகிற தேவவிரதன் தானே மச்சகந்தியின் வீட்டிற்குச் சென்று செம்படவர் தலைவன் கோரிய சத்தியத்தையும் தான் செய்து கொடுத்து மச்சகந்தியைத் தன் தந்தை சந்தனு விற்கு மணமும் செய்து கொடுக்கிறான்.

''விரதம் முற்றியவாறு அனைவரும் கேண்மின் மெய்யுயர்
வீடும்அன்றளவும்
சரதமுற்றிய மெய்த்தாதுவும் மூலத்தழலுடன் மீதெழுந்
தகைத்தே
இரதமுற்றிய சொல்மகப் பெறாதவருக் கில்லை
யென்றியம்பு நற்கதியும்
சுரதமுற்றிய என்தந்தைதன் பொருட்டாற் பெறுவல்
என்றின்னது சொன்னான்''

—குருகுலச் சருக்கம்-98.

"ஆயுள் உள்ள அளவும் பிரமச்சரிய விரதம் பூண்டு வாழ்வேன், புதல்வரைப் பெறாதார்க்கு சொர்க்கம் இல்லை என்ற சொல்லையும் பொய்யாக்கி, என் தந்தைக்கு உதவி செய்யும் இப்புண்ணியத்தினாலேயே நான் சொர்க்கமும் பெறுவேன், இது சத்தியம்" என்று தேவவிரதன் செய்தளித்த சத்தியமே அவன் "வீடுமன்" (பயங்கரமான விரதத்தைச் செய்தவன்) என வானோர் அவனை வாழ்த்தி வழங்கிய பெயருக்கும் காரணம் ஆகிறது.

இவ்வாறு இளமையின் முறுக்கு நிறைந்த வாலிபத்தில் தாம் செய்து தந்த விரதம் பொய்க்காமல் வாழ்ந்து காட்டிடும் காரணம் கருதியே "வீடுமர்" என்ற காரணப் பெயர், தேவவிரதனுக்கு நிலைப்பதாயிற்று. வீடுமர் செய்து தந்த சத்தியத்திற்கு எத்தனையோ சோதனைகள் ஏற்பட்டன. ஆனால் எந்தச் சோதனையும் அவரை வெற்றி கொள்ள முடியவில்லை. அவருடைய விரதத்திற்கு முதல் சோதனையாக வந்தவள்தான் பத்தாம் நாள் போரில் வீடுமர் "ஆதி அம்பை பகை இன்று மூள வந்தது" என்று உரைக்கிறாரே, அந்த அம்பை.

காசிதேசத்தரசனுக்கு மூன்று பெண்கள். அம்பை, அம்பிகை, அம்பாலிகை எனும் மூவரே அவர்கள். அம்மூவரும் மணப்பருவம் எய்தியபின், காசி தேசத்தரசன் தன் மகள்களுக்குச் சுயம்வரம் ஒன்றை நிகழ்த்தினான். மச்சகந்தியை மணந்து சுகம் கண்டு, சித்திராங்கதன் விசித்திர வீரியன் என்ற இரு தம்பிகளை வீடுமருக்கு வழங்கிய பின் சந்தனுமன்னன் மறைந்துவிட, தம்பி சித்திராங்கதனுக்குப் பட்டம் ட்டி வீடுமர் அவனுக்கு உற்ற துணைவராய் அத்தினாபுரியில் வீற்றிருந்தார். சித்திராங்கதன் எனும் பெயரில் வாழ்ந்திருந்த கந்தருவன் ஒருவன் தன் பெயரில் பூலோகத்தில் ஒருவன் சிறப்படைவதா என்று பொறாமை கொண்டு ஒருநாள் இரவு சித்திராங்கதன் படுத்துறங்கிக் கொண்டிருந்தபோது அவனுடைய மாளிகையில் ஒருவருக்கும் தெரியாமல் புகுந்து சித்திராங்கதனைக் கொன்று

விட்டான். இவ்வாறு சித்திராங்கதன் மாண்டுபட விசித்திர வீரியனுக்கு அடுத்துப் பட்டம் கட்டினார் வீடுமர். விசித்திர வீரியன் அத்தினாபுரியை அரசாண்டு கொண்டிருந்த காலத்தில்தான் காசி தேசத்தரசனுடைய புதல்விகளுக்குச் சுயம் வரம் என்று அழைப்பிதழும் வந்தது.

அம்பை, அம்பிகை, அம்பாலிகை எனும் மங்கையர் மூவரையும் விசித்திர வீரியனுச்குமணம் முடித்துத்தர விரும்பிய வீடுமர், சுயம்வர மண்டபத்திலிருந்து அம் மூவரையுமே கவர்ந்து, தம் தேரிலேற்றி அத்தினாபுரிக்கு வந்துகொண்டிருந்தார்.

அப்பொழுது சுயம்வரத்தில் கலந்து கொண்ட மன்னர் கள் பலரும் வீடுமரைத் தடுத்து காசி தேசத்தரசன் புதல்வி யரைத் தத்தமக்காய்பெறப் போர் செய்தனர். ஆனால் வீடுமரிடம் அவர்களுடைய வீரம் செல்லாமல் அனைவரும் தோற்றனர். இப்போரில் வீடுமரிடம் சற்று ஈடுகொடுத்துப் போர் செய்தவன் சாலுவ நாட்டரசன் ஆகிய சாலுவன். அவனிடம் தன் உள்ளத்தைப் பறி கொடுத்த சகோதரியர் மூவரில் மூத்தவளான அம்பை, வீடுமரை வணங்கி 'நான் சாலுவனை மணம்புரிய விரும்புகிறேன். ஆகவே எனக்கு அனுமதி தரவேண்டும்'' என்று வேண்ட வீடுமரும் அவளை மட்டும் தம் தேரிலிருந்து இறக்கி விட்டார். மற்ற அம்பிகை, அம்பாலிகை இருவரையும் தம் தம்பி விசித்திர வீரியனுக்கு மணம் செய்து வைத்து, மனம் மகிழ்ந்தார் வீடுமர்.

இதற்கிடையே அம்பை, சாலுவ தேசத்தரசனைக் கண்டு தன்னை அவன் மணம் செய்து கொள்ள வேண்டு மென வேண்ட அவனோ 'வீடுமரால் வெற்றி கொள்ளப் பட்ட நின்னை நான் மணம் புரியேன்' என்பதாகக் கூறி மறுத்துவிட்டான். ஒருமுறைக்குப் பலமுறை சாலுவனை மணம் செய்து கொள்ள மன்றாடிய அம்பை, அவன் உறுதி யாக மறுத்தவுடன் அத்தினாபுரிக்கு வந்து வீடுமரைக் கண்டு ''விசித்திர வீரியன் தன்னை மணக்க வேண்டும் அல்லது

வீடுமரே தன்னை மணந்து கொள்ள வேண்டும்'' என்று வேண்டினாள். இதுதான் வீடுமரின் விரதத்திற்கு ஏற்பட்ட முதல் சோதனை. விசித்திர வீரியனோ மாற்றானிடம் மனம் செலுத்திய மங்கையைத் தான் மணக்க இயலா தெனக் கூறி மறுத்துவிட்டான். வீடுமரும் தாம் செய்திருந்த சத்தியத்தை அம்பைக்கு எடுத்துக் கூறி அவளை மணம் செய்ய இயலாதென மறுத்து விட்டார்.

ஆனால் அம்பையோ அந்தச் சமாதானத்தை ஏற்காமல் முதலில் தன்னுடையதந்தை காசி தேசத்தரசனை அழைத்து வந்து வீடுமன் தன்னை மணக்க வேண்டுமெனக் கட்டாயப் படுத்தினாள். பிறகு வீடுமருக்கு அத்திரவித்தைகளைப் பயிற்றுவித்த குருவான பரசுராமரையே அழைத்து வந்து தன்னை மணக்க வீடுமரைக் கட்டாயப்படுத்தினாள். 'அம்பையை மணக்கா விட்டால் நீ என் மாணவன் என்பதை யும் மறந்து நான் உன்னைக் கொல்ல வேண்டியிருக்கும்'' என்று பரசுராமர் அச்சுறுத்திப் பார்த்தும் கூட தம் சத்தியத் தைக் கைவிடவில்லை வீடுமர். சத்தியம் தவறுவதைக் காட்டிலும், குருவின் கையால் தாம் மாண்டு மடிவதே உத்தமம் என்பதாக எண்ணிப் பரசுராமருடன் போரிட்டார் வீடுமர். அவருடைய சத்தியமே அவருக்கு வீரமாகி பரசு ராமரையும் வெற்றி கொள்ள வைத்தது. பத்து நாட்கள் இரவும் பகலுமாக நடந்தபோரில் பரசுராமர் வீடுமரிடம் தோற்று ''தசரதராமனே நினக்கு நிகர்' எனப் பாராட்டி விட்டுத் தன்னிருப்பிடத்திற்குத் திரும்பிவிட்டார்.

அதற்குப் பிறகுதான் வீடுமரை மணக்க வேண்டும் என்பதற்காகப் போராடிய அம்பை, வீடுமரை அழிக்க வேண்டும் என்பதாக தன் விருப்பத்தை மாற்றிக்கொண்டு மிகக் கடுமையான தவம் புரிந்தாள். பன்னிரண்டு ஆண்டுகள் ஒற்றைக் காலில் நின்று, நீரில் அவள் செய்த கடுமையான தவத்தை மெச்சி, முருகப்பெருமானே நேரில் காட்சியளித்து அவளுடைய கையில் ஒரு மாலையைக் கொடுத்து, இம் மாலையை அணிந்து போரிடுவோர் வீடுமரை வெல்வர்

என்பதாக வரமும் தந்தார். அம்மாலையை அணிந்து கொண்டு வீடுமரை வெல்ல வேண்டும் எனக் கேட்டு அம்பை மன்னர்களின் அரண்மனைகளுக்கு ஏறி ஏறி இறங்கினாள். அப்பொழுதும் அவளுடைய விருப்பத்தை ஏற்று வீடுமரிடம் போரிட யாரும் முன்வர வில்லை.

இறுதியாக துருபதராசனிடம் போய் அம்பை வேண்டினாள். அவனும் மறுத்து விடவே விரக்தியடைந்த அம்பை முருகப்பெருமான் அளித்த மாலையை அவனுடைய அரண்மனை முற்றத்திலேயே தொங்க வைத்து விட்டு மீண்டும் சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்தாள். 'அடுத்த பிறவியில் உன் எண்ணம் பூர்த்தியாகும்' என சிவபெருமான் வரம் கொடுக்க, வீடுமரை விரைந்து கொல்ல வேண்டும் என்ற வைராக்கியத்தால் உடன் கனலை மூட்டி அம்பை அதில் மூழ்கி இறந்து விட்டாள். அவளே மறுபிறப்பில் துருபதராசனின் மகளாகப் பிறந்தாள். முன்பிறப்பில் அம்பை விட்டுச் சென்ற முருகப்பெருமான் அளித்த மாலை அச்சம் காரணமாக யாராலும் தொடப்படாமல் அவள் தொங்க விட்டுச் சென்ற அதே இடத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. துருபதராசனின் மகளாக மறுபிறவியில் பிறந்த அம்பை, முற்றத்தில் தொங்கிய அந்த மாலையைத் துணிவுடன் எடுத்து, தன்னுடைய கழுத்தில் போட்டுக் கொண்டாள். அப்பொழுது அவளுடைய பெண் தோற்றமும் மாறி, அவளே ஆணாக மாறிவிட்டாள். அது முதல் அவளே சிகண்டி எனவும் அழைக்கப்படுகிறாள்.

இந்த நிகழ்ச்சிகளை எல்லாம் அறிந்திருப்பவராகிய வீடுமர் பெண்ணாகப் பிறந்து ஆணாகமாறிய சிகண்டியிடம் போர் செய்வது தம் ஆண்மைக்கு இழுக்கு என்பதனாலேயே சிகண்டி தன்னை எதிர்த்துப் போர் செய்ய வந்ததும் பத்தாம் நாள் போரில் தம்முடைய ஆயுதங்களை எல்லாம் கீழே போட்டு விட்டு நிராயுதபாணியாக நிற்கிறார். தன்னால் மணம் மறுக்கப்பட்ட அம்பையே தன்னைக் கொல்லும் பொருட்டு சிகண்டியாக வந்திருப்பதையும் அவர்

அறிந்திருப்பதனால் தான் ''ஆதி அம்பை பகை இன்று மூள வந்தது'' என்றும் கூறுகிறார்.

அம்பையின் மறுபிறப்பாகிய சிக்கண்டியின் கையினால் மடிவதையும் வீடுமர் விரும்பவில்லை. அதனால்தான் முதல் நாள் போரின் போதே தம்மிடம் நல்லாசியைக் கோரி வந்த கண்ணபெருமானிடமும், பாண்டவர்களிடமும் பத்தாம் நாள் போரில் சிகண்டியை முன்னிற்க வைத்து, அருச்சுனன் தம் மேல் கணை தொடுக்க தாமும் தம் போர்ப்பணியை முடித்துக் கொள்வதாக வாக்கும் அளிக்கிறார்.

சத்திய விரதனாகிய வீடுமர் அளித்த நல்வாக்கின் படியேதான் பத்தாம் நாள் போரில் சிகண்டியை முன்நிற்க வைத்து அர்ச்சுனனை வீடுமர்மேல் கணைகளைத் தொடுக்க வைக்கிறார் கண்ணபெருமான். சிகண்டியின் அம்புகளால் வீடுமரின் மேனியைத் தொட முடிகிறதே தவிர, துளைக்க முடியவில்லை. அதே நேரத்தில் துரியோதனனின் தம்பி துச்சாதனன் வீடுமருக்குத் துணையாக விரைந்து ஓடி வந்து சிகண்டியின் மேல் பல பாணங்களை ஏவி அவனுடைய வில்லையும் ஒடித்துவிட, சிகண்டி வந்த வழியே திரும்ப நேரிடுகிறது,

வீடுமரை வீழ்த்துவதற்கான அருமையான வாய்ப்பு அர்ச்சுனனுக்குக் கிடைத்தது. ஆனால் அதைத் துச்சாதனன் நடுவில் புகுந்து தடுத்துவிட வீடுமர் மீண்டும் தம் கைகளில் வில்லினை ஏந்தி அர்ச்சுனன் மேலும், தேரைச் செலுத்தும் பார்த்தசாரதியின் மேலும் காயம் உண்டாகுமாறு கணைகளைத் தொடுக்கிறார். கண்ணபெருமான் மீதே வீடுமர் கணைகளை ஏவிக் காயப்படுத்த கடுங்கோபம் உண்டாகிறது அர்ச்சுனனுக்கு. அவனுடைய காண்டீபத்திலிருந்து தொடுக்கப்படும் நூற்றுக்கணக்கான அம்புகள் துச்சாதனனின் தேர்க் கொடியை வீழ்த்தி, தேர்க்குதிரைகளை வதைத்து, தேர்ப் பாகனையும் கொன்று, துச்சாதனனின் வில்லையும் ஒடித்து வீரசாகசம் புரிய, துச்சாதனன் வீடுமரை விட்டு விட்டுத்

தன்னைக் காப்பாற்றிக் கொள்ள தரையில் குதித்து தப்பி ஓடுகிறான்.

அதே நேரத்தில் வில்லொடிந்து பின்வாங்கிய சிகண்டியை அருச்சுனன் மீண்டும் அழைத்து வந்து வீடுமருக்கு முன் நிறுத்துகிறான். ''சிகண்டி அஞ்சாதே! தைரியமாக நின்று போர் செய், கணைகளை ஏவு'' என்று சிகண்டியின் பக்கத்திலிருந்து அம்புகளைப் பொழிகிறான் அர்ச்சுனன்.

சிகண்டியின் சில கணைகளோடு அர்ச்சுனனின் ஆயிரக் கணக்கான கணைகள் பாயவும், வீடுமர் தம் மேனி முழுவதும் எள்ளிருக்க இடமின்றி அம்புகள் துளைத்துவிட அப்படியே இந்தக் குருச்சேத்திரக் களத்திலே பத்தாம் நாள் போர் நிறைவுறும் தருவாயில் சாய்ந்து விழுந்து விடுகிறார். தன்னுடைய மேனியைத் துளைத்த அம்புகள் அனைத்திலும் அர்ச்சுனனின் நாமமே பொறித்திருக்க கண்டு தம் பேரனால் தானே தம்மைச் சாய்க்க முடிந்தது 'என்பதாக எண்ணி, 'தனஞ்சயன் செய் பெருவாழ்வு இது' என்று கூறி சந்தோசப் படுகிறார் வீடுமர். வீடுமரின் வீரமான வீழ்ச்சி கண்டு தேவர்கள் எல்லாம் கூட ஆனந்தக் கண்ணீர் வடித்து ஆகாயத்தில் இருந்தவாறே கற்பக மலர் மாரி பொழிந்து அவரை வாழ்த்துகிறார்கள்.

''வீடுமர் வீழ்ந்தார்'' என்றசேதி கேட்டவுடன் அப்படி அப்படியே போரை நிறுத்திவிட்டு பாண்டவர்களும் கௌரவர்களும் அவரிருக்கும் இடத்திற்கு விரைந்து வந்து அவருடைய திருவடிகளைப் பணிந்து கண்ணீர் சொரிகிறார்கள்.

> ''இங்கும் தருமன் முதலா வுள்ள மன்னரும்
> அங்கும் துரியோதனனை ஆதிஆன அரசர்
> பொங்கும் கடல் உலகம் பொன்றும் அன்றுபோலச்
> சிங்கம் அன்னான் பாதம் சென்னிமேற்
> கொண்டழுதார்.''
>
> —பத்தாம் போர்ச் சருச்கம் 39

பாண்டவர்களும், கௌரவர்களும் ஒருசேர வீடுமரின் பெருமைகளை எல்லாம் எடுத்துக் கூறிப் புலம்பி அழுகி றார்கள். ''உங்களுடைய வீரம் என்ன? உங்களுடைய தோளாற்றல் என்ன? உங்களுடைய அத்திரப்பயிற்சி என்ன? உங்களுடைய அறிவு என்ன? அன்பென்ன? பண்பென்ன? தந்தையின் சுகத்திற்காகவே தம் சுகம் துறந்த பிதாமகரே! இனி எங்களில் யார் வென்றாலும் எங்களுக்கு முடி சூட்டி வைக்க நீங்கள் இல்லையே' என்பதாக அவர்கள் அழுது புலம்புகிறார்கள்.

' மறமும் வாகுவலியும் வல்வில் முதல்எப் படையின்
திறமும் தேசும் வாழ்வும் சீரும் கேள்விச் செலவும்
நிறமும் உண்மை யறிவுநெறியும் புகழும் திகழ்பேர்
அறமும் பொன்றும் நின்னொடு ஐயா அந்தோ அந்தோ.''

''தந்தை யின்ப மெய்த் தவமே இன்பமாகச்
சிந்தை தெளியு ஞானச் செல்வா செஞ்சேவகனே
முந்தை மரபுக் கெல்லாம் முதல்வா ஞாலம் முழுதும்
எந்தையாள வைப்பார் இனியார் கோவே என்றார்.''

—பத்தாம் நாள் போர்ச் சருக்கம் 40, 41

என்ற பாடல்களில் வில்லிபுத்தூராரும் வீடுமரின் வீழ்ச் சியைக் கண்டு கலங்கிக் கண்ணீர் விடுவதைக் காணு கின்றோம்.

அம்பையினால் தம்முடைய விரதத்திற்கு ஏற்பட்ட சோதனையை வீடுமர் எப்படி வென்றார் என்பதை மேலே கண்டோம். அம்பிகை, அம்பாலிகை இருவரையும் மணந்த விசித்திர வீரியன் அவர்களிடம் புதல்வர்களை உண்டாக் காமல் சயரோகம் என்ற கொடிய நோயினால் தாக்கப் பட்டு மாண்டுவிட மறுபடியும் வீடுமரின் பிரமச்சரிய விரதத் திற்குச் சோதனை நேர்ந்தது. எந்த மச்சகந்தி வீடுமரை பிரமசரிய விரதம் ஏற்க வைத்தாளோ அவளே பின் வீடும ரிடம் அவ்விரதத்தைக் கைவிடுமாறும் கேட்டுக்கொண்டாள்

விசித்திர வீரியனுக்குப் பின் குருவம்சம் அரச வாரிசுகள் இன்றி அழிந்து விடக் கூடாது எனக் கூறி வீடுமரைத் திருமணம் செய்துகொள்ள வேண்டுமெனக் கட்டாயப்படுத் தினாள், திருமணம் செய்து கொள்ளாவிட்டாலும் பரவா யில்லை. அம்பிகை அம்பாலிகையரிடமிருந்து வாரிசுகளை யாவது உண்டாக்க வேண்டும் என்றும்வேண்டினாள். யாருக் காக தாம் விரதம் பூணநேர்ந்ததோ, அவரே வேண்டிய போதும்கூட தம்முடைய விரதத்தை மாற்றிக் கொள்ளாத மன உறுதியை வீடுமரிடம் அப்பொழுதும் காணுகின்றோம்.

"தாயே இது தகாது; அரசப் பரம்பரை வாரிசு அற்றுப் போய்விட நேரும் போது முனிவர்களை வரவழைத்து வாரிசு உண்டாக்கலாம் என்பதுவே நீதிநூல்களில் சொல்லப் பட்டிருக்கும் நெறியாகும். அவ்வாறு செய்வதே உத்தமம்" என்பதாகக் கூறி எந்நிலையிலும் விரதம் தவறிடாமல் விளங்கிய வீடுமரின் பண்பை நாம் பாராட்டி உரைக்க வார்த்தைகளே இல்லை. அதற்குப் பிறகுதான் வியாச முனிவரை வரவழைத்து அம்பிகையிடம் கௌரவர்களின் தந்தையான் திருதராட்டிரனையும், அம்பாலிகையிடம் பாண்டவர்களின் தந்தையான பாண்டுவையும் பிறப்பிப் பதை நாம் காணுகிறோம்.

இப்படி கௌரவர், பாண்டவர் தோன்றவே வித்திட்ட மூலவராம் வீடுமரைத்தான் அவருடைய நற்சொல்லைக் கேளாமல் போரினை உண்டாக்கி சாய்ந்து மண்ணில் விழுமாறு செய்துவிடுகிறான் துரியோதனன். அந்த துரியோ தனனும் இப்பொழுது வீடுமர் வீழ்ந்து விட்ட நிலையில் அவருடைய திருவடிகளைப் பணிந்து கதறி அழுது கண்ணீர் விடுவதைக் காண்கிறோம்.

பூபாரம் தீர்க்க வந்த கண்ணனின் கட்டளைக் கிணங்க தன் கணைகளால் வீடுமரைத் துளைத்தெடுத்துவிட்ட அர்ச் சுனனும் கண்ணீர் விடுவதைக் காணுகின்றோம். ஆனால் வீடுமருக்கோ தம்முடைய பேரர்கள் எவரிடமும் எள்ளளவும் வருத்தம் ஏற்படவில்லை. மாறாக பஞ்சசயனங் ளைக்

காட்டிலும் அர்ச்சுனனின் அம்பு சயனமே தமக்கு இனியதாக உள்ளதெனப் பாராட்டிக் கூறி, தன்னுடைய தலை தாழாமல் இருக்கச் செய்வாய் என வேண்டுகிறார்.

அர்ச்சுனனும் மீண்டும் மூன்று அம்புகளை ஏவி வீடுமரின் தலை உயர்ந்திருக்கத் தலையணை அமைக்கிறான். 'தாகமாய் இருக்கிறது' என்றும் வீடுமர் கூறுகிறார். உடனே அர்ச்சுனன் தன்காண்டீபத்தை வளைத்து பூமியைத் துளைத்து கணையினை ஏவ, சாகக் கிடக்கும் தன் அன்பு மகனைக் கட்டி அணைத்துக் கடைசி முத்தம் கொடுப்பது போல கங்கையும் பீறிட்டோடி வந்து, வீடுமரின் தாகத் தைத் தணிக்கக் காண்கிறோம்.

தாகம் தீர்ந்த வீடுமர், துரியோதனனுடைய கண்ணீரை யும் கூட துடைத்து 'கர்ணனை இனி சேனைத் தலைவன் ஆக்கி யுத்தம் செய்க' என்று அன்போடு அவனிடமும் கூறு கிறார். 'முன்னை வினைப் பயனால் யான் வீழ்ந்தேன், நீங்கள் யாரும் அதற்காக அழ வேண்டாம். இப்பொழுது தேவர்களுக்கு இரவாகிய தட்சிணாயண காலம். நான் தைத் திங்கள் முதல் நாள் முதலாகத் தொடங்கும் உத்திராயண காலத்தில் உயிர்விட்டு முத்தி பெறுவேன். அதுகாறும் யோகத்தால் என் உயிரை நிலை நிறுத்துவேன்' என்பதாக வீடுமர் கூற தருமரும் தம்மை ஆளாக்கிய தருமசீலராம் வீடுமருக்குத் தங்கியிருக்க தங்குமிடத்தையும் உடன் அமைத் துக் கொடுக்கிறார். வீடுமரும் தாம் உயிர் விடுவதற்கு உத்தமமான உத்தராயண காலத்தை எதிர்நோக்கி அங்கே யோக நித்திரை கொள்கிறார்.

வருணனுடைய மகனாகத் தோன்றியவர் வீடுமர். அவர் இவ்வாறு பாரதப் போரின் பத்தாம் நாள் போரில் மண்ணில் சாய்ந்து மரணத்தை எதிர் நோக்கியிருக்கிறார். இந்தச் சோகமான செய்தியை வருணனிடம் கூற விரைந்து செல் கிறானாம் அவனுக்குத் தோழனான கதிரவன்.

**''இன்றுன் மைந்தன் பட்டனன் சென்று தந்தைக்கிசைப்பன்**
**என்று பரிதி மேலை திக்கின் எல்லைச் சேர்ந்தான்**
**அன்று அருணன் அன்பால் அழுத செந்நீராறாய்**
**மன்ற வெங்கும் பரந்த தொக்கும் செக்கர்வானம்''**

—பத்தாம் போர்ச் சருக்கம் 46.

# 16

**ப**த்தாம் நாள் போரில் பாண்டவர்கள் வீடுமரை வீழ்த்தியது அவர்களுக்கு மாபெரும் வெற்றியாகும். வீடுமர் தம் தோளாற்றலால் கௌரவப் படைகளுக்கு மாபெரும் அரணாக இருந்தார். அந்த அரணைச் சிதைத்துவிட்ட படியால் இனி வெற்றிக்கு வெகுதூரம் இல்லை என்பதாக ஒரு நம்பிக்கை பாண்டவர்களிடத்திலே ஏற்படுகிறது. கண்ணபெருமானும் தருமரிடத்திலே

**''சென்றனன் கங்கை மைந்தன் தினகரன் மைந்தன் செல்வான்**
**நின்றனன் துரோணன் மைந்தன் நீடமர் முனைந்து செய்யான்**
**வென்றனம் இனிநாம்''**

(பதினோராம் போர்ச் சருக்கம் 3)

என்று உறுதி கூறக் காண்கிறோம்.

''கங்கையின் மைந்தனாகிய வீடுமர் போர்க்களம் விட்டுச் சென்று விட்டார். சூரியன் மைந்தனாகிய கர்ணனும் போர்க்களம் விட்டுப் பரலோகத்திற்கு விரைவிலே சென்றுவிடுவான். இவ்விருவரை ஒக்கும் ஒரு மாபெரும் வீரன்கௌரவச் சேனையிலே இருக்கிறான் என்றால் அவன் தான் துரோணனின் மகனாகிய அசுவத்தாமன். அவன் பால் துரியோதனனுக்கு நம்பிக்கைஇல்லை. எனக்கு விசுவாசமாக இருப்பதாக அவன் சூரியனின் மீது சாட்சிகூறி சத்தியம் செய்து தந்து விட்டதாக ஒரு ஐயம் துரியோதனனுக்கு உண்டு. ஆகவே தன்பால் நம்பிக்கையில்லாத துரியோதனனுக்காக துரோணனின் மகனாகிய வீர அசுவத்தா

மனும் வீறுகொண்டு போர் செய்ய மாட்டான். ஆகவே வெற்றி இனி நமக்குத்தான்'' என்று கண்ணபெருமான் தருமரிடம் கூறிக் களிப்படைகிறார்.

கர்ணனின் வீரம் எல்லாம் வெறும் வாய் வீரம்தான் என்பதும் அவருக்குமிக நன்றாகவே தெரிந்திருக்கிறது. பரசுராமரின் சாபத்திற்குக் கர்ணனை ஆளாக்கியது, இந்திரனை ஏவி கர்ணனின் கவச குண்டலங்களைப் பறித்துக் கொண்டது, குந்திதேவியை ஏவி கர்ணனிடம் இருவரங்களைப் பெற்று வரச் செய்தது முதலான பல காரணங்களால், கர்ணனின் வீரத்தை ஏற்கனவே கண்ணபெருமான் விழுங்கி விட்டிருந்தார். ஆகவேதான் ''தினகரன் மைந்தன் வெல்வான்'' என்று கூறாமல் ''செல்வான்'' என்று கண்ண பெருமான் கூறக் காண்கிறோம்.

பதினோராம் நாள் போரில் பாண்டவர் படைக்கு வழக்கம்போல திட்டத்துய்மன் சேனாதிபதியாகத் திகழ்ந்து கண்ணபெருமானின் கட்டளைப்படி கிரௌஞ்ச வியூகமாகப் படைகளை அணிவகுக்கிறான். துரியோதனன் வீடுமர் கூறிய படியும், கர்ணனும் விழைந்தபடியும் கர்ணனைத் தன்னுடைய படைகளுக்குச் சேனாபதியாக்காமல் தனக்குக் காவல் வேண்டும் எனக் கூறிக் கர்ணனை வைத்துக் கொண்டு, துரோணரையே சேனாபதி யாக்குகின்றான். துரோணரும் கௌரவ சேனையைச் சகட வியூகமாக வகுக்கிறார்.

பத்துநாட்களாக கௌரவப்படைகளுக்குச் சேனாபதியாக இருந்த வீடுமர், பதினோராம் நாள் போரில் இல்லாதிருக்கும் பெருங்குறையை வில்லிப்புத்தூரார் சுட்டிக்காட்டி வருத்தப்படுகிறார். வானம் இருக்கிறது., வட்டநிலா இல்லை. மலர் இருக்கிறது, அதிலே வாசமில்லை. நாடு இருக்கிறது. ஆனால் நாட்டிற்கு வளம் சேர்க்கும் நதிதான் இல்லை. யாழிருக்கிறது, ஆனால் அதிலே நரம்புகள் இல்லை. இன்னும் செல்வம் இல்லாத வாழ்க்கையைப்

போலவும், நல்ல நினைவுகள் இல்லாத நெஞ்சத்தைப் போலவும், மந்திரங்கள் செபிக்கப்படாத யாகத்தைப் போல வும் வீடுமர் இல்லாத சேனை, பொலிவும் வலிவும் இன்றி இருக்கிறது என்று பாடுகிறார் வில்லிப்புத்தூரார்.

**''மதியிலா விசும்பும் செவ்வி மணமிலா மலரும் தெண்ணீர்**
**நதியிலா நாடும் செம்பொன் நரம்பிலாத நாத யாழும்**
**நதியிலா வாழ்வும் தக்க நினைவிலா நெஞ்சும் வேத**
**விதியிலா மகமும் போலும் வீடுமன் இலாத சேனை''**

(பதினோராம் போர்ச் சருக்கம் 5)

ஆயிரம் தலைகளால் பூமியைத் தாங்கிக் கொண்டிருக் கின்ற ஆதிசேடனும், பாரம் தாங்கிட இயலாமல் உடல் நெளியுமாறு ஆரவாரம் செய்தபடி பாண்டவர் கௌரவர் சேனைகள் பதினோராம் நாள் காலை போரினைத் தொடங்குகின்றன. ஒரு பக்கத்தில் சகுனியுடன் சகா தேவனும், இன்னொருபக்கத்தில் கர்ணனுடன் விராடனும், இன்னொருபக்கத்தில் பகதத்தனுடன் துருபதனும் யுத்தம் செய்து கொண்டிருக்கின்றார்கள். வீரவீமன் துரியோதன னுடன் போர்செய்து அவனைத் திணறவைத்துக் கொண் டிருக்க, தம் குருநாதர் துரோணரை எதிர்த்துத்தன் வீரத்தைக் காட்டிக் கொண்டிருக்கின்றான் அருச்சுனன். அர்ச்சுனனின் வீரமைந்தன் அபிமன்யு, அன்றைக்குக் காட்டு கின்ற வீரம் அதி அற்புதமானது. துரியோதனனின் மைந் தன் இலக்கணகுமாரன் அபிமன்யுவிடம் அன்றைக்கு சிக்கிக் கொண்டு படாதபாடு படுகிறான்.

பதினோராம் நாள் சகுனிக்கும், இலக்கண குமார னுக்கும் மிகச்சோதனையான நாளாக அமைகின்றது. சகுனி யினால் அல்லவா சூதுயுத்தம் நடந்தது. தருமன் சூதினால் சகுனியிடம் தோற்று, அரசையெல்லாம் இழந்து ஆண்டி யாகிப் பதின் மூன்றாண்டுக் காலம் சொல்லொண்ணா துன்பங்களுக்கும் ஆளானார்.

சகாதேவன் சகுனியைக் கொல்வதாகத் தான் செய்திருந்த வஞ்சினத்தை நிறைவேற்றிக் கொள்ள வேளை வந்து விட்டதெனக் கருதிச் சகுனியுடன் போர் புரிகிறான். சகாதேவனும் விற்போரில் சிறந்த ஆற்றல் மிக்கவனாகத் திகழ்வதைக் கண்டு வியக்கிறோம். ஒருகணை தொடுத்துச் சகுனியினுடைய தேர்ப்பாகனின் உயிரைக் கவர்ந்து விடுகிறான் சகாதேவன்.

இரண்டு கணைகளைத் தொடுத்துச் சகுனியினுடைய தேர்க்கொடியையும் அறுபடச் செய்கிறான். நான்கு கணைகளைச் சகாதேவன் ஏவ சகுனியின் தேர்க் குதிரைகள் நான்குமே மாண்டு மடிகின்றன. சகுனியின் மார்பையும் பதம் பார்க்கின்றன சகாதேவன் ஏவும் ஆறுகணைகள்.

சகாதேவனிடம் உயிர் தப்பித்துக் கொள்ள என்ன வழி என்பதாகத் திகைக்கும் சகுனி தேரை விட்டிறங்கி ஓடப் பார்க்கிறான். தேரிலே இருந்து ஒரு தண்டாயுதத்தை எடுத்துக்கொண்டு சகுனி ஓட, தானும் ஒரு தண்டாயுதத்தைத் தூக்கித் துரத்தியவாறு ஓடி சகுனியின் தோள்களில் அடித்து அவனைத் துவள வைக்கிறான் சகாதேவன்.

**''பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா**
**பிற்பகல் தாமே வரும்''**

என்பது பொய்யாமொழியன்றோ? அன்றைக்குச் சூழ்ச்சி செய்து, பகடையை உருட்டிப் பந்தயப் பொருளாய் பத்தினி உள்ளிட்ட அனைத்துச் செல்வங்களையுமே கவர்ந்து கொண்டு கள்ள நகை புரிந்த கள்வனாகிய சகுனி, இன்றைக்குச் சகாதேவனின் கைகளில் சிக்கிக் கொண்டு தெய்வம் நின்று கொல்ல அழுகிறான், துடிக்கிறான்.

**''ஒருகணை தொடுத்துப் பாகன் உயிர்கவர்ந்த துயர்த்தகேது**
**இருகணை தொடுத்து வீழ்த்தி இரதமாத் தொலைய நான்கு**
**பொருகணை தொடுத்து வஞ்சன் பொருவரு மார்பில் ஆறு**
**வருகணை தொடுத்து வாகை மலைந்தனன் வஞ்சமில்லான்''**

"உகுநிணச் சேற்றில் ஊன்றி ஒடுதற் குன்னுவான் போல்
சகுனியத் தேரினின்று மிழிந்து கைத்தண்ட மேந்த
நகுலனுக் கிளையோன் தானும் நகுமணி வலயத்தோள்
மேல்,
மிகுதிறல் தண்டு கொண்டே வென்னிடப் பொருது
மீண்டான்"

(பதினோராம் போர்ச் சருக்கம், 9, 10)

வீமனும் விசயனும் தொடர்ந்து ஆற்றி வந்த வீரப் போரினை போர்த் தொடங்கிய பத்து நாட்களாகப் பார்த்து வந்தோம். பதினோராம் நாள் முதலாகத்தான் சகாதேவன், நகுலர் மற்றும் தருமர் ஆற்றும் வீரப் போரினைச் சிறப்பித்து வில்லிப்புத்தூரார் வருணிக்கிறார். சகாதேவன் மேலே காட்டியவாறு சகுனியுடன் போரிட்டு அவனைப் புறமுதுகிட்டு ஓடச் செய்ய, நகுலன் சல்லிய னுடன் போரிடும் வீரக் காட்சியைக் காட்டுகிறார் வில்லிப் புத்தூரார்.

துரியோதனனும் வீமனும் போர் செய்ய, துரியோ தனன் வீமனுக்கு ஈடுகொடுக்க முடியாமல் திணற, சல்லியன் துரியோதனனுக்கு உதவி செய்யும் பொருட்டு விரைந்து வருகிறான். அப்போது தன்னுடைய தாய் மாமனான சல்லியனை எதிர்க்கிறான் நகுலன். நகுலனும் சகாதேவனும் மாத்திரிதேவிக்கு மகன்களாகப் பிறந்தவர்கள். மாத்திரியின் உடன் பிறந்த சகோதரன்தான் சல்லியன். பாண்டவருக்குத் துணை செய்ய வேண்டிய சல்லியனை வஞ்சகத்தால் துணை கொண்டு விட்டான் துரியோதனன், துரியோதனன் இட்ட ஒருவேளை உணவை உண்டுவிட்ட காரணத்தால் அவனுக்கே போரில் துணை செய்ய நேரிட்டு விடுகிறது சல்லியனுக்கு. அத்தகைய செஞ்சோற்றுக்கடன் உணர்வு மிக்க சல்லியன் துரியோதனனைக் காப்பதற்கு விரைந்து வர "வருக மாமா! வருக! என்னை வென்று பிறகு முடியு

மானால் வீமனுடன் போரிடுக'' என்பதாக நகுலன் தடுத்துப் போர் செய்கின்றான். நகுலனின் ஆற்றலைக் கண்டு, உயிரற்ற முண்டங்களும் கூட அந்தப் போர்க் களத்தில் நின்று ஆடுகின்றன என்று நகுலனின் வீரத்தைக் கொண்டாடுகிறார் வில்லிப்புத்தூரார்.

''தம்முனோ டுடன்று வந்த சல்லிய குமாரன் தன்னை
எம்முடன் எதிர்ப்பை ஆகில் இமைப்பொழு திகல் செய்
கென்னா
வெம்முனை கடந்த பொற்றேர் வெஞ்சிலை நகுலன்
தோன்ற
அம்முனை கவந்த மாட அவனொடும் போர்
செய்வானே''

கவந்தங்களும் ஆடுமாறு வீரத்தைக் காட்டிச் சல்லியனைப் புறமுதுகிட்டோடச் செய்து விடுகிறான் நகுலன்.

பதினோராம் நாள் போரில் சகாதேவன் காட்டிய வீரத்தை விட, நகுலன் காட்டிய வீரத்தை விட, சிறந்ததாகத் திகழ்வது வீரஅபிமன்யு காட்டிடும் வீரமே ஆகும். போர்க்களத்தில் எதிரியை உயிரோடு சிறைப் பிடிப்பது என்பது எளிதல்ல, போர் செய்து எதிரியைப் புறமுதுகிட்டு ஓடச் செய்யலாம். எதிரியின் ஆருயிரை எமனுலகிற்கும் அனுப்பலாம். இவையெல்லாம் வீரர்களுக்கு இயல்வது தான். ஆனால் எதிரியை உயிரோடு சிறை பிடிப்பதானால் அது மகா வீரர்களுக்கு மட்டுமே இயல்வதாகும்.

அர்ச்சுனன் ஒரு மகாவீரன். ஆகவே துருபதனை உயிரோடு சிறைப்பிடித்தான் அவனது வாலிப வயதிலே. அர்ச்சுனனின் வீர மைந்தனாகிய அபிமன்யுவும் பதினோராம் நாள் போரில் துரியோதனனின் மகன் இலக்கண குமாரனை உயிரோடு சிறைப்பிடித்துத் தானும் ஒரு மகா வீரனே என்பதை நிலை நாட்டுகின்றான். தன் அருமை மகன் இலக்கண குமாரனுக்கு மிக அதிகமான

பாதுகாப்பினைச் செய்திருக்கிறான் துரியோதனன். அவனுக்கு முன்பக்க காவலாகத் தேர்ப்படை, பின்பக்க காவலாகக் குதிரைப்படை, அவன் இரு பக்கமும் கரிப்படை உள்ளிட்ட எண்ணற்ற காலாட்படைகளும் காவலாக நிற்கின்றன. இப்படிப்பட்ட காவலோடு இலக்கண குமாரன் போர் செய்து வர, அபிமன்யு அத்தனைப் படைகளையும் தோற்கடித்து, இலக்கண குமாரனை நெருங்கி அவனுடைய தேரைத் தன் தேரினால் இடித்து நொறுக்கி அவன் தலை முடியைத் தன் கையால் பற்றித் தன் தேருக்கு அவனைத் தூக்கி உயிரோடு அவனைச் சிறைப் பிடித்து, வென்றுவருகிறான் என்றால் அபிமன்யுவின் வீரத்தை எப்படிப் புகழ்வது?

''தேர்த்திரள் பரித்திரள் கரித்திரள் சேனையின்
கோத்திரள் புடைவரக் குடைவரக் கொடுவரப்
பார்த்திவன் மதலையும் பார்த்தன்மா மதலையும்
தூர்த்தனர் விசும்பையும் தொடுத்தனர் தொடைகளால்''

(பதினோராம் போர்ச் சருக்கம், 19)

''அற்றவிற் றுணிகளால் பரியையும் பாகையுஞ்
செற்றனன் சென்றனன் தேரோடும் தேருக
கொற்றவர் நூற்றுவர்க் குரிய அக்குமரனை
பற்றினன் உயிரொடும் பாண்டவர் குமாரனே''

(பதினோராம் போர்ச் சருக்கம், 22)

இலக்கண குமாரனை இவ்வாறு உயிரோடு சிறைப் பிடித்து அபிமன்யு தன்னுடைய தேரை ஓட்டிவர, இதனைக் கண்ட கௌரவர் படையினர் மனம் பதைப் பதைக்கின்றனர். இச்சேதி துரியோதனனுக்கு எட்டினால் இதற்காக எப்படியெல்லாம் அவன் வைவானோ என்று துடித்து, இலக்கண குமாரனை மீட்டுவிட உறுதி கொண்டு கர்ணன் சயத்திரதன் போன்ற பலர் விரைந்து வந்து அபிமன்யுவைத் தடுத்துப் போர் செய்கின்றனர். அபிமன்யு

அத்தனை பேருக்கும் ஈடுகொடுத்துத்தான் ஒருவனே போர் செய்கிறான். யார் யார் தன்னை எதிர்த்து வந்தார்களோ அவர்களின் நெற்றியிலே இரத்தத் திலகத்தை அபிமன்யு இட்டுப் போர் செய்கிறானாம். ஆம்! அவனுடைய அம்புகள் பாய்ந்து அவனுடைய எதிரிகளின் நெற்றிப் பொட்டுகள் தோறும் குருதி பொங்குமாறு காயத்தை உண்டாக்கும் காட்சியைத்தான் வில்லிப்புத்தூரார் ''இரத்தத் திலகம் இட்டான் அபிமன்யு'' என்பதாக வருணிக்கக் காண்கிறோம்.

**''வந்தவர் வந்தவர் வாணுதல் சிலைதொறும்**
**சிந்தூரத் தூளியாற் திலகம் இட்டனனெனக்**
**கொந்துறு கணை முனைக் குருதிநீர்மல்கவே**
**வெந்திறல் வில்லின் வென்கண்டனன் வீரனே''**

(பதினோராம் போர்ச் சருக்கம், 26)

அபிமன்யு இட, இரத்தத் திலகம் இட்டுக் கொண்ட கர்ணனும், சயத்திரதனும் பின்வாங்கித் தோற்று ஓட, நகுலனால் விரட்டப்பட்ட சல்லியன் இப்பொழுது அபிமன்யுவைத் தடுத்துப் போர் செய்ய வருகிறான். ''வருக வருக'' எனச் சல்லியனை வரவேற்று, அவனுடைய முகத்திலும் ஒரு இரத்தத் திலகத்தை இட்டு விடுகின்றான் அபிமன்யு. சல்லியனின் தேர், தன்னை நோக்கி ஓரடியும் உருளாவண்ணம், வேல் ஒன்றையும் எடுத்து சல்லியனின் தேர்ப்பாகனின் மேல் அபிமன்யு எறிய, குறிதவறுதல் இல்லாத அபிமன்யுவின் வேலும் தேர்ப்பாகனின் உயிரைப் பறித்துக் கொள்கிறது. தேர்ப்பாகன் இறந்துபட்ட நிலையில் சல்லியனும் ஒருநொடி நேரம் திகைத்துப் பின் தன்னுடைய கதாயுதத்தை ஏந்தியவாறு அபிமன்யுவைத் தாக்க ஓடி வருகிறான். சல்லியனுடைய கதாயுதமும் அவனுடைய கையை விட்டு நீங்குமாறு அம்பு எய்வது ஒன்றும் அபிமன்யுவிற்குக் கடினம் அல்லவே! அபிமன்யு அம்பு எய்யும் முன்னம் அங்கே

அவனுக்குத் துணையாக ஓடி வருகிற வீமன், தன்னுடைய சத்துருகாதினியால் சல்லியனை இடைமறித்து மோதி அவனைக் கீழே வீழ்த்துகிறான்,

இதைக் காணும் அபிமன்யுவுக்குத் தன்னுடைய பெரிய தந்தையாகிய வீமன் மீதே கோபம் வருகிறது. ‘‘என்ன தந்தையே! என்னோடு மோத வந்தவனை நீங்கள் ஏன் தடுத்துப் போர் செய்யவேண்டும். அப்படியானால் என்னுடைய வீரம் என்னாவது?’’ என்று அபிமன்யு வீமனை கோபிக்க, வீமனும் அபிமன்யுவுக்குச் சமாதானம் சொல்ல அதுதான் சமயமென்று அபிமன்யுவால் சிறை பிடிக்கப்பட்டு மயங்கிக் கிடந்த இலக்கணகுமாரனும் அபிமன்யுவின் தேரிலிருந்து குதித்து தப்பித்து ஓடுகிறான். கௌரவசேனையைச் சார்ந்தவனாகிய கிருதவன்மா தன்னுடைய தேரை விரைவாக ஓட்டிவந்து அதில் இலக்கண குமாரனையும், சல்லியனையும் ஒரு சேர ஏற்றி இருவரையும் தப்ப வைத்து விடுகிறான்.

சுத்த வீரனாகிய அபிமன்யு தன் பெரிய தந்தையிடம் காட்டிய கோபம், கைக்கு எட்டியது வாய்க்கு கிட்டாதைப் போல இலக்கண குமாரன் தப்பி ஓடி விடுவதற்குக் காரணமாய் அமைந்துவிடுகிறது. இலக்கண குமாரன் தப்பி ஓடியதைப் போல தானும் தப்பி ஓட முயல்கிறானாம் அன்றைய தினம் கதிரவனும்கூட. நான்கு சக்கரங்களைக் கொண்ட புத்தம் புதிய தேர்களையும் வீமன் அழித்துச் சிதைத்துவிடுகிறான்; தன்னிடம் இருப்பதோ பழைய தேர், அதுவும் ஒற்றைச் சக்கரமுடைய ஒரே தேர், வீமன் கோபித்தால் தன்னுடைய தேர் என்னவாகும் என்று அஞ்சி கதிரவனும் தப்பித்துக் கொண்டு ஓடி, மேலைக் கடலில் மறைகிறான் என்பதாகத் தம் கற்பனையைக் காட்டிக் கவிதையை வடித்திருக்கிறார் வில்லிபுத்தூரார்.

பதினோராம் நாள் போர் நிகழ்ச்சிகள் தமக்கு சாதகமாக அமைந்ததை எண்ணி அன்றைய இரவில் பாண்டவர்

கள் மிக நிம்மதியாகத் தூங்குகிறார்கள். ஆனால் கௌரவர்கள் நிலையோ வேறு. இலக்கணகுமாரனை அபிமன்யுவிடமிருந்து மீட்டுவிட்ட போதும் கூட, துரியோதனனின் வசையிலிருந்து தப்பமுடியவில்லை கௌரவர் படையினரால். தனக்கு ஏற்பட்ட மாபெரும் அவமானமாக இலக்கணகுமாரன் சிறைபிடிக்கப்பட்டதைக் கருதுகின்ற துரியோதனன், தன்னுடைய சேனாதிபதியான துரோணரை அதற்காக மிகவும் கடிந்து கொள்கிறான்.

''பன்னிரெண்டாம் நாள் போரில் தருமரை உயிரோடு சிறைபிடித்துத் தரவேண்டும். அப்போது தான் என்மனம் ஆறும்'' என்பதாகத் துரோணருக்குத் துரியோதனன் கட்டளையிட ''இன்னொரு பிறவி எடுத்தாலும் தருமரை உயிரோடு சிறைபிடிப்பது ஆகக்கூடிய காரியம் அல்லவே'' என்கிறார் துரோணர், ''வாயு பகவானைக் காட்டிலும் நூறு மடங்கு வலியவனான வீமன்'காவலாகத் தருமருக்குப் பின் நிற்கிறான். திருமால் தேரோட்ட தருமருக்குக் காவலாக அர்ச்சுனன் முன் நிற்கிறான். இவ்விருவரையும் தருமருக்குக் காவலாக இல்லாமல் யாரேனும் நம் படையில் செய்துவிடமுடியுமானால் தருமரை நான் சிறைப் பிடித்துத் தருகிறேன்'' என்று துரோணரும் துரியோதன னுக்குப் பதில் கூறுகிறார்.

துரோணர் இவ்வாறு கூற ஒன்பது கோடிப் படையினருக்கு.வேந்தர்களாகத் திகழும் திரிகர்த்த ராசாக்கள் பனிரெண்டாம் நாள்போரில் அர்ச்சுனனையும் வீமனையும் தருமரிடமிருந்து அப்புறப்படுத்துவதாகக் கூறி வஞ்சினம் செய்கின்றார்கள். ''நாங்கள் அர்ச்சுனனையும், வீமனையும் நாளைய போரின் போது தருமருக்குக் காவலாக இல்லாமல் மறித்துப் போர் செய்து எங்களுடைய வீரத்தைக் காட்டு வோம். அப்படிச் செய்யத் தவறினால் செய்நன்றி கொன்ற வர்கள் பெறக் கூடிய நரகை நாமும் பெறக் கடவோம்'' என்பதாக கொடிய வஞ்சினத்தைச் செய்கிறார்கள்.

இத்தகைய ஆலோசனைக் கூட்டம் முடிவதற்குள் பாதி இராத்திரி ஆகிவிடுகிறது. அதற்குப் பிறகு துரோணரும், துரியோதனனும், அவனைச் சார்ந்த முக்கியமானவர்களும் உறங்கப் போகிறார்கள். அவர்கள் உறக்கம் கலைந்து ஆற்றப் போகும் பன்னிரண்டாம் நாள் போரில் தருமரை உயிரோடு சிறைபிடிக்க அவர்கள் கொண்டிருக்கும் ஆசையானது நிறைவேறுமா அல்லது நிராசையாகுமா என்பதை எல்லாம் நாமும் இனிப் பொறுத்திருந்து வரும் அத்தியாயத்தில் விரிவாகக் காண்போம்.



# 17

பன்னிரெண்டாம் நாள் போரில் ‘‘தருமரை உயிரோடு சிறைபிடிக்க வேண்டும்’’ எனத் துரியோதனன் கொண்டு உள்ள ஆவலை பாண்டவர்களின் ஒற்றர்கள் அறிந்து வந்து உடனே பார்த்தசாரதியிடம் தெரிவிக்க, அவரும் தமக்கே உரித்தான புன்னகை புரிகிறார். தாய் அறியாத சூல் உண்டா? கண்ணன் அறியாத சேதி உண்டா? நேற்று நடந்ததும், இன்று நிகழ்வதும், நாளை நிகழப் போவதும் எல்லாம் அறிந்தவர் அவர் ஒருவரே அல்லவா!

பன்னிரண்டாம் நாள் போரில் கருட வியூகமாகக் கௌரவப் படையை அணிவகுக்கிறார் துரோணர். தருமரை உயிரோடுக் கௌவிக் கொண்டு பறந்துவிட வேண்டும் என்பது கருடனின் நோக்கம். அதற்கு விட்டு விடுவோமா என்பது போல் வட்டவடிவமாகப் பாண்டவர் களின் படையை மண்டல வியூகமாக வகுக்கச் செய்கிறார் கண்ணபெருமான்.

தருமரை மண்டல வியூகத்தின் நடுவிலே நிற்க வைக்கிறார். அவரைப் பாதுகாக்க முன்புறமாய் பார்த்தன் பின்பிறமாய் பலபீமன், பக்கவாட்டில் நகுல சகாதேவர்சள். அண்ணன் என்னடா தம்பி என்னடா என்பது இக்காலம். அண்ணனே அண்ணல் என்பது அக்காலம்.

முன்னிரவில் துரியோதனனுக்குச் செய்து தந்த சத்தியத்தின்படி திரிகர்த்தராசர்கள் தாம் இறத்தலுக்குத் துணிந்தவர்களாய் அர்ச்சுனனைத் தம்மோடு தனியே யுத்தம் செய்ய வருமாறு அறைகூவி அழைக்கிறார்கள். அண்ணனை விட்டு எப்படிப் போவது என்பதாக அர்ச்சுனன்

மயங்சத் தருமரே வந்து அர்ச்சுனனுக்குத் தைரியம் கூறி விடை கொடுத்து அனுப்பி வைக்கிறார்.

> ''கோத்தருமன் பணித்ததற்பின் கோதண்டமுற வாங்கிப்
> பார்த்தனும் அன்றவரெதிர்போய்ப் பலவாளி
> மழை பொழிந்தான்''

என்கிறார் வில்லிப்புத்தூரார்.

தருமரை எப்படியும் உயிரோடு சிறைபிடித்து விட வேண்டும் என்பதாக உறுதி கொண்டு, தன்னுடன் 30,000 மன்னர்களை அழைத்துக் கொண்டு முன்னே வருகிறார் துரோணர். மன்னர் ள் மட்டுமே 30,000 பேர். அவரவர்களுடன் வந்த படையினரும் பல்லாயிரக் கணக்கில் இருக்கிறார்கள்.

> ''முடித்தலை வாள் அடல் நிருபர் முப்பதி னாயிரம் சூழ
> இடித்தலை மாமுரசியம்ப இபதுரகம் சூழ''

என்கிறார் வில்லிப்புத்தூரார். இபம் என்றால் யானை. துரகம் என்றால் குதிரை. யானைப் படையினரோடு குதிரைப் படையினரும் சேர முப்பதினாயிரம் மன்னர் களுடன் தருமரைச் சிறைப் பிடிக்க வருகிறார் துரோணர்.

தருமரைச் சிறை பிடிக்க துரோணர் இவ்வாறு நெருங்கி வர, தருமரைக் காப்பதற்காகப் பாண்டவர் சேனை தளபதியான திட்டதுய்மன், சத்தியகேது, உத்தமோசா, சிகண்டி மற்றும் நகுல சகாதேவர்களைத் துணைக்கழைத்துக் கொண்டு தானும் விரைந்து வருகிறான். உடன் இரு தரப்பினரும் போர் புரிகிறார்கள்.

இருதிறத்துப் படைகளும் ஆரவாரம் புரிந்தவாறு மோதிக் கைகலக்க, பூமியைத் தாங்கிக் கொண்டிருக்கும் ஆதிசேடனின் ஆயிரம் தலைகளையும் அலங்கரித்துக் கொண்டிருக்கும் அணிமணிகளும் கூட சிதறிக் கொட்டி விடுகின்றனவாம். துரியோதனனைத் திருப்தி செய்துவிட

வேண்டும் என்ற வெறி கொண்டு போரிடுகின்ற துரோணருக்கு அன்றைக்கு ஆரம்பத்தில் மிக நல்ல வேட்டைதான்.

சத்தியகேதுவின் வில்லினைத் தன் ஒரு பாணத்தால் இரண்டாக்குகிறார், வீடுமரை வீழ்த்திய பெருமையில் பங்கேற்கக்கூடிய சிகண்டியின் வில்லினை இரண்டாக்கு கிறார். நகுலசகாதேவர்களுக்குத் துணையாக வந்த ஆயிரக்கணக்கான பாண்டவர் சேனைகளையும் கொன் றொழிக்கிறார்.

''சத்தியகேது வின் சாபம் சரமொன்றால் இரண்டாக்கிச்
சித்திரவெஞ் சிலையாண்மை சிகண்டியையுஞ்
சிலையறுத்திட்டு
உத்தமோசா முதலா வுள்ள கொடுந்திறல் வேந்தர்
தத்தம் உயிருடன் போகத் தானையெலாம் மடிவித்தான்''

''தாண்டியவெம் பரிநகுல சகாதேவர் வென்னிட்டார்
பாண்டியனும் முதுகிட்டான் பாஞ்சாலர் புறமிட்டார்
ஈண்டிய களத்தவிந்தார் எத்தனை யாயிரம் வேந்தர்
தூண்டிய வெம் பரிநெடுந்தேர்த் துரோணன்
கைத்தொடையாலே''

(பன்னிரண்டாம் போர்ச் சருக்கம் 14, 15)

தருமரைக் காக்கவந்த படையினர் எல்லாம் இவ்வாறு துரோணரால் துரத்தி விரட்டியடிக்கப்பட்டுவிட, தருமரை இனி உயிரோடு சிறைபிடித்து விடுவது எளிது என்ற எண்ணத்துடன் தருமரை நெருங்குகிறார் துரோணர்.

''நடுத்தகை யின்றி வானவரும் நடுக்குறு கின்ற
போர் முனையில்
அடுத்தனர் வந்த போதனனும் அடல்தருமன்
குமாரனுமே''

தருமர் தோற்றத்தினால் அமைதியாகவே தோன்றுவார் அவருடைய குணமும்கூட சாந்தகுணமே. ஆனால் அவருக்கும் ஆத்திரம் வரும். துரோபதையைத் துகிலுரிந்த போதும் அவருக்கு ஆத்திரம் வந்தது. வீமனும் அர்ச்சுனனும் நகுல சகாதேவர்களும் தங்கள் தங்கள் சினத்தை வெளிக் காட்ட, தருமர் மட்டும் சூதாடித் தோற்றத் தம் குற்றத்தி னால் தலை கவிழ்ந்து பொறுமையாக இருந்தார். அப்போது வீமன் தருமரின் பொறுமையைப் பார்த்து "இந்த நேரத்தில் கூட உனக்குக் கோபம் வராதா?" என்று கொதித்துக் கேட்டான். உடனே தருமர் அரண்மனைப் பணியாளிடம் ஒருபடி அரிசியைக் கொண்டு வரச் சொல்ல, அதை வீமனிடம் கொடுத்துத் தம் முதுகின் மேல் கொட்டச் சொன்னார். தருமரின் முதுகிலே கொட்டப்பட்ட ஒருபடி அரிசி முழுவதும் அப்படியே பொரியாகப் பொரிந்துவிட்டது. தம்முடைய அவ்வளவு ஆத்திரத்தையும் கூட தருமர் வெளிக்காட்டாமல் இருந்தார் என்றால் சூதாடிய அவருடைய குற்றத்தின் காரணமாகத்தான்.

அன்றைக்கு அவ்வாறு தம் குற்றம் எண்ணி ஆத்திரத்தை அடக்கிக் கொண்ட தருமர்தான், 13 ஆண்டுக் கால வனவாசமும் அஞ்ஞாதவாசமும் முடிந்த பின்னாலும் "குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை" என்பதை எண்ணி, "ஐந்து ஊர்களைக் கேள், மறுத்தால் ஐந்து தெருக்களைக் கேள், அதுவும் தர மறுத்தால் ஐந்து வீடுகளையாவது கேள்" எனக் கண்ணபெருமானைச் சமாதானம் பேச தூதனுப்பி னார். இவ்வாறு அமைதியான தருமரை, சத்தியத்தின் வடிவமான தருமரை ஆற்றலினால் கோழை எனப் பலர் எண்ணியிருக்கவும் கூடும். ஆனால் பன்னிரெண்டாம் நாள் போரில் தம்முடைய ஆத்திரத்தை அடக்கிக் கொள்ள வேண்டிய அவசியம் தருமருக்கு ஏற்படவில்லை ஆதலாலும் சத்தியத்தைக் காப்பதற்காகவே நடைபெற்று வரக்கூடிய தருமப்போர் இது என்பதாலும் தாம் ஒருவராகவே துரோணரை நெருங்கி வீரப் போர் புரிகிறார் தருமர்.

தம்முடைய வில்லில் ஒருசேர ஐந்து அம்புகளைப் பூட்டித் துரோணரின் மேல் தருமர் ஏவ, ஒரு அம்பு துரோணரின் தேர்க் கொடியை அறுத்து வீழ்த்துகிறது. ஒரு அம்பு குதிரைகளைத் துண்டாக்குகின்றது. ஒரு அம்பு தேர்ப்பாகனைக் கொல்லுகிறது. ஒரு அம்பு தேர்ச் சக்கரத்தைத் தூளாக்க இன்னும் ஒரு அம்பு தேரையும் பொடிப் பொடி ஆக்கிவிடுகின்றது. துரோணரின் வீரத்தை நொடிப் பொழுதில் சிதைத்து விடுகிறார் மகாவீர தருமர்.

**''சினந்து முனைந்த போரில் வருசிலைக் குருவின்**
**பதாகையற**
**மனத்தினு முந்து மாதுணிய வயத்துடன் உந்து**
**பாகன்விழ**
**வனைத்துருளுஞ் சதாவியிட அடுக்குற நின்ற தேரழிய**
**வினைத்தொடை ஐந்து பூபதியும் இமைப்பொழு**
**தின்கண் ஏவினனே''**

(பன்னிரெண்டாம் போர்ச்சருக்கம் 23)

சதைப்பிண்டத்தில் அம்பு நுழைவது சாதாரணம். மரத்தினாலும் இரும்பினாலும் ஆகிய தேரே பொடிப்பொடியானது தருமரின் அம்பினால் என்றால் அவருடைய ஆற்றலை என்னவென்பது?

தருமரைச் சிறைபிடிக்க வந்தார் துரோணர், தருமர் நினைத்திருப்பாரே யானால் நிற்பதற்குத் தேருமின்றி உதவிக்கு ஆளுமின்றித் தடுமாறுகின்ற துரோணரை நொடியில் சிறைப்பிடித்திருக்கலாம். ஆனால் தருமருடைய தயாளசிந்தை அவரை அவ்வாறு செய்யத் தூண்டவில்லை. தருமருடைய குருநாதராய் தருமருக்கு வித்தை கற்பித்தவர் அல்லவா துரோணர்! தம் குருநாதரின் அச்சத்தையும் நடுக்கத்தையும் காணும் தருமர் ''இனிக் கணை ஒன்றும் ஏவுகிலம். இளைப்பற அஞ்சல், ஏகு'' எனத்துரோணருக்கு உயிர்ப் பிச்சை கொடுத்து அனுப்பி வைக்கிறார். அத்தகைய

தருமருடைய பெருந்தன்மையை பார்த்தே நாம் பூரிக்கிறோம் இந்தப் பன்னிரெண்டாம் நாள் போரிலே.

துரோணரே தருமரின் பேராற்றலை வியந்து மிகப் போற்றுகிறார். ''தருமர்தம் முன்னிற்க வல்லார்கள் யார் இக்களந்தன்னிலே'' என்று கர்ணனிடம் கூறுகின்ற துரோணர் ''கர்ணா! நீ மாபெரும் வீரனாக உன்னை நீயே தம்பட்டம் அடித்துக் கொண்டிருக்கிறாய். ஆனால் தருமரோ நிறைகுடம் தளும்பாது என்பதற்கு இலக்கணமாக திகழ்கிறான். என்னுடைய அம்புகளைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு வலிமை வாய்ந்தது தருமரின் அம்புகளே''

''நான் விட்ட அம்புகளோ விதையை விதைத்ததைப் போல பயனை உடன் கொடுக்கவில்லை. தருமன்விட்ட அம்புகளோ பருத்தி புடவையாகக் காய்த்தது என்பார்களே! அப்படி அதிகமான பலனை உடனே கொடுத்து என்னையே துடிதுடிக்க வைத்து விட்டது. அப்படிப்பட்ட தருமரின் அம்புகளுக்கு இராமரின் அம்புகளும்கூட சமம் ஆகாது, சமம் என்று எண்ணுவோம் என்றாலும் அதுவும் பாவமே, அதீ பாவமே'' என்பதாகத் துரோணர்.

**''வித்தொத்ததென் வாளி அவன்விட்ட வடி**
**வாளி விளைவொத்ததே''**

**''வல்லாண்மை புனையந்த வில்லாளிகூர்**
**அம்போடு இராமன் கையாடல் அம்பு**
**உவமிக்கில் அதிபாவமே''**

எனக் கூறித் தருமரின் ஆற்றல் எத்தகையது என்பதைக் கர்ணன் துரியோதனன் முதலான அனைவருக்கும் தெளிவு படுத்தக் காண்கிறோம்.

பன்னிரண்டாம் நாள் போரில் தருமரின் இத்தகைய போர் ஆற்றலை-பேராற்றலைக் கண்டு வியந்தநாம், அன்றைய ஒரு தினத்தில் மட்டுமே ஒரு லட்சத்திற்கு மேற்பட்ட வீரர்களைக் கொன்று குவிக்கும் பார்த்தனின்

மாவீரத்தையும் பாராட்டியே ஆகவேண்டும். ஒன்பது கோடிபடை வீரர்களுக்கு மன்னர்களாக விளங்கும் திரிகர்த்த இராசாக்கள், துரோணர் தருமரைச் சிறைப்பிடிக்க வேண்டும் என்பதற்காகவே வலிய அர்ச்சுனனைத் தம்மோடு யுத்தம் செய்ய அறைகூவல்விட்டு அழைத்துச் சென்று தனி இடத்தில் போர் புரிகிறார்கள் அல்லவா? அப்போரில் இது வரை அர்ச்சுனனின் அம்புக்குப் பலியானவர்கள் மட்டும் 80000 வீரர்கள் ஆவர்.

80000 வீரர்களைக் கொன்று மேலும் ஒரு 80000 வீரர் களையாவது கொன்று முடித்துவிட ஆவல் கொண்டு, முனைந்து அர்ச்சுனன் நின்ற போது தான், தருமர் கண்ண பெருமானைத் தம் மனத்தால் துதித்து உடன் தாமிருக்கும் இடத்திற்கு வரவேண்டுமென வேண்டுகிறார். கண்ண பெருமானும் தருமர் அழைப்பதை அர்ச்சுனனுக்கு உணர்த் தித் தேரைத் திருப்பி ஓட்டுகிறார். ''இதோ வந்து விட்டோம்'' என்பதைத் தருமருக்கு உணர்த்துவதைப் போல தம்முடைய பாஞ்சசன்னியத்தையும் எடுத்து முழக்கு கிறார் கண்ணபெருமான். ''அர்ச்சுனனைப் போகவிட்டு விடுவோமா?'' என்பதுபோல திரிகர்த்த ராசாக்கள் மீண்டும் அர்ச்சுனனைத் தடுத்துப் போர் செய்ய, வலிமை வாய்ந்த அம்புகளை அர்ச்சுனனும் அவர்கள் மேல் ஏவி, அவர்களை விரட்டி அடித்து, தருமரிருக்கும் இடத்திற்கு விரைகிறான்.

துரோணரை வென்று தருமர் விரட்டியடித்த பிறகு, இருபதினாயிரம் யானைப் படைகளோடு துரோணருக்குத் துணையாக வந்து சேர்கிற பகதத்தனால் பாண்டவர் சேனை நாசமுற நேர்ந்த காரணத்தினாலேயே தருமர், கண்ணபெருமானைத் துதித்துத் தாமிருக்கும் இடத்திற்கு விரைந்து வரவேண்டிக் கொள்கிறார். இந்தப் பகதத்தன் நாம் தீபாவளி கொண்டாடுகின்ற நரகாசூரனின் மைந்தன்.

துரியோதனனுக்கு நண்பன். துஷ்டனுக்குத் துஷ்டன் தானே நண்பனாக இருக்கமுடியும்.

இந்தப் பகதத்தன் நான்காம் நாள் போரில் வீமனின் வீரமைந்தன் கடோத்கஜனிடம் மரண அடி வாங்கிக் கொண்டு யுத்தத்தை விட்டே சென்றவன் மறுபடியும் பன்னிரண்டாம் நாள் போரின்போது தான் திரும்பி வருகிறான். இவனிடம் இருபதினாயிரம் யானைகள் உள்ளன. இந்திரனிடம் இருக்கும் ஐராவதத்தைக் காட்டி லும், எட்டுத் திக்குகளையும் தாங்கி நிற்கும் அட்டகஜங் களைக் காட்டிலும் வலிமை வாய்ந்தன பகதத்தனின் யானைப்படைகள். ''சுப்ரதீபம்'' என்ற வலிமையிலும் வலிமை வாய்ந்த யானையின் மீதமர்ந்தவனாய் போரிடும் பகதத்தனை வெல்வது யானைகளோடு மோதிப் போர் செய்வதில் மிக ஆர்வம் கொண்டவனான வீமனாலும்கூட இன்றைய தினம் முடியவில்லை.

இராக்கதர்கள் பனைமரத்தையே பற்குச்சியாகக் கொண்டு பல்துலக்குவார்களாம். பனைமரம்போல் நீண் டிருக்கும் துதிக்கைகளை உடைய யானைகளைத் தூக்கி எறிந்து பகைவர்கள்மேல் வீசிப் போர் செய்வது வீமனுக்கு மிகமிகப் பிடிக்கும். பகதத்தனின் யானைப்படையைக் கண்டதும் ஆர்வமிக அதிகமாகி இன்றைய தினமும் பகதத் தனின் யானைப்படைக்குள் புகுந்துவிடுகிறான் வீர வீமன். வீமன் ஒரு யானையைத் தூக்கிப் பகதத்தனின் மீது எறியும் போதே மற்றொரு யானை வந்து தன்னுடைய தந்தங் களாலே வீமனைக் குத்துகிறது. அந்த யானையின் தந்தங் களைப் பிடித்துத் தூக்கி வீமன் தன்பலம் கொண்ட மட்டும் வீச, அதே நேரம் மேலும் பல யானைகள் வீமனைச் சூழ்ந்து நெருக்குகின்றன. வீமனோ ஒருவன். இருபதினா யிரம் யானைகளை ஒரே நேரத்தில் மோதுவது அவனுக்கும் இயலாததாகவே இருக்க, சிறிது நேரம் தளர்ச்சி கொண்டு

களத்தில் சாய்ந்துவிடுகிறான். இதே நேரத்தில் தந்தையைத் தேடிக் கொண்டு அங்கே வந்து சேரும் கடோத்கஜன், பகதத்தனின் யானைப்படைகளோடு தானும் மோதிப் போர் செய்கிறான்.

பகதத்தனின் யானைப் படைக்குள் புகுந்த வீமனின் ஆரவாரம் ஒன்றும் சிறிது நேரம் கேளாமல் போகவே, வீமன் என்ன ஆனானோ என்ற அச்சம் வந்துவிடுகிறது தருமருக்கு. அதனால்தான்கண்ணபெருமானைத்தாமிருக்கும் இடத்திற்கு உடன் வரவேண்டுமென்று துதிக்கிறார். கண்ணபெருமானும் தருமர் விழைந்தவாறே அர்ச்சுன னோடு அங்கு விரைந்து வந்து சேருகிறார். அதே நேரத்தில் பகதத்தனின் யானைப்படைக்குள் தளர்ச்சியுற்று மயங்கிக் கிடந்த வீமனும் மயக்கம் நீங்கி எழுந்து தன்னிரண்டு கைகளிலும் இரண்டு யானைகளைப் பிடித்துப் பகதத்தன் மேல் வீசியவாறு, தானும் தருமரிருக்கும் இடத்திற்கு வந்து சேருகிறான். வீமனைக் கண்டதும் தான் போன உயிர் மீளுகிறது தருமருக்கு.

அதற்குப் பிறகு பகதத்தனின் யானைப்படைகளோடு கடோத்கஜன் ஒரு புறமும், வீமன் மறுபுறமுமாக நின்று போரிட பகதத்தன்மீது பாணங்களை எய்து போரிடுகிறான் பார்த்தன். பார்த்தன் ஏவுகின்ற அம்புகள் ஒன்று பலவாகிப் பகதத்தனின் யானைகளையெல்லாம் சாய்க்கின்றன. துதிக்கையறுபட்டு ஓலமிடுகின்றன பல யானைகள். தலை யறுபட்டு சாகின்றன பல யானைகள். பார்த்தன் விடும் அம்புகள், வயிறுகளிலும் பாய, குடல் அறுபட்டு துடிக் கின்றன பல யானைகள். சில யானைகளின் காதுகள் அறுபடுகின்றன. சில யானைகளின் தொடைகள் அறுபடு கின்றன. யானைகளின் உடல்கள்தோறும் பீறிடும்இரத்தமே அங்குப் பெருவெள்ளமாகப் பாய, அறுபடும் யானைகளின் உறுப்புக்களோ ஓடங்களைப்போல மிதந்து செல்கின்றன.

தம் சிறந்த யானைப் படைக்குப் பார்த்தனால் நேர்கிற பெருந்துன்பம் கண்டு பொருமுகின்ற பகதத்தன், ''பார்த்தா உன்னைக் கொல்கிறேன் பார்'' என்று கூறித் தனக்குத் திருமால் கொடுத்திருக்கும் வேலை எடுத்துப் பார்த்தனின் மேல் வீசுகிறான். பாய்ந்துவரும் அவ்வேல் பார்த்தன்விடும் வலிய அத்திரங்கள் பலவற்றையும் பயனின்றிச் செய்து விட்டு, பார்த்தனின் உயிர் குடிக்கப் பறந்து வருகிறது. ''தொலைந்தான் அர்ச்சுனன்'' என்பதாக ஆரவாரம் செய்கின்றனர் துரியோதனன் சேனையினர். ஆனால் பார்த்தனின் மார்பில் பகதத்தன் ஏவிய வேல் பாயும் முன்பாகப் பார்த்தசாரதி தாம் தடுத்துத் தம் மார்பில் அவ்வேலைத் தாங்கிக் கொள்கிறார்! ''அடடா! பார்த்தசாரதி சாய்ந்து விடுவாரோ'' என்று பார்த்தன் உட்பட பாண்டவர் படையினர் பலரும் பதைக்கின்ற வேளையில், அவ்வேலே மாலையாகிப் பார்த்தசாரதியின் மார்பை அலங்கரிக்கிறது. அவ்வற்புதக் காட்சியைக் கண்டு, தேவர்கள் எல்லாம் ஆரவாரித்துக் கொண்டாடி ஆகாயத்திலிருந்து பார்த்தசாரதியின்மேல் பூமாரி பொழிகிறார்கள்.

''பருமித்தகளிறுவிடு பகதத்தன் எறியும் முதுபகை
செற்றுவருகொடியவேல்
மருமத்தினிடை முழுகுபொழுதத்தில் அது
புதிய மணிவிற்கமிகு தொடையலாய்
நிருமித்தபடி தனது புயவெற்பின்மிசையொளிர
நிகரற்ற கருணைவடிவை
கருமத்தின் முதலை இமையவர் சித்தமொடு
தொழுது கரையற்ற புகழுரை செய்தார்''
(பன்னிரண்டாம் போர்ச் சருக்கம் 64)

திருமால் வழங்கிய வேல் திருமாலையே துயருறுத்துமா? அது திருமாலைக்கண்டவுடன் திருமாலை ஆகித் திருமாலின் மார்பை அலங்கரித்துவிட்டது, பாரதப்போரை நிகழ்த்தும் பார்த்தசாரதி நிகழ்த்தும் அற்புதங்கள் எண்ணற்றவை.

பன்னிரண்டாம் நாள் போரில் பார்த்தனைக் கொல்ல வந்த வேல்,மாலையாகிவிடும் இவ்வற்புதமும் அவற்றில் ஒன்று. பார்த்தனைக் கொல்லாமல், பார்த்தசாரதியையும் கொல்லாமல் தான் ஏவிய திருவேல் திருமாலை ஆகிப் பார்த்தசாரதியை அலங்கரிப்பதைக் கண்ட பகதத்தன் திகைத்து நிற்கும் அதே நேரத்தில், பார்த்தசாரதி மேலும் ஒரு அற்புதத்தைச் செய்கிறார். எதிர்ப்படும் பகைவர்களை யெல்லாம் நொடியில் பஸ்பம் ஆக்கிவிடக்கூடிய தம்முடைய நாராயணாத்திரத்தை அர்ச்சுனனின் கையில் கொடுக்கும் கண்ணபெருமான் ''இதை பகதத்தனின் மேல் எறிக'' எனத் திருவாயும் மலர, அர்ச்சுனனும் அவ்வாறே நாராயணாத்திரத்தைப் பகதத்தனின் மேல் ஏறிய, பகதத்தனும், அவனுடைய சுப்ரதீப யானையும், அவனுடைய இருபதினாயிரம் யானைப்படைகளும் பூண்டோடு பஸ்பம் ஆகிவிடும் அற்புதமும் இந்தப் பன்னிரண்டாம் நாள் போரிலேயே நிகழ்வுறுகிறது.

இவ்வாறு பன்னிரண்டாம் நாள் போர், பாண்டவர்க்கும் பார்த்தனுக்கும் வெற்றிசேர்க்கும் திருநாளாய் பெருமகிழ்ச்சி விளைவிக்கக் காணுகின்றோம். ஒருநாள் திருநாள் ஆனால் மறுநாள் இருள்நாள் ஆவது இயற்கை. எது திருநாள் என்பதையும், எது இருள்நாள் என்பதையும் எல்லாம்வல்ல கண்ணனே அறிவார். பன்னிரண்டாம் நாள் போரில் வெற்றிமேல் வெற்றிபெற்று ஒரு லட்சம் வீரர்களுக்குமேல் எமனுலகிற்கு அனுப்பி வைத்துக் களிப்பின் சிகரத்தை எட்டிடும் அர்ச்சுனன், மறுநாள் காணப்போகும் துயரமோ மாபெரும் துயரம். அந்தத் துயரம் படிக்கப் போகும் உங்களையும் கூட கண்ணீர் சிந்த வைக்கும், அப்படி என்ன துயரம் என்கிறீர்களா? அதை இப்பொழுதே சொல்லி விட்டால் சுவை என்ன இருக்கமுடியும்? ஆகையால் அது என்ன துன்பம் என்பதை அடுத்து வரும் அத்தியாயத்தில் காண்போம்.

# 18

எண்களில் பதின்மூன்று பலருக்கு இராசியாக அமைவதில்லை. ஆகவே பதின்மூன்று என்றாலே பலருக்கு வெறுப்பு ஏற்படுவதும் உண்மை. அப்படிப்பட்ட பாண்டவர்களுக்கும் கூட வெறுப்பு ஏற்படுத்தும் வகையில் தான் பாரதப் போரின் பதின்மூன்றாம் நாள் போரும் கூட அமைகிறது.

பதின்மூன்றாம் நாள் திட்டதுய்மன் பாண்டவர் சேனையை மகரவியூகமாக அணிவகுக்கிறான். நீண்ட பருத்த முகத்துடனும், அதில் இரண்டு வாய்களுடனும், நான்கு கால்களுடனும் மீனின் வடிவம் அமையுமாறு வகுக்கப்படுவது மகரவியூகமாகும்.

துரோணர் கௌரவ சேனையைச் சக்கரவியூகமாக வகுக்கிறார். தேரின் சக்கரவடிவமாகச் சேனையை ஒழுங்குபட நிறுத்ததுதல் சக்கரவியூகமாகும், சக்கரவியூகம் வகுக்கப்படுமானால், எதிரிகள் இந்த வியூகத்தைப் பிளந்து அதன் உள்ளே நுழைவது மிகக்கடினமாகும். காரணம் சக்கரவியூகம் என்பது எட்டுச் சுற்றுக்களுடன் அமைக்கப் படும் வியூகமாகும். இதன் உள்ளே நுழைவதற்கும் ஒரே ஒரு வழிமட்டும் இருக்கும்.

அந்த ஒரு வழியும் கூட மகாரதர்களால் முழுவதும் காவல் செய்யப்படும். ஆதலால் வியூகத்தைச் சிதைப்பது என்பது மிகமிக கடினமாகும். கௌரவர் படையை எளிதில் சிதைக்க முடியாதவாறு சக்கரவியூகத்தைத் துரோணர் வகுத்துத் தருமரைச் சிறைப்பிடித்துவிட வேண்டும் என்று நினைக்கிறார்.

அர்ச்சுனன் மட்டும் பதின்மூன்றாம் நாள் போரில் தருமரை விட்டு நீங்காதிருப்பானேயானால் அவன் துரோணர் வகுத்திருக்கும் சக்கரவியூகத்தையும் எளிதாகச் சிதைத்திருப்பான். பாண்டவர் அணிக்கு இன்றைய தினம் நேர இருக்கின்ற மிகப்பெரிய இழப்பினையும் கூட நேராமல் தடுத்திருப்பான். ஆனால் என்ன செய்வது? விதியை வென்றிட அர்ச்சுனனாலும் இயலவில்லை. முன்தினம் போல திரிகர்த்த ராசாக்கள் அர்ச்சுனனை அறைகூவிப் போர் புரிய தனியிடத்திற்கு அழைத்திடும் போது, அர்ச்சுனனும் மறுக்காமல் அவர்களுடன் சென்று போர் புரிய நேரிடுகிறது. எல்லாம் அறிந்திருப்பவராகிய பார்த்த சாரதி விரும்பியிருந்தால், பாண்டவர்க்கு நேர இருக்கும் மாபெரும் துன்பத்தைத் தவிர்த்து விடலாம். ஆனாலும் அவரும் கூட மௌனமே காட்டி நடப்பதுநடக்கட்டும் என விட்டு விடுகிறார் என்றால் விதியின் வலிமையை என்ன வென்பது?

தருமரை உயிரோடு எப்படியும் சிறைபிடித்தே தீருவது என்ற வெறியோடு போர்புரிகின்ற துரோணர், பாண்டவர் படைத்தளபதியான திட்டதுய்மனை எதிர்த்து மிகக் கடுமை யாகப் போர்புரிகிறார். திட்டதுய்மனின் தேர்க் கொடியை முதலில் அறுத்து வீழ்த்திடும் துரோணர், எந்த எந்த இடங் களில் அம்புகளை ஏவினால் கவசம் சிதைவுபடுமோ, அந்தந்த இடங்களில் அம்புகளையும் ஏவி திட்டதுய்மன் அணிந்திருக்கும் உடற் கவசங்களையும் கூட அழித்து விடுகிறார். திட்டதுய்மனின் தேர்ச் சாரதியைக் கொன்று, தேரையும் கூட துரோணர் சிதைத்துவிட, திட்டதுய்மன் தன்னைக் காத்துக் கொள்ளப் புறங்கொடுத்து ஓடிவர நேரிடுகிறது. துரோணரைக் கொல்வதற்காகவே பிறந்தவ னாகிய திட்டதுய்மனே இவ்வாறு துரோணருக்குத் தோற்று தலைகுனிந்து ஓடிவர, தருமர் அவனைத் தேற்றிச் சற்றே இளைப்பாறக் கூறுகிறார்.

பிறகு தருமர் அர்ச்சுனன் பெற்ற வீரமைந்தன் அபிமன்யுவைத் தம் அருகே அழைத்து ஆசை தீர அணைத்துக் கொள்கிறார். ''மகனே! வீர அபிமன்யூ! துரோணர் என்னை உயிரோடு சிறைப்பிடித்திட வேண்டும் என்பதற்காகவே சக்கர வியூகத்தை இன்று வகுத்திருக்கிறார். அந்தச் சக்கர வியூகத்தைப் பிளந்திட உன்னால் தானே ஆகும்! உன் தந்தையைப் போலவே சக்கர வியூகத்தைப் பிளப்பதற்கு வல்லவனாகிய நீதான், இப்பொழுது போய் வியூகத்தைச் சிதைத்து, வெற்றியை நமக்காக்க வேண்டும். போய் வா! உனக்குக் கொற்றவை அருள்புரிவாள்'' என்று ஆசி கூறிச் சக்கர வியூகத்தைச் சிதைப்பதற்கு அபிமன்யுவை அனுப்பி வைக்கிறார்.

அபிமன்யு வீரத்தில் தன் தந்தை அர்ச்சுனனுக்கு நிகரானவனே. அவன் தன் மாமனாகிய கண்ணனிடமே அத்திரப் பயிற்சிகள் அனைத்தையும் பயின்றிருக்கிறான். சக்கர வியூகத்தைப் பிளப்பதற்கான அத்திர வித்தைகளையும் கூட கண்ணன் அபிமன்யுவிற்குக் கற்றுத் தந்திருக்கிறார். ஆகவேதான் தன் பெரிய தந்தை தருமர் தனக்கிட்ட கட்டளையைத் தலைமேற்கொண்ட அபிமன்யு சிங்கமெனச் சீறி உடனே புறப்பட்டுப் பாய்கிறான் சக்கர வியூகத்தைப் பிளப்பதற்கு.

அபிமன்யுவின் பாதங்களில் பராக்கிரமத்தின் அறிகுறியான வீரக் கழல்கள், மார்பினில் சந்திரகாந்தி போல் ஒளி வீசும் முத்துமாலை, இரு தோள்களிலும் பாம்பின் வடிவில் திகழும் தோள்வளைகள், இரு காதுகளிலும் சூரியனைப் போல் ஒளிவிடும் இரத்தின குண்டலங்கள் அபிமன்யுவின் வீரமேனியை இத்தகைய அணிமணிகள் அலங்கரிக்க, அழகில் மன்மதனையும், வீரத்தில் இராமனையும் நிகர்க்கின்ற அபிமன்யு, துரோணரின் சக்கர வியூகத்தைப் பிளப்பதற்குத் தேரின் மேல் ஏறி விரைந்து பாய்கின்றான்.

கண்ணன் கற்றுத் தந்த மந்திரத்தை உச்சரித்தவனாய் ஒரு கோடி அம்புகளை ஏவுகின்றான் அபிமன்யு. சக்கர

வியூகத்தின் முதல் சுற்றைக் காத்து நிற்கும் எண்ணற்ற மாவீரர்களின் தலைகளையும், தோள்களையும், தொடைகளையும் அபிமன்யு ஏவிடும் அம்புகள் துளைத்து வீழ்த்த சக்கர வியூகம் சிதைவுபடுகின்றது ஒரு நொடியிலே.

''அச்சுதப் பெயர் மாதுலன் புகலரிய மந்திரம் அன்பினோடு
உச்சரித்து ஒரு நொடியினிற் பலகோடி பாணம்
உடற்றினான்
எச்சிரத்தையும் எப்புயத்தையும் இடைதுணித்தலின்
அடையமுன்
வச்சிரத்தவன் உரைசெய் சக்கரம் மாறிலா
அணிபாறவே''

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம், 24)

இவ்வாறு சக்கர வியூகத்தின் முதல் சுற்று பிளவுபட்ட உடனே திட்டதுய்மன் பாண்டவர் படைகளுடன் அபிமன்யுவுடனே உள்ளே நுழைந்திருப்பானேயானால் சக்கர வியூகத்தின் மற்ற சுற்றுக்களையும் கூட அபிமன்யு எளிதில் சேதப்படுத்தி கௌரவர் படையை இன்றைய தினமே முழுவதுமாக நாசப்படுத்தி அழித்துவிட்டிருப்பான். ஆனால் துரோணரால் விரட்டியடிக்கப்பட்ட திட்டதுய்மன் அபிமன்யுவுக்குத் துணை போக முடியாமல் போவதே இந்தப் பதின்மூன்றாம் நாள் போரில் மிகப் பெரிய துரதிர்ஷ்டமாக அமைந்துவிடுகிறது.

உண்மையில் அபிமன்யுவும் தனக்குத் துணை ஏதும் வேண்டாத மாபெரும் வீரன்தான். அதனால்தான் அபிமன்யு, தான் ஒருவனாகவே இலட்சக்கணக்கான வீரர்களை இன்றொரு நாளில் மட்டுமே கொன்று குவித்துவிடுகிறான். துரோணர், கர்ணன், அசுவத்தாமன், கிருபன், கிருதவர்மன் முதலான மாபெரும் வீரர்கள் எல்லாம் கூட அபிமன்யுவிற்குப் புறங்கொடுத்துத் தோற்று ஓடுவதையும் நாம் இந்தப் பதின்மூன்றாம் நாள் போரில் பார்த்துப் பூரிக்கிறோம்.

துரோணர், பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும் ஒருசேர அத்திர வித்தைகளைப் பயிற்றுத் தந்த ஆசான். அத்தகைய துரோணருக்கே புதிது புதிதாக அத்திர வித்தைகளைக் கற்றுத் தருகிறான் அபிமன்யு என்றால் அடடா அவனுடைய வீரத்தை என்னவென்பது?

**''வெல்லவந்த துரோணமாமுனி விறல் அழிந்தது குருவெனும்**
**சொல்லழிந்தது வில்லழிந்தது தேரழிந்தது தொடைகளால்''**

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம், 25)

''கர்ணா! ஆபத்து ஆபத்து! அதோ துரோணரையே விரட்டியடிக்கிறான் பார் அபிமன்யு! நீ போய், அவனை எதிர்த்துப் போரிடு'' என்று துரியோதனன் வற்புறுத்த, வீர அபிமன்யுவை வீழ்த்தி விடுவதாக வீரம் பேசி இப்பொழுது அபிமன்யுவுடன் போர் புரிய வருகிறான் தான சூர கர்ணன். ஆனால் அபிமன்யு ஏவும் கணைகளால் அங்க தேச மன்னனாகிய கர்ணன், தன்னுடைய அங்கமெல்லாம் புண்ணாகித் தனக்கு இனிப் போரே வேண்டாம் என்பதாக எண்ணி, உடைபட்டுப் போன தன் தேரிலிருந்து உருண்டு, வேறு ஒரு தேரில் ஏறித் தப்பித்து ஓடுகிறான்.

**''கர்ணன் என்று உலகெண்ணும் வீரனும் மொய்ம்புடன் பலகணைகள் வான்**
**மின்னொழுங்கொரு கோடியென்ன நிறுத்தி மெய்யுற வீசினான்**
**அன்னவன் பகழிக் குலங்கள் அநேகம் மோகரம் ஆகையால்**
**என்னவெஞ்சமம் இனி நமக்கென வேறு தேருடன் ஏகினான்''**

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம், 27)

அசுவத்தாமனும் தன் தந்தை துரோணரை விரட்டி அடித்த அபிமன்யுவிடம் தன் வீரத்தைக் காட்ட முயன்று முடியாமல் அபிமன்யு விடும் அம்புகளால் துளைக்கப் பெற்று மயங்கித் தரையில் சாய்கிறான். கிருதன், கிருதவன்மா இருவரும் ஒருசேர வந்து, தங்கள் தங்கள் வில் அறுபட்டு ஆயுதமற்றவர்களாய் அஞ்சி ஓடுகிறார்கள். சகுனி, தன்னுடைய மகனைத் துணைக்கழைத்துக் கொண்டு அபிமன்யுவை எதிர்க்க வருகிறான். அபிமன்யு ஏவிடும் அம்புகள் சகுனி மகன் உலூகனை உலகத்தைவிட்டே அனுப்பிவிட, மாண்ட மகனை அணைக்கவும் கூட வீரம் இல்லாமல் அபிமன்யுவின் அம்புகளுக்கு அஞ்சி ஓடுகிறான் சகுனி.

விகர்ணன் முதலான துரியோதனனின் தம்பிமார்களும் அபிமன்யுவிடம் தோற்று "அர்ச்சுனனை எதிர்த்துப் போர் புரிவதும் கூட ஆகும். ஆனால் அபிமன்யுவிடம் நம்முடைய வீரம் செல்லாது" என்று கூறி அபிமன்யுவின் வீரத்தைப் பாராட்டி யுரைத்துப் புறங்கொடுத்து ஓடுகிறார்கள். இப்படி கௌரவ சேனை முழுவதும் திரண்டு ஒருசேர எதிர்த்து வந்தும்கூட, அபிமன்யு தான் தனி ஒருவனாக எதிர்த்து வெற்றிவாகை சூடிக் கொண்டிருக்கிறான்.

ஆனால் அதே நேரத்தில் தருமரும் வீமனும் அபிமன்யு வின் வெற்றிச் சேதி ஒன்றும் அறிந்திடாமல் "வியூகத் திற்குள் சென்ற அபிமன்யு என்ன செய்கின்றானோ தெரிய வில்லையே!" என்பதாகக் கலங்கித் துடித்துக் கொண்டிருக் கிறார்கள். தனியாக அபிமன்யுவை வியூகத்திற்குள் அனுப்பி வைத்ததற்காகத் தருமர் மேல் வருத்தம் கொள்ளும் வீமன் "அண்ணா! எப்படி அபிமன்யுவை நீ தனியாக அனுப்ப லாம்? அப்படி அனுப்பிய போதே துணைப் படைகளையும் அனுப்பாமல் போனதேன்? சிதைவுற்ற சக்கர வியூகமும் பின் சேர்ந்து கொண்டு விட்டதே! பாலகன் ஆகிய அபிமன்யுவை அந்தப் பாவி துரியோதனன்

சூழ்ச்சிகள் பல செய்து வதைத்திட துடிப்பானே!'' என்று கலங்கிக் கூறத் தருமரும் கூட தம் செயலுக்காக வருந்துகிறார்.

''ஆமாம் வீமா! உடனே நீ போய் அபிமன்யுவைக் காப்பாற்று- துணைப்படைகளையும் அழைத்துச் செல்'' என்று தருமர் வீமனை வேகப்படுத்துகிறார். வீமனும் கலிங்கர், சோனகர், மகதர், கன்னடர், தெலுங்கர், ஆரியர், துளுவர், பப்பரர், சீனர், சாவகர், சிங்களர், சூலிங்கர், மாளவர், களமர், ஒட்டியர், குகுரர், கொப்பளர் கூபகர் ஆகிய மன்னர்களையும் அவர்தம் சேனைகளையும் அழைத்துக் கொண்டு அபிமன்யுவுக்கு உதவ விரையும் போதுதான் ''அபிமன்யுவிற்கு இனி ஆபத்து ஒன்றும் நேராது'' என்பதாகத் துடிக்கும் நம் நெஞ்சங்களும்கூட சாந்தம் கொள்ளக் காணுகின்றோம்.

வீமன் தன்னுடைய சத்துருகாதினி கதையைக் கொண்டு சக்கரவியூகத்து முன்னணிப் படையினரை மோதுகின்றான். அப்படைகளும் வீமனுக்கு ஆற்றிடாமல் ஈக்களைப் போல் சிதறி ஓடுகின்றன. வீமனும் அவனுடன் வந்த துணை மன்னர்களும் சக்கரவியூகத்தைப் பிளந்து கொண்டு வேகமாகச் செல்கிறார்கள். இதைக் கண்ணுறும் துரியோதனன் சயத்திரதனை அழைத்து ''சயத்திரதா! வந்தது நமக்கினி ஆபத்து. ஏற்கெனவே அபிமன்யு நம்முடைய சேனையின் பெரும்பகுதியைக் கொன்று அழித்து விட்டான். இப்பொழுது வீமனும் சக்கரவியூகத்தைப் பிளந்து கொண்டு வந்துகொண்டிருக்கிறான். வீமன் அபிமன்யு இருவரும் இணைந்துவிட்டால் நாம் அத்தனைப் பேரும் தொலைந்து விடுவோம். நீ தான் அவர்கள் இருவரும் சேர்ந்திடாவண்ணம் உன்னிடமுள்ள சிவபெருமான் கொடுத்த கொன்றை மாலையால் இருவரையும் பிரிக்க வேண்டும்'' என்று அலறுகின்றான் துரியோதனன்.

இந்தச் சயத்திரதன் சிந்து தேசத்திற்கு அரசன். துரியோதனனின் ஒரே தங்கையான துச்சளையின் கணவன்;

இவனும் துரியோதனனைப் போல குணத்தால் கொடியவன். பாண்டவர்கள் வனவாசம் புரிந்தபோது இவனும் ஒரு சமயம் அவர்கள் இருந்த வனத்திற்குப் போனான். பாண்டவர் ஐவரும் வேறு வேறு வேலையாக வெளியே போய்விட பர்ணசாலையில் துரோபதை மட்டும் தனித்திருந்தாள். பாண்டவர்க்கு உறவினன் என்பதால் சயத்திரதனை வரவேற்ற துரோபதை அவனுக்கு இருக்கை அளித்தும், கனிவர்க்கங்களைப் படைத்தும் உபசரித்தாள். உண்ட வீட்டிற்கே துரோகம் எண்ணக்கூடிய வஞ்ச நெஞ்சினனாகிய சயத்திரதனுக்கு உடன் ஒரு தீய எண்ணம் நெஞ்சில் உதித்தது. தனியாக இருக்கும் துரோபதையைக் கவர்ந்து கொண்டு போய் துரியோதனனிடம் ஒப்படைத்துவிட்டால் அவமானம் தாளாமல் பாண்டவர் ஐவரும் மடிந்து விடுவர் என்று நினைத்தான் அக்கொடியவன்.

அதனால் வேண்டுமென்றே தன்னுடைய உடைவாளை விட்டுவிட்டுப் ''பாண்டவரை இன்னொரு நாள் வந்து பார்த்துக் கொள்கிறேன்'' என்பதாகக் கூறித் தன்னுடைய தேரில் ஏறிப்புறப்படுவதைப் போல் நடித்துக் கொண்டிருந்தான் சயத்திரதன். அப்பொழுதுதான் சயத்திரதனுடைய உடைவாளை கவனித்த துரோபதை அதை எடுத்து வேகமாகக் கொண்டு வந்து ''அண்ணா; உங்கள் வாளை மறந்துவிட்டீர்களே! வனத்தில் விலங்குகள் எதிர்பட்டால் என்ன செய்வீர்கள்'' என்று கூறிக் கொடுத்தாள். தேரில் அமர்ந்திருந்த சயத்திரதன் தன் கைக்கு வாள் எட்டவில்லை என்பதாகக் கூறித் துரோபதையைத் தேரின் மேல் ஏறிவந்து கொடுக்கச் சொன்னான். துரோபதையும் அவன் கேட்டுக்கொண்டவாறே வாளை தேரின் மேல் ஏறிக் கொடுத்தாள். வஞ்சக நெஞ்சினனாகிய சயத்திரதன் துரோபதை தேரிலிருந்து இறங்கும்முன்பே தேரை வேகமாக ஓட்டலானான். அதற்குப் பிறகே அவனுடைய தகாத எண்ணத்தைப் புரிந்து கொண்டுவிட்ட துரோபதை ''காப்பாற்றுங்கள் காப்பாற்றுங்கள்'' என்று ஓலமிட்டாள்.

வனத்தில் கனிபறித்துத் திரும்பிக் கொண்டிருந்த வீமன் துரோபதையின் அபயக்குரலைக் கேட்டு, அங்கிருந்தவாறே சயத்திரதனின் தேருக்குத் தாவினான். சயத்திரதனுடன் யுத்தம் செய்துவென்று, அவனையும் தேரிலேயே கட்டி, துரோபதையை மீட்டான் வீமன்.

துரோகியான சயத்திரதனைக் கொன்றுவிட வேண்டும் என்று தம்முடைய நான்கு சகோதரர்கள் கூறவும் தருமர் ''நம்முடைய தங்கை துச்சளை அமங்கலி ஆக நாமா காரணமாவது'' எனக்கூறி அதை மறுத்துவிட்டார். அதன் பிறகு சயத்திரதனின் தலையை முழுவதுமாக மொட்டை யடிக்காமல் அதில் ஐங்குடுமி வைத்து, கரும்புள்ளி வெண் புள்ளிகளை உடல் முழுவதும் இட்டு, ஒரு கழுதையின் மேல் அமர வைத்து, அசையாமல் கட்டி அத்தினாபுரத்திற்குச் சயத்திரதனை அனுப்பி வைத்து விட்டார்கள்.

தன்னுடைய கெடுமதியால் இவ்வாறு அவமானப்பட நேர்ந்த சயத்திரதன்தான், பாண்டவர் படைகளை வெல்லும் படைக்கலங்களைக் கோரி சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் புரிந்தான். ''கிருஷ்ண சகாயரான பாண்டவரை வெல்வதற்கு ஆகிடாது எனினும் ஒருநாள் போரில் அர்ச்சுனன் அல்லாது நீ விரும்பும் எவரையேனும் வெல்வதற்கு இந்தக் கொன்றைமாலையும், கதாயுதமும் பயன்படும்'' என்பதாகக் கூறிச் சிவபெருமான் அவற்றைச் சயத்திரதனுக்குக் கொடுத்தருளினார். அவ்வாறு சிவபெருமானால் அளிக்கப் பெற்ற கொன்றை மாலையைத் தான் அபிமன்யுவும் வீமனும் சேர்ந்திடாவண்ணம் அவர் களுக்கு இடையில் இட்டுப் பிரித்திடுமாறு சயத்திரதனைத் துரியோதனன் கேட்டுக் கொள்கிறான். துரியோதனன் கேட்டுக் கொண்ட படியே சயத்திரதனும் பஞ்சாட்சர மந்திரத்தைக் கூறிக் கொன்றைமாலையை வீமனுக்கும் அபிமன்யுவிற்கும் இடையில் வீசி எறிகிறான்.

சிவபெருமானின் கொன்றைமாலை சக்கர வாள மலை போல் நிமிர்ந்து வீமனும் அபிமன்யுவும் சேர்ந்திடாதவாறு

அவர்களைப் பிரித்து விடுகிறது. கௌரவ சேனையை வென்று முடித்த அபிமன்யு 'இனி திரும்புவோம்' என மீள நினைக்கையில் அவனைச் சிவபெருமானின் கொன்றை மாலை வழிமறித்துத் தடுக்கிறது. தன்னைக் கொல்வதற்கு துரியோதனன் செய்துவிட்டிருக்கும் சூழ்ச்சியே இது என்பதாகத் தெளிகின்ற அபிமன்யுவும் 'மரணமே வருவதாயினும் வரட்டும்' என்பதாகத் துணிந்து மீண்டும் கௌரவப் படையினரோடு போரிடத் துணிந்து முன் செல்கிறான்.

அதே நேரம் வீமன், சிவபெருமானின் கொன்றை மாலை அபிமன்யுவிற்கு உதவிட இயலாமல் தன்னைத் தடுத்து நிற்பதைக் கண்டு கண்களும் கலங்கி ''அபிமன்யு! மகனே! நான் என்ன செய்வேனடா! உன்னைக் காக்க இயலாமல் என்னைத் தடுத்து நிற்கின்றதே ஈசன் கொன்றை மாலை! துரியோதனனின் சூழ்ச்சிகளில் இதுவும் ஒன்று! உன்னைத் தனியாக்கிக் கொன்றுவிடத் துடிக்கும் வஞ்சகன் துரியோதனனின் மகனை நீயும் கொன்றுவிட வேண்டும். அது உன்னால் ஆகும்'' என்பதாகத் தனக்குத் தானே கூறிப் புலம்பியவாறு: கொன்றை மாலையைக் கடந்திட நினையாமல் அம்மாலையை வணங்கியவாறே அங்கேயே திகைத்து நின்று விடுகிறான் வீமன்.

இவ்வாறு வீமனையும், அபிமன்யுவையும் இணைய வொட்டாமல் தடுத்து விட்ட சயத்திரதனின் கொன்றை மாலையைக் கொண்டாடிப் போற்றுகின்ற துரியோதனன், இதுவே நல்ல தருணம், அபிமன்யுவைத் தாக்கிக் கொன்று விடுங்கள்' என்பதாகக் கட்டளையிட்டுத் துரோணரையும், கர்ணனையும், மற்ற மற்ற வீரர்களையும் அவர்களுடன் அல்லாது தன் மகனான இலக்கண குமாரனையும் கூட அனுப்பி வைக்கின்றான். பதினோராம் நாள் போரில் தன்னைச் சிறை பிடித்து அவமானப்படுத்திய அபிமன்யுவை வென்றிட இதுவே நல்ல நேரம் என்பதாக நினைத்து இலக்கண குமாரனும் தனக்குத் துணையாக ஆயிரம் அரசர்

களையும் அழைத்துக் கொண்டு வந்து அபிமன்யுவை நாலா புறங்களிலும் வளைத்துக் கொண்டு தாக்குகிறான்.

அபிமன்யு அச்சம் என்பதே அறியாமல் முருகக் கடவுளைப் போன்றே தானும், தனி ஒருவனாக நின்று தன் ஆற்றலைக் காட்டிப் போர் புரிகின்றான். பம்பரம் போல் சுழன்று சுழன்று அபிமன்யு அம்புகளை ஏவ, அவனை எதிர்த்து வந்த மன்னர்கள் எல்லாம் மீண்டும் சிதைந்து ஓடுகின்றனர். அபிமன்யுவின் அம்புகள் இலக்கண குமாரனின் இரு தொடைகளிலும் பாய்ந்து, இரு தோள்களிலும் பாய்ந்து அவன் இரு கால்களையும், இரு கைகளையும், துண்டித்து விடுகின்றன. அபிமன்யு மேலும் சில அம்புகளை ஏவி, இலக்கண குமாரனின் தலையையும் அவனுடைய உடலிலிருந்து துனித்துத் தனியே விழ வைத்து விடுகிறான். இத்தனையும் துரியோதனன் காண, அவன் கண் முன் பாகவே நடந்து முடிந்து விடுகின்றது.

மன்னர் மன்னனாகிய துரியோதனனின் மகன் இலக்கண குமாரன் மடிந்து விடுகிறான். துரோணர் இருக்க, கர்ணன் இருக்க, துரியோதனனும் பார்த்திருக்கவே பார்த்தன் மகன் அபிமன்யு இந்த மாபெரும் சாதனையை நிகழ்த்திக் காட்டி விடுகிறான். ஓ வென்று கதறி அழும் துரியோதனன் ''என் மகனைக் கொன்ற அபிமன்யுவையும் குத்துங்கள். கொல்லுங்கள். இல்லாவிட்டால் எனக்கு இந்த அரசு வேண்டாம்; வாழ்வும் வேண்டாம், நானும் கூட சாகின்றேன்!'' என்று ஓலமிடுகின்றான்.

> ''மன்னவர் மைந்த ரோடு என்மைந்தனைக் கொன்ற மைந்தன்
> தன்னையும் இமைப்பிற் சென்று சயமுறச் செருத்திலீரேற்
> பின்னையிவ் வரசு வேண்டேன் பெருமித வாழ்வு வேண்டேன்
> என்னுயிர் தானும் வேண்டேன் என்றனன் இராசராசன்''

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம், 92)

மகனை இழந்த சஞ்சலத்தில் சாகட்டும் துரியோதனனும் என்று துரோணரும், மற்றவர்களும் விட்டிருந்தால் இத்துடனே பாரதப் போரும் நிறைவு பெற்றுவிட்டிருக்கும். மாறாகத் துரோணரும் கர்ணனும் மற்ற மற்ற மன்னர்களும் துரியோதனனுக்கு ஆறுதல் கூறி அபிமன்யுவை நாங்கள் எப்படியும் கொல்கிறோம். கொன்றிடாவிட்டால் நாங்கள் இனி வில்லினை ஏந்தவே மாட்டோம்'' என்பதாகச் சத்தியம் செய்து கொடுத்து அனைவரும் அபிமன்யுவை நோக்கித் திரண்டு வருகிறார்கள்.

பெருவெள்ளம் பொங்கி வந்தாலும் இமயமலை நடுங்கிடுமா? அப்படியே அபிமன்யுவும் தன்னுடைய மனம் சிறிதும் கலங்கிடாதவனாய் மலை போல் நின்று எதிரிகளின் அம்புகளைத் தன்னுடைய அம்புகளால் விலக்கியும் ஆற்றல் மிக்க தன் அம்புகளால் எதிரிகளை வீழ்த்தியும் ''இப்படியும் ஒரு வீரனா!'' என்று தேவர்கள் எல்லாம் வாழ்த்தி வியக்க மேலும் மேலும் போர் புரிகின்றான்.

சகுனியின் மைந்தர்கள் மேலும் எழுவரை அபிமன்யு இப்போரில் கொல்லுகின்றான். துரியோதனன் சேனையில் இன்றைய ஒருநாளில் மட்டும் ஒரு கோடி மன்னர்கள் மடிகின்றனர் என்று கூறும் வில்லிப்புத்தூரார்

**''சிலையழிந்தவர் அநேகர் தேரழிந்தவர் அநேகர்**
**தலையழிந்தவர் அநேகர் தாள்அழிந்தவர் அநேகர்**
**நிலையழிந்தவர் அநேகர் நெஞ்சழிந்தவர் அநேகர்**
**துலையழிந்தவர் அநேகர் தோள்அழிந்தவர் அநேகர்''**

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம், 98)

என்று மேலும் மேலும் அடுக்கிக் கூறிக் கொண்டே போவதைக் காணுகின்றோம்.

கர்ணன் மூன்று முறை புறங்கொடுத்து அபிமன்யுவிடம் தோற்கிறான். அவன் அபிமன்யுவிடம் வந்து போர்

புரிவதும், பின் புறங்கொடுத்து ஓடுவதுமாகப் பலருடைய கேலிக்கு ஆளாகிறான். கேலிக்கு ஆளானாலும் பரவாயில்லை, துரியோதனனின் கோபத்திற்கு ஆளாகிவிடக் கூடாது என்றே அஞ்சுகின்றனர் கௌரவ சேனா வீரர்கள். அதனால் போர் மரபுகளை எல்லாம் மறந்தவர்களாய் அபிமன்யு ஒருவனுடனே அத்தனை பேரும் திரண்டு போர் செய்கின்ற அலங்கோலப் போரினையே இந்தப் பதின் மூன்றாம் நாள் போரில் நாம் காணுகின்றோம்.

ஒரு பக்கம் துரோணர், அபிமன்யுவுடன் போர் புரிந்து கொண்டிருக்க கர்ணன், அசுவத்தாமன், சல்லியன், கிருதன், கிருதவன்மா, சயத்திரதன் முதலான எண்ணற்ற மன்னர்களும் அபிமன்யுவை நாலாபுறமும் சூழ்ந்து தாக்கிப் போர் புரிகின்றனர். இத்தகைய போரின் இறுதியில்தான் அபிமன்யுவின் தேரைக் கர்ணன் சிதைத்து அழித்து விடுகின்றான். எத்தனை முறை கர்ணனின் தேரை அழித்து அவனைத் தரையில் நிற்க வைத்தான் அபிமன்யு! அத்தகைய ஆற்றல் மிக்க அபிமன்யுவின் தேரையும் சிதைத்து அவனைத் தரையில் நிற்கச் செய்து விட்டான் அவனுடைய பெரிய தந்தையாகிய கர்ணன் என்று அந்த நிலையிலும் கூட அபிமன்யுவின் வீரத்திற்கே முதன்மைச் சிறப்புக் கொடுத்து வில்லிப்புத்தூராழ்வார்,

''தன்னைஅத் தனயன் செய்த தாழ்வெலாம் தனயன்
தன்னைப்
பின்னைஅத் தந்தை செய்து பின்னிடா தசைந்து நிற்ப
முன்னைய புரவித் தேரும் ஒத்தவெஞ் சிலையுமின்றி
மின்னை ஒத்திலங்கும் வாளோடு அவனிமேல் விரைந்து
பாய்ந்தான்''

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம், 105)

என்று பாடுகிறார்.

அபிமன்யு தன்னுடைய தேரையும் வில்லையும் இழந்து, வாளுடன் தரையில் பாய்ந்து போர் செய்வதற்கு நிற்க, அவனுக்குத் தோற்று ஓடிய பகை மன்னர்கள் அத்தனை பேரும் 'இனி அபிமன்யுவால் நம்மை ஒன்றும் செய்ய முடியாது'' என்று துணிவோடு நெருங்கி வருகிறார்கள். 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்பது பழமொழி. அபிமன்யு தன் வலக்கையில் வாளையும், இடக்கையில் கேடயத்தையும் ஏந்திக் கொண்டு, மண்டலமாகச் சுற்றிச் சுற்றி வந்து அப்பொழுதும் அனைவரையும் தாக்கி வீரமுடன் போர்புரிகின்றான். துரோணர், கர்ணன் முதலான பலர் விடும் அம்புகளை எல்லாம் தன்னுடைய வாளினாலேயே வெட்டி வீழ்த்தியவாறே துச்சாதனனின் மகன் துச்சனியின் தலையையும் கூட அதே வாளால் வெட்டி அபிமன்யு வீழ்த்திடும் போது அதைக் காணும் அதிர்ச்சியில் நடுங்கி மயங்கியே விழுந்து விடுகிறான் துரியோதனன்.

துரோணருடைய தேரையும் மூன்று முறை தன்னுடைய வாளால் சிதைத்துச் சிரிக்கின்றான் அபிமன்யு. நான்காம் முறையாக ஒரு மலை போன்ற தேரில் துரோணர் ஏறி வந்து அபிமன்யுவை எதிர்க்கிறார். அந்தத் தேரையும் சிதைத்துவிட வாளைச் சுழற்றியவாறு அபிமன்யு விரைந்து வர, துரோணர் விடும் அம்புகள் பல இம்முறை இலக்கு தவறிடாமல் சீறி வந்து, வீர அபிமன்யுவின் வாள் பிடித்த வலக்கையினை அப்படியே துண்டித்து வீழ்த்தி விடுகின்றன. மண்ணுலகை மட்டுமல்ல, விண்ணுலகையும் கூட வென்று பாண்டவர்களுக்கு காணிக்கை ஆக்கிட வல்ல அந்தக் கையை வீரக் கையை, அர்ச்சுனனின் நம்பிக்கையை, அபிமன்யுவின் வலது கையைத் துரோணர் வாளோடு வீழ்த்தி விடுகிறார். அப்பொழுதேனும் அஞ்சித் தளர்கிறானா நம் வீர அபிமன்யு? ''இக்கணமே சொர்க்கம் நேரினும் நேரட்டும். என்னை எதிர்ப்போரும் அவ்வாறே வீர சொர்க்கத்தைக் காணட்டும்'' என்பதாகத் துணிந்து தன்னுடைய இடது கையில் தேருருளை ஒன்றை ஏந்தி அதைச் சக்கராயுதம் போல் சுழற்றுகின்றான் அபிமன்யு.

''தன் மாதுலன் முதனாள் உரைதரு மந்திரம் ஒன்றால்
என் மாமணி யுருள் ஒன்றினை எரிச்சக்கரமாக்கிக்
கன்மாரி விலக்குங் கிரியென மேல்வரு கருதார்
வின்மாரி விலக்காவது கொடியாரையும் வீழ்த்தான்''

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம், 115)

கண்ணன் கற்பித்திருந்த மந்திரத்தை ஓதி, அபிமன்யு தேர் உருளையைச் சக்கராயுதமாக்கிச் சுழற்ற பகைவர்கள் ஏவிடும் அம்புகள் எல்லாமும் கூட அந்தத் தேர் உருளையின் மீது பட்டுப் பயனின்றிச் சிதைகின்றன. அபிமன்யு அந்தத் தேருளையைக் கொண்டும் பலருடைய தலைகளை மோதி உருள வைக்கின்றான்.

தேரினை இழந்தும் கலங்கிடாமல், வலக் கையை வாளொடு இழந்தும் நடுங்கிடாமல், தன் கைக்குக் கிடைத்த தெல்லாம் கொண்டு அபிமன்யுவும் மோதி தன்னுடைய சேனையை அதம் செய்திடுவதைக் கண்டு மனம் புழுங்கிப் புழுங்கிச் சாகிறான் துரியோதனன். அவன் சயத்திரத னிடம் ''இனியும் காலங்கடத்திடாமல் சிவபெருமான் கொடுத்த கதாயுதத்தால் அபிமன்யுவின் தலை சிதறக் கொல்வாய்'' எனக் கூற, சயத்திரதனும் கதாயுதத்தை ஏந்திக் கொண்டு அபிமன்யுவுடன் போர் செய்திட வருகிறான். அதைக் காணும் அபிமன்யு தேருளையைக் கீழே வீசி, தானும் ஒருகதாயுதத்தை இடக்கையில் ஏந்தியவ னாய் சயத்திரதன் மேல் பாய்கின்றான்.

அபிமன்யுவும், சயத்திரதனும் இரண்டு சிங்கங்கள் சீறி மோதுவதைப் போல கதாயுதம் கொண்டு மோதுகிறார்கள். அவர்கள் கதாயுதம் கொண்டு மோதும் அந்த ஓசையினைக் கேட்டு அட்ட திக்குக்கயங்களும் கூட அஞ்சி நடுங்குகின்றன. இருவரும் லாவகமாக ஒரு கதையுடன் மற்றொரு கதையை மோதிக் களமெங்கும் திரிந்து போர் புரிய, ஆதிசேடனும்

கூட அந்த அதிர்ச்சியை தாங்கிட இயலாமல் நெளிகிற
தன் ஒரு கையில்-அதுவும் இடதுகையில் ஏந்திய சதை
கொண்டே சயத்திரதனின் இரண்டு தோள்களும் எ
களும் நொறுங்கி உடலும் நசுங்கிடுமாறு ஓங்கி
அடிக்கின்றான் அபிமன்யு. அபிமன்யுவுக்கு
மாட்டாமல் சயத்திரதன் தேரிலேற, அவன் தேர்ப்பா
யும் தேர்க்குதிரைகளையும் கதையால் மோதி வீழ்
சயத்திரதனின் தேரையும்கூட நொறுக்கி விடுகின்
அபிமன்யு.

பதின்மூன்றாம் நாள் காலை போர்த் தொடங்
முதலாக அபிமன்யு ஒருவனே எத்தகைய வீரப்
புரிந்திருக்கின்றான்; எத்தனை மன்னர்களை, எத்த
வீரர்களைக் கொன்றிருக்கிறான்! துரியோதனன்
இலக்கண குமாரன், துச்சாதனன் மகன் துச்சனி, சகுன
ஏழெட்டு மைந்தர்—அத்தனைப் பேரையும் கொன்
கிறான் அபிமன்யு!

அவன் ஒருவனுக்கு ஈடுகொடுக்க முடிந்ததா துரி
தனனின் கணக்கே இல்லாத சேனைகளால்? கர்
தோற்றுத் தோற்று ஓடித் தேரினைப் பிளந்த
துரோணர் பத்து முறைகளுக்கு மேல் தேரினை இ
அபிமன்யுவின் வலக்கையை வில் கொண்டு வீழ்த்தி
கையினை இழந்தும், நம்பிக்கை இழந்து விடாத அபி
தேருருளைக் கொண்டு போர் புரிந்தும், இப்பொழுது
கையால் கதையை ஏந்திப் போர் புரிந்தும், சயத்திரத
எலும்புகளை நொறுக்கிக் கொண்டிருக்கிறான். அபி
விற்குத் துணை புரிய வந்த வீமனைச் சிவபெருமா
கொன்றை மாலையை இட்டுத் தடுத்துவிட்ட சதிக
ஆகிய சயத்திரதன்தன்கையில் பிடித்திருப்பது சிவபெரு
கொடுத்த கதை;இல்லாவிட்டால் அபிமன்யுவால் எப்
தோ முடிந்துவிட்டிருக்கும் அவனுடைய கதை.

நாளெல்லாம் செய்த போரினால் மிகவும் இளைத்து விட்டிருக்கும் அபிமன்யுவை இனியும் உயிருடன் விட்டு வைத்திருந்தால் அவன் தன்னையும் கொன்று விடுவான் என்று அஞ்சி நடுங்கும் சயத்திரதன், சிவபெருமானைத் துதித்துப் பஞ்சாட்சர மந்திரத்தைச் செபித்து அபிமன்யு மேல் சிவபெருமானுடைய கதையை வீசி எறிகிறான். கூரிய முனையைக் கொண்ட அந்தக் கதையும், கருணையே இல்லாமல் கண்ணனின் மருகன் ஆயிற்றே என்ற பரிவும்கூட காட்டாமல் காதகன் சயத்திரதன் சொல்லுக்குக் கட்டுப் பட்டுப் பாய்ந்து வந்து நம்முடைய கண்களில் எல்லாம் இரத்தத்தைப் பெருகச் செய்து அபிமன்யுவின் தலையைத் தனியே கொய்துபோய் மண்ணிலே வீழ்த்தி விடுகின்ற கொடுமையைப் புரிந்தே விடுகிறது.

தர்மம் காக்க இப்படித் தன் தலையைக் கொடுத்துப் பதின்மூன்றாம் நாள்போரை முடிக்கின்றான் அபிமன்யு. அப்பொழுதும் தன்னுடைய உடல் சாயுமுன்பாக, அந்தஇறுதி நேரத்திலும் அபிமன்யு தன்னுடைய ஆற்றலை எல்லாம் ஒன்று திரட்டி, தன்னுடைய கதாயுதத்தையும் சயத்திரதன் மேல் வீசி எறிகிறான். அபிமன்யுவின் கதாயுதமும் சீறிச் சென்று சயத்திரதனின் மார்பை மோத ''ஆ! தொலைந் தேன்!'' என்று அலறியவனாய் அவனும் மண்ணில் மயங்கிச் சாய்கிறான்.

சயத்திரதன் மண்ணில் சாய்கிறானே தவிர, மடிந்து விடவில்லை. பாண்டவரின் பிரியமகன்—அர்ச்சுனனின் ஆசை மகன் அபிமன்யுவின் தலை சிதறும் வண்ணம் சிவபெரு மானின் கதையை வீசிக் கொடுமை புரிந்த சயத்திரதன் அவ்வளவு சீக்கிரமாக மாண்டு மடிவது? எந்த நேரம் அர்ச்சுனனால் தன்னுடைய தலையும் சிதறுமோ என்பதாக சயத்திரதன் எண்ணி அஞ்சி அஞ்சி, நாளெல்லாம் நடுங்கி நடுங்கி, மரணவேதனையில் துடித்துத் துடித்து அவன்

பதினான்காம் நாள் போரின்போது சாகவேண்டும் என்பதல்லவா அவனுக்கு எழுதப்பட்டிருக்கும்விதி. வஞ்சகத்தால் தன்பிரிய மருமகனை வீழ்த்திய சயத்திரதனின் விதியை முடித்திட பார்த்தசாரதியும் என்ன வஞ்சம் புரிந்திடப் போகிறார்? என்ன மாயம் நிகழ்த்திட இருக்கிறார்? என்பதையெல்லாம் நாம் இனிவரும் அத்தியாயத்தில் பொறுத்திருந்து காண்போமாக!



# 19

வீர அபிமன்யுவின் தலையைச் சயத்திரதனின் ஆயுதம் கொய்து வீழ்த்திடும்போது அந்தக் கொடுமையைக் காணச் சகியாமல் பறவைகள் பலவும் கூட வீரிட்டு "இது நியாயம் அல்ல; இது நியாயம் அல்ல" என்று அலறித் துடிக்கின்றன.

தனக்கு இரண்டு கண்கள் போனாலும் கூட பரவாயில்லை. தன் எதிரிக்கு ஒரு கண்ணாவது போகவேண்டும் என்று விரும்புகின்ற அரக்க மனம் படைத்தவனே துரியோதனன். அவன் அபிமன்யுவின் மரணத்தினால் தன் மகன் மடிந்து பட்ட துக்கத்தையும் கூட மறந்து சந்தோசப் படுகிறான். துரியோதனனுடைய துச்சாதனன், சகுனி, சயத்திரதன் ஆகிய மூவரும் கூட மகிழ்கிறார்கள்.

ஆனால் துரோணர், கர்ணன் உள்ளிட்ட மற்றைய கௌரவ சேனையினர் ஒருவர்கூட அதர்மத்தால் கொண்ட அபிமன்யுவின் மரணத்தைக் குறித்துச் சந்தோஷம் கொள்ளவில்லை என்பது இங்கே குறிப்பிடத்தக்கது. ஒரு வீரனோடு மற்றொரு வீரன் முயன்று போர் செய்து வெல்ல முயல்வதே உலக இயற்கை. அவ்வாறிருக்க அபிமன்யு ஒருவனோடு மகுடம் தரித்த மன்னர்கள் ஒரு கோடி பேர் வளைத்துச் சூழ்ந்து வஞ்சப்போர் புரிந்தல்லவா அம் மாபெரும் வீரனைக் கொல்ல முடிந்தது. அப்பொழுதும் அபிமன்யுவால் மாண்டு மடிந்த கௌரவர் தொகைதானே மிகுதி. சிதைந்துபோன அபிமன்யுவின் தேருக்கு மாற்றாக-ஒரு தேர்-ஒரே ஒரு தேர் அவனுக்குக் கிடைத்திருக்குமேயானால் இளைஞன் ஆகிய அபிமன்யுவை யார்தான் வீழ்த்தி வென்றிருக்க முடியும் என்று கூறி துரியோதனன்

துச்சாதனன், சகுனி, சயத்திரதன் ஆகிய நால்வர் அல்லாத மற்ற கௌரவ சேனையினர் எல்லோரும் கூட அழுது கண்ணீர் விட்டு அபிமன்யுவின் வீரத்தைப் போற்று கிறார்கள். இதனை வில்லிப்புத்தூரர்

''ஓரிரண்டு வயவர் முனைந்துடன் பொருதல்
உலகியற்கை ஒருவர் தன்மேல்
போரிரண்டு புறமும் வளைந்தொரு கோடி
முடிவேந்தர் பொருது கொன்றார்
தேரிரண்டு கிடையாத குறையன்றோ களத்
தவிந்தான் சிறுவன் என்றென்று
ஈரிரண்டு பெயரொழிய மற்றுள்ளார் அழு
திரங்கி என்பட்டாரே''
(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம்)

எனப்பாடக் காண்கிறோம்.

இதுவரை பதின்மூன்று நாட்களாக நடந்திருக்கும். இந்தப் பாரதப் போரில் எவ்வளவோ மன்னர்கள், வீரர்கள் இருபுறத்திலும் மடிந்திருக்கிறார்கள். அவர்களுடைய மரணத்திற்கெல்லாம் கலங்கிக் கண்ணீர் விடாத வில்லிப் புத்தூரரார் அபிமன்யுவின் வீரமரணத்தை மட்டும் தாங்கிட இயலாமல் அழுதுமிகக் கலங்கிப் புலம்புகிறார்.

''அபிமன்யு! வீரர்களுக்கெல்லாம் வீரனே! உனக்கு மாமன் திருமால், தந்தை வீர அர்ச்சுனன், உன் பாட்டன் தேவர்களுக்கெல்லாம் தலைவனாகிய இந்திரன். உனக்கு உறவு ஒருவர் இருவர் அல்ல; ஒரு கோடிக்கும் மேற்பட்ட மகுடம் தாங்கிய மன்னர்கள், இவ்வளவு பேர் இருந்தும் உனக்குத் துணையாக உன்னைக் காப்பதற்கு ஒருவர்கூட இன்றைக்கு இந்தக் களத்தில் வரவில்லையே! இதைத் தானா விதி—விதியின் கொடுமை என்று கூறுவது!

ஆதிசேடன் நடுங்க விரைந்து நீ செலுத்திய உன் செம்பொன் தேர் அழிந்தபோது உனக்கு ஒருவரேனும்

துணைவந்தார்களா? வாள் பிடித்த உன் மணி வலக்கையை மாற்றார் அறுத்து வீழ்த்திய போதேனும் உனக்குத் துணையாக ஒருவரேனும் வந்தார்களா? உன்னுடைய புன்னகை பொலியும் வீர முகத்தைச் சயத்திரதனின் கதாயுதம் வீழ்த்திட முற்பட்ட வேளையில் உன் பாட்டன், மாமன், வீரவீமன், உன் பிரிய தந்தை, உன் பெரிய தந்தை சிறிய தந்தைமார், மற்றைய உறவுமார் இவர்களில் யாரேனும் ஒருவர் உனக்கு அருகில் இருந்து உனக்குத் துணை செய்தார்களா? ஆறுதலாகவாவது சில அன்பு வார்த்தைகளைக் கூறினார்களா? இல்லையே அபிமன்யு! இல்லையே!

முருகனையும் விட வலிமை வாய்ந்த உன்னுடன் நேர் நின்று முகங்கொடுத்துப் போர் செய்ய ஆற்றல் இல்லாத கோழைகள் பலரும் சேர்ந்தல்லவா உன்னைக் கொன்று விட்டார்கள். இது அவர்களுக்கு வெற்றியா? இல்லை அபிமன்யு இல்லை. உன் மரணமும் கூட உனக்கு வெற்றி யாக முடிந்திருக்கிறது'' இவ்வாறாகப் புலம்பி வில்லிப்புத் தூரார் அபிமன்யுவின் மரணத்தைக் கொண்டாடிப் புலம்புகிறார்.

**''மாமனாம் திருமாமன் தனஞ்சயனாம் திருத்தாதை**
**வானோர்க்கெல்லாம்**
**நாயனாம் பிதாமகன் மற்றொருகோடி நராதி**
**பராம் நண்பாய் வந்தோர்**
**சேயனாம் அபிமனுவாம் செயத்திரதன் கை படுவான்**
**செயற்கை வெவ்வே**
**றாயநாள் அவனிதலத் தவ்விதியை வெல்லும்**
**வகையார் வல்லாரே''**

**''சேடன்முடி தெளியவரு செம்பொற்தேர்**
**அழிவதோ அந்தோ அந்தோ**
**கேடக வாளணி வலயக் கிளர்புயத்தோள்**
**அறுவதோ அந்தோ அந்தோ**

கூடக வெங்கதை யொன்றாற் சிந்துபதிகொல்
வதோ அந்தோ அந்தோ
வாடமரில் அருகொருவர் வாராமல் இருப்பதோ
அந்தோ அந்தோ"

"கன்னனையும் தேரழித்தான் கந்தனிலும் வலியனே
அந்தோ அந்தோ
மன்னவர் ஐவருமிருக்க மைந்தனுயிர் அழிவதோ அந்தோ
அந்தோ
பொன்னுலகோர் வியந்துருகிப் புந்தியினான்
மலர்பொழிந்தார் அந்தோ அந்தோ
அன்னநெடுந் துவசன் இவற்கு ஆயுள் மிகக் கொடுத்
திலனே அந்தோ அந்தோ"

(பதின்மூன்றாம் போர்ச்சருக்கம் 131)

இவ்வாறு பிரமன் அபிமன்யுவிற்கு ஆயுள் அதிகம் எழுதாமல் போன கொடுமையையும், பெற்றவர்க்கு முன் அபிமன்யு இறக்க நேர்ந்த அந்தக் கொடுமையையும் எண்ணி எண்ணிக் கலங்கிக் கண்ணீர் விடுகிறார் வில்லிப்புத்தூரார்.

அபிமன்யுவின் மரணச் செய்தியைத்தருமர், வீமன், நகுல, சகாதேவர்களும் இப்பொழுது அறிந்து தாங்க முடியாத சோகத்திற்காளாகித் தலையிற் அடித்துக்கொண்டு புலம்புகிறார்கள். அர்ச்சுனனுக்கு இன்னும் இந்தக் கொடிய செய்தி எட்டிடவில்லை.

குருசேத்திர யுத்தக் களத்திற்கு அப்பால் வெகுதூரத்தில் அர்ச்சுனன் தனியே திரிகர்த்த இராசாக்களோடு போர் புரிந்து அவர்களைப் பந்தாடிக் கொண்டிருக்கிறான். ஆனால் இங்கே இந்தக் குருசேத்திரக் களத்தில் அவனுடைய உயிரே ஆன அபிமன்யு, கௌரவர் சேனையைத் தனி ஒருவனாகத் தன்னால் ஆனமட்டும் பந்தாடி, தன் ஆருயிரையும் தன்னைப் பெற்றவர்களுக்காகத் தியாகம் செய்து, தன்

கடமையைப் பெருமையோடு நிறைவேற்றி முடித். விட்டான்.

"அபிமன்யு! என் மகனே! என் கண்ணே! எனக் நாட்டை மீட்டுக் கொடுக்கிறேன், நாட்டை மீட்டுக் கொடு கிறேன். என்று அடிக்கடிக் கூறி என்னை மகிழ வைப்பாயே அர்ச்சுனனைக் காட்டிலும் வீரத்தில் சிறந்து விளங்கும் நீே எதிரிகளை வென்று நாட்டை மீட்டுத்தருவாய் எனவும் நா நம்பிக்கையோடு இருந்தேனே! புயலெனச் சீறியப்புற பட்டுப் போய் நீ சக்கரவியூகத்தைப் பிளந்தபோது நா எவ்வளவு பூரித்தேன். துரியோதனனின் மகனை கொன்றாய்! துச்சாதனனின் மகனைக் கொன்றாய்.

சகுனியின் மக்கள் பலரைக் கொன்றாய்! இவர்கள எல்லாம் கொன்று வென்ற நீ அந்த வீர நிகழ்ச்சிகள எல்லாம் ஓடிவந்து சொல்லுவாய் என்று நான் ஆவலோ பார்த்திருக்க உன் வீரத்தை என்னிடம் கூற வெட்கப்பட்டு கொண்டா மகனே நீ வந்து கூறாமல் மடிந்து போனாய் நீ மாண்டாய் என்ற சேதி கேட்டால் உன் தந்தை அர் சுனன் மறுநிமிடமே மாண்டு போவானே! இதுவே அபிமன்யு உன் தந்தையர்க்கு நீ நாட்டை மீட்டு கொடுக்கும் விதம்?' என்பதாகத் தருமர் புலம்ப அவரை தேற்றமுடியாமல் அவருடன் சேர்ந்து அவரைக் கட்டி கொண்டு வீமன், நகுலன், சகாதேவன் ஆகியோரும் கூ அழுகிறார்கள்.

தருமர் இவ்வாறு புலம்பி மயங்கி வீழ, வீமன், நகுலன் சகாதேவன் ஆகியோரும் "அபிமன்யு! எங்கள் துன் மெல்லாம் தீர்ப்பதற்காகவேனும் நான் இறக்கவில்லை என்பதாகக் கூறி ஓடிவா மகனே! மீண்டும் உயிர் கொண் ஓடிவா மகனே" என்பதாகப் புலம்பி அவர்களும் மயங்கி சாய்கிறார்கள்.

இப்படி இவர்கள் இங்கே புலம்பிக் கொண்டிருக்கையி அர்ச்சுனன் தனி இடத்தில் நடந்த போரில் திரிகர்த்

இராசாக்களையும் அவர்களுடைய சேனைகள் அனைத்தையும் ஒருவர் கூட மிச்சமில்லாமல் எல்லோரையும் கொன்று அழித்து விட்டு அந்த வெற்றிச் செய்தியைத் தன் மகனிடமும் தன் உடன் பிறந்தவர்களிடமும் கூற ஆர்வத்துடன் வந்து கொண்டிருக்கிறான். ஆனால் கண்ண பெருமான் அர்ச்சுனனின் வெற்றியை உணர்த்தும் வகையில் தம்முடைய பாஞ்ச சன்னியத்தை எடுத்து முழக்கவுமில்லை; அர்ச்சுனனின் வெற்றியைக் கொண்டாடி அவனைப் பாராட்டியும் கூட ஏதும் கூறவில்லை. தூரத்தில் அபிமன்யு மாண்டு விட்டதையும், அதனால் பாண்டவர்கள் கலங்கித் துடிப்பதையுமே உய்த்துணருகின்ற கண்ணபெருமான், அபிமன்யுவின் மரணச் செய்தியை அறிந்தால் அர்ச்சுனனும் மாண்டுவிடக் கூடிய அபாயமே முன் நிற்பதை அறிந்து, அர்ச்சுனனைக் காப்பாற்றுவது எப்படி என்றே சிந்திக்கிறார்.

கண்ணபெருமான் மனதில் நினைத்துக் கட்டளையிட தேவேந்திரன் அவருடைய கண்களுக்கு மட்டுமே தெரியுமாறு வந்து தோன்றி வணங்கி நிற்கின்றான். வாய் திறந்து உரைக்காமல் கண்ணபெருமான் தேவேந்திரன் செய்திட வேண்டிய பணியை மௌனமாகவே உணர்த்துகிறார், தேவேந்திரனும் அப்பணியை உடன் செய்து முடிப்பதாகக் கூறிக் கண்ணபெருமானிடம் விடைபெற்றுச் சென்று ஒரு முனிவனாக வேடம் தாங்குகின்றான்.

தேவேந்திரன் முனிவனாகிக் கண்ணபெருமானின் கட்டளைக்கிணங்க, அர்ச்சுனனின் தேர் திரும்பிவரும் வழியில் நெருப்பினை வளர்த்து அதிலே வீழ்ந்து இறக்கும் பொருட்டு அக்கினியை வலம் வந்து வணங்கி நிற்கின்றான். கண்ணபெருமான் தேரினை நிறுத்தி அக்காட்சியைப் பார்த்தனுக்குக் காட்டி ''அர்ச்சுனா பார் அங்கே! அந்த முனிவரைப் போய் தடுத்துக் காப்பாற்றுப் போ'' என்று கூற அர்ச்சுனனும் தேரிலிருந்து குதித்து விரைந்து போய் முனிவரைத் தீயிலே விழாதவாறு கையைப் பிடித்துத் தடுக்

கின்றான், ''முனிவரே! ஏனிந்த முடிவு?'' என்று அர்ச்சுனன் வினவ ''என் அன்பு மகன் இறந்துவிட்டான். அவன் இறந்து போன பிறகு நான்மட்டும் ஏன் வாழ வேண்டும்.? என்னைத் தடுக்காதே விடு. நான் சாகிறேன்'' என்கிறார் அந்த மாய முனிவர். 'உடனே அர்ச்சுனன்,

> **''வீதலும் பிழைத்தல் தானும் விதிவழி, அன்றி நம்மால்**
> **ஆதலும் அழிவும் உண்டோ? நின்னில் வேறறிஞருண்டோ**
> **பூதலம் தன்னில் யாவர் புதல்வரோடு இறந்தார் ஐயா''**

என்று கூறி முனிவரைச் சாக விடாமல் தடுக்கின்றான்.

''எல்லாம் விதியின் வழியே நடக்கிறது. உன் மகன் மடியவேண்டும் என்ற விதி இருந்ததனால் அவன் இறந்து விட்டான். அதற்காக நீயுமா சாவது?நீ சாகாமல் இருந்தால் இன்னொரு மகனைப் பெற்றுக் கொண்டுவிடலாம். மகனோடு தந்தை இறப்பது. தந்தையோடு மகன் இறப்பது என்று ஒருவரைத் தொடர்ந்து மற்றவர்களும் சாக முற்படு வார்களானால் இந்தப் பூமியில் யார்தான் பிழைத்திருக்க முடியும்? ஆகவே வேதனை மறந்து நெருப்பில் விழுந்து இறக்கும் இந்த முடிவை மாற்றிக் கொள்ளுங்கள்'' என்று தடுக்கின்றான் அர்ச்சுனன்.

''வேதனையை மறந்து விடு என்பதும், விதியை மாற்ற முடியாது என்பதும் யாரும் யாருக்கும் சொல்வதற்குச் சுலபமாகத்தான் இருக்கும். ஆனால் அவரவர் வேதனை, அவரவர்களுக்கு வந்தால்தான் புரியும். என் மகன் இறந்த சோகம் தாங்கமுடியாமல் தவிக்கும் என்னைச்சாகவிடாமல் தடுக்கிறாயே! ஒருவேளை உன் மகன் இறந்து படுவானே யானால் நீயும் சாகமுற்படாமல் உயிர் வாழ்வாயா? அவ்வாறு நீ உயிர் வாழ்வதாக எனக்குச் சத்தியம் செய்து கொடுப்பாய் ஆனால் நானும் இப்பொழுது சாவதை விட்டு விடுகிறேன்'' என்கிறான் அர்ச்சுனனிடம் இந்திர முனிவன்,

உடனே அர்ச்சுனனும் முனிவராக வந்திருப்பவர் தன் தந்தையாகிய இந்திரனே என்பதை அறியாமல், தன் மகன் இறந்து பட்டசோகத்தில்தான் உயிரை விட்டுவிடாமல் இருப்பதற்கே கண்ணபெருமான் இந்திரனைக் கொண்டு இந்த நாடகத்தை நடத்திக் கொண்டிருக்கிறார் என்பதும் தெரியாமல் ''முனிவரே! என் மகன் இறந்துபட்டால் நானும் இறக்க மாட்டேன். இது சத்தியம்'' என்று சத்தியம் செய்து கொடுக்கிறான். உடனே இந்திர முனிவரும் ''அப்படியானால் சரி, நானும் இப்பொழுது சாகமாட்டேன்'' என்று கூறி விடை பெற்றுச் செல்கிறார்.

இவ்வாறு இந்திரனை ஏவி, அபிமன்யுவின் மரணத்தால் அர்ச்சுனனும் உடன் மாண்டுவிடாதவாறு சத்தியத்தைப் பெற்றுக்கொண்டு விட்ட பார்த்தசாரதி ''அபிமன்யு மாண்டான்'' என்ற செய்தி தெரிந்தால், தான் செய்து கொடுத்த சத்தியத்தையும்கூட மறந்து தன்னை அர்ச்சுனன் மாய்த்துக் கொள்ள முயன்றிடவும் கூடும்; அதற்கும் இடம் கொடுக்காமல் செய்தல் வேண்டும் என்பதாகத்திட்டமிட்டுப் பாசறை சென்று சேர்வதற்கு முன்பாகவே அவனிடம் இருக்கும் ஆயுதங்கள் அனைத்தையும் மிகத் தந்திரமாக வாங்கித் தம்மிடம் வைத்துக் கொண்டும் விடுகிறார். இவ்வாறு அர்ச்சுனனை நிராயுதபாணி ஆக்கிய பிறகு கண்ண பெருமானும் தேரைச் செலுத்திப் பாண்டவர்களின் பாசறையை நெருங்க, கடலொலியைப் போன்ற சோகக் குரல் அர்ச்சுனனின் காதுகளை வந்து தாக்குகின்றது.

அப்படி எழும் பெருஞ்சோகக் குரலைக் கேட்டவனாயும், மார்பில் அடித்துக் கொண்டு ஒவ்வொருவரும் அழுது கொண்டிருக்கும் அந்தச் சோகக் காட்சியைக் கண்டவனாயும் அர்ச்சுனன் அதிர்ச்சியுற்று ''கண்ணா! யார் மாண்டு பட்டதனால் நம் அணியில் இந்த சோகம்'' என்று வினவ, அர்ச்சுனனுக்குப் பதிலொன்றும் கூற முடியாமல் கண்ண பெருமானும் தம்முடைய கண்களிலிருந்து அருவியென கண்ணீரைக் கொட்டி அழுகிறார்.

''அங்கைஆர்த்தனைத்துளோரும் அரற்று பேரரவம் கேட்டுக்
கங்கையம் பழன நாடன் கண்ணனை வணங்கி நோக்கி
இங்கயல் எழுந்த கோஷம் யாதென யாதும் சொல்லான்
பங்கய நெடுங்கண் சேப்ப நித்திலம் பரப்பினானே''

(பதின்மூன்றாம் போர்ச்சருக்கம் 155)

முதல்நாள் போரின்போது அர்ச்சுனனுக்குக் கீதை உபதேசித்த கண்ணபெருமானே இப்பொழுது அழுகிறார். உடல்கள் அழியலாம், உயிர் அழிவதில்லை என்றுபதேசித்த கண்ணபெருமானே அபிமன்யுவின் உடல் அழிந்துபட்டமைக்காக அழுகிறார். பூமியில் வந்து அவதாரம் செய்ய நேர்ந்த காரணத்தால் எல்லாம் வல்ல பரம்பொருளாகிய கண்ண பெருமானே மாயைக்கு ஆட்பட நேர்ந்து தம் மருமகனின் மறைவிற்காக மயங்கிக் கண்ணீர் விடநேர்கிறது என்றால் மரணத்தின் கொடுமையை என்னவென்று கூறுவது! மண்ணில் பிறந்த சாதாரணமானவர்களை, மரணத்துன்பம் பாடாய்ப் படுத்துவதில் என்ன விந்தையிருக்க முடியும்?

அர்ச்சுனன் கண்ணபெருமானிடம் ''உன் திருவுளம் அறியாதது ஒன்றுமே இல்லை. கண்ணா! சொல்! மாண்டு போனது யார்? என் உடன் பிறந்தாரில் எவரேனும் மாண்டார்களா? என் மக்களில் யாரேனும் மாண்டார்களா?'' என்று துடிக்க, கண்ணனும் இனியும் உண்மையைக் கூறாமல் மறைக்க முடியாது என்பதால் அன்றைய நாள் போரில் அபிமன்யு ஆற்றிய விரச் செயல்களைஎல்லாம் கூறி, அவனுக்கு ஏற்பட்ட வீரமரணத்தையும் கூடக் கூறுகிறார். ''அபிமன்யு மாண்டான்'' என்று உரைத்த சொல், கொள்ளிக்கட்டை போன்று அர்ச்சுனனை உள்ளும் புறமும் சுட, புத்திரசோகம் எனும் நச்சரவம் தீண்ட அர்ச்சுனனும் தடால் எனத் தேரிலிருந்து உருண்டு பூமிமேல் விழுந்து மயங்கிச் சாய்கிறான். அவனுடைய முகத்தில் நீரைத்

தெளித்து, கண்ணபெருமானும் சைத்தியோபசாரம் செய்து அவன் மயக்கத்தைத் தெளிவிக்க அர்ச்சுனனும் மயக்கம் தெளிந்து எழுந்து அபிமன்யுவின் மரணத்தை எண்ணிப் புலம்புகிறான்.

''அபிமன்யு! என்னை விட்டுப் போய்விட்டாயாடா கண்ணே! என்னை விட்டுப் போக உனக்கு மனமும் கூட வந்ததாடா கண்ணே! இராவான் இறந்த துக்கமே எனக்கு இன்னும் தீரவில்லையே! அதற்குள் நீயும்மடிந்துவிட்டாயே! உன்னை இழந்தேன் என்று அறிந்த பிறகும் கூட உயிரோடு இருக்கின்ற நான் அப்பனா? இல்லை மூர்க்கன். மகாவீர னாகிய நீயே போன பிறகு இனி அந்தத் துரியோதனனை வெற்றி கொண்டென்ன? வெற்றி கொள்ளாமல் போ யென்ன?

சூரிய உதயத்திற்கு முன்பே நீ எழுந்து என்னையும் வந்து தினமும் எழுப்பிப் போருக்கு ஆயத்தப்படுத்துவாயே! மாலையில் போர்முடிந்து நான் திரும்பிவரும்போது முக மலர்ச்சியோடு என்னை வந்து வரவேற்பாயே! இன்று ஏனடா கண்ணே வந்து நீ என்னை எதிர்கொள்ளவில்லை?

மகனே வா! ஓடிவந்து இன்றைக்கு நீ ஆற்றிய அந்த வீரப் போரை எல்லாம் என் அகம் குளிர எடுத்துச் சொல். சக்கர வியூகத்தைப் பிளந்தாய்! எதிரிகளை வென்று அழித் தாய். கொன்றை மாலை கொண்டு எதிரிகள் உன்னை வளைத்தனர்; உன்னுடைய கையையும் கூட வெட்டிவிட் டனர். அப்பொழுதும் நீ பகைவர் மடியஆற்றினாயே வீரப் போர். அதையெல்லாம் வந்து எனக்கு ஆனந்தம் உண்டாகும் வகையில் சொல்லடா மகனே சொல்!

சொல்ல மாட்டாயா? அபிமன்யு நீ சொல்ல மாட்டாயா? உன் தந்தை அவ்வளவு பாவி ஆகி விட்டேனாடா உனக்கு? அதனால்தான் நீ என்னை விட்டு விட்டு உன் பாட்டன் இந்திரன் வாழக் கூடிய அமராவதிப்

பட்டணத்திற்குப் போய் விட்டாயா? அமராவதி நகரை நீ அடைந்த போது உன் பாட்டன் இந்திரன் உன்னை எதிர் கொண்டு அழைத்து உனக்கு அமராவதி நகரைச் சுற்றிக் காட்டினாரா? உனக்குக் கற்பகக் காவையும் ஆகாயக் கங்கையையும் பாரடா என்று அன்போடு உனக்குச் சுற்றிக் காட்டினாரா? துரோணர் முதலான மகாரதர்களை எல்லாம் எதிர்த்துப் போர் செய்து இளைத்து நீ வந்திருக்கிறாய் என்று உன் பாட்டி இந்திராணி உனக்குத் தன் கையால் அமிர்தத்தைக் கொண்டு வந்து ஊட்டிவிட்டாளா?

**''தேரழிந்தெடுத்த வில்லும் செங்கதிர் வாளுமின்றி**
**ஒருதவியும் பெறாமல் ஒழிந்துயிர் அழிந்த மைந்த**
**போரமர் உடற்றி நீஅப் பொன்னகர் அடைந்தபோதுன்**
**பேரமர் ஆண்மை கேட்டுப் பிதாமகன் என்**
**சொன்னானோ?''**

**''மற்புயக் குன்றில் ஒன்று வாளுடன் வீழப்பின்னும்**
**பொற்புறப் பொருதநீ அப்பொன்னுலகடைந்த காலை**
**அற்புதப் படைகள் வல்லாய் அபிமனே! அமரர் ஊரும்**
**கற்பகக் காவும் வானிற் கங்கையும் காட்டினாரோ?''**

**''வளைத்தவில் நிமிரா வண்ணம் வாளியான் மாவும்தேரும்**
**துளைத்துமுன் காலாளாகத் துரோணரைத் துறந்த வீர!**
**திளைத்த வெஞ்சமரில் நொந்து தனஞ்சயன் சிறுவன்**
**மேனி**
**இளைத்ததென்று இந்தி ராணி இன்னமு**
**தூட்டினாளோ''**

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம், 165—168)

இவ்வாறு அர்ச்சுனன் தன் பாச மகன் அபிமன்யுவின் மரணத்தைத் தாங்கிக் கொள்ள முடியாமல் பலவாறாகக் கூறி புலம்புகிறான். அர்ச்சுனனைத் தேற்ற கண்ண பெருமானாலும் முடியவில்லை. அவர் அதற்காக முயலவும்

இல்லை. காரணம் அபிமன்யு அவருக்கு மருமகன் மட்டு மல்ல, அவருடைய அன்பிற் சிறந்த சீடனும் ஆவான். தருமர், வீமன், நகுலன், சகாதேவர்களும் அர்ச்சுனனைத் தேற்றிட இயலாமல் அழுது அழுது கண்ணீர் வற்றி மேலும் வாய் திறந்து அழ முடியாமல் ஊமைகளாகத் துடிக் கிறார்கள்.

இந்நிலையில் அர்ச்சுனனை யார் தேற்றுவது? தருமரை யார் தேற்றுவது? புத்திர சோகத்தால் பாண்டவர்கள் ஐவருமே மாண்டுபட பாரதப் போர் இத்துடனே நிறைவு பெற்றுவிடுமோ? அபிமன்யுவைக் கொன்றதன் காரணமாகத் துரியோதனன் தன் ஆட்சி உரிமையை நிலை நிறுத்திக் கொண்டு விட்டானோ? என்று பலரும் எண்ணிப் பாண்டவர்களின் சோகத்தைப் பார்த்துக் கொண்டு இருக்கையில் எல்லாம் அறிந்த வேத வியாச முனிவர் பாண்டவர்களுக்கு ஆறுதல் கூற அங்கே தோன்றுகிறார். ''மாயைக்கு இடம் கொடுத்து மகன் மாண்டு விட்டான் என்று கலங்கித் துடிக்கக் கூடாது. தருமத்தைக் காக்க அபிமன்யு போரில் ஈடுபட்டு, வீர சொர்க்கத்தைப் பரிசாகப் பெற்று விட்டான். அவனைத் தொடர்ந்து தருமத்தைக் காக்க நீங்களும் தொடர்ந்து போரிடும் கடமையைச் செய்யுங்கள்'' என்று வியாசர் அறிவுரை கூறுகிறார். ஆனாலும் அவருடைய அறிவுரை யாரையும் தேற்றியதாகத் தெரியவில்லை.

அர்ச்சுனன் தம் தம்பி நகுலனை அழைத்து ''நான் இனி உயிர் வாழப்போவதில்லை! அக்கினிப் பிரவேசம் செய்யப் போகிறேன். எனக்கு நெருப்பமைத்துக் கொடு'' என்று கூற நகுலனும் ''அண்ணா!'' என்று அரற்றி மேலேதும் பேசமுடியாமல் அர்ச்சுனனின் சொல்லையும் மறுக்க முடியாமல் விறகுகளை அடுக்கி எரிமூட்டுகின்றான். கண்ணபெருமான் ''பொறு அர்ச்சுனா'' என்று சொல்லி யும் கேளாமல், தருமர் ''வேண்டாம் அர்ச்சுனா!'' என்று தடுத்தும் கேளாமல் நகுலன் மூட்டிய நெருப்பிலே விழுந்து

உயிர்விடப் போகிறான். அப்பொழுது கண்ணபெருமா அழைக்க தேவேந்திரன், முன் கொண்ட முனி வடிவமே தாங்கியவனாய் அங்கே விரைந்து வ அர்ச்சுனனைத் தடுக்கின்றான். "நில்லப்பா நில்! ந சாக முற்பட்டபோது மட்டும் தத்துவங்களை உபதேசித் சாகாமல் தடுத்தாய்! என்மகன் இறந்தால் நான் உட சாகமாட்டேன் என்று சத்தியமும் செய்து கொடுத்தா இதற்குள்ளாகவே உன் சத்தியத்தை மறந்துவிட்டாயே என்று கூறித் தடுக்க, அதன் பின்பே அர்ச்சுனன் சத்தியத்தை நினைவு கூர்ந்தவனாய் நெருப்பில் மூழ் சாகும் தன் முயற்சியைக் கைவிடுகிறான்.

இப்பொழுது அர்ச்சுனனின் கோபம், தருமர் மே வீமன் மேலும் பாய்கிறது. "அபிமன்யுவைச் சக் வியூகத்தைப் பிளந்து செல்லுமாறு ஏன் தூண்டினீர்க அபிமன்யுவை நீங்களே கொன்று விட்டீர்களே!" என அர்ச்சுனன் கூற அவனுக்குப் பதில் ஒன்றும் கூற முடியா விழிக்கிறார்கள் வீமனும், தருமரும். "என் ம நாளை அபிமன்யுவைக் கொன்ற சிந்து தேசத்தர சயத்திரதனையப் போரில் சூரிய அஸ்த மனத்திற்கு மு நான் கொல்லுவேன் அப்படிக் கொல்லாவிட்டால் ந நெருப்பிலே மூழ்கி மாண்டுபடுவேன். இது சத்திய என்று வீர சபதம் செய்கிறான் அர்ச்சுனன்.

> **"சிந்துபதியாகிய செயத்திரதனைத் தேர்**
> **உந்து அமரில் நாளை உருமேறெண உடற்றா**
> **அந்திபடு அவ்வளவில் ஆவி கவரேனேல்**
> **வெந்தழலில் வீழ்வன் இது வேதமொழி என்றான்"**

(பதின்மூன்றாம் போர் சருக்கம்-1

பதினான்காம் நாள் போரில் சூரிய அஸ்தமனத்தி முன்னால் சயத்திரதனைத்தான் கொல் விட்டால் பொய்ச்சாட்சி சொல்லுவார். தந்தை செ மறுத்தோர் ஆகியோர் அடையக்கூடிய கொடியநரகத்தை

தானும் அடைவேன் என்பதாக கொடிய சபதத்தைச் செய்கிறான் அர்ச்சுனன்.

கண்ணபெருமான் பெருமுயற்சி செய்து, இந்திர முனிவனைக் கொண்டு நாடகமாடி அர்ச்சுனனிடம் சத்தியம் வாங்கி, பதின்மூன்றாம் நாள் மாலை அர்ச்சுனன் அக்கினியில் வீழ்ந்து சாவதைத் தடுத்தார். ஆனால் அர்ச்சுனனோ சயத்திரதனைத் தான் மறுநாள் கொல்லாவிட்டால் அக்கினியில் தான் மூழ்கி சாவதை யாரும் தடுத்திட முடியாது என்பதாக கொடிய சபதமே செய்துவிட்டான். அர்ச்சுனனின் இந்த சபதத்தைக் கேட்டவுடன் தருமர் மனம் கலங்கித் துடிக்கிறார். ''கண்ணா! சயத்திரதனை ஒரே ஒருநாள் காப்பது என்பது துரியோதனனுக்கு ஆகாத செயல் அல்லவே! சயத்திர தனுக்கு அதிகமான காவலை ஏற்படுத்தலாம். அப்படி இல்லாவிட்டால் சயத்திரதனை யுத்த க்ளத்திற்கே வராமல் எங்கேனும் மறைத்தும் விடலாம். அப்படி செய்துவிட்டால் அர்ச்சுனன் அக்கினியில் மூழ்கி மடிவது நிச்சயம் நடந்தே விடும். அவன் மாண்டபிறகு எங்களுக்கு மட்டும் என்ன வாழ்வு? நாங்களும் அதே அக்கினியில் மூழ்கி மாண்டு போகிறோம்'' என்றுகூற கண்ணபெருமான்

**''இந்திரன் காக்கினும் ஈசன் காக்கினும்**
**சிந்துவின் தலைவனைத் தேவர் காக்கினும்**
**கந்தனிற் சிறந்தநின் கனிட்டன் நாளை**
**மைந்துறப் பொருதுஅவன் மகுடம் கொள்ளுமே,''**

(பதின்மூன்றாம் போர்ச்சருக்கம்-189)

என்று கூறித் தருமரைத் தேற்றுகிறார். முருகனை விடவும், ஆற்றல்மிக்க அர்ச்சுனன் எப்படியும் சயத்திரதனைப் பதினான்காம் நாள் போரில் கொன்று விடுவான் என்று அவ்வளவு நிச்சயமாகக் கூறுகிறார் கண்ணபெருமான்.

''சயத்திரதனைக் கொல்வது உண்மையில் எளிதா அல்லது கண்ணபெருமான் தன்னைத் தேற்றுவதற்கா இப்படி ஆறுதல் கூறுகிறாரா?'' என்றே புரியாமல் இ பொழுது மனம் சஞ்சலப்படுகிறார் தருமர். துரியே தனனின் வஞ்சகங்களைத் தெரிந்து வைத்திருக்கின், நமக்கும் கூட பதினான்காம் நாள் மாலைக்குள் சயத்தி தனைக் கொல்வது என்பது நடக்கக் கூடிய காரியமாக தோன்றவில்லை. மேலும் சயத்திரதனின் தலையை கொய்து தரையில் வீழ்த்துபவர் எவரோ, அவருடை தலையும் கூட வெடித்துச் சிதறிவிட வேண்டும் என்பதாக சயத்திரதனின் தந்தை வாங்கியிருக்கும் ஒரு வரமும் கூ இருக்கிறது! ஆகவே சயத்திரதனின் தலையைக் கொய் தரையில் வீழ்த்தினால் அர்ச்சுனனின் தலையும் கூட சித விடும்.

ஆகவே பதினான்காம் நாள் போரில் சயத்திரதனை கொன்றாலும் அர்ச்சுனனுக்கு ஆபத்து இருக்கிறது. கொ லாவிட்டாலும் அர்ச்சுனனே செய்திருக்கும் சபதப்ப அவன் அக்கினியில் மூழ்கி மாண்டுவிடவேண்டும். இப்ப பட்ட இக்கட்டான நிலையில் பார்த்தசாரதியாகிய கண் பெருமான், சயத்திரதன் பதினான்காம் நாள் போரி நிச்சயம் மடிந்தே தீருவான் என்று தருமரிடம் அவ்வ உறுதியாகக் கூறுகிறார். ஆகவே இன்னும் இருபத்திநா மணிநேரத்தில் சயத்திரதன் சாவானா? அவனைச் சாக தநும், அர்ச்சுனனும் உடன் தலைவெடித்துச் சாவானா சயத்திரதனைச் சாகடிக்க முடியாமல் அர்ச்சுனன் அக்கி பிரவேசம் புரிவானா? இவற்றில் எது நடக்கும் என் நமக்கு நிச்சயம் தெரியத்தான் போகிறது. பொறுத்திரு பார்த்து விடுவோம்...

# 20

பதினான்காம் நாள் போரின் மாலை சூரிய அஸ்தமனத்திற்கு முன் தன் மகன் அபிமன்யுவைக் கொன்ற சயத்திரதனைத் தானும் கொல்வதாக அர்ச்சுனன் கூறி, அவ்வாறு கொல்லாவிட்டால் எரியுள் மூழ்கி உயிர்விடப் போவதாக வீரசபதம் செய்ததைச் சென்றஅத்தியாயத்தில் கண்டோம். சயத்திரதனைக் கொல்வது சாத்தியமா என்று தருமர் கலங்கிய போது 'சாத்தியமே' என்று கண்ணபெருமான் உறுதி கூறியதையும் கூடக் கண்டோம்.

சாத்தியம் ஆகாதவற்றையும் சாத்தியமாக்குவது தானே பார்த்தசாரதியின் சூழ்ச்சித்திறன். 'அர்ச்சுனா! புறப்படு, கயிலைநாதனைக் கண்டு விடிவதற்குள் திரும்பி வருவோம்'' என்று கண்ணபெருமான் கூற, அர்ச்சுனனும் கண்ணபெருமானுடன் கயிலைக்குப் புறப்படுகின்றான். அபிமன்யுவின் மரணத்தால் மனம் கலங்கித் தவிப்பவர்கள் மத்தியில் இருந்தால் அர்ச்சுனனின் மனம் மேலும் கலங்கி விடக் கூடும் என்று கண்ணபெருமான் நினைத்தாரா? அல்லது தம் பிரிய மருமகனைக் கொல்வதற்குச் சயத்திரதனுக்குக் கதாயுதம் நல்கிய கயிலைநாதனின் கருணையற்ற தன்மையைச் சுட்டிவர நினைத்தாரா? அல்லது சிவபெருமானின் திருவருளைப் பெற்றால் அன்றிப் பதினான்காம் நாள் போரின் மாலைக்குள் சயத்திரதனைக் கொல்லும் அர்ச்சுனனின் சபதம் நிறைவேறுதல் சாத்தியம் இல்லை; ஆகவே சிவபெருமானைக் கண்டு அவருடைய திருவருளைப் பெற்று வரவேண்டும் என்று கண்ணபெருமான் நினைத்தாரா? ஏதொன்றும் தெரியவில்லை. அர்ச்சுனனைக் கயிலைக்குத் தம்முடன் புறப்படுமாறு கண்ணபெருமான்

கூறுகிறார். அர்ச்சுனனும் பதில் ஒன்றும் பேசாமல் அவருடன் புறப்பட்டுச் செல்கின்றான்.

**''வெயில் எழுவதன் முன் இவ்விசயன் தன்னொடும்**
**கயிலையம் பொருப்பனைக் கண்டு மீளவும்**
**துயில் உணர்த்திடும்படித் தோன்றுவோம் எனா**
**அயிலணி ஆழியான் அவனொடு ஏகினான்''**

(பதின்மூன்றாம் போர்ச்சருக்கம்)

அபிமன்யுவை இழந்த துயரம், காலை முதல் மாலை வரை தொடர்ந்து போர் செய்து திரிகர்த்த இராசர்களை வென்ற களைப்பு, பசி—இத்தனையும் ஒருசேர அர்ச்சுனன் மிகவும் சோர்வுற்றிருப்பதைக் காணுகின்றார் கண்ணபெருமான். தம் அழகிய திருக்கரங்களால் அர்ச்சுனனை அணைத்து அவன் தளர்ச்சியை மாற்றுகின்றார். 'அர்ச்சுனா காலையிலிருந்து ஒன்றும் நீ சாப்பிடவில்லையே! இதோ இந்தக் கானகத்தில் மாங்கனி, வாழைக்கனி, பலவின் கனி என முக்கனிகளும் உள்ளன. அருவி நீரும் கூட உள்ளது. இவற்றால் உன் களைப்பை ஆற்றிக் கொள்.'' என்று கண்ணபெருமான் அர்ச்சுனனை வேண்டுகிறார். காலையிலும் மாலையிலும் சிவபூசை புரிந்தே அர்ச்சுனன் உணவு உட்கொள்வது வழக்கம். ஆதலால், 'இன்னும் நான் சிவ பூசை புரிந்திலனே' என்று சொல்கின்றான் அர்ச்சுனன்.

கண்ணன் திருமாலின் அவதாரம் என்பதை மிகநன்றாக அறிந்தவனே அர்ச்சுனன். திருமாலைத் தோழனாகப் பெற்றிருந்தும், சிவபெருமானையே தன் வழிபடு கடவுளாகக் கொண்டுள்ளான் அர்ச்சுனன். அர்ச்சுனன் சிவ பத்தனாக இருப்பதைக் கண்ணபெருமானும் மறுக்கவில்லை, வெறுக்கவுமில்லை என்பதே இங்கு நாம் அறிந்து மகிழத் தக்கது. 'சிவபூசை இன்னும் புரிந்திலனே' என்று அர்ச்சுனன் கூற, கண்ணபெருமான்

''மருவறு கானக மலரினால் எமைப்
பொருவரு பூசனை புரிதி ஐயநீ
இருவரும் ஒருவரே என்பது இன்றுபோய்
அருவரை அவனடி அடைந்து காண்டியே''

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம்: 195)

என்று கூறுகின்றார். 'அர்ச்சுனா! காட்டு மலர்களைப் பறித்து வந்து, என்னையே சிவபெருமானாகப் பாவித்து, உன் பூசையைச் செய். யான் வேறு, சிவம் வேறு அல்ல என்பதைக் கயிலையை அடைந்த பிறகு நீயே உன் கண்ணாரக் காண்பாய்'' என்று கூறுகிறார் கண்ணபெருமான்.

''அரியும் சிவனும் ஒன்றே' என்ற உயர்ந்த உண்மையை அர்ச்சுனனுக்கு உணர்த்துவதோடு உலக மக்களாகிய நமக்கெல்லாம்கூட இன்றைய ஒரு நிகழ்ச்சியின் மூலம் உணர்த்த விழைகிறார் கண்ணபெருமான். அர்ச்சுனனும் கண்ணபெருமான் கூறியவாறே காட்டுமலர்களைப் பறித்து வந்து, கண்ணபெருமானையே சிவபெருமானாகப் பாவித்து அவருடைய திருவடிகளைத் தீர்த்தத்தால் நீராட்டிக் கனிகளைப் படைத்து, மலர்களைச் சாற்றி, சிவாகமங்களில் கூறப்பட்டிருக்கும் சிவநாமங்களைக் கூறிச் செபித்து, சிவபூசையை முறையாக ஆற்றி வழிபடுகின்றான். பூசையை முடித்த பிறகு இறைவனின் தாள்மலர் தீர்த்தத்தைப் பருகியும் பூசையில் படைக்கப்பட்ட கனிகளைப் புசித்தும் தன் பசியை ஆற்றிக் கொள்கிறான் அர்ச்சுனன்.

கண்ணபெருமான் நினைத்திட கருடன் உடன் அங்கு வந்து தோன்றிக் கண்ணபெருமானை வணங்கி, அவரைத் தன் தோளிலும் அர்ச்சுனனைக் கரத்திலும் ஏந்திக் கொண்டு, கயிலையை நோக்கி விரைந்து பறந்து செல்கின்றான். சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சம்கிருதம், துரோணம், காளாமுகி, நீலவர்ணம் ஆகிய ஏழு மேகங்களையும் தாண்டிக் கருடன் விரைந்து பறந்து

செல்கின்றான். கருடன் தன்னுடைய இரு சிறகுகளையும் அசைத்துப் பறந்திடும் போது பேரோசை உண்டாகின்றது. அந்த ஓசையைக் கேட்டுச் சிவபெருமானின் திருமேனியில் ஆபரணங்களாகத் திகழும் பாம்புகள் எல்லாம் கூட அச்சத்தால் புரண்டு வீழ்கின்றன. கருடன் விரைந்து பறந்து செல்வதைக் காணும் தேவர்களும், தேவ மாதர்களும், "இந்திரன் தன் வச்சிராயுதம் கொண்டு வெட்டிய போது, இந்தப் பறக்கும் மலை மட்டும் தப்பிப் பிழைத்தது போலும்" எனக் கருடனை ஒரு பறக்கும் மலையாகவே எண்ணி மயங்கி நிற்கிறார்கள்.

இவ்வாறு மிக வேகமாகப் பறந்து, மிக விரைவாகவே கயிலையை அடைந்து விடுகிறான் கருடன். வெள்ளி மலையாகிய கயிலை மலை, முழுமதியைப் போல தண்ணிய ஒளி பொழிந்து கொண்டிருக்க அரவங்களின் மாணிக்க ஒளியும் மிகுதியாக விளங்க, அந்த இரவு நேரத்திலும் பகலைப் போல் விளங்குகின்றது பரமன் வீற்றிருக்கும் திருக்கயிலாய மலை. நாரத முனிவர் முதலானோர் மீட்டிடும் யாழின் இன்னிசை காற்றிலே மிதந்து வந்து, கிருஷ்ணார்ச்சுனருடைய பயணக் களைப்பையும் மாற்றி உற்சாகத்தை உண்டாக்குகின்றது. கயிலை மலையின் இயல்பான குளிர்ச்சி, சிவபெருமான் அணிந்து மகிழும் பிறை நிலவின் குளிர்ச்சி, அவர்தம் திருமுடியை அலங்கரிக்கும் கங்கையின் குளிர்ச்சி, கொன்றை மாலையின் நறுமணம் – இவை அனைத்தையும் இணைத்து வீசுகின்ற கயிலைமலைக் காற்றின் சுகத்தை அனுபவித்து மகிழ்கின்றனர் கண்ண பெருமானும் அர்ச்சுனனும்.

கயிலைக்குக் காவலர் ஆன நந்தியெம்பெருமான் கண்ண பெருமானுடைய வருகையைக் கயிலை நாதனுக்குத் தெரிவிக்கிறார். சிவபெருமானும், வாயிலுக்கே விரைந்து வந்து கண்ணபெருமானைத் தழுவி மகிழ்ந்து, தம் இருப்பிடத்திற்கு அழைத்துச் செல்கிறார். கண்ணபெருமானைத் தக்க ஆசனத்தில் இருக்கச் செய்து, அவருடைய அவதாரப்

பெருமைகளை எல்லாம் அவரே கூறக் கேட்டு மகிழ்கிறார் சிவபெருமான்.

அதற்குப் பிறகு நந்திதேவர் சிவபெருமானின் இசைவு பெற்று அர்ச்சுனனையும் உள்ளே அனுப்ப, அர்ச்சுனனும் சிவபெருமானைக் கண்டு மகிழ்ந்து, பணிந்து வணங்குகின்றான். கயிலைக்கு வரும் வழியில் அர்ச்சுனன் எந்தக் காட்டு மலர்களைச் சாற்றி கண்ணபெருமானை வணங்கி வழிபட்டிருந்தானோ அதே காட்டு மலர்கள் சிவபெருமானின் திருமேனியை இப்பொழுதும் அலங்கரித்திருக்கக் கண்டு 'அரியும் சிவனும் ஒன்றே' என்ற உண்மையைத் தெளிந்து பெருமகிழ்ச்சி அடைகின்றான் அர்ச்சுனன்.

**''கண்ணன் மேலணி மலர் அனைத்துங் காய்கனல்<br>
வண்ணன் மேற் காண்டலும் மனங் களிப்புறா<br>
எண்ணின் மேல் இரண்டென இலது என்று அவ்விறல்<br>
அண்ணல் மேனியும் புளகரும்பினான் அரோ''**

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம்)

அர்ச்சுனன் கண்ணபெருமானுடன் வந்துற்ற காரணத்தினால் ஒரு சில நாழிகை நேரத்திற்குள்ளேயே கயிலையை அடையவும், எவ்வித சிரமமும் இல்லாமல் சிவபெருமானைத் தரிசிக்கவும் இம்முறை பேறு பெற்றான். முன்னொரு முறை பாசுபதாஸ்திரத்தின் பொருட்டு அர்ச்சுனன் தனியே கயிலையை நாடி வந்தபொழுது சிவபெருமானைக் காண்பதற்கு எவ்வளவு கடினமான முயற்சிகளை எல்லாம் மேற்கொள்ள வேண்டி இருந்தது! அவற்றை எல்லாம் எண்ணிப் பார்த்தும் சிவபெருமானின் திருவருள் கருணையை வியக்கின்றான் அர்ச்சுனன்.

துரியோதனனால் பாண்டவர்கள் வனத்திற்கு துரத்தப்பட்ட காலம் அது. காமிய வனத்தில் பாண்டவர்கள் வந்து தங்கிப் பன்னிரண்டு ஆண்டுக்கால வனவாசத்தைத் தொடங்கி இருந்தார்கள், அப்போது வியாச முனிவர்

காமிய வனத்திற்கு வந்தார். "அர்ச்சுனன் சிவபெருமானை நோக்கி தவம் புரிந்து பாசுபதாஸ்திரத்தைப் பெற்று வரட்டும்" என்று அறிவுரை கூறினார் வியாசர். அவருடைய அறிவுரையின்படியே பாசுபதாஸ்திரம் பெறுவதற்காகக் கயிலையை நோக்கி நடந்தான் அர்ச்சுனன். சிங்கம், புலி, யானைகள் நிறைந்திருக்கும் கொடிய வனங்களை எல்லாம் கடந்து, எட்டுதற்கு அரிய கயிலையை அர்ச்சுனன் எட்டினான். அங்குச் சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்து கொண்டிருந்த எண்ணற்ற முனிவர்களைக் கண்டு மகிழ்ந்து தானும் ஒரு முனிவனாகத் தவம் செய்ய ஆரம்பித்தான் அர்ச்சுனன். ஒரு காலை நிலத்தில் ஊன்றி, ஊன்றிய அக்காலின் தொடையின் மேல் மற்றொரு காலை வைத்து, விண்ணில் செல்கின்ற சூரியனைக் கைகளாற் பிடிக்க முயல்பவனைப் போல கைகளை மேலே உயர்த்தி, சிவபெருமானைத் தவிர மற்றொன்றையும் நெஞ்சில் நினையாமல் மாபெரும் தவத்தை மேற்கொண்டான் அர்ச்சுனன்.

யானைக் கூட்டங்கள் வந்தன. சுமைதாங்கிக் கல் ஒன்று நின்றது என்பதாக நினைத்து அர்ச்சுனனை அவைகள் உராய்ந்து சென்றன. பாம்புக் கூட்டங்கள் வந்தன. கரையான் எடுத்த புற்றெனக் கருதி, அர்ச்சுனன் மேனியின் மீது அவை ஊர்ந்தன. அர்ச்சுனன் உடலை மரமென்று கருதிய பூங்கொடிகள் பலவும் அவன் மேனியில் படர்ந்தன. வெயிலென்றும் பாராமல், பனியென்றும் பாராமல் அர்ச்சுனன் சிவநாமத்தையே உச்சரித்துப் பன்னெடுங்காலம் கடுமையாக தவம் புரிந்தான். பகீரதன் முதலான அசுரர்களின் தவத்தை வென்றது அர்ச்சுனனின் தவம். இரணியாசுரன் முதலான அரக்கனின் தவத்தையும் விஞ்சியது அர்ச்சுனனின் தவம். ஈரேழு புவனங்களிலும் அர்ச்சுனனுக்கு நிகரான தவசிகள் இல்லை என்று கண்டோர் எல்லாம் வியக்கச் கடுமையான தவம் புரிந்தான் அர்ச்சுனன்.

இத்தகைய அர்ச்சுனனின் கடுமையான தவத்தைச் சோதித்திட விழைந்தான் இந்திரன். அவன் ஊர்வசி, அரம்பை, மேனகை, திலோத்தமை போன்ற தேவ மாதர்களை எல்லாம் அர்ச்சுனனின் தவ உறுதியைக் காண அனுப்பி வைத்தான். தேவ மாதர்களும் மன்மதனைத் துணைக்கு அழைத்துக் கொண்டு வந்து அர்ச்சுனனின் தவத்தைக் கலைத்திட முயன்றார்கள். மன்மதன் கரும்பு வில்லை வளைத்து அர்ச்சுனன் மீது அசோகமலர், தாமரை மலர், மாமலர், மல்லிகை மலர், நீலோற்பலமலர் என ஐந்து மலர்களையும் எய்து பார்த்தான். தேவமாதர்களும் தம் சிலம்புகள் முழங்க ஆடிப் பார்த்தார்கள், மேகலைகள் குலுங்க ஓடியும் பார்த்தார்கள். கைவளையல்கள் கறங்கப் பந்தடித்தும் பார்த்தார்கள். பூஞ்சுனை ஒன்றை உண்டாக்கி அதில் ஒலிபல உண்டாக்கி ஆரவாரத்துடன் நீராடி அர்ச்சுனனின் தவத்தைக் கலைக்க முயன்றார்கள். முடிவில் மன்மதனும், தேவ மங்கையருமே தம் முயற்சியில் தோற்றார்கள்.

அர்ச்சுனனை அவனுடைய கடுமையான தவத்திலிருந்து இம்மி கூட அசைக்க முடியாத அவர்கள், இந்திரனிடம் போய் தம் தோல்வியை ஒப்புக் கொள்ள இந்திரனே அர்ச்சுனனின் தவத்தைச் சோதித்திட வந்தான். ''அர்ச்சுனா! நீ எவ்வளவுதான் கடுமையாகத் தவம் செய்தாலும், சிவபெருமானின் காட்சி கிடைப்பது கடினம், தவத்தைக் கைவிட்டுத் திரும்பிப் போ'' என்று கூறி, அர்ச்சுனனின் மன உறுதியைக் குலைக்க முயன்றான் இந்திரன். ஆனால் அர்ச்சுனனோ ''சிவனைக் காணும் வரையிலும் தவம் செய்வேன். இந்த உடலை விட்டு உயிர் போகும் வரையிலும் தவம் செய்வேன்'' என்று உறுதி படக் கூறி பஞ்சாக்கினியின் நடுவில் நின்று மேலும் மேலும் தவத்தைக் கடுமையாகச் செய்தான்.

இத்தகைய அர்ச்சுனனின் தவத்தை மெச்சியே அர்ச்சுனனுக்கு அருள் வழங்க முடிவு செய்தார் சிவபெரு

மான். அப்பொழுது மூகன் என்ற அசுரன் ஒருவன், பன்றி வடிவம் பூண்டு அர்ச்சுனனைக் கொல்வதற்காக விரைந்து வந்து கொண்டிருந்தான். அந்த மூகாசுரன், துரியோ தனனுக்கு நண்பன். துரியோதனன் மூகனை அழைத்து அவனுக்கு விருந்துபச்சாரம் செய்து ''நண்பா! எங்களைக் கொல்வதற்காக அர்ச்சுனன் பாசுபதாஸ்திரம் பெறும் பொருட்டுச் சிவபெருமானை நோக்கித் தவம் செய்து கொண்டு இருக்கிறான். அவனுடைய தவம் நிறைவேறி விட்டால் நாங்கள் அழிந்து விடுவோம். நீதான் அவனைப் பன்றி வடிவில் சென்று கொல்ல வேண்டும்'' என்று வேண்டினான்.

மூகாசுரனும், துரியோதனனுக்கு இசைந்து, பன்றி வடிவம் கொண்டு, அர்ச்சுனனைக் கொல்வதற்கு விரைந்து வந்தான். அம்மூகனிடமிருந்து அர்ச்சுனனைக் காப்பதற்குக் கருணை கொண்டார் சிவபெருமான். அர்ச்சுனன் மேல் கொண்ட கருணையால் சிவபெருமான், தம்முடைய கண நாதர்களை வேடுவர்களாக்கி, உமாதேவியாரையும் வேட்டுவக் கோலம் பூணச் செய்து தாமும் வேடுவராகக் கோலம் பூண்டார். தம்முடைய சிவந்த மேனியை அருச்சுன னுக்கு அருளும் பொருட்டுக் கருமையாக்கிக் கொண்ட சிவபெருமான், நீலரத்தினங்கள் அலங்கரித்திருக்க வேண்டிய தம் திருக்கழுத்தில், பலகறைகளால் ஆகிய மாலையை அணிந்து கொண்டார். இரத்தினக் குண்டலங்கள் அலங்கரித் திருக்க வேண்டிய தம் திருக்காதுகளில் காட்டு மலர்களைச் சூடிக் கொண்டார்.

அருமறைகளும் அறியவொண்ணாத தம் திருவடிகளில் செருப்புகளையும், அரையில் புலித்தோலையும் அணிந்து வேடுவக் கோலம் பூண்ட சிவபெருமான், மூகாசுரனாகிய பன்றியைத் தேடி விரைந்து வந்தார். முன்னொரு காலத் தில் திருமால் பன்றி வடிவம் பூண்டு தம் திருவடிகளைக் காண முயன்ற போது, அவருக்கு அருள் செய்யாத சிவபெருமான், தம் பக்தன் அர்ச்சுனனைக் காப்பதற்காகத்

தாமே வேடுவக் கோலம் தாங்கி, ஒரு பன்றியைத் தே
வந்தார் என்றால் அவர்தம் அருட் கருணை
என்னென்பது!

பன்றி வடிவம் பூண்ட மூகாசுரன், அர்ச்சுனனை
நெருங்கி அவனைக் கொல்லப் பாய்ந்தான். அப்போ
அவ்விடத்திற்கு வேடுவர் வடிவம் பூண்டு விரைந்து வ
சேர்ந்த சிவபெருமான் மூகனை நோக்கி ஓர் அம்பை
செலுத்தினார். மூகனின் தலையில் பின்பிறத்தில் இரு
முன்புறமாக பாய்ந்தது சிவபெருமான் செலுத்திய அம்
அதே நேரத்தில் அர்ச்சுனனும் தன் தவம் கலை
தன்னைக் கொல்லப் பாய்ந்த பன்றியைக் கண்டு,
அம்பினை ஏவ, மூகனின் தலையில் முன்புறம் இருந்து பி
புறமாகப் பாய்ந்தது அவ்வம்பு. சிவபெருமான் விட்
அம்பும், அர்ச்சுனன் விட்ட அம்பும் ஏக நேரத்தில் ஊடுரு
மூகாசுரனும் பன்றி வடிவிலேயே மடிந்து விழுந்தான்.

மூகனை இவ்வாறு வதைத்து அர்ச்சுனனை
காத்தருளிய சிவபெருமான், தாம் கொண்ட வேடுவ வடி
திலேயே அர்ச்சுனனிடத்திலே வம்பு பேசி, அவனுக்கு அரு
புரியவும் விழைந்தார். 'யாரய்யா நீர்! தவக்கோலம் பூண்
இந்த அவக்காரியத்தைச் செய்திடலாமா? உயிர்களை
வதைப்பதுவோ தவசிகளுக்கு அழகு?'' என்று வேடு
தலைவர் வினவினார். அர்ச்சுனன், வேடுவர் தலைவனை
பார்த்து ''நான் தான் அர்ச்சுனன். சிவபெருமானை
நோக்கித் தவம் புரியும் என்னைக் கொல்ல வந்த
இப்பன்றி. ஆகவே நானும் இதன்மேல் அம்பெய்தேன்
என்று கூறினான். அர்ச்சுனன் மேலும் தன் பேச்சை
நீட்டித்து ''இந்தப் பன்றி இறைச்சியில் நான் பா
கேட்பேனோ என்று பயப்படாதே! நான் காற்றை
ஒளியையுமே உட்கொண்டு தவம் செய்து வருவதால் இந்
பன்றியை நீயே எடுத்துச் செல். மேலும் என்னோடு வ
பேசினால் உனக்கும் உன் கூட்டத்தார்க்கும் இந்தப்பன்றிக்

நேர்ந்த கதிதான் நேரிடும், தெரிந்து கொள்' என்று எச்சரித்தான்.

வேடுவர் தலைவர் ஆகிய சிவபெருமானிடமா செல்லும் அர்ச்சுனனின் வீரம். ''ஓஓ! நீதான் நான் தேடிக் கொண்டிருக்கும் அர்ச்சுனனா! ஏகலைவன் என்ற எங்கள் குலத்து வேடுவன் ஒருவன், நினக்கு நிகரான வில்லாற்றல் பெற்றிருந்தான் என்பதனால், துரோணரைக் கொண்டு அவன் வலக்கைப் பெருவிரலைக் குருதட்சிணையாகக் கேட்டுப் பெற்றுக் கொள்ளச் செய்தவன் நீதானே! காண்டவ வனத்தில் வாழ்ந்திருந்த எங்கள் வேடுவ மக்கள் அத்தனைப் பேரையும் அக்கினிக்குப் பலி ஊட்டிய கல்மனம் கொண்டவனும் நீதானே! நீயா என்னை எச்சரிக்கிறாய்? வா வா! வந்து என்னோடு போர் செய், நம்மில் யார் வெல்கிறார்கள் என்று பார்த்து விடுவோம்'' என்று சிவபெருமானும் அர்ச்சுனனைப் போருக்கு அழைத்தார்.

வேடுவர் தலைவருக்கும் அர்ச்சுனனுக்கும் உடன் போர் மூண்டது. தம்முடன் வந்த வேடுவ கணங்களை எல்லாம் தூர நின்று வேடிக்கை பார்க்கக் கூறிவிட்டு, சிவபெருமான் அர்ச்சுனனுடன் விற்போர் புரிந்தார். அர்ச்சுனனே தன் காண்டீபத்தை வளைத்து, வேடுவர் தலைவர் மீது முதலில் ஓர் அம்பை எய்தான். வேடுவர் தலைவர் அர்ச்சுனன் கணையைத் தன்னொரு கணையால் விலக்கி மேலும் இரண்டு கணைகளை ஏவி, அர்ச்சுனனின் மார்பையும் தோளையும் காயப்படுத்தினார். அதனால் கோபம் கொண்ட அர்ச்சுனனும், தானும் மூன்று கணைகளை வேடுவர் தலைவரின் தலை, மார்பு, தோள் ஆகியவற்றைக் குறி வைத்து ஏவினான். ஆனால் அம்மூன்று கணைகளுமே இரண்டிரண்டாக அறுபட்டு பயனின்றிப் போகுமாறு வேடுவர் தலைவர் மாற்றுக் கணைகளை ஏவிச் சிதைத்து விட்டார்.

தன்னுடைய காண்டீபம் எதிர் நிற்கும் கானக வேடுவனுக்குத் தோற்பதா என்று கொதித்தெழுந்த அர்ச்சுனன்

ஆவேசத்துடன் ஓர் அம்பை மீண்டும் செலுத்திட அந்த அம்பு, வேடுவர் தலைவரான சிவபெருமானின் தலையைப் போய் வேகமாகத் தாக்கியது. அர்ச்சுனனின் அந்த அம்பால் சிவபெருமானின் திருமுடியில் இருந்த கங்கை நீரும் சிதற, பிறை நிலவும் அதன் களங்கமாகிய மானும் கூட வருந்தின. சிவபெருமானின் தலையைத் தாக்கிய அர்ச்சுனனின் அம்பினைக் கண்டு, பார்வதி தேவியாரே மனம் பதை பதைத்துப் பயந்து போனார் என்றால், அர்ச்சுனனின் வீரத்தை என்னவென்பது? அர்ச்சுனனின் வீரத்தைத் தாமும் மகிழ்ந்து மனதிற்குள் கொண்டாடினார் சிவபெருமான். மேலும் அர்ச்சுனனுடன் போர் செய்யும் ஆவல் அதிகமாகவே தம்முடைய வில்லை வளைத்து அம்பு ஒன்றை ஏவி, அர்ச்சுனனுடைய காண்டீபத்தின் நாணை அறுத்துத் தள்ளிவிட்டார் சிவபெருமான்.

தன்னுடைய காண்டீபத்தின் நாணையே வேடுவர் தலைவர் அறுந்து போகச் செய்ததைக் கண்ட அர்ச்சுனனின் கோபம் அதிகமானது. அவன் வேடுவர் தலைவரை நோக்கி வேகமாக ஓடி வந்து தனது காண்டீபத்தின் தண்டத்தால் சிவபெருமானின் தலைமீது ஓங்கி அடித்தான். அர்ச்சுனன் அடித்த அந்த அபாரமான அடியைச் சிவபெருமான் தடுக்காமல் வாங்கிக் கொண்டார். அர்ச்சுனன் வில்லால் அடித்த அந்த ஒரு அடி சிவபெருமான் தலையில் மட்டுமா விழுந்தது? திருமாலின் தலைமேல் விழுந்தது. பிரமனின் தலைமேல் விழுந்தது. முப்பத்துமுக்கோடி தேவர்களின் தலைமேலும் விழுந்தது, பூலோகத்தில் வாழ்ந்திருந்த ஜீவ ராசிகள் அத்தனை மேலும் விழுந்தது. பாதாளத்தில் வாழ்ந்திருந்த நாகங்கள் அத்தனை மேலும் விழுந்தது. வேதமும், ஆகமங்களும் கூட அடிபட்டன. ஐம்பெரும் பூதங்களும், இரவு பகலாகிய காலங்களும் கூட பரமன் மேல் பட்ட அந்த அடியைத் தாமும் பட்டுக் கலங்கின. சிவபெருமானின் தலையில் அடித்த அர்ச்சுனனும் கூட அவ்வடியைத் தானும் பட்டான் என்றாலும் வேடுவர் தலைவரை

அப்பொழுதும் சிவபெருமானாக உணர்ந்து கொள்ள வில்லை அர்ச்சுனன்.

தம் பக்தனாகிய அர்ச்சுனன் தம்மை வில்லால் அடித்த தற்காகச் சிவபெருமான் மகிழ்ச்சி கொண்டாரே தவிர, மனம் வருந்திடவில்லை. வில்லால் அடித்தாலும், கல்லால் அடித்தாலும், காற் செருப்பு கொண்டு மிதித்தாலும் அன்பு கொண்ட பக்தர்களின், பக்தி கண்டு மனம் பூரிக்கின்ற பரமன் அல்லவா சிவபெருமான்! அர்ச்சுனனுடன் மேலும் விளையாட ஆர்வம் கொண்ட சிவபெருமான், தாமும் தம் வில்லைத் தூர வீசி 'அர்ச்சுனா வா! அருகே வா! மல்யுத்தம் செய்வோம் வா' என்று அழைத்தார். அர்ச்சுன னுடன் மல்யுத்தம் செய்வதைப் போல் நடித்து, அவனை அன்போடு இறுக அணைத்துக் கொண்டார், அர்ச்சுனனோ சிவபெருமானை வேடுவர் தலைவராகவே நினைத்துத் தன் வலிமையெலாம் காட்டி சிவபெருமானின் திருமேனியில் பல குத்துக்களை விட்டான். அக்குத்துக்களை எல்லாம் கூட மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்ட சிவபெருமான் அர்ச்சுனனைத் தம் இரு கைகளால் தூக்கி அப்படியே வானத்தில் வீசி எறிந்தார்.

தேவலோகத்தைத் தொடுவதைப் போல் விண்ணில் பறந்து சென்ற அர்ச்சுனன், பூமியில் வந்து விழுவதற்கு முன் தன்னைச் சமாளித்துக் கொண்டு, பூமியில் வந்து விழாமல் தன் கால்களை வலுவாக ஊன்றி நின்றான். நின்ற அர்ச்சுனன் அதே வேகத்தில் வேடுவர் தலைவரையும் தூக்கி விண்ணில் விட்டெறிய ஆசை கொண்டு விரைந்து ஓடி வந்தான். அர்ச்சுனனின் தவஉறுதியைக் கண்டும், மன உறுதியைக் கண்டும், உடல் உறுதியை கண்டும் மனம் மிக மகிழ்ந்த சிவபெருமான், அர்ச்சுனனுடன் தாம் விளையாடிய விளையாட்டை அத்துடன் நிறுத்தி, தம் வேடுவ வேடத்தையும் நீக்கி அர்ச்சுனனுக்குச் சுய உருவில் காட்சி கொடுத்தார். அம்மையும் அவ்வாறே காட்சி கொடுத்தார்.

சிவபெருமானையும், உமா தேவியாரையும் கணங்கள் புடைசூழக் கண்ட அர்ச்சுனன் புளகாங்கிதம் உற்று, பரமானந்தம் கொண்டு, பாடியும் ஆடியும் மகிழ்ந்து, சிவபெருமானின் திருவடிகளைப் பணிந்து மிகப் போற்றி வணங்கினான்.

**"அன்புறு தருமனுக்கு அனுசன் ஆயினேன்**
**நண்பரம் பொருளுக்கு நண்பு மாயினேன்**
**பொன்புரை மேனியாய் போற்றினேன் உனை**
**என்பெருந் தவப்பயன் யார் பெற்றார்களே"**

(அர்ச்சுனன் தவநிலைச் சருக்கம்)

என்று கூறி மனம் பூரித்து நின்ற அர்ச்சுனனைச் சிவபெருமானும் உமாதேவியாரும்ஆசீர்வதித்தார்கள். "அர்ச்சுனா! துரியோதனன் ஏவலால் வந்துற்ற மூகனை வதைக்கும் பொருட்டேயாம் வேடுவக் கோலம் பூண்டு வந்தோம். உன்மேல் கொண்ட அன்பால் சற்று விளையாடி மகிழ்ந்தோம்" என்று கூறியருளிய சிவபெருமான் அர்ச்சுனன் வேண்டியவாறே பாசுபதாஸ்திரத்தையும் வழங்கி அர்ச்சுனனை அனுப்பி வைத்தார்.

இவ்வாறு அரிய தவம் செய்து, சிவபெருமானின் சோதனைகளுக்கெல்லாம் ஆட்பட்டு, பாசுபதாஸ்திரத்தை முன்பு வனவாசத்தின் போது பெற்று மகிழ்ந்த அர்ச்சுனன் தான், கண்ணபெருமானின் திருவருளால் இம்முறை மிகச் சுலபமாகக் கயிலையை அடையவும், கண்ணுதற்பெருமானைத் தரிசிக்கவும், பேறு பெற்றிருக்கிறான். தாம் பெற்றிருக்கும் பேற்றினுக்காக பெரிதும் மகிழ்கின்ற அர்ச்சுனன், முன்பு வேடுவக் கோலத்தில் சிவபெருமான் தனக்கு அருள்புரிந்த அந்த அற்புதத்தையும் நினைந்து போற்றி மகிழ்ந்து வாழ்த்துகின்றான்.

**''கையுறு சிலையுடன் கானவேடன் என்று**
**ஐயுற வந்துடன் அணுகி என்னுடன்**
**மெய்யுற அமர்புரி விநோத! நாடொறும்**
**மையுறு கண்டனே மறப்ப தில்லையே''**

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம் 214)

என்று சிவபெருமானை அர்ச்சுனன் அன்புடன் போற்றி 'ஐயனே! முன்னம் தாங்கள் அருள்புரிந்த பாசுபதாஸ்திரத்தைக் கொண்டு நிவாதகவச, காலகேய அரக்கர்கள் அனைவரையும் வென்று புகழ் கொண்டேன். இப்பொழுது நடைபெற்றுக் கொண்டிருக்கும் பாரதப் போரிலும் வெற்றி கொள்ள எனக்குத் தாங்களே அருள்புரிய வேண்டும்'' என்று வேண்டுகின்றான்.

அப்பொழுது கண்ணபெருமானும் அர்ச்சுனனுக்காகச் சிவபெருமானிடம் பரிந்துரைக்கிறார். ''பாசுபதாஸ்திரம் கொண்டு அர்ச்சுனன் போர் புரிந்தால் உலகம் முழுதுமே அழிந்துபட்டு விடும். அரக்கர்களைக் காய்வதற்கு ஆகும் பாசுபதாஸ்திரத்தை மனிதர்களை வதைப்பதற்குப் பயன் படுத்துவதும்கூடாது. ஆகவே குறைவுபடாத கணைகளுடன் ஒரு வில்லும், நினைத்த இடத்தில் உண்டாகக் கூடிய தூய நிழற் பொய்கையும் அர்ச்சுனனுக்குத் தாருங்கள்'' என்று கண்ணபெருமானும் பரிவுடன் கூற அதைச் சிவபெருமான் கேட்டுப் புன்னகை புரிகிறார். ''யாம்வேறு நீர் வேறா என்ன? அர்ச்சுனனுக்கு வேண்டுவனவற்றை நீரே வழங்கலாமே! படைக்கவும், காக்கவும், அழிக்கவும் எல்லாம் எம்போல் வல்லவர் தானே நீரும்'' என்று சிவபெருமான் கண்ணபெருமானைப் போற்றிக் கூறுகிறார். ''சிவமும் விஷ்ணுவும் ஒன்றே, வெவ்வேறு அல்ல'' என்ற பேருண்மையைத்தான் சிவபெருமானும், கண்ணபெருமானும் மாறி மாறி அர்ச்சுனனுக்கு அருள் வழங்கிய இந்த பதின்மூன்றாம்

நான் போரின் இரவு நிகழ்ச்சியின் மூலம் நமக்கு உணர்த்தி யிருக்கிறார்கள்.

அதற்குப் பிறகு சிவபெருமான், அர்ச்சுனனிடம் ''அங்குள்ள பொய்கையில் நீராடு! வேண்டுவன பெறுவாய்' என்று திருவாய் மலர்கிறார். அர்ச்சுனனும் அவ்வாறே போய் அருகில் உள்ள பொய்கையில் நீராடுகின்றான். அப்பொழுது அப்பொய்கையில் ஒரு பெருநாகம் தோன்ற, அந்நாகத்தின் வாயிலிருந்து ஒரு முனிவரும் வில் அம்பு களுடன் தோன்றுகின்றார். அம்முனிவர் அர்ச்சுனனுக்கு உருத்திர மந்திரத்தை உபதேசித்து வில்லையும் அம்பு களையும் வழங்குகின்றார். அவற்றைப் பெற்று வந்து அர்ச்சுனன் மீண்டும் சிவபெருமானைப் பணிந்து வணங்கு கின்றான்.

''அர்ச்சுனா! நீ வேண்டும்போது, வேண்டும் இடத்தில் தூய நிழற் பொய்கை உண்டாகும். இவ்வில்லும் அம்பு களும் கூட நீ நினைக்கும் போது உன்னிடம் வரும்'' என்று சிவபெருமான் அருள் பாலிக்க, அர்ச்சுனனின் கையிலிருக்கும் வில்லும்,அம்புகளும் மறைந்து விடுகின்றன. ''திருமாலே பூமிபாரம் தீர்த்து வைகுண்டம் அடைவீராக'' என்று கண்ணுதற் பெருமான் கருணையுடன் கூறி, கண்ணபெருமானையும் அர்ச்சுனனையும் அனுப்பி வைக் கிறார். மீண்டும் கருடன் சுமந்து பறந்து வர, கிருஷ்ணார்ச் சுனர்கள் கீழ்வானத்தில் வெள்ளி தோன்றும் விடிகாலைப் பொழுதில் குருசேத்திரத்திற்கு மீண்டும் வந்து சேர் கிறார்கள்.

கண்ணபெருமானும் அர்ச்சுனனும் கயிலைக்குப் புறப் பட்டு ச்சென்றார்கள் அல்லவா! அவர்கள் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் தருமர் ஒரு காரியத்தைச் செய்தார். வீமன், பெற்ற வீரமைந்தன் கடோற்கஜனைத் துரியோ தனனின் பாசறைக்கு அந்த இரவு நேரத்தில் ஒரு காரணம்

கருதி அனுப்பி வைத்தார். அந்தக் காரணத்தை அறிந்தால் இந்த உலகமே தருமரை வியத்து போற்றும் என்று தாமும் கூட வியந்து கூறுகிறார் வில்லிப்புத்தூரார்.

தருமர் என்ன காரணம் கருதி கடோற்கஜனைத் துரியோதனனின் பாசறைக்கு அந்த இரவில் அனுப்பினார்? எதிரிகளின் பாசறையில் புகுந்த கடோற்கஜன் அந்த நள்ளிரவு நேரத்தில் புரிந்த சாகசங்கள் என்னென்ன? இவற்றை எல்லாம் நாம் இனிவரும் அத்தியாயத்தில் கண்டு சயத்திரதனை அர்ச்சுனன் வெல்லப்போகும்—கொல்லப் போகும் அந்தப் பதினான்காம் போர் நிகழ்ச்சிகளையும்கூட விரிவாகக் கண்டு மகிழ்ந்திடுவோமாக.



# 21

பதினான்காம் நாள் போரின் மாலைக்குள் சயத் திழதனைக் கொல்வேன் என அர்ச்சுனன் சபதம் செய்திருப் பதையும், அதற்காகச் சிவபெருமானிடம் அஸ்திரங்களைப் பெறக் கண்ணபெருமானுடன் கயிலைக்குப் புறப்பட்டுச் சென்றிருப்பதையும் ''துரியோதனனிடம் போய் கூறி வா'' என்று கடோற்கஜனைத் தூது அனுப்புகிறார் தருமர் அந்த நள்ளிரவு நேரத்திலே. எதிரியைக்கொல்லத் திட்டமிட்டிருப் பதை எதிரியிடமே போய் கூறி யாரேனும் எதிரியை உஷார் படுத்துவார்களா? கண்ணுதற் பெருமானிடம் ஆயுதங்களை யும் அதன் பொருட்டு வாங்கப் போயிருக்கிறார்கள் கிருஷ்ணார்ச்சுனர்கள் என்பதையும் மிக இரகசியமாக அல்லவா வைத்திருக்க வேண்டும்? ஆனால் அவ்வாறு செய்யாமல் தருமர் இவற்றை எல்லாம் இந்த நள்ளிரவு நேரத்தில் அவசர அவசரமாகத் துரியோதனனிடம் தூது உரைத்து வா என்றுகடோற்கஜனிடம் கூறி அனுப்பி வைப்பது அதிசயமாக அல்லவா இருக்கிறது. தருமரின் இந்த அதிசயித்தக்க செயலை உலகோர் அறிந்தால் ''இப்படியும் ஒரு தருமரா'' என்று வியப்பார்கள் என்று கூறி தாமும் வியக்கிறார் வில்லிப்புத்தூரரார்.

**''இங்கவர் மூவரும் ஏகினர் மீளுமுன் நெறி முரசக் கொடியோன்**
**அங்குரை யாடியதுரை செயின் மண்மிசை யார் வியவாதொழிவார்?**
**பங்குனன் ஓதிய வஞ்சினமும் பசுபதியிடை ஏகியதும்**
**கங்குலிலேவினன் உரைசெய்க என்று கடோற்கச மீளியையே''**

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம் 225)

தருமரின் செயலை வேண்டாதது என்று நாம் எண்ணு வதைப் போலவேதான் கடோற்கசனும் எண்ணுகின்றான். "என்ன பெரிய தந்தையே! வஞ்சனையாலே அபிமன்யுவைக் கொன்றிருக்கிற வஞ்சகன் துரியோதனன், அவனிடத்திலே போய் ஏன் நாம் அர்ச்சுனன் செய்திருக்கும் சபதத்தைச் சொல்ல வேண்டும்? நாளை மாலைக்குள் சயத்திரதனைக் கொல்ல இயலாவிடில் அர்ச்சுனன் எரியுள் மூழ்கி உயிர் விடுவான் என்ற செய்தியைத் துரியோதனனிடம் தெரிவித்து விட்டால் சயத்திரதனைக் காத்திடவும், அர்ச்சுனனை! எரியுள் மூழ்கிச் சாகடிக்கவும் கொடியவனான துரியோ தனன் மேலும் பல வஞ்சகங்களைச் செய்வானே! அவனிடத்திலே கிருஷ்ணார்ச்சுனர்கள் கயிலைக்குச் சென்றிருக்கும் செய்தியையும் ஏன் சொல்ல வேண்டும்? அப்படிச் சொல்வது அறிவாகுமா? வீரமாகுமா?" என்று வினவி தருமரின் செயலை விபரீதமானது என்பதாகவும் சாடி அவருடைய அந்தச் செயலைத் தடுத்திடவும் முயல் கிறான் கடோற்கசன்.

ஆனால் தருமரோ "வீமனுக்குச் சரியான மகனாகத் தான் வந்து பிறந்தாய் கடோற்கசா! வீமனுக்கும் ஆத்திரம் அதிகம். அறிவு குறைவு. உனக்கும் அப்படித்தான். வெற்றி எப்படி நமக்கு முக்கியமோ, வெற்றிக்கான வழிமுறை களும் அதே போல் முக்கியம். அர்ச்சுனன் செய்திருக்கும் சபதம் சயத்திரதனைப் பற்றியது. அர்ச்சுனனுடைய சபதத்தைச் சயத்திரதனுக்குத் தெரிவித்து அதன் மூலம் அவன் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டு அர்ச்சுன னுடன் யுத்தம் செய்ய நாம் சந்தர்ப்பம் அளிக்கவேண்டும். அப்படிச் சந்தர்ப்பம் கொடுக்கா விட்டால், உறங்குகிறவன் தலையிலே அவனுக்கும் தெரியாமல் கல்லினைப் போட்டுக் கொல்வதுபோல் ஆகி-விடாதா? ஆகவே வஞ்சகம் இன்றிப் போரிட்டுப் பெறுவதுவே சிறந்த வெற்றியாகும், அபிமன்யு வைத் துரியோதனன் வஞ்சகம் செய்து வென்றான் என்பதனால் சயத்திரதனையும் நாமும் அப்படிக் கொன்று

விட்டால் அவனுக்கும் நமக்கும் என்ன வேறுபாடு? ஆகவே தான் நான் செல்கிறேன். நீ துரியோதனனிடம் தூது போய் அர்ச்சுனனின் சபதத்தையும் கிருஷ்ணார்ச்சுனர்கள் கயிலைக்குச் சென்றிருக்கும் விவரத்தையும் கூறி வா'' என்று தம்முடைய செயலிலுள்ள தருமருத்தையும் நியாயத்தையும் கடோற்கசனுக்குத் தெளிவுபடுத்துகிறார் தருமர்.

ஆம்! தருமர் தம்முடைய பெயருக்கொப்பவே உலகம் வியக்கும் தருமராகவே திகழ்வதைத்தான் கடோற்சசனைத் துரியோதனனிடம் தூது அனுப்பும் இந்த ஒரு நிகழ்ச்சியின் மூலமும் நாம் அறிந்து பூரிப்படைகிறோம். தருமரின் செயலை வீரமாகுமா அறிவாகுமா என்று வினவிய கடோற்கசன் தான் அப்படிக் கேட்டதற்காக வெட்கி இப்பொழுது தலைகுனிகிறான்.

'அபிமன்யுவை வஞ்சகத்தால் கொன்ற சயத்திரதா! உன் வஞ்சகச் செயலுக்கான தண்டனைதான் உன் மரணம். நான் உன்னைக் கொல்லப் போகிறேன். முடிந்தால் உன்னைக் காப்பாற்றிக் கொள்'' என்று தண்டிப்பதற்கான காரணத்தைச் சொல்லித் தண்டிப்பது அல்லவா வீரத்தில் சிறந்த வீரம். நான் குறித்த காலக் கெடுவிற்குள் உன்னைக் கொல்வதாக எடுத்துக் கொண்டுள்ள காரியம் மிகப் பெரிய காரியம். அது இறைவனின் திருவருளைப்பெற்றால் அன்றிக் கூடாது. ஆகவே நான் இறைவனின் திருவருளைத் தேடிப் போகிறேன். அதுபோல உன்னைக் காத்துக் கொள்ள உனக்கு யாருடைய துணை அவசியமோ அவருடைய துணையையும் வேண்டுமானால் நீயும் தேடிக் கொள்'' என்று மாற்றானுக்கும் வாய்ப்பளித்து, அவனை வெற்றி கொள்ள முயல்வது அல்லவா அறிவினிற் சிறந்த அறிவு.

இப்படிப்பட்ட பராக்கிரமான செயலை, அறிவான செயலைத்தான் ஆற்றிட விழைகிறார் தருமர். அதற்

சாகவே கடோற்கசனைத் துரியோதனனிடத்தில் அந்த நள்ளிரவு நேரத்தில் தூது அனுப்புகிறார். தருமருடைய செயலில் உள்ள தர்ம நியாயத்தைப் புரிந்து கொண்டவுடன் கடோற்கசனும் துரியோதனனுடைய பாசறைக்கு விரைந்து செல்கிறான்.

பாசறையில் துரியோதனன் அபிமன்யுவைக் கொன்றதனால்உண்டான மகிழ்ச்சி ஒரு புறமும், தன் மகன் இலக்கண குமாரனை மடியக் கொடுத்த சோகம் மறுபுறமுமாக மனக்கலக்கத்துடன் கர்ணன், சயத்திரதன்; சகுனி மற்றும் துரோணர் புடைசூழ அமர்ந்திருக்கிறான். கடோற்கசன் துரியோதனனைக் காண வந்திருக்கும் செய்தியை அவனிடம் காவலர்கள் ஓடிப்போய் தெரிவிக்க, தன் சோகத்தை மறைத்தவனாய், முகத்தையும் கடுகடுப்பாக்கிக் கொண்டு ''வரச் சொல்'' என்று கட்டளையிடுகிறான் துரியோதனன். கடோற்கசனும் துரியோதனனுடைய பாசறைக்குள் வெறிகொண்ட சிங்கம் ஒன்று புகுவதைப் போல், கம்பீரமாக உள்புகுந்து செல்லுகின்றான்.

கடோற்கசன், ஒப்புக்காகவேனும் தன் வணக்கத்தைத் துரியோதனனுக்குத் தெரிவிக்கவில்லை., தன்னுடைய சிம்மக்குரலில்

**''தன்திரு மைந்தனை மௌலி துணித்த சயத்திரதன்**
**தனை வாள்**
**வென்றிகொள் காவலர் காவல் மிகுப்பினும் வெயிலவன்**
**வீழ்வதன்முன்**
**கொன்றிடுவேன் அதுதப்பின் அடுங்கனலூடு குதித்திடு**
**வேன்**
**என்று மொழிந்து அரன்வாழ் கயிலாயமும் எய்தினன்**
**வில்விசயன்''**

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம் 231)

என்று கடோற்கசன் முழங்குகிறான்.

அர்ச்சுனனின் கபதத்தையும் கபிலைக்குக் கண்ண பெருமானுடன் சென்றிருப்பதையும் கடோற்கசன் கூறக் கேட்ட துரியோதனனுக்கு ஆத்திரம் பொங்கி வருகிறது. ''என்னுடைய மகன் இலக்கண குமாரன் கூடத்தான் இன்றைக்கு மாண்டு விட்டான். இன்னும் எத்தனையோ மன்னர்களின் புதல்வர்கள் எல்லாம்கூட இன்றைய தினம் மடிந்திருக்கிறார்கள். நாங்கள் எல்லாம் பேசாமல் இருக்கவில்லையா நாங்கள் என்ன பதிலுக்குப் பதில் என்று சபதமா செய்து கொண்டு இருக்கிறோம்? மாபெரும் வீரன் என்று தன்னைப் பீற்றிக் கொள்ளும் அர்ச்சுனன் தன் மகன் இறந்து பட்டமைக்காக இவ்வளவு பெரிய ஆர்ப்பாட்டம் செய்வானேன்? இவ்வளவு தானா அர்ச்சுனனின் வீரம்?'' என்று குதர்க்கம் பேசுகிறான் துரியோதனன்.

''மன்மைந்தர் பலரொடும் போய் மறித்தொருவர் மீளாமல்
மலைந்து வீழ
என்மைந்தன் இறந்திடவும் யாதொன்றும் புகலாமல்
இருக்கின்றேன் யான்
தன்மைந்தன் இறந்தனனாம் தான்தழலில் மூழ்குவனாம்
சபதம் கூறி
வில்மைந்தில் மிகுந்தவருக் கழுதிரங்கி யரற்றுவது வீரம்
தானோ''

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம் 233)

துரியோதனனுக்கும் வீரம் இருந்தால் அவனும் சபதம் செய்வதை யார் தடுத்தார்கள்? ''என்னுடைய மகன் மடிந்தான். என்னுடைய தம்பிகள் பலரும் மடிந்து போனார்கள். என்னால் இவற்றைப் பொறுத்துக் கொண்டு வாழ முடியவில்லை நானும் வீமனைக் கொல்வேன். விசயனைக் கொல்வேன். தருமரைக் கொல்வேன். இது சத்தியம். இது என் சபதம்'' என்று துரியோதனனும் வீர சபதம் மேற்கொள்வதை யார் வேண்டாம் என்று மறுத்தது? அவனுக்கு

ஆற்றல் இல்லை. ஆகவே அவனால் அரற்ற முடிகிறதே தவிர வீமனுக்கு முன் நின்று போர் செய்யவும்கூட முடிய வில்லை. ஆகவே துரியோதனன் வாய்மூடி ஊமையாக இருப்பதிலே அர்த்தம் இருக்கிறது.

ஆனால் அர்ச்சுனனோ, தன் மகன் அபிமன்யு மேல் எப்படி பிரேமை அதிகம் கொண்டிருக்கிறானோ அப்படியே வீரமும் அதிகமாகக் கொண்டிருக்கிறான். ஆகவே அவன் சபதம் செய்திருக்கிறான். தன்னுடைய சபதம் இன்னது என்பதைத் தெரிவித்து விட்டுப் போர் செய்யக் கூடிய வீர பராக்கிரமமும் அவனுக்கே இருக்கிறது! அத்தகைய அர்ச்சுனனுடைய பராக்கிரமத்தையே பழித்து "அழுதிரங்கி அரற்றுவது வீரம் தானோ?" என்று ஏளனம் செய்கிறான் துரியோதனன்.

கடோற்கசன் துரியோதனனின் பாசறைக்குள் புகுந்து அர்ச்சுனனின் சபதத்தைச் சொல்லியது முதலாகவே தன் இருக்கையும் கொள்ளாமல் இருகைகளும் தாளமிட, கண்கள் மயங்க, தலை சுழல மயங்கி விழுந்துவிடக் கூடிய நிலையில் சயத்திரதன் நடுநடுங்கிக் கொண்டிருக்கிறான். அவனுக்கு அப்பொழுதே தன் உயிர் தன்னை விட்டுப் போய் விட்டதைப் போலவும் நினைவு.

சயத்திரதனுடைய இந்த நிலையைப் புரிந்து கொள் ளாமல் துரியோதனன் "நாளைய போரில் சயத்திரதன் அர்ச்சுனனைக் கொல்வான்" என்பதாக வீரம் பேசுவதும், நல்ல வேடிக்கையே. "சிவனிடம் அத்திரங்கள் வாங்க்க் கயிலாயம் சென்றிருக்கிறார்களா கிருஷ்ணார்ச்சுனர்கள்! வாங்கி வரட்டுமே! வந்தால் என்ன பயமா? என்னைக் காட்டிலும் மகாபலசாலி, துரோணரைக்காட்டிலும் சிறந்த வில் வீரன். வீமனையும் வெல்ல வல்லவன். ஏன் உன்னைக் காட்டிலுமே அதிகத் தோள்வலி கொண்ட இந்தச் சயத்திரதன், நாளை சூரிய அஸ்தமனத்திற்கு முன் அபிமன்யுவைப்போலவே அர்ச்சுனனையும் கொன்றிடுவான்

என்று நீ போய் தருமரிடம் சொல்லு போ'' என்று கடோற்கசனிடம் வீரம் பேசி முழக்குகிறான் துரியோதனன்.

துரியோதனன் இவ்வாறு முழங்க, தோள் கொடுப்பான் தோழன் என்பதைப் போல கர்ணனும் உடன் எழுந்து தன்னுடைய வீரப் பிரதாபத்தை முழக்குகிறான். ''துரியோதனன் மகன் இலக்கணன், துச்சாதனன் மகன் துச்சனி, சல்லியனின் புதல்வன், சகுனியின் மைந்தர்கள்-இவர்கள் எல்லாம் நாடாள இருந்தவர்கள் மாண்டுபோன இந்தச்சோகத்திற்கே நாங்கள் ஒன்றும் அழவில்லை. அபிமன்யு இறந்து விட்டான் என்று கொதிக்கிறானோ அர்ச்சுனன்? அவன் இருந்து எந்த இராஜ்ஜியத்தை ஆளுவது குறைந்து போய் விட்டதாம்? சிவபெருமானிடம் போய் வரம் வாங்கி வந்து விட்டால், நாங்கள் எல்லாம் என்ன அஞ்சி விடுவோமா? சயத்திரதனை அருச்சுனன் சாகடிக்க விட்டு விடுவோமா? தானே தன் ஆற்றலால் சயத்திரதனை வெல்ல முடியாத அர்ச்சுனன், சிவபெருமானிடம் போய் வரம் வாங்கி வந்து சயத்திரதனைக் கொல்வானாம்? அதை இந்தக் கர்ணனும் மற்றவர்களும் வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்பார்களாம்?'' என்று அர்ச்சுனனின் வீரத்தைப் பழித்துக் கர்ணனும் கூட கேலி பேசுகிறான்.

தன்னுடைய கதாயுதத்தைத் தரையில் ஊன்றியவாறு நின்றிருக்கும் கடோற்கசனுக்குக் கர்ணனின் நிந்தனையைக் கேட்டதும் பொங்குகிறது ஆத்திரம். தன் கதாயுதத்தைக் கடோற்கசன் எடுத்துத் தோளில் தயாராக வைத்துக் கொள்கிறான். இனியும் இவர்களிடம் வாயினால் பேசிக் கொண்டிருப்பதில் பயன் இல்லை என்பதைப் போல இரவோடு இரவாக கௌரவர்களை அவர்களுடைய பாசறையில் வைத்தே நீறாக்கி விடவேண்டும். அப்பொழுதுதான் அவர்களுக்குப் புத்தியும் வரும் என்பதாகக் கடோற்கசன் கொதித்து ''நாடாள வேண்டிய புதல்வர்களைப் பலிகொடுத்தோம்.

காடாண்டு இருந்தவன் பலியானால் என்ன? என்றல்லவா திமிராகப் பேசினீர்கள்! இன்னும் நாடாள வேண்டும் என்ற ஆசையும் வேறு உங்களுக்கு இருக்கிறதா? அபிமன்யு ஒருவனோடு யுத்தம் செய்வதற்கே ஆற்றல்இல்லாமல் பாலகன் அவனுக்குத் தோற்றுப் பயந்து ஓடிப் போன நீங்களா, அர்ச்சுனனின் வீரத்தைப் பழித்தும் கேலி பேசுகிறீர்கள். தேரழித்தவன் ஒருவன். கை துணித்தவன் ஒருவன். கதை கொண்டு உயிர் பறித்தவன் ஒருவன். அபிமன்யு ஒருவனைக் கொல்வதற்கே இத்தனைப்பேர் தேவைப்பட்டிருக்கிறது. நீங்களா அர்ச்சுனனின் அளவிலாத பராக்கிரமத்தைப் பழிக்கிறீர்கள். என் சிறிய தந்தையின் வீரத்தைச் சிறுமைப்படுத்திப் பேசிய சிறுமதியாளர்களே! உங்களை அழிக்க வீமன் வரவேண்டுமோ? அர்ச்சுனன் வரவேண்டுமோ? உங்களுக்கு உண்மையிலேயே வீரம் இருக்குமானால் நீங்கள் அத்தனைப் பேருமே வாருங்கள்! தினவெடுத்த என் தோள்களில் நான் தூக்கிய இந்த கதாயுதம், உங்கள் கதையை முடிக்கட்டும்'' என்று கடோற்கசன் கர்ச்சனை செய்கிறான்.

''தசை குருதி மிசை ஒழுகத் தனித்தனியே
எதிர்த்தவரைத் தலைகள் சிந்த
விசையன் வர வேண்டுமோ, மற்றுள்ளார்
திரண்டுவர வேண்டுமோ தான்
திசைபுலரு முனம் முனைந்து நீறாக்கி விடுவன்
எம்நிருபன் சொன்ன
வசையின் மொழி மறுத்துடற்றல் ஆகாதென்
நிருக்கின்றேன் அறிகிலீரே!''

''இருவர் எதிர் எதிர் தம்மில் இகல்பொருதல்
உலகியற்கை யாரும் கூடிப்
பருவமுறாத் தனிக்குதலைப் பாலகனுக் காற்றாமல்
பறந்துபோனீர்

**ஒருவன் நெடுந்தேரழிக்க, ஒருவன் மலர்க்கை**
**துணிக்க ஒருவன் பின்னைப்**
**பொருவனென அறைகூவிப் பொன்றுவித்தான் இது**
**கொண்டோ புகல்கின்றீரே''**
(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம் 240-241)

கடோற்கசனுக்குப் பகற்பொழுதிலேயே வலிமை மிக அதிகம். அவன் அரக்க இனத்தில் இடும்பிக்கு மகனாய் பிறந்தவன் ஆதலால் இரவிலே அவனுக்கு இன்னும் அதிகமான பலமும் கூடியிருக்கிறது. கடோற்கசன் கொதித்துப் போர் செய்வானேயானால் கௌரவர் படை முழுதும் அன்றிரவுக்குள்ளேயே நாசமாகி விடும். துரியோதனன், கர்ணன் ஆகியோர் அர்ச்சுனனைப் பற்றிக் கூறிய நிந்தனை மொழிகள் கடோற்கசனைக் கொதிக்கச் செய்கின்றன என்றாலும், தருமர் கட்டளை 'தூது உரைத்து வா' என்பது மட்டும் தானே! ஆகவே பொங்கி வந்த சினத்தைக் கடோற்கசன் அடக்கிக் கொண்டு விடுகிறான். ஆனால் துரியோதனனோ கடோற்கசனை அலட்சியப்படுத்துவதாக நினைத்து கர்ணனிடம் 'அந்த அரக்கி மகனிடத்தில் இனி எதுவும் பேச வேண்டாம்' என்று கூற, கடோற்கசனுக்கு மேலும் பொங்குகிறது கோபம்.

கடோற்கசன் இடி இடித்தாற் போலச் சிரிக்கிறான். குலுங்க குலுங்கச் சிரிக்கிறான். பொங்கி வரும் கோபத்தை வெளிக்காட்டிச் சிரிக்கிறான். ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று துரியோதனன் அதட்ட, அவனை நோக்கி அலட்சியமாய்க் கையசைத்து மறுபடியும் உரக்கச் சிரிக்கும் கடோற்கசன் ''அரக்கிமகன் என்று என்னை உரைத்தாயே! அதை எண்ணித்தான் சிரிக்கிறேன்'' என்று கூறிப் பின்னும் சிரிக்கிறான்.

''ஏன் நீ அரக்கிமகன் தானே?'' என்று துரியோதனன் மீண்டும் கூற, கடோற்கசன் ''ஆம், நான் அரக்கிமகனே தான். அரக்க இனத்திலே பிறந்தவன் ஆனாலும் எனக்கு அரக்கக் குணம் இல்லை. நான் என்ன உம்போல் உடன்

பிறந்தாரை விஷமிட்டுக் கொல்ல முயன்றேனா? வாழ்ந்திருந்த வீட்டிற்கு நெருப்பு வைத்தேனா? வஞ்சகமாய் விருந்துக்கழைத்துச் சூதாடினேனா? உம்போல் கொழுந்தியாள் ஆடையை அவை நடுவில் அவிழ்த்து மானபங்கப் படுத்தினேனா! பெரியோர்கள் சொல்லை உதாசீனப்படுத்தி உத்தமர்களைக் காட்டிற்கு அனுப்பினேனா? சத்தியத்தை மறந்து, போருக்கு அழைத்தேனா? போர்க்களத்தில் புறமுதுகு காட்டி ஓடினேனா? புறமுதுகிடாத வீரக் காளையை சுற்றி வளைத்து வஞ்சகம் செய்து கொன்றேனா? துரியோதனரே! நீர் சொன்னீரே அரக்கி மகன் என்று! அரக்கி பெற்றெடுத்த அருமை மகன்தான் நான். ஆனால் நான் சுட்டிய இத்தனை குணங்களையும்தான் அரக்க குணம் என்று அறிஞர்கள் சொல்லுவார்கள். இந்தக் குணங்கள் எல்லாம் என்னிடத்திலே இல்லை. அவை தேவரீர் ஆகிய தங்களிடத்தில்தான் இருக்கிறது. தெரிந்து கொள்ளுங்கள்.''

கடோற்கசன் தன் கதையால் தாக்கியிருந்தாலும் கூட துரியோதனனை அது இவ்வளவு கடுமையாகத் தாக்கி இருக்குமா, தெரியாது. கடோற்கசனுடைய சொல் ஒவ்வொன்றும் துரியோதனனே அரக்கன், அவனுடைய குணங்களே அரக்க குணங்கள் என்பதை எடுத்துக் காட்டி அவனுடைய உடலைச் சல்லடைக் கண்கள்போல் துளைத்துத் தைத்தது என்றே கூறவேண்டும்.

''செந்தழல்வாழ் மனை கொளுவார், செய்ந்நன்றி
கொன்றறியார் தீங்குபூணார்
அழுந்துமனத் தழுக்குறார் அச்சமுமற்று அருளின்றி
பொய்ச் சூதாடார்
கொழுந்தியரைத் துகிலுரையார்; கொடுங்கானம்
அடைவித்துக் கொல்ல எண்ணார்
அழுந்தமரில் முதுகிடார் இவை எல்லாம்
அடிகளுக்கே ஏற்ப என்றான்''

(பதின்மூன்றாம் போர்ச் சருக்கம் 244)

“அரக்கி மகன்” என்ற துரியோதனனை ‘அடிகள்’ என்று அழைத்துக் கடோற்கசன் ‘இவை எல்லாம் அடிகளுக்கே ஏற்ப’ என்று கூறுவது, மல்லாற்றலோடு சொல்லாற்றலும் வல்லவன் கடோற்கசன் என்பதற்குச் சரியான சான்று.

“அரக்கி மகன்” என்று தன்னைப் பழித்ததற்கு இவ்வாறு சரியான பதிலடியைக் கொடுக்கிற கடோற்கசன், அர்ச்சுனனின் வீரத்தைப் பழித்தமைக்கும் கூட சரியான சூட்டினைக் கொடுக்கிறான்.

**“தேனிடறிப் பாண்முரலும் செழுந்தாம**
**விசயனுடன் செருவில் வந்தால்**
**மானிடரிற் பொரவல்லார் சிலருண்டோ தெரியாது**
**வானுளோரில்**
**கோனிடையுற் றருகிருந்த திறல்வேந்தர்**
**காத்திடினும் குறித்த வீரன்**
**தானிடருற்று உயிரழிகை தப்பா தென்பது**
**உரைத்துத் தனயன் மீண்டான்”**

(பதின்மூன்றாம் போர்ச்சருக்கம், 245)

“அர்ச்சுனனோடு போர் செய்ய வல்லவர்கள் வானுலகத்திலேயே கிடையாது என்றால், மண்ணுலகில் வாழ்வோரில் யார் அர்ச்சுனனை எதிர்த்துப் போர் செய்ய இயலும்? சயத்திரதனைத் திறல்வேந்தர்கள் அத்தனைப் பேருமே சூழ்ந்து காத்திட முயலுங்கள், நாளைய போரில் அவன் அர்ச்சுனனால் மடிவது திண்ணம்” என்று கடோற்கசன் தெளிவுபட உரைத்து, தான் தூது வந்த பணியைச் செவ்வனேயும் முடித்துத் துரியோதனன் பாசறையிலிருந்து, மதயானை ஒன்றுவெளியேறி வருவதைப் போல்வெளியேறி வருகிறான்.

கடோற்கசன் வெளியேறி விட்ட பிறகும் சயத்திரதனின் பயம் நீங்கிடவில்லை. பேசும் துணிவையும் சயத்திரதன் கடோற்கசன் வந்தது முதலாகவே இழந்து விட்டிருந்தபடி

யால், அவன் ஒரு வார்த்தையும் பேசவில்லை. அப்பொழுது தான் துரியோதனனும், ''சயத்திரதன் அர்ச்சுனனைக் கொல்வான்'' என்று தான் கூறியது வெறும் உளறல் மொழியே என்பதைப் புரிந்து கொள்கிறான். ஆகவேதான் துரியோதனன் 'நாளை ஒரு பகல் நேரம்-முப்பது நாழிகைப் பொழுது சயத்திரதனின் உயிரைக் காப்பாற்றி விட்டால், அர்ச்சுனனும் மடிவான். நாமும் வாழ்வோம். சயத்திரத னின் உயிரைக் காப்பாற்றித் தந்து விடுவீர்கள் இல்லையா?' என்று அனைவரிடமும் கெஞ்சுகிறான். உடனே கர்ணன் ''சயத்திரதனை நான் காப்பாற்றுவேன்'' என்று முதல் குரல் கொடுக்கிறான்.

கைதூக்குவதில் எப்பொழுதும் முதல் ஆளாகக் கர்ணன் இருந்து வரும் போதிலும், காரியத்திற்கு இவன் பயன் படுவது இல்லை என்பதை நாமும் பலமுறைகள் இதுவரைப் பார்த்து விட்டோம். அடுத்துச் சயத்திரதனை நான் காப்பாற்றுவேன்' என்பதாகக் குரல் கொடுக்கிறான் துர்மர் சணன். இவன் துரியோதனனின் தம்பியருள் ஒருவன். பாவம்! இவன் நாளைய போரில் வீமனிடம் இருந்து உயிர் தப்புவானா என்பதே கேள்விக்குறி. மற்ற மற்ற வீரர் களும் 'சயத்திரதனைக் காப்பாற்றுவோம்' என்று கூட்டமாக முழங்குகிறார்கள். இவைகள் எல்லாம் உப்புச்சப்பின்றி ஒப்புக்காகச் சொல்லப்படும் வெற்று முழக்கங்களே என்பதை அறிந்திருக்கும் துரியோதனனும் அவற்றிற்கு அதிக மதிப் பினைத் தானும் அளித்திடாமல் துரோணரை நோக்கி 'தளபதியாரே! நீங்கள் அல்லவா எனக்கு உறுதியை வழங்கிட வேண்டும். உங்கள் துணிவைக் கூறுங்கள்' என்று வேண்டு கிறான்.

துரோணரும் 'பிரமன் ஒருவனால் மட்டுமே வார்த்தை பழுதில்லாமல் சொல்லுவதைச் சொல்லியபடி செய்து சாதிக்க முடியும். அர்ச்சுனனும் தன் சபதத்தைச் சொல்லிய படி செய்து முடித்து விட்டால், அவனையும் பிரமனாக

வைத்துத்தான் போற்ற வேண்டும். நான் என்னால் இயன்றவரை சயத்திரதனைக் காத்துப் போரிடுவேன். ஆனாலும் அவரவர் பாவ புண்ணியங்களுக்கேற்பவே எல்லாம் நடக்கும்' என்பதாகத் தன்னுடைய முடிவை விதியின் கையிலே ஒப்படைத்துப் பட்டும் படாமலும் பேசுகிறார்.

சயத்திரதனைக் காப்பாற்றுவதில் துரோணரையும் கர்ணனையும் மற்ற எவரையும் நம்பப்போவதில்லை துரியோதனன் என்பதை நாம் நாளைய போரின்போது காணத்தான் போகிறோம். சயத்திரதனைக் காப்பாற்ற வீரமான வழியைத் தேர்ந்திடாமல், வஞ்சகமான வழியையே துரியோதனன் தேர்ந்தெடுக்கிறான். அவனுடைய கோழைத்தனமான வழி என்னவென்பதை நாம் நாளைய போரின்போது காணலாம்.

பாரதப் போரின் பதினான்காம் நாள் - விடிகாலை நேரம். பொழுது விடிய இன்னும் ஒரு நாழிகை நேரம்தான் இருக்கிறது. கிருஷ்ணார்ச்சுனர்கள் கயிலையிலிருந்து மீண்டு, அப்பொழுதுதான் குருசேத்திரத்திற்கு வந்து சேர்கிறார்கள். தருமரைத் துயில் எழுப்பி, சிவபெருமானிடம் வரம் பெற்று வந்திருப்பதை கண்ண பெருமான் விவரித்துக் கொண்டிருக்கும் அதே நேரத்தில் கடோற்கசனும் பாண்டவர் பாசறைக்குத் திரும்பிவருகிறான். தான் தூதுரைத்து மீண்ட விவரத்தையும் எடுத்துரைக்கின்றான்.

> ''மைதிகழ் மணிப்பூண் பதாகை யானிடை
> எய்தியங் குரைத்ததும் இருந்த மன்னவர்
> வெய்துறப் புகன்றதும் மீண்டு வந்ததும்
> கொய்தொடைக் கடோற்கசன் தானும் கூறினான்''

(பதின்மூன்றாம் போர்ச்சருக்கம் 259)

பதினான்காம் நாள் போர் அர்ச்சுனன்-சயத்திர இவ்விருவர் வாழ்வினையும் சாவினையும் நிர்ணயிக்கக்கூ போர் மட்டும் அல்ல. பாண்டவர் - கௌரவர் வாழ்வி யும் சாவினையுமே நிர்ணயிக்கக்கூடிய மாபெரும் பே இப்போரில் வெல்வதற்கு துரியோதனன் தன் ஆற்றல பயன் படுத்தப்போவதைக் காட்டிலும் வஞ்சகத்தை பயன்படுத்தப் போகிறான். முள்ளை முள்ளால் களைவ கும் பாண்டவர் அணியில் நம்முடைய பார்த்தசா இருக்கவே இருக்கிறார். இவ்விரு அணியினருக்கும் ந பெறப் போகும் சுவாரசியமான பதினான்காம் ந போரினை நாமும் இனி வரும் அத்தியாயங்களில் க மகிழ்ந்திடுவோமாக.



# 22

பாரதப் போரின் மிக முக்கியமான பதினான்காம் நாள் போரினை இப்பொழுது நாம் காணப் போகிறோம். தன் மகன் அபிமன்யுவைக் கொன்ற சயத்திரதனைக் கொன்று பழிக்குப்பழி வாங்கிடத் துடித்துக் கொண்டிருக்கிறான் பார்த்தன். பார்த்தன் கைகளுக்கு அகப்படாமல் எப்பாடு பட்டாகிலும் சயத்திரதனை இன்றொரு நாள் மட்டும் காத்து, அர்ச்சுனனை எரிமூழ்க வைத்து விட வேண்டும் என்று துடிதுடித்து நிற்கிறான் துரியோதனன். இவர்கள் இருவரில் வெல்பவர் எவரோ அவரே பாரதப் போரிலும் வெற்றி பெறுவார் என்கிற இந்தப் பரபரப்பான சூழ்நிலையில் இன்றைய போரைக் காண்பதற்குத் தேவர்களும் கூட வந்து வானில் திரண்டு நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்கிறார்கள்.

தஞ்சம் அடைந்தவரின் துன்பம் நீக்கி இன்பம் சேர்ப்பவரே கருணைக் கடல் ஆகிய கண்ணபெருமான். பொன்மயமான மந்திர மலையைக் கொண்டு பாற்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமுதினை அளித்த கருணைக்கடல் ஆகிய அவர், துரியோதனுடைய படைக்கடலையும் கலக்கி வெற்றி அமுதத்தை அர்ச்சுனனுக்கு வழங்கிட விழைந்து தாமே குதிரைகளைத் தேரினில் பூட்டி ஆயத்தமாகிறார். வீமனும், நகுல சகாதேவர்களும் தன் இருபுறமும் ஆரோகணித்து வர, பார்த்தசாரதி தேரை ஒட்டிவர, அர்ச்சுனனும் தேரில் அமர்ந்தவனாய் வாழ்வா சாவா இரண்டிலொன்று பார்த்து விடுவோம் என்பதாகப் போர்க்களத்திற்கு விரைந்து வந்து சேருகிறான்.

''அடைந்தவர் இடுக்கண் அகற்றுதற் கெண்ணி
ஆடகப் பொருப்பினாற் கடலைக்
கடைந்தமு தளித்த கருணையங் கடலே கடும்பரிச்
சாதனம் கடவ
மிடைந்தொளி உமிழும் வேற்படைத் தடக்கை
வீமனும் இளைஞரும் பலரும்
குடைந்திரு புறனுங் கைவர மகவான் குமரனும்
அமர்க்களம் குறுக'

(பதினான்காம் போர்ச் சருக்கம் :3)

என்று இந்திரன் மகனாம் அர்ச்சுனன் போர்க்களம் வந்து சேர்ந்ததை வருணிக்கிறார் வில்லிப்புத்தூரார்.

பாஞ்சாலியின் சகோதரன் திட்டதுய்மன் அன்றோ பாண்டவர் தானைத் தளபதி. அவன், தன் மைத்துனன் அர்ச்சுனன் எப்படியும் இன்றைய தினம் தான் செய்த சபதம் வெல்ல வேண்டும், அதற்குத் தோதாகத் தானும் படைகளை அணி வகுத்திட வேண்டும் என்ற ஆர்வம் மிகக் கொண்டவனாய் வலிமைமிக்க அரசர்களை எல்லாம் தன் அணியின் முகமென முன்னணியில் நிற்குமாறு செய்து, தானும் அச்சேனையின் முகத்திற்கு அலங்காரம் செய்ததைப் போல் முன்னணியில் நிற்கிறான். திட்டதுய்மன் பாண்டவர் படையை இவ்வாறு அணிவகுத்தது கண்டு தேவர்கள் எல்லாம் 'அபாரம், பாண்டவர் வியூகம்' என்று பாராட்டி மகிழ்கிறார்கள். அத்தேவர்களே 'அதி அபாரம், கௌரவர் படை வியூகம்'' என்று கூறிப் பாராட்டும்படியாகத் துரோணரும் மிக அற்புதமாகக் கௌரவ சேனையை அணிவகுக்கிறார்.

சகடம், பதுமம், சர்ப்பம், சூசி, கூடம் என ஐந்து வியூகங்களை வியூகத்திற்குள் வியூகமாக அவர் இன்றைய நாள் அணிவகுப்பது துரியோதனனுக்கும் பெரு மகிழ்ச்சியை உண்டாக்குகிறது. ''துரோணரே! அபாரம் உங்கள் வியூகம்

அதிஅபாரம். அர்ச்சுனனால் நம்மை ஒன்றும் அசைக்க முடியாது' என்று அவனே மனம் மகிழ்ந்து பாராட்டு கிறான்.

இருபது யோசனை தூரத்திற்கு கௌரவர்களின் சேனை மாத்திரமே பரந்து நிற்கிறது. சயத்திரதனைப் பாண்டவர்களின் கண்ணுக்கெட்டாத தூரத்தில் அவனை யாரும் நெருங்கிடாத வகையில் தம் வியூகத்தின்கடைப்பகுதி யில் நிற்கவைக்கிறார் துரோணர். அவனைச் சுற்றி நெருப் பினாலேயே கோட்டை அமைத்ததைப் போல குதிரை, தேர், யானை, காலாள் ஆகிய நால்வகைச் சேனைகளை யும் மிக நெருக்கமாக நிற்க வைக்கிறார், சயத்திரதனை எப்படியும் காப்பதாக முன் நாள் இரவு சபதம் செய்த துரியோதனனின் தம்பி துர்மர்சனுடன் துச்சாதனனை யும் முன்னணிச் சேனையில் நிற்க வைத்துத் துரோணர் தாமும் அவர்களுடன் நின்று கொள்கிறார். சேனையின் நடுப்பகுதியில் கர்ணன், சகுனி, சல்லியனையும் நிறுத்தி வைக்கிறார். அவர்களுக்கு அடுத்த பகுதியில் மகா வீரனும் வருண பகவானின் மைந்தனுமான சுதாயுவையும், ஆயிரம் தோள்களைக் கொண்ட பராக்கிரமசாலி ஆயிரவாகுவை யும் நிறுத்தி வைக்கிறார். சேனையின் பின் பகுதியில் துரியோதனனை நிற்க வைத்து அவனுக்குத் துணையாக ஆயிரக்கணக்கான ஆற்றல் பொருந்திய அரசர்களையும் நிற்க வைக்கிறார். இவர்கள் அனைவரையும் வெற்றி கொண்ட பிறகுதான் அர்ச்சுனன் சயத்திரதன் இருக்கும் இடத்தையே அடைய முடியும். அது இன்றைய ஒரு பகற் பொழுதிற்குள் நிச்சயம் சாத்தியப்படாது என்பதுதான் துரோணரின் கணிப்பு, அதுவே துரியோதனனின் கணிப்பும் கூட.

இப்படி அர்ச்சுனனின் கண்ணிற்குச் சயத்திரதனைக் காட்டாமலே பதினான்காம் நாள் போரை வெற்றிகரமாக முடித்துவிட முடியும் என்று நினைத்துப் பூரித்து துரோணர் வகுத்திருக்கும் வியூகத்தையும் மிக மெச்சிப் பாராட்டு

கிறான் துரியோதனன். 'அபிமன்யுவைக் கொன்ற சயத்திர தனே, அர்ச்சுனனையும் கொல்வான். இதைத் தருமரிடம் சொல் போ!' என்று துரியோதனன் கடோற்கசனிடம் முன்னிரவில் தான் மிக ஆவேசமாகக் கூறியதை நாம் கண்டோம். ஆனால் இப்பொழுதோ சயத்திரதனை அர்ச்சுனனின் கண்ணுக்கே காட்டாமல் ஒளித்து வைத்து வியூகத்தை அமைக்கச் செய்கிறான் துரியோதனன். துரோணர் வகுத்திருக்கும் வியூக அமைப்பினைக் காணும் போது சயத்திரதனை இன்றைய ஒரு பகற்பொழுதிற்குள் வெல்வது நிச்சயம் இயலாத காரியம் என்றே நமக்கும் படுகிறது. வானில் நின்று போரை வேடிக்கை பார்க்க வந்த தேவர்களும் கூட இவ்வாறே எண்ணித் தமக்குள் பேசிக் கொள்கிறார்கள்.

இவ்வாறு துரோணரும், திட்டதுய்மனும் தம்தம் படை களை அணிவகுத்து முடிந்தவுடன் போரும் தொடங்குகிறது. அர்ச்சுனன் தன் கனல் கக்கும் காண்டீபத்தில் விஷமொத்த அம்புகளைச் செலுத்திப் போரினைத் தொடங்குகிறான். வயலின் நாற்பக்க வரப்புகளும் மிக அதிகமான வெள்ளம் வந்து மோதும் போது சிதைந்து அழிந்து விடுவதைப் போலவே, சிங்கம் போன்ற அர்ச்சுனன் சிலிர்த்து சீறி அம்பு க்ளைப் பொழிய கௌரவச் சேனையின் வியூக அமைப்பு களும்கூட சிதைந்து நால்வகைச் சேனைகளும் நொடிப் பொழுதில் சிதைந்து அழிகிறது. ஒரு லட்சம் யானை வீரர் களுடனும், முப்பதினாயிரம் குதிரை வீரர்களுடனும் முன்னணிச் சேனையில் அர்ச்சுனனை எதிர் கொள்ள இருந்த துர்மர்சன், துச்சாதனன் இருவரும் சூரியனைக் கண்ட மின்மினிப் பூச்சிகளைப் போல் சிதைந்து ஓடி விடுகிறார்கள். இரண்டு நாழிகை நேரத்திற்காவது துர்மர்சனும் துச்சாதனனும் தாக்குப்பிடித்து போர் செய் வார்கள் என்று எதிர்பார்த்தார் துரோணர். ஆனால் அவர் களால் ஒரு நாழிகை நேரம் கூட அர்ச்சுனனுக்கு ஈடுகொடுத் திட முடியவில்லை.

மாண்டுபட்ட அபிமன்யு அல்லவா அர்ச்சுனனின் ஆயிரக்கணக்கான அம்புகளாக இப்பொழுது சீறிப் பாய்ந்து கொண்டிருக்கிறான். தன் மகன் அபிமன்யுவை முன் நாள் போரில் அநியாயமாகக் கௌரவர்கள் வஞ்சித்துக் கொன்று விட்ட அந்த ஆவேசமும் சோகமும்தான் முன் எப்போதும் இல்லாத அசுர வேகத்தை அர்ச்சுனனிடம் இப்பொழுது உண்டாக்கி, அவனைப் போர் செய்ய வைத்துக் கொண் டிருக்கிறது. துர்மர்சனும், துச்சாதனனும் தம் படைகளை எல்லாம் அர்ச்சுனனுக்குப் பலி கொடுத்து விட்டுத் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளப் புறமுதுகு காட்டி ஓடி விடுகிறார் கள். இதற்குப் பிறகு துரோணரே அர்ச்சுனனை எதிர்த்துப் போர்புரிய வருகிறார். தமக்கு வித்தை கற்றுக் கொடுத்த குருநாதருடனே இப்பொழுது அர்ச்சுனனும் தன் வித்தை யைக் காட்டிப் போரிடுகிறான். இருவருடைய தேர்களும் இடசாரி, வலசாரியாகச் சுழன்று மண்டலமாகவும் சுற்றி வரக் கோடிக்கணக்கான அம்புகளைப் பொழிந்து போர் செய்கிறார்கள்.

அர்ச்சுனனின் காண்டீபத்திலிருந்து சீறிப் புறப்படும் அம்புகள் ஒரு கோடி என்றால், துரோணருடைய வில்லில் இருந்தும் கிளம்பிச் சீறி வரும் அம்புக்ள் ஒரு கோடி. துரோணரின் அம்புகளில் ஒன்றுகூட அர்ச்சுனன் மேல் பட வில்லை. அதே போல் அர்ச்சுனனின் அம்புகளில் ஒன்று கூட துரோணரைத் தீண்டவில்லை. இவ்வாறு துரோணரிடம் அர்ச்சுனன் ஆற்றிக் கொண்டிருக்கும் போரால் வீணாகக் காலம் கழிவதல்லாமல் ஒரு பயனும் உண்டாகப் போவ தில்லை என்பதனால் கண்ணபெருமான் "அர்ச்சுனா! காலம் கடத்தாதே! துரோணருடன் விளையாடிக் கொண் டிருக்க இது நேரமும் இல்லை. நான் தேரை விலக்கி உள்ளே செலுத்துகிறேன். சயத்திரதன் இருக்கும் இடம் சேர இன்னும் நாம் இருபது யோசனை தூரம் கடந்தாக வேண்டும். அதை மறந்துவிடாதே" என்று கூறியவாறே தேரை இலாவகமாகத் துரோணரிடமிருந்து திருப்பி ஓட்டு கிறார்.

ஆனால் துரோணரோ, அர்ச்சுனனை விடுவதாக இல்லை. 'நில் அர்ச்சுனா நில்! என் வில்லுக்குப் பதில் சொல்லிவிட்டுப் போ' என்று கூறித் துரோணரும் அர்ச்சுனனை விரட்டி வர, அர்ச்சுனன் தம் குருநாதரிடம் நயமாகப் பேசுகிறான். "குருநாதரே! உம்மோடு போர் புரிந்திட தேவர்களாலுமே ஆகாதென்றால் என்னால் ஆகுமா? என்னுடைய சபதத்தைத் தாங்களும் அறிவீரே! என் சபதம் வெல்ல தாங்களும் துணை புரிய வேண்டும்" என்று அர்ச்சுனன் வேண்ட, துரோணரும் அதற்கு இசைந்து "சரி போ" என்பதாக அர்ச்சுனனைத் தொடராமல் தம் இடத்திலேயே நின்று கொள்கிறார்.

**"ஐய! நின்னொடு அமரிழைத்தல் அமரருக்கும் அரிதுநின்**
**செய்ய பங்கயப் பாதங்கள் சென்னி வைத்த சிறுவன் யான்**
**வெய்யஎன் சொல் வழுவுறாமை வேண்டும் என்ன முறுவலித்து**
**எய்ய வந்த முனிவு மாறி ஏகு என்று இயம்பினான்"**

(பதினான்காம் போர்ச் சருக்கம், 17)

கௌரவர்களின் முன்னணிச் சேனையை வென்றும், தன் வாக்கு சாதுர்யத்தால் துரோணரைக் கடந்தும் நடுச் சேனைக்குள் நுழைகிறான் அர்ச்சுனன். அவனை அங்கே எதிர் கொள்ள தயாராகக் காத்து நிற்கின்றனர் சகுனி, சல்லியன் மற்றும் கர்ணன் ஆகியோர். அளவிலாத சேனைகள் துணை வர சகுனி, சல்லியன், கர்ணனும் அர்ச்சுனனை எதிர்த்துப் போர் புரிகின்றனர். கடலை எளிதாகக் கிழித்துக் கொண்டு செல்லும் மரக்கலத்தைப் போல எதிர் வந்த அளவிலாத சேனையை ஊடறுத்துக் கொண்டு உள்புகுகிறான் அர்ச்சுனன். அர்ச்சுனனின் அம்புகள் சல்லியன் மேலும் சகுனியின் மேலும் சீறிப்பாய, அவர்கள் அங்கமெல்லாம் புண்பட்டு வருந்துகிறார்கள்,

அவர்களுடைய சேனையில் பலர் தோள்கள் அறுபட்டு அலறு கிறார்கள். கால்கள் அறுபட்டு கைகள் அறுபட்டுச் சாய் கிறார்கள். பலருடைய வயிற்றிலேயும் பாய்ந்து இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தோட வைக்கின்றன அர்ச்சுனனின் கணைகள். பலருடைய உடல்கள் மட்டுமே களத்தினில் நிற்க, அவர்களுடைய தலைகளையும் கொய்து கொண்டு பாய்கின்றன அர்ச்சுனனின் கணைகள், அர்ச்சுனனை எதிர்த்த சேனைகள் எல்லாம் எமனுலகைக் காண, சகுனி, சல்லியர் இருவரும் அர்ச்சுனனுக்குப் புறமுதுகு காட்டி ஓடு கிறார்கள்.

இவ்வாறு தன்னுடைய துணைவர்களையும் துணைப் படைகளையும் தன் கண்களுக்கெதிரிலேயே அர்ச்சுனன் கலக்குவதைக் காணுகின்ற கர்ணன் தானும் கொதித்து வந்து அர்ச்சுனனை எதிர்க்கின்றான். அர்ச்சுனன், கர்ணன் இருவருடைய விற்களின் நாணொலிகளும் இடியினைப் போல் ஒலிக்கின்றன. அம்புகளும் மின்னலைப் பாய்ச்சிய வாறு சீறிப் பாய்கின்றன. இரண்டு நாழிகை நேரம் அர்ச்சுன னுக்கும் கர்ணனுக்கும் நீடிக்கிற அப்போரில் அர்ச்சுனனே வெல்கிறான். கர்ணனுடைய மெய்க்கவசத்தைச் சிதைத்து, அவனுடைய மேனியையும் அம்புகளால் துளைக்கிறான் அர்ச்சுனன். கர்ணனுடைய வில்லும் உடைந்து போக, அவ னுடைய தேரும்கூட சிதைந்து விடுகிறது. சயத்திரதனைக் காப்பதாகச் சத்தியம் செய்த கர்ணன் இப்பொழுது தன் னைக் காத்துக் கொள்ளவே இயலாதவனாகக் கவசமும் தேரும் சிதைந்து, போர்க்களத்தில் மயங்கிச் சாய்கிறான்.

''அர்ச்சுனா! கர்ணனோடு போர் புரிந்ததில் மேலும் இரு நாழிகை நேரம் கழிந்துவிட்டது. வா! விரைவாகப் போய் சயத்திரதன் இருக்கும் இடம் சேருவோம்' என்று தேரினை மேலும் கௌரவர் சேனையின் உட்புறமாகச் செலுத்துகிறார் கண்ண பெருமான். அப்பொழுதுதான் மகா பராக்கிரமசாலியும், வருண பகவானின் மைந்தனு மான சுதாயு வந்து அர்ச்சுனனைத் தடுத்துப் போர் புரி

கிறான். அர்ச்சுனன் சுதாயுமேல் அம்புகளை ஏவ, அவை அனைத்தும் அவன் மேனியில் பட்டு அவனைச் சிறிதுகூட காயப்படுத்தாமல் பாறையிலே தூவப்பட்ட செந்நெல் விதைகள் விளையாமையைப் போல, நுனி முழுவதும் மழுங்கிக் கீழே சிதைந்து விழுந்து விடுகின்றன. சுதாயுவிடம் தன் காண்டீபம் பயனின்றிப் போவது கண்டு வருந்துகின்றான் அர்ச்சுனன்.

சுதாயுவின் மேனியைக் குறிப்பார்த்துக் கணைகளைப் பாய்ச்சி கொண்டிருந்த அர்ச்சுனன், இப்பொழுது அவனுடைய வில்லைக் குறிபார்த்து, பத்து நூறு அம்புகளை ஏவுகிறான். இதனால் சுதாயுவினுடைய வில்லும் சிதைந்து அழிந்துபட, அது கண்டு அர்ச்சுனன் அகம்மகிழ்கிறான். சுதாயு இதனால் மிகக் கோபம் கொண்டு, மந்திர வலிமை மிக்க கதாயுதம் ஒன்றை வரவழைக்கிறான். அந்தக் கதாயுதத்தைக் கண்டதும் தேவர்கள் எல்லாம் ''வந்தது அர்ச்சுனனுக்கு ஆபத்து! இக்கதாயுதத்தால் அர்ச்சுனன் மடிவது நிச்சயம்' என்றுகூறிப் பரபரக்கிறார்கள்.

சுதாயு, அந்தக் கதாயுதத்தை அர்ச்சுனன் மேல் ஏவுகிறான். அந்தக் கதாயுதத்தைத் தடுக்க, அர்ச்சுனனும் எதிர் பாணங்கள் பலவற்றை ஏவுகிறான். அவனுடைய பாணங்கள் அனைத்தையும் பயனிழக்கச் செய்து கொண்டு பாய்ந்து வருகிறது சுதாயுவின் கதாயுதம். ''ஆ! மடிந்தான் அர்ச்சுனன்'' எனத் தேவர்களும் பதற, கண்ணிமைக்கும் நேரத்தில் கண்ணபெருமான், அர்ச்சுனனைத் தாம் மறைத்து நின்று கொண்டு தம் திருமார்பில் சுதாயுவின் கதாயுதத்தைத் தாமே வலிய ஏற்றுக் கொள்கிறார். மலையையும் பொடிப் பொடி ஆக்கவல்ல சுதாயுவின் கதாயுதம் கண்ணபெருமானையும் மாய்த்து விடாதோ? மருகன் அபிமன்யுவின் மரணத்தைத் தடுக்காத கண்ணபெருமான், தம் மைத்துனனின் மரணத்தைத் தாம் தடுத்து அதற்காகத் தம் மெய்யை தியாகம் செய்து விடத் துணிந்து விட்டார் போலும்

என்று பாண்டவர் அணி வீரர்கள் பலரும் திகைத்து நிற்கிற அந்த நேரத்தில் நிகழ்கிறது ஒரு மாபெரும் விந்தை.

சுதாயுவின் கதாயுதம் கண்ண பெருமானுக்குச் சிறு ஊறும் செய்யவில்லை. வந்த வேகத்திலேயே அந்தக் கதாயுதம் திரும்பித் தன்னை ஏவிய சுதாயுவையே போய் தாக்குகிறது. கதாயுதத்தை ஏவிய சுதாயு, தன் கதாயுதத்தினால் தானே தாக்கப்பட்டு அங்கம் சிதறித் தேரிலிருந்து கதறி விழுந்து மாண்டு போகிறான். அவன் மாண்டு விழ, தேவர்கள் எல்லாம் மலர்மாரி பொழிந்து கண்ணபெருமானைக் கொண்டாடிப் போற்றுகிறார்கள்.

**''வாழி வாழி குந்தி மைந்தன் வலவன் வாழி வாழியே**
**வாழி வாழி அவனி உய்ய வந்த நாதன் வாழியே**
**வாழி வாழி காள மேக வண்ணன் வாழி வாழியே**
**வாழி வாழி வாசு தேவன் வாழி வாழி வாழியே''**

பின்னால் என்ன நடக்க வேண்டுமோ அதை முன்னமே கணித்துச் செயல்படுகிறவர் கண்ண பெருமான். ஆகவே அவரைத் தூரகாரி என்று குறிப்பிடுவார் வில்லிப்புத்தூரார். சுதாயுவைப் பற்றிய சகல செய்திகளையும் கண்ண பெருமான் அறிவார். அவன் வருணனின் புதல்வன்., அவன்தாய் பன்னவாதை என்பவள்., சுதாயுவிற்கு இற வாத வரம் அருளுமாறு வருணனை வேண்டினாள் பன்ன வாதை. ஆனால் வருணனோ பகைவர்களால் வெல்ல முடியாத வரத்தை மட்டும் சுதாயுவிற்கு வழங்கி, அவனுக்கு அபூர்வ ஆற்றல் படைத்த கதாயுதத்தை வழங்கினார். ''இந்தக் கதாயுதத்தை நீ எவர் மீது ஏவினாலும் இது அவரைக் கொல்லும். திருமால் ஆனாலும் பிரமன் ஆனாலும் அவர்களையும் இக்கதாயுதம் கொன்று விடும். ஆனால் நீ நிராயுதபாணியின் மீது இக்கதாயுதத்தை ஏவினால், இக்கதாயுதம் திரும்பி வந்து உன்னையே கொன்றுவிடும்'' என்று வருணன் எச்சரிக்கை செய்து சக்திமிக்க அந்தக் கதாயுதத்தைச் சுதாயுவிற்கு வழங்கி இருந்தான்.

முக்காலமும் உணர்ந்தவரான கண்ணபெருமான் அர்ச்சுனனை வீழ்த்த வல்ல அக்கதாயுதத்தை அர்ச்சுனன் மேல் செல்ல விடாமல்தாமே நின்று தம் திரு மார்பில் தாங்கிக் கொண்டார். அவ்வாறு அவர் தாங்கிக் கொண்ட அளவிலே நிராயுதபாணியாகத் திகழும் அவரை அக்கதா யுதம் ஒன்றும் செய்யாமல் தன்னை ஏவிய சுதாயுவையே திரும்பி வந்து தாக்கிக் கொன்று விடுகிறது. சிக்ஸருக்குத் தூக்கி அடிக்கப்பட்ட பந்தை எல்லைக் கோட்டில் நிற்கும் வீரன் எகிறிக் குதித்துக் கேட்ச் பிடித்து அவுட் ஆக்கி விடு வதைப் போலவே கண்ணபெருமானும் அர்ச்சுனனை வீழ்த்த வந்த சுதாயுவின் கதாயுதத்தைத் தம் திருமார்பில் தாங்கிச்சுதாயுவை வீழ்த்தி விடுகிறார். இதுதான் பார்த்த சாரதியின் அதி அற்புதமான சூழ்ச்சித் திறமை. அந்தச் சூழ்ச்சித் திறமையைக் கொண்டாடித்தான் தேவர்களும் ''வாழி வாழி குந்தி மைந்தன் வலவன் வாழி வாழியே'' என்று வாழ்த்தி, மலர்மாரி பொழிந்து போற்றுகிறார்கள். திடுக்கிட்டு மயங்கி நின்ற அர்ச்சுனனும் கண்ணபெருமானி டம் ''என்னமாயம் இது கண்ணா! எப்படி அவன் மடிந் தான் ?'' என்று வினவ, கண்ணபொருமானும் அர்ச்சுன னுக்குச் சுதாயுவின் வரலாற்றை விவரிக்கிறார்.

**''பன்னாவாதை என்றொருத்தி தாய்., தந்தையும்**
**படுதிரைப் பரவைக்கு**
**மன்னவன்., தரப்பெற்றனன் பலபடை**
**மறையொடும் வலிகூரத்**
**துன்னு நாமமும் சுதாயு., மற்றொருவரால்**
**தோற்றுயிர் அழிவில்லான்**
**முன்நிராயுதன் மிசை இவன் படையுறின்**
**முனிவுறும் வரம் பெற்றான்.''**

**''எறிந்த வெங்கதை கொன்றிடும் படைக்கலன்**
**எடுத்தவர் உடற்பட்டால்**
**அறிந்து நானிடை ஏற்றலின் அவனுயிர் அழிந்தது**
**என்று அருள்செய்தான்**

# 26

வீரகடோற்கசனின் மரணத்திற்குப் பிறகும் பதினான்காம் நாள் இரவுப் போர் முற்றுப் பெறவில்லை. வீரகடோற்கசனைப் பறிகொடுத்த பாண்டவர்கள், விராட மன்னனையும், துருபதனையும் கூட பறிகொடுத்து விடுகிறார்கள். விராட மன்னன், அஞ்ஞாத வாச காலத்தில் பாண்டவர்களுக்கு அடைக்கலம் கொடுத்த பண்பாளன். அபிமன்யுவுக்குத் தன்மகள் உத்தரையை மணம் செய்து கொடுத்தவன். ஆகையால் பாண்டவர்களுக்கு அவன் சம்பந்தி. துருபதனோ பாண்டவர்களுக்கு பாஞ்சாலியை மணம் செய்தளித்த மாமன். மாமனையும், சம்பந்தியையும், கடோற்கசனைப் பறிகொடுத்த அதே இரவில் பறிகொடுத்து விடுகிறார்கள். இவ்விருவருடைய தலையைத் துணித்து வீரசாகசம் புரிபவர் துரோணரே.

தன் தந்தை துருபதனைப் பறி கொடுத்த பாண்டவர் சேனைத் தலைவனான திட்டதுய்மன் துடிக்கிறான். 'துரோணரே! பழிக்குப்பழி. பதிலுக்குப் பதில். என் கண்கள் காண என் தந்தையைப் பலிகொண்ட உன்னை, உன் மகன் காண நானும் நாளைய போரில் பலி கொள்கிறேன். இது சத்தியம்'' என்று வீர சபதம் செய்கிறான் திட்டதுய்மன்.

பாண்டவர் அணியில் மேலும் இழப்பு ஏற்படா வண்ணம் அருச்சுனன் துரோணரையும், கர்ணனையும் எதிர்த்து கொடிய போர் செய்து அவர்களை வெல்லுகிறான். துரோணர் கர்ணன் இருவரும் அர்ச்சுனனுக்குத் தோற்றுப் புறம் கொடுக்க பதினான்காம்நாள் இரவுப் போரும் நிறைவு பெறுகிறது.

பாண்டவர்கள், கௌவரவர்கள் ஆகிய இரு சேனையினரும் தத்தம் பாசறைக்குத் திருப்பிக் காலைக் கடன்கள் ஆற்றி, உணவினையும் உண்டு சில நாழிகைகளுக்குள் மீளவும் குருச்சேத்திரக்களத்திற்குத்திரும்பி வந்து போரைத் தொடங்குகிறார்கள்.

பாண்டவர்களின் பாட்டனாரான குந்தி போசமன்னர் துரோணரை எதிர்த்துப் போர் புரிகிறார். நகுலன் தன் தாயுடன் பிறந்த மாமன் சல்லியனுடன் போர் புரிகிறான். அர்ச்சுனன் அசுவத்தாமாவோடும் வீமன் கர்ணனோடும், தருமர் துரியோதனனுடனும் போர் புரிகிறார்கள். ஆயிரம் தேவர்களுடன் துரோணரைச் சூழ்ந்து குந்திபோசர் வீரமாகப் போர் புரிய, துரோணரும் குந்திபோசரை எதிர்த்து மிகக் கடுமையாகப் போர் புரிகிறார். துரோணர் அக்கினியாஸ்திரம், வருணாஸ்திரம், வாயுவாஸ்திரம் என வலிமை மிக்க அத்திரங்களை ஏவிப் போர் புரிய பாண்டவர்களின் நிலை குலைந்து தோற்றுப் பின் வாங்க நேரிடுகிறது.

**தேயுவாளி வருணன் வாளி தேவர் வாளி திண்மை கூர்**
**வாயு வாளி முதலனைத்து வாளியாலும் மலைதலால்**
**ஆயுநூல் முனிக்கு உடைந்தது அன்புமிக்க தந்தையும்**
**தாயுமாகி மண்புரந்த தருமன் விட்ட தானையும்''**

(பதினைந்தாம் நாள் போர்ச்சருக்கம் 11)

தருமர் தாம் நாட்டாண்டிருந்த காலத்தில்குடி மக்களைத் தந்தையும் தாயும் போலப் பாசம் கொண்டு புரந்தவர். அவர் மறுபடியும் நாடாளக் கூடிய காலம் வருமானால் மக்கள் எல்லாவளமும் இன்பமும் பெருகி மகிழ்வார்கள். அவருடைய ஆட்சி விரைவில் வந்து சேராதவாறு இப்பொழுது இடையூறாக நின்று போரிட்டுக் கொண்டிருப்

பவர் துரோணர். அந்தத் துரோணரே இன்றைய போர்க் களத்தில் பாண்டவர் படை தோற்றுப் பின் வாங்குமாறு வீரப் போர் புரிந்து கொண்டிருக்கக் காண்கிறோம்.

மறம் வீறு கொள்ளவும் அறம் வீழ்ச்சி கொள்ளவும் முனிவர்கள் பார்த்து இருக்க மாட்டார்கள். ஆய்ந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்களே முனிவர்கள். என்றாலும் அவர்கள் அறம் தளர்வுறும் போது அடங்கி இராமல் அதனை நிலை நிறுத்த தங்களால் ஆன முயற்சியை மேற் கொள்வார்கள். பாரதப் போரின் பதினைந்தாம் நாள் போரில் துரோணர் ஆற்றக்கூடிய வீரப் போரினையும், அதனால் பாண்டவர் படை தளர்ந்து நலிவதையும் கண்டு மரிசி, வசிட்டர், அத்திரி, விசுவாமித்திரர், கௌதமர், ஜமதக்கினி, பரத்துவாசர் ஆகிய முனிவர்கள் ஏழுபேரும் துரோணரிடம் வருகிறார்கள், அவர்கள் சூட்சும ரூபம் கொண்டு துரோணர் மட்டுமே காண வருகிறார். துரோணரும் முனிவர்களைத் தலை தாழ்த்தி வணங்குகிறார்.

முனிவர்கள், துரோணருக்குத் தருமத்தை உபதேசிக்கிறார்கள். ''துரோண அபிமன்யு, கடோற்கசன் முதலான வீரமைந்தர்களை இழந்து பாண்டவர்கள் தளர்ந்து இருக்கிறார்கள். இரு நாட்கள் இரவிலும் உறக்கமின்றி அவர்கள் மனமும் உடலும் சோர்ந்து இருக்க, நீ சத்திரியரைப்போல் உக்கிரமாகப் போர் செய்து தருமம் வெற்றி கொள்வதற்குத் தடையாக நிற்கலாமா? பதினான்கு வகையான அத்திரப் பயிற்சிகளும் நிறைவுறப் பெற்று விளங்கும் நின்னை யாரால் வெற்றி கொள்வதற்கு இயலும்? குற்றமில்லாத தவமும் ஞான நூல்களினால் உண்டாகும் மெய்யறிவும் அல்லவா நின்போன்ற அந்தணர்களுக்கு அழகு, ஆகவே இனி நீ வில்லையும் வாளையும் கொடிய கோபத்தையும் கைவிட்டு விண்ணுலகு செல்லும் வழியினைத் தேர்வாயாக. உன் மனச் சஞ்சலம் மாறட்டும்,

உன் மனம் அமைதியை விரும்பட்டும். இப்பொய்யுலகை விடு, மெய்யுலகைத் தேடு'' என்று முனிவர்கள் எழுவரும் துரோணருக்கு உபதேசம் செய்கிறார்கள்.

**''மறைகெழு நூலுஞ் தேசும் மாசிலாத்தவமும் ஞானமும்,**
**முறைவரும் உணர்வுமல்லால் முனிவர்க்கு உறுதியுண்டோ**
**துறைகெழு கலைகள் வல்லாய் துன்னலர் செகுக்கும்**
**போரும் நிறைதரு வலியும் வாழ்வும் நிருபர் தம்**
**இயற்கையன்றோ**
**''தொடுகணை வில்லும்வாளுந் துரகமும் களிறும்தேரும்**
**விடுக வெஞ்சினமும் வேண்டா விண்ணுலகெய்தல்வேண்டும்**
**கடுகநின் இதயம் தன்னிற் கலக்கமற்றுணர்வி னொன்று**
**படுக என்று உரிமை தோன்றப் பகர்ந்தனர் பவமிலாதார்''**

(பதினைந்தாம் போர்ச் சுருக்கம் 14,15)

முனிவர்களுடைய உபதேச மொழியைக் கேட்டு துரோணருடைய அலைகடல் மனமும் சாந்தம் கொள்கிறது. தேரை ஊர்ந்து எதிரிகளை வெல்ல வேண்டும் என்ற எண்ணம் அவர் நீங்கியவராய் விண்ணுலகம் ஏகுதற்குப் புஷ்பக விமானம் வரவேண்டுமே என்று நினைவு மேலிட்டவராய் துரோணர் சாந்தமேற்கொண்டுத் திகழக் காணும் முனிவர்களும் தங்கள் நல்லாசியைத் துரோணருக்கு வழங்கி தாம் வந்தவாறே மற்றவர் கண்ணுக்குப் புலப் படாமல் திரும்பிச் செல்கிறார்கள்.

முனிவர்கள் சூட்சும ரூபத்தில் வந்ததும், ஞானம் உபதேசித்தும் அவர் தம்உபதேசத்தால் துரோணர் சாந்தம் பூண்டு தாம் விண்ணுலகடைவதற்குச் சித்தம் கொண்டு நிற்பதும் ஆகிய எல்லாவற்றையும் பார்த்தசாரதி காண் கிறார். அண்ட சராசரங்களை அளந்திடும் அவர் கண்களுக் குத் தென்படாத காட்சியும் உண்டா? துரோணரை மாய்ப் பதற்கு இதுவே நல்ல தருணம் என்று தெளியும் கண்ண

பெருமான் உடனே தமதருகே நிற்கும் பாண்டிய மன்ன னிடம் "நீ போய் திட்ட துய்மனிடம் துரோணரை வெல்ல இதுவே தருணம். துரோணரை எதிர்த்துப் போர் செய்யு மாறு நான் கூறியதாகக் கூறு" என்று உத்தரவிட பாண்டியனும் பார்த்தசாரதியை வணங்கித் திட்ட துய்மனிடம் சேதியைக் கூற விரைகிறான்.

கண்ணபெருமானும் துரோணரைக் கொல்வதற்கான வழியொன்றைச் சிந்தித்து அதைத் தருமரின் ஒத்துழைப் போடு செயலாக்கவும் எண்ணித் தருமரைக் கலந்தாலோசிக் கிறார். "தர்மா! வீமனின் இன்றைய வீரப்போரைப் பார்த் தாயா? மாளவ மன்னன் இந்திரவர்மனுடைய அசுவத்தாமா என்னும் பெயர் கொண்ட பட்டத்து யானையை வீமன் வதைத்தழித்த வீரமே வீரம். அசுவத்தாமனை வீமன் வதைத்துக் கொன்றான்" என்ற இந்தச் செய்தியை நீர் துரோணர் கேட்குமாறு கூற வேண்டும்" என்று கூறுகிறார் கண்ணபெருமான்.

வீமன் இன்றைய போரில் மாளவமன்னன் இந்திரவர் மனுடைய பட்டத்து யானையை வதைத் தழித்தது உண்மைதான். அப்பட்டத்து யானையின் பெயர் அசுவத் தாமா என்பதும் உண்மைதான். ஆனால் துரோணரின் மகன் அசுவத்தாமா வீமனால் மடிந்தான் என்கிற கருத்து தொனிக்கும் விதத்தில் துரோணர் கேட்குமாறு "அசுவத் தாமாவை வீமன் கொன்றான்" என்று தருமர் கூற வேண்டும் என்று கூறுகிறார் கண்ண பெருமான். துரோணரின் மகனான அசுவத்தாமா உண்மையில் இறந்து படவில்லை. அவனைச் சாகடிக்கும் வல்லமையும் உண்மை யில் பாண்டவர்களில் ஒருவருக்கும் இல்லை. அவன் சிவ பெருமானை ஒக்கும் நிகரில்லா ஆற்றல் கொண்டு பிறந்த வன். அவனுக்கு மரணமும் இப்பொழுது இல்லை என்பது பார்த்தசாரதிக்குத் தெரியும். உண்மை இவ்வாறு இருக்க,

''அசுவத்தாமாவை வீமன் கொன்றான்'' என்ற பொய்யைத் துரோணர் காதுகளில் விழுமாறு தருமரே கூற வேண்டும் என்று கண்ணபெருமான் ஏன் தருமரைக் கட்டாயப் படுத்துகிறார்.

பாரதப்போரின் முதல்நாள் போரை நினைவு படுத்தி நாம் பார்த்தோமானால் இதன் காரணம் நமக்குத் தெளிவாகும். முதல் நாள் போரின் போது போரைத் தொடங்குவதற்கு முன்பாகத் தருமருடன் சென்று கண்ண பெருமான் வீடுமரையும் துரோணரையும் பாரதப்போரில் பாண்டவர்கள் வெல்வதற்கு நல்லாசியை வழங்குமாறு வேண்டினார். வீடுமர் பத்தாம் நாள் போரில் சிகண்டி விடும் அம்புகளோடு அர்ச்சுனனுடைய அம்புகளும் சேர்ந்து தம்மேனியில் பாயுமானால் தாம் உயிர் விடுவதாக உறுதி அளித்தார். அவ்வாறே அவர் தம் உயிரையும் விடுத்த அந்த செய்திகளை எல்லாம் விரிவாக நாம் பார்த்தோம். முதல் நாள் போரின் போதே துரோணரும் தருமருக்கு வெற்றி உண்டாக நல்லாசி வழங்கி கண்ணபெருமானிடம் தம்மை வெல்வதற்கான உபாயம் இன்னதென்பதையும் தெரிவித்திருக்கிறார்.

**''மன் மகன் தருமன் வென்று வையகம் எய்தநிற்பான்<br>என் மகன் எனக்கு முன்னே இறந்தனன் என்று வானில்<br>வின் மகபதியை ஒக்கும் வேந்தர்முன் சொல்லிற் சூரன்<br>தன் மகன் மகனே! பின்னைச் சாபம் என்றெடுக்<br>கிறேனே''**

**''என் பெருஞ் சாபம் கைவிட்டுயான் எதிர்நிற்றலானும்<br>தன் பெஞ்சாபத்தாலும் சமரிடைத் திட்டதுய்மன்<br>வன்புடன் எனக்குக் கூற்றாய் மலைகுவன் மலைந்த<br>நின் பெருங் கருத்து முற்றும் ஏகுவீர் நீவிர் என்றான்''**

தன் மகன் அசுவத்தாமா மாண்டான் என்ற சேதியை நம்பத் தகுந்தவர் யாராவது தன் காதுபடக் கூறினால்

அதற்குப் பின்னால் தான் வில்லெடுத்து அம்பு தொடுக்கப் போவதில்லை எனவும் அந்த நேரத்தில் தன்னைக் கொல்வதற்காகவே பிறந்திருக்கின்ற திட்டதுய்மன் அம்புகள் விட்டால் தான் மாள்வேன் என்பதாகவும் துரோணர் பார்த்தசாரதியிடம் தெரிவித்திருக்கிறார். அதற்கு ஏற்பவே இப்பொழுது கண்ணபெருமான் உபாயம் செய்து அசுவத்தாமா மாண்டான் என்ற பொய்யை கூறி முனிவர்களின் உபதேச மொழிகளால் பொறுமை மேற்கொண்டிருக்கும் துரோணரை வீழ்த்துவதற்குத் திட்டமிடுகிறார் தருமருக்குச் சிரமம் இல்லாமல் கண்ணபெருமானே கூட அசுவத்தாமா மடிந்தான் என்ற பொய்யைத் துரோணர் கேட்க கூறிவிட முடியும். ஆனால் நம்பத் தகுந்தவர் கூறினால் அன்றித் துரோணர் நம்ப மாட்டார். கண்ண பெருமான் கூறினால் "கண்ணன் மாயக்காரன்; தன்னை மாய்க்கச் சதி செய்கிறான்" என்பதாகத் துரோணர் புரிந்து கொண்டு விடுவார். தருமர் "மெய்யினால் வகுத்தது அன்ன மெய்யுடைவேந்தன்" தருமமே வடிவமானவர் தருமர் தருமர் பொய் சொன்னால்தான் துரோணர் முற்றிலும் நம்புவார். முன்மொழிந்த மொழிப்படி தம் வில்லை கை விட்டு நிற்பார். திட்டதுய்மனும் துரோணரை வீழ்த்த முடியும். இவ்வாறெல்லாம் எண்ணித்தான் கண்ணபெருமான் "அசுவத்தாமா மடிந்தான்" என்கிற பொய்யை கூறுமாறு தருமரை வேண்டுகிறார்.

ஆனால் தருமரோ கண்ணபெருமானுக்கு உடன்படுவதாக இல்லை. கண்ணபெருமானிடம் "கண்ணா, இப்படிப்பட்ட பொய்யைக் கூறியா இந்த பூமியை வென்று நான் ஆள வேண்டும். இது நியாயமா?" என்று கேட்டு நகைக்கிறார் தருமர். மேலும் தருமர் கண்ணபெருமானிடம் "கண்ணா! பொய்யினால் விளையக் கூடிய கேடுகளை நீ அறிய மாட்டாயா? மனைவி, மக்கள், நெருங்கிய உறவினர் அன்பு, புகழ், செல்வம் இத்தகைய அனைத்துப் புண்ணியங்களையும் ஒரு சேர அழித்து விடக் கூடியதல்லவா பொய்

அத்தகைய பொய் மொழியை நான் புகலமாட்டேன்'' என்று தருமர் மறுத்துரைக்க கண்ணபெருமான் தருமரைச் சமாதானப்படுத்துகிறார்.

''தருமா! ஒருவர்க்கு வரக்கூடிய ஆபத்தை நீக்கவல்ல தாயின் பொய்யையும் கூட நாம் மெய்யாகவே எண்ண வேண்டும். ஆகவே நீ சொல்லக் கூடிய இம்மொழிகளால் அதர்மம் அழிந்து தருமமே வாழ்வு பெறப் போகிறது என்னும் போது அதை எப்படிப் பொய் என்று கூற முடியும்? மேலும் அசுவத்தாமா என்னும் யானை இறந்துபட்ட செய்தியைத்தான் நீ பொருள் மாறுபட உரைக்கப் போகிறாய். ஆகவே இதைப் பொய்யென்றும் கூட கூற முடியாது. மேலும் நீயோ அனந்தகோடி அருமறைகளும் ஆய்ந்து கூறும் தருமத்தின் வடிவமாகவே விளங்குகிறாய்! பெரு நெருப்பைச் சிறிது ஈரம் என்ன செய்யும்? ஆகவே உண்மையில் பொய் ஆகாத இந்த என் மொழிகளை நீ துரோணர் கேட்கக் கூறித்தான் ஆக வேண்டும்'' என்று தருமரை வற்புறுத்துகிறார் கண்ணபெருமான்.

கண்ணபெருமான் இவ்வளவு வற்புறுத்தும் போது அவருடைய சொல்லைத் தருமர் எவ்வாறு மறுத்துரைக்க முடியும்? ஆகவே தருமர் தம் தேரை துரோணரின் தேருக்கு அருகே கொண்டு போய் நிறுத்தி துரோணரை நோக்கி,

> **''அத்தனே அடுவல்லாண்மைய அசுவத்தாமா என்னும்**
> **மத்தவாரணத்துக்கு ஐயோ மாருதி சிங்கமானான்**
> **எத்தனை கோடிச் சேனை இக்களத்திற் இறந்தது இந்த**
> **வித்தகன் மலைந்து செற்ற விரகை என் சொல்வது?''**
>
> (பதினைந்தாம் போர்ச் சருக்கம், 27)

என்று சொல்கிறார்.

''தலைவா! வலிமையில் சிறந்து விளங்கிய அசுவத்தாமா என்னும் யானைக்கு வீமன் இன்று சிங்கம் ஆனான்! இக்களத்திலேயே அந்த யானையால் அழிவு

பட்டன கோடிக்கணக்கான சேனைகள். அந்த யானையை விந்தகன் ஆகிய வீமன் போரிட்டு கொன்ற வீரத்தை என்ன வென்று சொல்வது?'' என்று தருமர் துரோணரை நோக்கி கூறிய அளவில் துரோணர் தம் கையில் இருக்கும் வில்நழுவிக் கீழே விழ, மயங்கித் திகைத்து நிற்கிறார். 'வாழ்வாவது மாயம் அது மண்ணாவது திண்ணம்'' என்று சற்று நேரத்திற்கு முன்புதான் முனிவர்கள் துரோணருக்கு உபதேசித்துச் சென்றிருந்தார்கள். அதனால் தம்மை மரணத்திற்குத் தயார்படுத்திக் கொண்டிருக்கும் துரோணர், தம் மகன் அசுவத்தாமா அற்பாயுளாய் அதற்குள் மடிந்து போவான் என்று நினைக்கவே இல்லை. ஆனால் அசுவத்தாமா வீமனால் மடிந்தான் என்ற செய்தியைச் சொன்னவரோ தருமத்தின் வடிவமான தருமர். ஆகவே அது மெய்யாகத் தான் இருக்கும் என்பதிலும் துரோணருக்கு எந்தச் சந்தேகமும் உண்டாகவில்லை.

மகன் மடிந்த செய்தி கேட்டு மயங்கினாலும் துரோணர் கண்ணீர் சிந்தவில்லை. கதறி அழவில்லை. 'அசுவத்தாமா! உனக்கு ஆயுள் அவ்வளவுதானா?'' என்று மட்டும் அவருடைய உதடுகள் முணுமுணுக்கின்றன. கைகள் வில்லை நழுவ விடுகின்றன. இதுதான் தக்க தருணம் என்ற கண்ணபெருமானின் குறிப்பை அறிந்துகொள்ளும் திட்டதுய்மனும்கணைகளைஏவுகிறான். அக்கணைகளும் அந்தோ! வில்லாற்றலில் வல்ல துரோணரின் தலையைக் கொய்து கண்ணபெருமான் எண்ணிய எண்ணத்தை இனிதே நிறைவேற்றி முடித்து விடுகின்றன. இதே வேளையில் தன் தந்தை துரோணரைத் தேடிக் களத்திற்கு வந்த அசுவத்தாமாவும் தன் கண்களால் காண முன்நாளில் செய்த தன் சபதப்படியே திட்டதுய்மன் துரோணரின் தலையைக் கொய்து வீழ்த்தி விடுகிறான்.

தந்தையின் தலை துணிக்கக் கண்ட அசுவத்தாமா உற்ற சோகத்தை வில்லிப்புத்தூரார்,

"கண்டான் வீழ்ந்தான் அம்முனிபாதம் கமழ்சென்னி
கொண்டான் மோதிக் கண்பொழி நீரில் குளித்திட்டான்
வண்டார் சோர மண்ணுடல் கூர வன்னஞ்சம்
உண்டார் போல எண்ணம் அழிந்தான் உளம்
நொந்தான்"
(பதினைந்தாம் போர்ச் சருக்கம், 31)

என்று வருணிக்கிறார்.

அசுவத்தாமா தன் தந்தையின் மரணத்திற்குக் காரணம் என்னவென்பதையும் உடன் தெரிந்து கொண்டு விடுகிறான். அவனுடைய கோபம் கண்ணபெருமான் மேலும், தருமர் மேலும், திட்டதுய்மன் மேலும் பொங்குகிறது. கல்லைக் கடிப்பது போல் பல்லைக் கடித்துக் கொண்டு "கண்ணன் பொய் கூறப் புகல்வானாம். பொய் புகல்வதில்லை என்ற விரதம் மேற்கொண்டுள்ள தருமனும் அது கொண்டு பொய் புகல்வானாம். திட்டதுய்மன் என்ற குருத் துரோகி துரோணரிடமே வித்தை பயின்று துரோணரைக் கொல் வானாம்" என்று பொங்கிச் சீறுகின்ற அசுவத்தாமா துரியோதனன் தன்னைத் தேற்றவும் கூடத் தேறாமல் "பாண்டவர்களையும் திட்டதுய்மனையும் இப்பொழுதே நான் கொல்கிறேன்" என்று கொதித்து நாராயணாஸ் திரத்தை ஏவுகிறான்.

மந்திரப்பிரயோகம்செய்து அசுவத்தாமா நாராயணாஸ் திரத்தை ஏவ, ஊழிப் பெருங்காற்று நெருப்புடனே எழுவதைப் போல் பாண்டவரை நோக்கிப் பாய்ந்து வருகிறது அவ்வஸ்திரம். திருமாலின் அத்திரமாகிய நாராயணாஸ்திரம் எதிர்ப்படும் எவரையும் கொல்லும் ஆற்றல் கொண்டது. அசுவத்தாமா தன் தந்தையைப் பறிகொடுத்த ஆத்திரத்திலே பாண்டவர் சேனையை ஒருவருமின்றி அழித்தொழிக்க ஆவேசம் கொண்டு நாராயணாஸ்திரத்தை ஏவி விடுகிறான். இந்நிலையில் திருமாலின் நாராயணாஸ்திரத்தைத் திருமாலின் அவதார

மான பார்த்தசாரதி தானே தடுத்துப் பாண்டவர்களைக் காத்தாக வேண்டும். பார்த்தசாரதி தம் தேரை விரைந்து களமெங்கும் செலுத்தி, பாண்டவர் சேனையினர் எல்லோரும் அவரவர் ஆயுதங்களைக் கீழே போட்டு நிராயுதபாணியாகத் தேரிலிருந்து கீழிறங்கி நின்று நாராயணாஸ்திரத்தை வணங்கிடுமாறு கட்டளையிடு கிறார்.

கண்ணபெருமானின் கட்டளைக்கிணங்கவே தருமர் தம் ஆயுதங்களைக் கீழே போட்டுத் தம் தேரிலிருந்து இறங்கித் தரையில் நின்று நாராயணாஸ்திரத்தை வணங்குகிறார். அர்ச்சுனனும் அவ்வாறே நாராயணாஸ்திரத்தை வணங்கு கிறான். திட்டதுய்மன், நகுலன், சகாதேவர், மற்ற மற்ற மன்னர்கள், வீரர்கள் எல்லோருமே ஆயுதங்களைத் தரை யில் இட்டு, தம்தம் வாகனங்களிலிருந்து கீழிறங்கி நின்று, தலைக்கு மேலாகத் தம்மிருகைகளையும் தூக்கி நாராய ணாஸ் திரத்தைப் போற்றித் துதிக்கிறார்கள். ஆனால் வீமன் ஒருவன் மட்டும் தன் வில்லைக் கீழே போடாமல், தேரில்இருந்தும் இறங்கிடாமல் நாராயணாஸ்திரத்தை வணங்கிடாமல் மாற்றுக் கணைகள் பலவற்றை ஏவி வெகுண்டுபோர் செய்கிறான்.

நாராயணாஸ்திரமும் தன்னை வழிபடும் பாண்டவர் சேனையினர் ஒருவரையும் கொல்லாமல், தன்னை எதிர்த்துக் கணைளை விடும் வீமனை நோக்கிச் சீறி வருகிறது. வீமனின் பிடிவாதத்தைக் காணும் பார்த்த சாரதியும் ‘‘வீமா; உன் வீரத்தைக் காட்டிப் பயனில்லை. வில்லைக் கீழே போட்டு நாராயணாஸ்திரத்தை வணங்கு’’ என்று வற்புறுத்துகிறார். கண்ணபெருமானின் வார்த்தை களையும் கேளாமல் வீமன் நாராயணாஸ்திரத்தை எதிர்க் கிறான். ‘‘நாராயணாஸ்திரமே நில். என்னை உன்னால் என்ன செய்ய முடியும்?’’ என்று அதட்டிக் கண்களில் கோபாக்கினி ஜொலிக்க, வெப்ப மூச்சினை விட்டு மேலும் பலப்பல கணைகளை ஏவி நெஞ்சுரத்துடன் நாராயணாஸ்

திரத்தை எதிர்க்கிறான். வீமனுடைய அதட்டலுக்கும் மிரட்டலுக்கும் நாராயணாஸ்திரமா அஞ்சும்? துரோணரைத் திட்டதுய்மன் தலை துணித்ததைப் போலவே வீமனையும் தலைதுணிக்க நாராயணாஸ்திரம் சீறிப் பாய்ந்து வீமனை நெருங்குகிறது.

வீமனைக் காத்திட வேறு வழி தோன்றாமல் ஒரு நொடி திகைக்கும் கண்ணபெருமான், தாமே வீமனுடைய தேருக்குப் பாய்ந்து தாவி வீமனுடைய ஆயுதங்களை எல்லாம் தாமே வலிய வாங்கித் தரையில் வீசி அவனை நிராயுதபாணி ஆக்குகிறார். வீமனையும் தேரிலிருந்து கண்ணபெருமானே வலிவினில் இறக்கி இருகரங்களையும் கூட தாமே சேர்த்து நாராயணாஸ்திரத்தை வணங்கிடச் செய்கிறார். இத்தகைய பார்த்தசாரதியினுடைய உபாயத்தால் இவ்வாறு பதினைந்தாம் நாள் போரில் நீறாகி அழிந்து இருக்கவேண்டிய பாண்டவர் சேனையினர் அனைவரும் தப்பிப் பிழைப்பதோடு, ஆயுதங்களைக் கீழே போட மறுத்து முரண்டு பிடித்த வீமனும்கூட உயிர் பிழைக்கிறான். பாண்டவர் சேனையில் ஒருவரைக் கூட ஒன்றும் செய்யாமல் நாராயணஸ்திரம் திரும்பிவிட, அதனால் மேலும் கோபம் கொள்ளும் அசுவத்தாமா ''இவ்வுலகையே நாசம் செய்கிறேன்'' என்று கூறிப் பாசுபதாஸ்திரத்தை ஏவ முற்படுகிறான்.

சிவபெருமானுடைய அத்திரமாகிய பாசுதாஸ்திரத்தை ஏவினால் பூவுலகில் மானிடர் உள்ளிட்ட உயிரினங்கள் ஒன்றுமே பிழைக்கத்திருக்க முடியாது. பாண்டவாகளே அல்லாமல் கௌரவர்கள் அனைவரும் அவ்வத்திரத்தால் மடிந்து போவது திண்ணம். சிவபெருமானிடம் தவமிருந்து பாசுபதாஸ்திரத்தைப் பெற்ற அருச்சுனன், அவ்வத்திரத்தை நிவாதகவசகாலகேயஅரக்கர்களை வெல்லப்பயன்படுத்தியது அல்லாமல் இப்பாரதப் போரில் பயன்படுத்திலன் என்பதும் இங்கேநாம் நினைவில் கொள்ள வேண்டும். ஆனால் அசுவத்தாமா தன் தந்தை இல்லாத உலகில் வேறெவரும் வேறெந்த

உயிர்களுமே வாழவேண்டாம் என்றே ஆத்திரம் கொண்டு பாசுபதாஸ்திரத்தை ஏவ முற்படுகிறான். அசுமத்தாமாவின் பாசுபதாஸ்திரத்திலிருந்து உலகைக் காத்தாக வேண்டிய சிறந்த கடமை பற்றி வியாச முனிவரே இங்கு இப்பொழுது தோன்றி வந்து அசுவத்தாமாவிற்கு உபதேசிக்கிறார்.

''அசுவத்தாமா! உன் தந்தை துரோணரைத் திட்ட துய்மன் வதைத்தான் என்றுநீஎண்ணிடலாமா? துரோணரை வெல்லக் கூடியவர் இப்பூவுலகில் ஒருவருமே இல்லை. துருபதராசன் உன் தந்தையைக் கொல்வதற்காக அன்று இறைவனைக் கோரிப் பெற்ற வரமே உன் தந்தையைக் கொன்று இருக்கிறது. ஆகவே முருகனை ஒத்த மாவீரனே! சிவபெருமானைச் சிந்தித்துச் சாந்தம் கொள்' என்று வியாசர் அசுவத்தாமாவைச் சமாதானப்படுத்துகிறார்.

**''வரத்தினால் உனது தந்தை போரினில்**
**மடிந்ததன்றி ஒருவயவர்தஞ்**
**சரத்தினால் வெல்ல வல்லவர் தராதலத்தின் மிசை**
**இல்லையால்**
**உரத்தினால் விறல் மயூரவாகனனை ஒத்தவீர**
**இனி உள்ளூரச்**
**சிரத்தினால் அடிவணங்கி இடர்தீருமாறு நனி**
**சிந்தியாய்''**

(பதினைந்தாம் போர்ச் சருக்கம் 44)

சப்தரிசிகளின் உபதேசத்தால் முன் துரோணர் சாந்தம் கொண்டது போலவே வியாச முனிவரின் உபதேசத்தாலும் அசுவத்தாமா சாந்தம் கொள்கிறான்; கையில் எடுத்த பாசுபதாஸ்திரத்தை மந்திரம் கூறி ஏவாமல் தன் கோபத்தை அடக்கிக் கொள்கிறான். ''அசுவத்தாமா மேலும் கொடிய கணைகள் பலவற்றை ஏவினாலும் ஏவலாம். நாம் மறைந்து தப்பித்துக் கொண்டு விடுவோம்'' என்பதைப் போலக் கதிரவனும் விரைவாக ஓடி மேலைக் கடலில் மறைய பதினைந்தாம் நாள் போர் இத்துடன் நிறைவு பெற்று விடுகிறது.

# 27

கங்கையின் புதல்வரான வீடுமர், கௌரவ சேனைக்குப் பத்து நாட்கள் வரை தளபதியாக இருந்து போர் புரிந்து வீரமரணம் அடைந்து விட்டார். குரு துரோணரும் பத்தில் பாதியான ஐந்து நாட்கள் துரியோதனன் சேனைக்குத் தளபதியாக இருந்து போர்புரிந்து வீரமரணம் அடைந்து விட்டார். இனி, தன் ஆருயிர் நண்பனான கர்ணனை விட்டால் தன் சேனைக்குத் தகுந்த தளபதி வேறு யாரும் இருக்க முடியாது என்று எண்ணும் துரியோதனன் கர்ணனைத் தானை தளபதியாக்கிப் பாண்டவர்களை நிச்சயம் வென்று விடலாம் என்கிற நம்பிக்கையோடு பதினாறாம் நாள் போரை எதிர்கொள்ள குருசேத்திர யுத்தக்களத்திற்குக் கர்ணனுடனே வந்து சேருகிறான்.

**''கங்கை மகன் சிலையின் குரு என்பவர் காதி**
**மலைந்தே கையற்றார்**
**இங்கினி என்னுயிர் நண்பனை அல்லது வெல்ல**
**வல்லோர் இலரென்றே**
**அங்கர்பிரானை வரூதினியின் பதியாகென்று**
**அருள்செய்து அவனொடு**
**வெங்களம் உற்றனன் நஞ்சுமிழும் கொடிவேக**
**நாகவிறலோனே''**

(பதினாறாம் போர்ச் சருக்கம் 2)

துரியோதனனும் கர்ணனும் கொண்டிருக்கும் நட்பின் ஆழத்தை இப்பொழுது நாம் நினைந்து போற்றிடக் கடமைப் பட்டிருக்கிறோம். கர்ணன் சூரிய தேவனின் புதல்வன். ''அருணவெங்கதிர் ஆயிரத்தவன் அன்பினால் உதவும் கர்ணன்'' என்கிறார். வில்லிப்புத்தூரார். பண்பிற்

சிறந்த பாண்டவர்களின் தாயாகிய குந்திதேவியே கர்ணனின் தாயும் ஆவாள். குந்திபோச மன்னனுடைய அரண்மனைக்குத் துர்வாச முனிவர் வந்து தங்கியிருந்த பொழுது அரசகுமாரியாகிய குந்தி ஓராண்டுக்காலம் சிறந்த முறையில் பணிவிடை செய்ய அகம்மகிழ்ந்து துர்வாசர், தேவர்களை வரவழைக்கவல்ல மந்திரங்களைக் குந்திக்கு உபதேசித்தருளினார். அம்மந்திரங்களைச் சோதித்துப் பார்த்திட விழைந்த குந்தி, ஒருநாள் அரண்மனை உப்பரிகையில் வெண்ணிலவு காயும் இரவு வேளையில் சூரியதேவனுக்குரிய மந்திரத்தை உச்சரிக்க, சூரியனும் உடன் பிரசன்னமாகிக் குந்தியை அணைந்து, கர்ணனை மகனாகவும் உடன் கொடுத்து மணம் ஆகாத வளான குந்தியை மறுபடியும் கன்னியாக்கி மறைந்தான். கர்ணன் சூரியனைப் போன்ற பேரழகோடும் இந்திரன் முதலான தேவர்களும் இரந்து வேண்டுவனவற்றை ஈகும் வள்ளண்மையோடும் பிறந்தமையை வில்லிப்புத்தூரார்

**''அந்தியாரழல் எனப் பரிதியின் ஒளிஅடைந்த பின்**
**அணிமாடக்**
**குந்திபோசன் மாமடமகள் எழில்நலம் கொண்ட**
**கொள்கையள் ஆகி**
**இந்திராதிபர் அவரவர் முகமலர்ந்து இரந்தன தரத்தக்க**
**மைந்தன் ஆனவன் ஒருவனைப் பயந்தனள்**
**மாசிலாமணி என்ன''**

(சம்பவச் சருக்கம் 38)

என்று வருணித்திருக்கிறார்.

இத்தகைய அழகும், அறிவும், கொடைக்குணமும் சான்ற குழந்தையைப் பாசம் காட்டிப் பரிவு காட்டிப் பேணி வளர்ப்பதற்குத்தான் குந்தி கொடுத்து வைக்க வில்லை. திருமணம் ஆகுமுன்பே கையில் குழந்தையோடு நிற்கும் தன் காரணமாகத் தன் தந்தையை வையம் பழித்து

விடக் கூடாது என்பதற்காகவே பச்சிளம் குழந்தையை ஒரு பெட்டியில் வைத்துக் கங்கையாற்றில் விட்டுவிட்டாள் குந்தி. இந்தப் பெட்டியில் இருந்த குழந்தையைத்தான் திருதராட்டினின் தேரோட்டியாகிய சூதன் கண்டெடுத்து ஆதவன் அசரிரீயாக இட்ட ஆணையின்படி ''கர்ணன்'' எனப் பெயரிட்டு வளர்த்து வந்தான். கர்ணனின் அழகும் அறிவும் சூதனுக்கு ''இவனைப் பெற்றவர்கள் யாரோ தேவர்களாகத்தான் இருக்க வேண்டும்'' என்ற உணர்வைக் கொடுத்திருக்க வேண்டும். ஆகவே, அவனும் கர்ணனிடம் ''நீ என் சொந்த மகன் அல்ல, என்னால் கண்டெடுக்கப் பட்ட மகனே நீ'' என்ற உண்மையையும் கூட மறைக்காமல் சொல்லியே வளர்த்து வந்திருக்கிறான். ஆகவே கர்ணனைத் ''தன்னைப் பெற்றவர்கள் யார்? பெற்றுத் தன்னைப் பெட்டியிலே போட்டு ஆற்றிலே தள்ளி விட்டவர்கள் யார்?'' என்ற வேதனை உணர்வு அவனுடை இளமைக்காலம் முதலே வாட்டி வதைத்து வந்திருக்கிறது.

''குலவிச்சை கல்லாமல் பாகப்படும்'' என்பது பழமொழி. சூரிய குமாரன் ஆகிய கர்ணனிடம் வீரக் கலைகள் அனைத்தும் கல்லாமலே வந்து பொருந்தின. பரசுராமனைத் தன் குருவாகக் கொண்டு போர்க்கலைகள் அனைத்தையும் ஐயம் திரிபின்றித் தெளிந்து கொண்டான் கர்ணன். அர்ச்சுனனுக்கு நிகரானவில்லாற்றல் கர்ண னிடமும் இருந்ததைக் கண்டு, கர்ணனைத் தன்நண்பனாகக் கொண்டான் துரியோதனன். கௌரவர், பாண்டவர் களுக்குத் துரோணர் வித்தைகள் பயிற்றுவித்துப் பயிற்சிகள் நிறைவு செய்த நன்னாளில் அத்தினாபுரி அரசவையில் அர்ச்சுனன் முதலானோர் தங்கள் தங்கள் திறமைகளைக் காட்டி, வீரசாகசம் புரிந்தனர். அவையில் அர்ச்சுனன் செய்து காட்டிய வித்தைகளைக் கண்டு உற்சாகத்துடன் கரவொலி எழுப்பிப் பாராட்டினர்.

கர்ணன் அவ்வவையில் தன்னை சூதனின் மகனா அறிமுகப்படுத்திக் கொண்டு தானும் தன் திறமைகளை காட்ட அவையினர், அர்ச்சுனனுக்குச் செய்ததைக் காட்ட லும் மிகஅதிகமான கரவொலி எழுப்பிக் கர்ணனை பாராட்டினார்கள். அப்பொழுதுதான் கர்ணனிடம் வெறுப் பினை உமிழ்ந்து கிருபர் முதலான சிலர் ''தேரோட்டி மகனான கர்ணன், அரசகுமாரர்களுக்கு இணையாக எப்படி இவ்வவையில் வந்து நிற்கலாம்'' எனக்கேட்டுக் கர்ணனை அவமானப்படுத்தவும் செய்தார்கள்.

**''சூதன் மைந்தன் வேலையேழு சூழுமேதினிக் கெல்லாம்**
**நாதன் மைந்தனுடன் வெகுண்டு நவிலுதற்கு**
**நண்ணுமோ?''**

(வாரணாவதாரச் சுருக்கம் 67)

என்று கிருபர் கேட்டுக் கர்ணனைச் சிறுமைப்படுத்திய போதுதான் கர்ணனுக்குப் பரிந்து பேசித் தோள் கொடுக்க முன் வந்தான் துரியோதனன்.

கற்ற சான்றோர், எழில் நிறைந்த கன்னியர், கொடையாளர்கள், மகாவீரர்கள், அரசர்கள், தவசிகள் இவர்கள் எல்லாம் எக்குலத்தில் பிறந்தவராயினும் சிறப்புக்குரியவர்களே. தூணில் பிறந்தார் என்று நரசிங்கத்தை நாம் வணங்காமல் இருக்கிறோமா? சிவபெருமானும் கற்பாந்த காலத்தில் மூங்கிலில் தோன்றினார் என்பதாக ஒரு வரலாறு உள்ளதே! அகத்தியரும், துரோணரும் கும்பத்தில் அல்லவா தோன்றினார்கள். கர்ணன் தோன்றிய குலத்தை குறைகூறும் கிருபரே! நீர் தோன்றியதும், முருகப் பெருமான் தோன்றியதும் நாணல் காட்டில் அல்லவா! கர்ணனின் வீரத்தைக் கொண்டாட மனமில்லையானால் ஏன் அவன் பிறப்பைக் குறை கூறித் தாழ்வு படுத்த வேண்டும்?''

''கற்றவர்க்கும் நலன் நிறைந்த கன்னியர்க்கும் வண்மைகை
உற்றவர்க்கும் வீரரென்றுயர்ந்தவர்க்கும் வாழ்வுடைக்
கொற்றவர்க்கும் உண்மையானகோதில் ஞான சரிதராம்
நற்றவர்க்கும் ஒன்று சாதி நன்மை தீமை இல்லையால்''

''அரி பிறந்ததன்று தூணில் அரனும் வேயிலாயினான்
பரவை உண்ட முனியும்இப் பரத்துவாசன் மைந்தனும்
ஒருவயின் கண்முன் பிறந்தது ஓண்சரத்தின் அல்லவோ
அரிய வென்றி முருகவேளும் அடிகளும் பிறந்ததே''

(வாராணவதாரச் சுருக்கம் 68, 69)

இவ்வாறு கர்ணனுக்காகப் பரிந்து பேசி உடன் அங்க தேசத்திற்கும் கர்ணனை மன்னனாக அறிவித்துத் தான் அமர்ந்திருந்த சிம்மாசனத்திலேயே கர்ணன் அமர்வ தற்கும் பாதி இடம் கொடுத்துச் கர்ணனை ஆதரித்தவன் துரியோதனன் ஆவான். துரியோதனன் தனக்கு எத்தகைய மரியாதையைத் தன் தம்பிகளும் நண்பர்களும் அளிக்கிறார் களோ அத்தகைய மரியாதையில்ஒரு சிறிதும் குறைவின்றி கர்ணனுக்கும் அளிக்க வேண்டும் என்று கட்டளை யிட்டிருந்தான் என்றால், அவன் நட்பிற்கு அளித்திருந்த சிறப்பினை என்னவென்பது.

ஒரு நாள் கர்ணன், துரியோதனனைக் காண வேண்டி அவனுடைய அரண்மனைக்கு வந்தான். அப்பொழுது அரண்மனையில் துரியோதனன் இல்லை. ''வரும் நேரம் தான்'' என்று கர்ணனை வரவேற்ற அவனுடைய மனைவி, ''அவர் வரும் வரைக்கும் சொக்கட்டான் ஆடலாமே'' என்று கூற கர்ணனும் இசைந்து ஆடிக்கொண்டிருந்தான். ஆட்டத்தின் இடையிலேயே துரியோதனன் வந்துவிட, கணவனுக்கு மரியாதை செலுத்தும் விதத்தில் பானு மதியும் தன் ஆசனத்திலிருந்து எழ ''ஆட்டத்தினிடையில் ஏன் எழுகிறாய்?'' எனக் கேட்டுக் கர்ணனும் கைகளால் தடுக்க, அதனால் பானுமதியின் இடையில் அணிந்திருந்த

மேகலை அறுபட்டு மணிகள் சிதறி ஓட, அப்பொழுது தா கர்ணனும் துரியோதனனைக் கண்டவனாய், வரம்பை மீ நடந்து கொண்டு விட்ட தன்னை எப்படி துரியோதன கருதுவானோ என எண்ணித் திகைத்து மயங்க, துரியோ தனன் அங்கு நடைபெற்றது எதனையும் தவறெனவே எண்ணிடாமல் ''எடுக்கவோ கோர்க்கவோ'' என்று இயல்பாகக் கேட்டு உடன் மணிகளைக் குனிந்து எடுக்கவும் தொடங்கிய பெருங்குணத்தை என்னவென்பது? துரியோ தனன் துட்டனே ஆனாலும் கர்ணனைப் பொறுத்த வரையில் உத்தமன். நட்பிற்கு இலக்கணம் ஆனவன்.

சூரியனின் புதல்வனே கர்ணன் என்பதும் குந்திபெற்ற முதல் மகனே கர்ணன் என்பதும் கர்ணனுக்கே தெரிந்திடாத காலத்திலேயே கர்ணனைத் தோழனாகக் கொண்டுசிறப்புச்செய்தவன்துரியோதனன். அவன்காட்டிய நட்பின் ஆழத்தினால்தான், குந்தியைத் தன் தாயாகக் கர்ணன் பின்னால் தெரிந்து கொண்ட பிறகும் கூட புதியதாக வந்த பாசம் அவனுடைய பழமையான நட்பை மாற்றி விடவில்லை. ''மகனே கர்ணா! நீ வேறு யாரோ அல்ல, என்னுடைய மகன். பாண்டவர்கள் உன் தம்பிகள். நீ உன் தம்பிகள் பக்கம் வந்துவிடு, பாண்டவர்கள் தங்களுக்குரிய அரசை உனக்குத் தருவார்கள். குருகுல அரசர்களுக்கெல்லாம் அரசனாக நீ வாழலாம்'' என்று தாய் வேண்டிக் கெஞ்சிய போதுகூட கர்ணன் என்ன சொன்னான்?

''பெற்ற நீர் மக அன்பிலாமையோ அன்றிப் பெரும் பழி
நாணியோ விடுத்தீர்
அற்றைநாள் தொடங்கி என்னை இன்றளவும்
ஆருயிர்த்துணை எனக்கொண்டு
கொற்றமா மகுடம் புனைந்தரசளித்துக் கூடவுண்டு
உரிய தம்பியரும்
சுற்றமானவரும் என்னடி வணங்கத் தோற்றமும் ஏற்றமும்
அளித்தான்''

''மடந்தைபொன் திரு மேகலை மணியுகவே மாசறத்
திகழும் ஏகாந்த
இடந்தனிற் புரிந்தே நான் அயர்ந்திருப்ப எடுக்கவோ
கோக்கவோ என்றான்
திடம்படுத்திட வேலி இராசராசனுக்குச் செருமுனைச்
சென்று செஞ்சோற்று
கடன்கழிப்பதுவே எனக்கினிப் புகழும் கருமமும் தருமமும்''

(கிருட்டிணன் தூதுச் சருக்கம் 254, 255)

என்று கூறித் தாய்ச் சொல்லை மறுத்துச் செஞ்சோற்றுக் கடனையே தன் கடமையாகவும் புகழாகவும் தரும மாகவும் போற்றினான்.

பதினாறாம் நாள் போரில் துரியோதனன் தன்னைக் கௌரவர் சேனைக்குத் தளபதி என்று அறிந்திடும் போதும், கர்ணன் தன் செஞ்சோற்றுக் கடனை ஆற்றிடக் கிடைத்த சிறந்த வாய்ப்பாகவே இதனைக் கொண்டு பூரிக் கின்றான். அவன் மகுடத்தில் திகழும் மணிகள் சூரிய காந்தி போல் ஒளியை வீசுகின்றன. காதுகளில் அணிந்திருக்கும் பொன் குண்டலங்களும், மார்பில் அணிந்திருக்கும் பொன்னாபரணங்களும், கால்களில் கட்டி யிருக்கும் வீர கண்டைகளில் பொருந்தியிருக்கும் மணிகளும் ஜொலிக்க கர்ணன் தன் தந்தை சூரியனைப் போல் முகம் பிரகாசிக்கப் பேரழகு பெற்றுத் திகழ்கிறான். இவ்வாறு மலர்ந்து இந்த யுத்த களத்திலும் போரினைத் தொடங்கிடும் முன்பாக அந்தணர், பரிசில் மாக்கள் வறியோர் ஆகிய அனைவருக்கும் பொன்னையும் பொருளையும் வாரி வாரி வழங்குகின்றான்.

''மேவலர் ஏமர் என்னாமல்வெங்களந் தன்னில் நின்ற
காவலன் கன்னன் கையும் பொழிந்தது கனக மாரி''

"அந்தணர் பரிசில் மாக்கள் அவனிபர் முதலோர் யார்க்கும்
சிந்தைகள் களிக்கத் தான் தியாகமுஞ்சிறப்பும் நல்கி
கந்தன், ஓர் வதனமாகி அவதரித் தன்ன கன்னன்"

எனவரும் பாடற்பகுதிகள், கர்ணன் போர்க்களத்திலும் புரிகிற தர்மத்தைப் போற்றுகின்றன. ஆறுமுகங்களை கொண்ட முருகன், ஒரு முகம் கொண்டு கர்ணனாக தோன்றியிருப்பானோ என வில்லிப்புத்தூரார் வியப்பதையும் மேலே காண்கிறோம்.

கர்ணன் கௌரவசேனையை மகரவியூகமாக வகுக்க திட்டத்துய்மன் பாண்டவர் சேனையைச் சக்கரவியூகமாக வகுக்கப் போரும் தொடங்குகின்றது. வீமன் ஒரு யானை மேலும் காசி நகரத்தரசனான கேமதூர்த்தி மற்றொரு யானை மேலும் ஏறி நின்று போர் புரிகிறார்கள். அவர்கள் இருவருக்கும் தோதாக நின்று அவர்கள் யானைகளும் போர் புரிகின்றன. கால்கள் நான்கு, துதிக்கை ஒன்று, தந்தம் இரண்டு, மத்தகம் ஒன்று, வால் ஒன்று ஆகிய ஒன்பது அவயங்களாலும் இரண்டு யானைகளும் நெருப்புப் பொறி பறக்கப்பொருகின்றன. ஆதிசேடனும் தேவேந்திரனும் கூட வீமனும் கேமதூர்த்தியும் இவ்வாறு யானை மேல் நின்று ஆற்றக் கூடிய வீரப் போரினைக்கண்டு அஞ்சுகின்றன.

"கோடுகைம் முதலா ஒன்பது உறுப்பினும் கோறல் வல்ல
நீடுயர் மாவும் மாவும் நெருப்பெழ முனைந்து சீற
ஆடவர் தாமும் எண்ணில் அம்புமா மழைகள் ஏவிச்
சேடனும் அமரர் கோவும் வெருக்கொளச் செருச்
செய்தாரே"

(பதினாறாம் போர்ச் சருக்கம், 13

கேமதூர்த்தி வீமன் மேல் அம்புகளைப் பொழிகிறான். வீமனும் கேமதூர்த்தி மேல் அம்புகளைப் பொழிகிறான். கேமதூர்த்தி ஒரு வேலினை எடுத்து வீமன் மேல் எறிய

வீமன் வேலினை இரண்டு துண்டாக்கி, கேமதூர்த்தியின் யானை மேல் சரமாரியாக அம்புகளைப் பொழிகிறான். யானை, எண்ணற்ற அம்புகள் தன் முகத்தை ஊடுருவ அலறிய வண்ணம் தரையில் சாய்ந்து உயிர்விடுகிறது. யானையின் மேல் நின்றிருந்த கேமதூர்த்தியும் தரைக்குத் தாவுகிறான். தன் யானையை வீமன் வீழ்த்தி விட்டானே என்று கொதிக்கிற கேமதூர்த்தி ஒரு கதாயுதத்தை எடுத்து வீமனுடைய யானையையும் அடித்து நொறுக்க, வீமனுடைய யானையும் உயிர் விடுகிறது. வீமனும் தன் சத்துரு காதினி கதையுடன் தரைக்குப் பாய்ந்து கேம தூர்த்தியுடன் யுத்தம் புரிகிறான். இரண்டு மலைகள் மோதிக் கொள்வதைப் போல் கேமதூர்த்தியும் வீமனும் மோதிக் கொள்ளும் இக்கதாயுத்தத்தில், கேமதூர்த்தியின் தலையைத் தனியாகத் துண்டித்து அவனைக் கொன்று விடுகிறான் வீரவீமன்.

மற்றொருபுறம், கர்ணனும் நகுலனும் குதிரைகளில் அமர்ந்தவாறே போர் புரிகிறார்கள். கர்ண, நகுலர்களின் மனக் குறிப்பை உணர்ந்து அவர்களுடைய குதிரைகளும்கூட போர் புரிகின்றன. தொடைகளில் இடித்தால் நகர்வது, சவுக்கால் அடித்தால் ஓடுவது, கடிவாளத்தை இழுத்தால் திரும்புவது என்பனவற்றையெல்லாம் மிக நன்றாகத் தெரிந்து வைத்திருக்கின்றன, இந்திரனுடைய வெள்ளைக் குதிரையான உச்சைச் சிரவசுடன் ஒப்பிடத்தக்க இக் குதிரைகள். நகுலன் தன் வில்லாற்றலால் கர்ணனுடைய குதிரையை முதலில் வீழ்த்துகிறான். கர்ணன் தன் குதிரை மடிந்து சாய எதிர்நின்ற தேர் ஒன்றில் பாய்ந்து ஏறி, நகுல னுடைய குதிரையைக் கொன்று வீழ்த்துகிறான்.

நகுலனும் கர்ணனுடைய தேர்ப்பாகனையும், தேர்க் குதிரைகளையும் சாகடிக்கிறான். கர்ணன் நகுலனின் கவசம் சிதையும் வண்ணம் அம்புகளை விடுகிறான். ''நகுலன் பொடியன் — இவனிடமா வெகு நேரமாகப் போரிட்டுக் கொண்டிருப்பது?'' என்று வெகுளும் கர்ணன் கணைகளைப்

புயல் போல் பொழிய நகுலனுடைய தேரும் வில்லும் பொடி படுகின்றன. அடுத்த ஒரு கணையால் நகுலனையும் கொன்று விட எண்ணி அவன் மார்பைக் கர்ணன் குறிபார்க்கும் நேரம் அவனுடைய தாய் குந்திக்கு அவன் செய்து கொடுத்த வரம் ஒன்று கர்ணனின் நினைவிற்கு வருகிறது. ''அர்ச்சுனன் அல்லாத மற்ற தம்பிகள் நால்வரையும் கொல்ல மாட்டேன்'' எனக் கர்ணன், குந்திக்குச் சத்தியம் செய்து கொடுத்திருந்தான். அச்சத்தியத்தை நினைவு கொண்டவனாய்க் கருணையே வடிவமான கர்ணன், நகுலனை வதைத் தொழிக்காமல் உயிரோடு விட்டு விடுகிறான்.

பாண்டவர் ஐவரில் ஒருவர் மடிய நேர்ந்தாலும் மற்றவர்களும் மாண்டுவிடுவர் என்பதை அறிந்து வைத்திருப்பவர் ஆகிய பார்த்தசாரதி, போர் நடக்கும் நாளில் அத்தகைய அபாயம் கர்ணனால் நிகழக் கூடும் என்பதை முன்னமே யூகித்து,

> **''பைவரும் தலைகள் ஐந்து படைத்த பன்னகமே போல**
> **ஐவரும் படுதல் நன்றோ அங்கர்கோன் படுதல் நன்றோ**
> **உய்வரும் சமரில் ஆவி ஒருவர் போய் ஒருவர் உய்யார்**
> **நைவரும் துயரம் மாறி நடப்பதே தருமம்''**

எனக் குந்திக்கு அறிவுரை கூற, அத்தகைய ஒரு வரத்தைப் போருக்கு முன்னமே கர்ணனிடம் பெற்று விட்ட பார்த்தசாரதியின் அற்புத மதியூகம்தான் இன்றைய பதினாறாம் நாள் போரில் நகுலனின் இன்னுயிரையும் காக்கிறது. பார்த்தசாரதியின் மதியூகத்தை நினைந்து நாம் போற்றுகிற இதே நேரத்தில், தன்னுயிருக்குமே ஆபத்தான சத்தியத்தைச் செய்து கொடுத்து, துரியோதனனைப் போல் செய்து கொடுத்த சத்தியத்தைக் காற்றில் பறக்க விட்டு விடாமல் அதைக் காப்பாற்றுவதிலும் உறுதியைப் பேணக்கூடிய கர்ணனின் தியாக உள்ளத்தையும் கூட நாம் போற்றிப் புகழக் கடமைப்பட்டு இருக்கிறோம்.

தன் சத்தியத்தைக் காக்க வேண்டி இவ்வாறு கர்ணன் நகுலனைக் கொல்லாமல் விடும் போதும், நகுலனுக்குத் துணையாக வந்து போர் புரிந்த மகதராசனையும் விடத ரனையும் எமனுலகிற்கு அனுப்பி வைக்கிறான். வீர கர்ணன் கௌரவச் சேனையின் தளபதி எனும் பெருமிதத்தோடு போய் அர்ச்சுனனையும் எதிர்த்துப் போர் புரிகிறான். அர்ச்சுனன் ஏவிடும் இரண்டு வலிய அம்புகள் கர்ணனின் மார்பு கவசத்தைச் சிதைத்து மார்பிலேயும் காயம் உண்டாக்கிவிடவே, முதல் பந்திலேயே அவுட் ஆகிவிடும் ஆரம்ப மட்டையாளரைப் போல (Opening Batsman) கர்ணன் நிலைகுலைந்து போய்விடுகிறான். மாற்றுக் கணைகள் விடவும் சக்தியற்று அரை மயக்க நிலையில் தேரில் சாய்ந்து நிற்கும் கர்ணனிடம் அர்ச்சுனன் மேலும் கடுமை யாகப் போரிடாமல் ‘‘இன்று போய் நாளை வா’’ என்று கூறித் தானும் தன் பெருந்தன்மையைக் காட்டுகிறான்.

> **‘‘அன்று போர்புரி சேனையின் பதியான வீரனை நீ**
> **இன்று போய் இனி நாளைவா என இனிதியம் பினனால்**
> **வென்றிகூர் வரிவின்மையால் அடல் வெவ்வரக்கரை முன்**
> **கொன்ற காளையை ஒத்த பேரிகை கொண்ட**
> **ஆண்மையினான்’’**
>
> (பதினாறாம் போர்ச் சருக்கம், 38)

இராவணன் முதல் நாள் போரில் தோற்று ஆயுதங்கள் அழிந்து நின்ற போது இராமன் ‘‘இன்று போய் நாளை வா’’ என்று கூறி அனுப்பி வைத்ததைப் போலவே அர்ச்சுனனும், தனக்கு ஈடு கொடுக்க முடியாமல் தளர்ந்த கர்ணனை இன்னும் ஒருநாள் தளபதியாக இருந்து போர் புரியட்டும் என்கிற தயாள உள்ளத்தோடு ‘‘இன்று போய் நாளை வா’’ என்று கூறி அனுப்புகிறான். தன் தம்பி நகுலனைக் கொல்ல வாய்ப்பிருந்தும் கொல்லாமல் விட்ட கர்ணனின் கருணைக்கு அர்ச்சுனன் தானும் பிரதியுபகாரம் செய்வதைப் போல் ‘‘இன்று போய் நாளை வா’’ என்று

கூறிக் கர்ணனை அனுப்புவதாக நாம் கொண்டாலும் அதுவும் பொருந்துவதே ஆகும்.

இதே நேரத்தில் இதே யுத்தகளத்தின் மற்றொருபுறம் தருமரும் துரியோதனனும் முதன் முதலாக நேருக்கு நேர் நின்று போர் புரிந்து கொண்டிருக்கிறார்கள். "நீதிக்கொரு நிலையான்" "தருமத்தின் உயிர் என்று சொல்லத் தக்கான்" என்று தருமரைப் போற்றும் வில்லிப்புத்தூரார், தருமரின் சிறந்த போர் ஆற்றலையும் விரிவாகக் காட்டு கிறார். "துரியோதனா வா! இது என்ன எளிதில் வென்று விடக்கூடிய சூதுபோர் என்று எண்ணினாயா? இது மோது போர். இதில் வெற்றி கொள்ள வேண்டுமானால் வீரம் வேண்டும்! அந்த வீரமும், நெஞ்சில் ஈரமும் தானே உன்னிடத்தில் பஞ்சம்" என்று தருமர் துரியோதனனைக் கேலி புரிவதோடுதுரியோதனனின் இரு தோள்களையும் ஏழு கணைகளால் துளைக்கிறார். துரியோதனன் தருமரின் கணைகளைத் தாங்கிக் கொண்டவனாய்த் தானும் பல கணைகளைத் தருமர் மேல் ஏவுகிறான். இருவரும் தங்கள் தங்கள் தோள்களைக் கணைகள் ஊடுருவ, காயம்பட்ட இடங்களில் குருதி பெருக கோபமும் பொங்கிப் போர் புரிகிறார்கள்.

தருமர், நான்கு வலிமை வாய்ந்த கணைகளால் துரியோதனனின் தேரைச் சிதைக்கிறார். தரைக்குத் தாவி உருளும் துரியோதனன் ஒரு வேலினை எடுத்துத் தருமர் மேல் வீசுகிறான். அவ்வேலையும் ஓரம்பினால் இரு துண்டு களாக்கி வெற்றிப் புன்னகை புரிகிறார் தருமர். நிராயுத பாணியாகத் தரையில் திகைத்து நிற்கும் துரியோதனன் உயிரைப் பறிக்கும் வகையில், தருமர் மேலும் பல அம்பு களைப் பாய்ச்சிவிட முடியும். ஆனாலும் தருமர்தான் அவ்வாறு செய்யாமல், "துரியோதனா! எமனுலகிற்கு உன்னை நான் இப்போதே அனுப்பி வைத்துவிட முடியும். உன்னைக் கொல்வதாக வீமன் செய்திருக்கும் சபதம் பொய்த்து விடக் கூடாது என்பதனால் நான் உன்னை

இப்பொழுது உயிரோடு விடுகிறேன். உயிர் பிழைத்துப் போ'' என்று கூறுகிறார். வஞ்சனையே வடிவமான துரியோதனன் தருமருக்குப் பின் வாங்கிச் செல்பவன் போல் நடித்துப் பின் சென்று, சிதைந்த தன் தேரிலிருந்து கதாயுதம் ஒன்றையும் விரைந்து எடுத்துத் தருமர் மேல் வீசுகிறான். இதைச் சற்றும் தருமர் எதிர்பார்க்கவில்லை என்றாலும் சடாரென தான் விலகிக் கொண்டு விடுவதோடு, தானும் ஒரு வேலினை எடுத்து துரியோதனன் மேல் விட்டெறிய துரியோதனனின் மார்பைத் தருமரின் வேலும் போய் தாக்க, அவனும் மயங்கி மண்ணில் சாய்ந்து விடுகிறான்.

''துரியோதனன் சாய்ந்தான். தருமரின் வேல் பாய்ந்து விட்டது'' என்ற சேதி களமெங்கும் வேகமாகப் போய் பரவ துரியோதனன் இருக்கும் இடத்திற்கு கர்ணன் அசுவத்தாமா, கிருபன், சல்லியன் முதலானோர் விரைந்து வந்து அவனைச் சூழ்ந்து கொள்ளுகிறார்கள். அவர்களால் தருமருக்கு ஏதும் ஆபத்து உண்டாகலாம் என எண்ணி அர்ச்சுனன், வீமன், திட்டதுய்மன் முதலியோரும் வந்து தருமரைச் சூழ்ந்து கொள்கிறார்கள். இத்தகைய ஒரு பதட்டமான சூழ்நிலையில் மேலும் போர் நிகழ வாய்ப் பின்றி ஆதவன் மேலைக்கடலில் போய்மறைய பதினாறாம் நாள் போரும் நிறைவு பெற்று விடுகிறது.

இவ்வாறு குறிப்பிடத்தக்க பேரிழப்பு ஒன்று இன்றி இப்பதினாறாம் நாள் போர் நிறைவு பெறுவது ஓரளவிற்கு ஆறுதலாக இருந்தபோதிலும் நாளைய பதினேழாம் நாள் போரில் ஏற்பட இருக்கும் அந்தப் பேரிழப்பினை இப்பொழுது எண்ணும்போதே என் நெஞ்சம் துடிக்கின்றது. கண்களும் கடலாகின்றன. தருமத்தாயே கண்ணீர் வடித்து கதறக்கூடிய ஓர் பேரிழப்பினை நாம் நாளை காண இருக் கிறோம். அந்த இழப்பினைத் தாங்கிக் கொள்ள எதை யும் தாங்கும் வைர நெஞ்சத்தை நமக்கு இறைவன் அளித் திடுவானாக!

# 28

குருசேத்திர யுத்த களத்தில் பாண்டவர் மற்றும் கௌரவ சேனைகள் அணிவகுத்து நின்றிருக்கும் பதினேழாம் நாள் காலை தருமருடைய உள்ளத்தில் ஒரு கவலைத் தோன்றுகிறது. போர் இன்னும் எத்தனை நாட்கள் நடைபெறுமோ? இப்போரில் தானும் தன் தம்பிகள் நால்வரும் உயிருக்கு ஆபத்தின்றித் தப்பிப் பிழைத்திட முடியுமோ முடியாதோ? என்பதுதான் அவருக்கு உண்டான கவலை. யுத்த களத்தில் உயிர்க்கு அஞ்சிடலாகாது என்பது தருமருக்குத் தெரியும். தருமர் தம்முடைய உயிரைப் பற்றி ஒரு போதும் கவலை கொள்வதே இல்லை. அவருடைய கவலையெல்லாம் தம் முடைய தம்பிகள் நால்வரும் பிழைத்திருக்க வேண்டும் என்பதே. அதனால்தான் கண்ணபெருமானை வணங்கி, ''கண்ணா! எங்கள் ஐவரில் ஒருவர் மடிந்தாலும் மற்றவரும் வாழமாட்டோம் என்பதை நீ அறிவாய். எங்கள் ஐவரை யும் கைவிட்டுவிடாமல் இறுதிவரை காப்பாற்றுவேன்என்று உறுதி நீ கூறவேண்டும்'' என்று தருமர் கண்ணபெரு மானிடம் வேண்டுகிறார்.

அவ்வாறு வேண்டும்போது தருமர், இதுநாள்வரை கண்ணபெருமான் பாண்டவர்களுக்குப் புரிந்த உதவிகளை எல்லாம் தொகுத்துக் கூறியும் பார்த்தசாரதியைப் பல படப் புகழ்கிறார். பாரதப் போரின் சூத்திரதாரி பார்த்த சாரதியே என்பதைத் தான் நாம் இதுகாறும் இக்கட்டுரைத் தொடர் வாயிலாக வலியுறுத்தி வருகிறோம். இதே கருத் தைத்தான் தருமரும் நமக்குத் தெளிவுறுத்துகிறார். ''கண்ணா! இதுகாறும் நாங்கள் மாளாது வாழ்ந்திருக் கிறோம் என்றால் அதன் காரணம் நீயே. சிறுவயதிலேயே

துரியோதனன் கங்கையில் கழுமரங்களை நட்டுவைத்து வீமனை அதில் வீழ்த்தி உயிர் பறிக்க முற்பட்டபோது வண்டு வடிவமாக அங்கே கழுமரங்கள் தோறும் அமர்ந்து துரியோதனன் சூழ்ச்சியிலிருந்து வீமனைக் காத்தாய். அரசவையில் துரோபதையின் ஆடையைப் பலரும் காண களைந்து துரியோதனன் மானப்பங்கப்படுத்த முற்பட்ட வேளையில், நாங்கள் அதைத் தடுக்க இயலாமல் பார்த் திருந்த போதும் நீதான் துரோபதையின் மானத்தையும் காப்பாற்றினாய்.

வனவாசம் புரிந்தபோது துரியோதனன் ஏவலின்படி க்டும்பசியுடன் சபிக்க வந்த துருவாசரின் சாபத்திலிருந்து எங்களைக் காத்து நீதான் இரட்சித்தாய். எங்கள் அரசு உரிமைக்காகத் துரியோதனனிடம் தூது நடந்து போய் கர்ணனின் கவச குண்டலங்களைக் கவர்ந்து பல அரிய செயல்களையும் நீதான் ஆற்றினாய். நமது குமாரன் இரா வானைத் துரியோதனன் களப்பலி கொள்ள முயன்ற போது சதுர்த்தசியை அமாவாசையாக்கி இராவானை நமக்கே களப்பலியாக்கிய அற்புதமும் நீதான் புரிந்தாய். பார்த்த னுக்கும் உன் பெருங்கருணையினால் தேரூர்கிறாய். அச்சத் தினாலோ அல்லது பகைவர் பால் நீ கொண்ட அருளி னாலோ அர்ச்சுனன் காண்டீபத்தைக் கீழே போட்டு போர் புரிய மறுத்த போது அவனுக்கு உபதேசம் புரிந்து நீதான் போர்புரிய ஊக்கத்தையும் உண்டாக்கினாய்.

சிகண்டி முன் பிறப்பில் வீடுமரைக் கொல்ல பெற்று இருந்த வரம் தவறாதபடி வீடுமரையும் நீதான் கொன்று வீழ்த்தினாய். அருச்சுனனைக் கொல்வதற்காகப் பகதத்தன் வீசிய வேலை திருமார்பில் ஏற்று விசயன் வாழவும், பகதத்தன் வீழவும் நீயே திருவருள் புரிந்தாய். பகைவர் பலரும் வஞ்சமாய் அபிமன்யுவைக் கொன்ற அன்று அர்ச்சுனனும் புத்திர சோகத்தால் மாண்டு போகாமல் காத்து, அவனைக் கயிலைக்கு அழைத்துச் சென்று சிவபெருமானின் திருவருளையும் நீயே பெற வைத்தாய்.

வருணன் மகனாகிய சுதாயு அர்ச்சுனனை நோக்கி வீசிய கதையை நிராயுதபாணியாகிய நீ உன் திருமார்பில் தாங்கி அதனால் சுதாயு மாண்டு படவும் சூழ்ச்சி புரிந்தாய்; உண்மையில் மறையாதபோதும் கதிரவனை உன்கைச் சக்கரத்தால் மறைத்து இருளுண்டாக்கி மறைந்திருந்த சயத்திரதனை வெளிவரச் செய்து அர்ச்சுனனின் சபதம் பொய்யாகாதவாறு அவனை நீயே கொன்று பழி வாங்கவும் செய்தாய்.

அசுவத்தாமா ஏவிய நாராயணாத்திரம் நமது படை முழுவதையுமே கொல்ல முற்பட்ட போதும் நாங்கள் மாண்டிடாவண்ணம் எங்களை நிராயுதபாணியாக்கி நீயே காத்தாய்! இத்தகைய கருணாமூர்த்தியாகிய நீயே மும்மூர்த்தியும் ஆவாய். உன் அற்புதங்களெல்லாம் அறிய வல்லார் விண்ணிலும் மண்ணிலும் ஒருவருமே இல்லை. அப்படிப்பட்ட நீதான் எங்கள் ஐவரையும் இந்தப் போரில் இறுதிவரை காத்து அருள்புரிய வேண்டும்'' என்று வேண்டித் தருமர் கண்ணபெருமானின் திருவடிகளில் விழுந்து வணங்குகிறார்.

பாரதப் போரின் சூத்திரதாரியாகிய கண்ணபெருமானும் தருமரை வாரித்தம் தோள்சேர அணைத்துத் ''தருமா! மனம் தளரவேண்டாம்! வெற்றி உன்னுடையது! இன்றைய போரிலேயே கர்ணன் அர்ச்சுனனால் மடிவான். நாளைய பதினெட்டாம் நாள் போரில் வீமனால் துரியோதனனும் மடிவான். கடல் சூழ்ந்த உலகம் முழுதும் இனி நீயே ஆட்சி செய்வாய்'' என்று திருவாய் மலர்கிறார். ''நீர் ஐவரும் எண்ணரும் அமரில் இறக்கலீர், அஞ்சல்'' என்றும் அபயம் அளிக்கிறார்.

**''இத்தினம் இரவிச் சிறுவனும்**
**விசயன் ஏவினால் இறந்திடும் நாளை**
**தத்தினப் புரவித்தேர் துரியோதனனும்**
**சமீரணன் தனயனால் மடியும்**

**அத்தினபுரியும் ஈரிருகடல்சூழ் அவனியும்**
**நின்னவாம் என்றான்**
**சித்தின துருவாய் அகண்டமும்**
**செய்யகட் கருணையந் திருமால்''**

(பதினேழாம் போர்ச் சருக்கம்)

திருமால் இவ்வாறு உறுதி கூற தருமரும் தம் அச்சம் நீங்கி அகம் மகிழ்கிறார். இதே நேரம் கர்ணனும் துரியோ தனனிடம் தம் கோரிக்கை ஒன்றை வைத்து அவனை வேண்டுகிறான். 'துரியோதனா! இன்றைய ஒரு தினத் திலேயே நான் பகைவர்களின் தலைகளை எல்லாம் கொய்து தலையற்ற முண்டங்களைக் குதித்தாடும்படி செய்கிறேன். அதற்கு நீ, அர்ச்சுனனுக்குக் கண்ணன் சாரதியாய் இருப்பதைப்போல் மத்திரநாட்டு மன்னன் சல்லியனை எனக்குத் தேரோட்டுமாறு செய்ய வேண்டும். சல்லியன் எனக்கு தேர்ச் செலுத்துவானே யானால் அர்ச்சுனனுக்கு அந்தச் சிவனே வந்து தேர் செலுத்தி னாலும் அர்ச்சுனனோடு சிவனையும் நான் கொல்வேன். வீமன் முதலான மற்ற சகோதரர்களையும் நான் ஒவ்வொரு அம்பினாலேயே கொன்று இந்த உலகை நீ ஆள உனக்குக் கொடுப்பேன்'' என்று வீரம் பேசும் கர்ணன் தன் செஞ்சோற்றுக் கடன் உணர்வையும் துரியோ தனன் உளம்உருக எடுத்துரைக்கின்றான்.

**''ஒருரும் ஒருகுலமும் இல்லா என்னை**
**உங்கள் குலத்துள்ளோரில் ஒருவன் ஆக்கித்**
**தேரூரும் அவர்மனைக்கே வளர்ந்த என்னைச்**
**செம்பொன்முடி சூட்டியம்புராசி**
**நீருரும் புவிபாலர் பலரும் போற்ற நின்னினும்**
**சீர்பெறவைத்தாய் நினக்கேயன்றி**
**ஏருருங் கதிர்முடியாய் உற்றபோரில் யார்க்கினி**
**என்னுயிர் அளிப்பது இயம்புவாயே''**

(பதினேழாம் போர்ச் சருக்கம் 21)

''என்ன ஊர், என்ன குலம் என்று சொல்ல முடியாமல் தேரோட்டி மகனாக வளர்ந்த எனக்குத் துரியோதனா; நீதானே மணிமுடிசூட்டினாய்! அரசர்கள் எல்லாம் போற்ற அரசாளவும் அதனால் நின்னை விடவும் அதிகமான புகழ் கொள்ளவும் வாய்ப்பளித்தாய்! அப்படிப்பட்ட உனக்கு அல்லாமல் இந்தப்போரில் வேறுயாருக்கு நான் என்னுயிரை கொடுக்கப் போகிறேன்'' என்று கர்ணன் துரியோ தனனிடம் உளம் நெகிழ்ந்து கூறுகிறான். ''சிவன் வந்து தேர்விடினும் கொல்வேன்'' என்று சற்று நேரத்திற்கு முன்புதான் கர்ணன் வீரம் பேசியதையும் கண்டோம். ஆனால் அப்படி வீரம் பேசிய கர்ணனுக்கே எப்படியும்தான் இன்றைய போரில் மடிய நேரக்கூடும் என்ற ஐயமும் இருந் திருக்கிறது. அதனால்தான்''பூமியை உனக்கு ஆக்குவேன்'' என்று சொன்ன அதே வாயால் ''உற்றபோரில் யார்க்கினி என்னுயிர் அளிப்பேன்'' என்பதாகவும் தன் உயிரைத் துரியோதனனுக்குக் கொடுப்பதைப் பற்றியும் அவன் பேசக் காண்கிறோம்.

கர்ணனுடைய வேண்டுகோளுக்கு இணங்கும் துரியோதனனும் சல்லியனைத் தேடிப்போய் தனக்கு ஒரு வரம் தரவேண்டுமெனச் சல்லியனிடம் பணிவாக வேண்டுகிறான். ''துரியோதனா! நீகேட்பது எதுவானாலும் நான் மறுக்க மாட்டேன். வரம் என ஏன் பணிந்து வேண்டு கிறாய், நீ கேள்'' எனச் சல்லியனும் ஆர்வமுடன் கூற, துரியோதனனும்மகிழ்ச்சியுடன் ''கண்ணனைப் போல் நீயும் எங்களைக் காக்க வேண்டும்'' என்று கேட்டுக்கொள் கிறான். துரியோதனனின் உளக்கருத்தைப் புரிந்து கொள்ளாத சல்லியனும் மனம் மயங்கியவனாய் 'துரியோ தனா! உலகை எல்லாம் நீ ஆள்கிறாய். உன் குடைக்கீழ் வாழ்பவனாகியயான் எவ்வாறு உன்னைக் காப்பதற்கு ஆகும்? மேலும் அசையும் பொருள் அசையாப் பொருள் ஆகிய அனைத்திற்கும் ஆதிமூர்த்தியாக விளங்கும் கண்ணனுக்கு நானா ஒப்பாவேன்' என்று கேட்கிறான்.

இதன் பிறகே துரியோதனனும் தன் மனக் கருத்தைத் தெளிவாகக் எடுத்துக் கூறி ''அர்ச்சுனனுக்குக் கண்ணன் தேரோட்டுவதைப் போலவே நீயும் கர்ணனுக்குத் தேர் செலுத்தி எங்களைக் காக்க வேண்டும்'' என்று வேண்டுகிறான்.

துரியோதனன் கோரிக்கையைக் கேட்டு சல்லியன் கொதிக்கிறான். 'புல் தின்னும் மானுக்குப் புலியா பணி விடை செய்யும்? தேரோட்டி மகனாகிய கர்ணனுக்கு மத்திர நாட்டு மன்னாகிய நானா தேரோட்டுவேன்? துரியோதனா! இந்த வார்த்தையை நீ சொன்னதால் பிழைத்தாய், வேறுயாரேனும் சொல்லியிருந்தால் அவர் நாக்கை நான் அறுத்திருப்பேன். எதிர் நிற்கும் பாண்டவர் சேனையை இருகூறாக்கி நீ மதிக்கும் கர்ணனையும் என்னையும் இன்றைய தினமே இருசேனைப் பகுதிகளையும் நீறாக்கக் கட்டளையிடு. நான் கர்ணனுக்கு முன்பே என் பங்குப் படைகளைக் கொன்றொழித்து, வேண்டுமானால் அவன் பங்குப் படைகளையும் நானே கொன்றொழிக் கிறேன். அப்படி நான் செய்யாமல் போவேனேயானால் அதற்குப் பிறகு கர்ணனுக்கு நான் தேர் ஓட்ட இசை கிறேன்'' என்று ஆவேசத்துடன் சல்லியன் மறுத்துக் கூறத் துரியோதனன் சல்லியனைச் சமாதானப் படுத்துகிறான்.

''திருமாலின் திருஉந்திப் பூவில் தோன்றி நான்மறை களால் உலகைத் தோற்றுவிக்கும் பிரமதேவன் அல்லவா சிவபெருமானுக்குந் தேர் ஓட்டும் சாரதி. திருப்பாற் கடலில் பள்ளி கொண்டிருக்கும் ஸ்ரீமந்நாரயணன் என்று யாவரும் சொல்லுகின்ற கண்ணன் அல்லவா அர்ச்சுன னுக்குச் சாரதி! அவ்வர்ச்சுனனும் அல்லவா உத்தர குமாரனுக்குத் தேரோட்டியாகச் சேவகம் செய்திருக் கிறான். அழகான பூவுலகில் உள்ள எல்லோராலும் மதிக்கத்தக்க மகாபராக்கிராமம் பூண்ட சல்லியரே! தேரூரும் கலை என்ன சாதாரணமானதா? அது எல்லோருக்கும் வருமா? ஆகுமா? உம்மைப் போன்ற சகல

கலைகளிலும் வல்லவர்களுக்கு அல்லவா அது சாத்தி மாகும். ஆகவே உங்களைப் பெருமையாக மதித்துத்தா உங்களுக்கு நிகரானவர் ஒருவரும் இல்லை என்பதா தான் நான் உம்மைக் கர்ணனுக்குச் சாரதியாக வேண் கிறேன்'' என்று துரியோதனன் மிக நயமாக சல்லியனை வேண்ட சல்லியனும் துரியோதன வார்த்தையை மீற விரும்பாமல், கர்ணனுக்கு தேரு வதற்கு உடன்படுகிறான். சல்லியன் கர்ணனின் தே செலுத்த இசைந்ததும் 'இனி வெற்றி நமக்கே' என்பதாக கூறி கௌரவ சேனையும் ஆரவாரம் மிகப் புரிகின்றது கர்ணனும் சல்லியன் இசைந்தது கண்டு தான் முன் இந்திரனுக்கு வழங்கி இழந்த என்னுடலுடன் ஒட்டி பிறந்த கவச குண்டலங்களை மீண்டும் பெற்றதைப் போலப் பெருமகிழ்ச்சி கொண்டு சல்லியனை இறுகக் கட்டித் தழுவி தன்னுடைய தேர்மேல் ஏற்றுகின்றான். அதுகண்ட கௌரவ சேனையும் ''வெற்றி நமக்கே'' என்பதாக மகிழ்ந்து ஆரவாரம் புரிகின்றது.

ஆனால் கௌரவசேனையின் இந்த மகிழ்ச்சி நெடு நேரம் நீடிக்கவில்லை. அதற்குக் காரணம் கர்ணனின் தற்புகழ்ச்சிதான். 'பரசுராமர் அளித்த சூரியனுடைய வில்லைப் பெற்றிருக்கிறேன். நாகாஸ்திரம் பெற்றிருக் கிறேன். உன்னையும் தேர்ப்பாகனாகப் பெற்றுவிட்ட எனக்கு இனி நி-ரானவர் யாருமில்லை. அந்த அர்ச்சுனனை நான் நொடியில் அழிக்கிறேன் பார்'' என்று கர்ணன் தன் வீரப் பிரதாபத்தை எடுத்து முழக்க, சல்லியனும் அது பொறுக்காமல் 'வாய் வீரம் பேசாதே கர்ணா! தேர்கள் உருண்டு ஒன்றோடொன்று மோதிப் போர் புரியும் போதல்லவா யார் வீரம் வெல்லும் என்பதைக் கூற முடியும். இதுகாறும் நீ ஆற்றிய எந்தப் போரிலாவது அர்ச்சுனனை வென்றதுண்டா?'' என்று சல்லியன் கர்ணனை அடக்குகிறான்.

சல்லியன் பாண்டவர்களின் தாய்மாமன். நகுலசகாதேவர்களின் தாய் ஆகிய மாத்திரிதேவியின் சகோதரன். பாண்டவர்க்குப் பிரியமானவன். அவன் துரியோதனன் சூழ்ச்சியால் துரியோதனிடம் உண்டஒரு நாள் உணவுக்காக அவனுக்குச் செய்து கொடுத்த சத்தியத்தின் காரணமாக துரியோதனன் அணியில் நின்று பாண்டவர்களுக்கு எதிராகப் போர் புரிந்து கொண்டிருக்கிறான் என்பதை எல்லாம் நாம் ஏற்கனவே பார்த்திருக்கிறோம். அப்படிப்பட்ட சல்லியனிடத்திலேயே பார்த்தனின் வீரத்தைக் குறைத்துக் கர்ணன் பேசினால் அவன் எப்படி அதை பொறுத்துக் கொள்வான்? ஆகவே தான் சல்லியன் ''விசயனை ஒரு நாளும் நீ செயித்து யாரும் பார்த்ததில்லை'' என்று குத்தலாகக் கூற அதைச் சகிக்காத கர்ணனும் ''சல்லியா! மற்றவர்கள் முன்னால் என்னை இகழ்ந்து பேசாமல் நீ உனக்கிட்ட தேர் செலுத்தும் பணியை மட்டும் பார்'' என்று வெறுப்போடு கூறுகிறான். கர்ணனின் இந்த திமிரான வார்த்தைகளைக் கேட்டுச் சல்லியனும் கோபித்து ''எலியின் ஆரவாரம், பூனைக்கு முன் அடங்கிப் போகும். அதைப்போல உன் ஆரவாரம் என்னிடத்தில் ஒன்றும் செல்லாது. என்னையா என் வேலையைப் பார் என்று கூறுகிறாய்? உன்னை அடக்குவது தான் என் முதல் வேலை. வா! உன் வாய் வீரத்தை நான் அடக்குகிறேன்'' என்றபடி வாளை உருவியவாறு தேரிலிருந்து குதிக்கின்றான். கர்ணனும் தன் வாளை உருவியவாறு களத்தில் குதிக்கின்றான். இதைக் காணும் கௌரவ சேனை திகைத்து மயங்கி நிற்கிறது.

# 29

கர்ணனும் சல்லியனும் வாள் எடுத்து வீசிப் போர் தொடங்க முற்படுகையில் இதைக் கண்ணுறும் துரியோதனன் விழுந்தடித்து ஓடிவந்து தடுக்கிறான். 'கர்ணா! இதுவா எனக்கு நீ செய்யும் சகாயம்? தேவேந்திரனுக்கு அமராபதியை மீட்டுத் தந்த முருகக் கடவுளைப் போல நீயும் எனக்கு என் நாட்டைக் காத்துத் தரப்போகிறாய் என்று நான் நம்பி இருக்கிறேனே! ஆனால் நீயோ அர்ச்சுனனோடு போர் தொடங்குவதற்குப் பதிலாக நமக்குச் சகாயனான சல்லியனோடு போர்புரியப் போகிறாயா? உள்ளத்தில் ஒன்றும் உதட்டில் மற்றொன்றுமாகச் சல்லியனுக்கு வஞ்சகம் பேசத் தெரியாது. உன்னுடைய ஆவேசத்தைத் தூண்டினால் இன்னும் நீ சிறப்பாகப் போர்புரிந்து எனக்கு வெற்றியைப் பெற்றுத் தருவாய் என்பதற்காக அவன் ஏதேனும் பேசியிருக்கக் கூடும். அதனை நீ தவறாகப் பொருள் புரிந்து கொண்டு அவன் மேல் பாயலாமா? நம் அணியில் நமக்கு அரணாக நின்று போர் செய்திருக்க வேண்டிய விதுரரும் பரசுராமரும் தீர்த்த யாத்திரை போய் விட்டார்கள். வீடுமரும் துரோணரும் இறுதி யாத்திரை போய் விட்டார்கள். இனி நான் நம்பியிருப்பது உன் ஒருவனை மட்டுமே! நீயுமா என்னை இப்படி மோசம் புரிய எண்ணுகிறாய். கோபம் ஆறு; தேர்மேல் ஏறு; பாண்டவரைச் சீறு; வெற்றியை சேரு'' என்று துரியோதனன் சமாதானப் படுத்திக் கர்ணனைத் தேர் மேல் ஏற்றுகிறான்.

"மித்திரரென்று நோக்கா தென்னுடன் விளைந்தநண்பான்
மத்திர நிருபன் மைந்தன் வந்தெனக்கு உதவியானான்
சுத்திரனல்லன் செம்மைக் கொள்கையன் மறையின்மிக்க
வத்திர சாபம் வல்லான் இவனொடுஆரமர் செய்கிற்பாய்?''

**"என்மொழி மறாமல் இன்று உன் இரத சாரதியுமானான்**
**நன்மொழியன்றி வேறு நவை மொழிநவிறல் தேற்றான்**
**தன்மொழி உறுதி யாவும் தருமெனக் கைக்கொளாமற்**
**புன்மொழி யாடிநும்மிற் புலப்பது புன்மையன்றோ"**

(பதினேழாம் போர்ச் சருக்கம் 50,51)

இத்தகைய துரியோதனனின் நயமான மொழிகள் சல்லியனின் மனப்புண்ணையும் ஆற்றி விடவே அவன் மீண்டும் கர்ணனின் தேரில் ஏறி அவனுக்குச் சாரத்தியம் செய்கிறான். இதற்குப் பிறகே பதினேழாம் நாள் போரும் தொடங்குகின்றது.

கர்ணனுடைய எதிர்பார்ப்பினுக்கேற்பவே சல்லியனும் பார்த்தசாரதிக்கு ஒப்பாகக் கர்ணனுடைய தேரினைச் செலுத்துகிறான். சூறாவளியைப் போல் சுழன்று கழன்று கர்ணனின் தேரைச் சல்லியன் செலுத்த கர்ணனும் தன்னுடையவில்லாண்மையைக் கண்டு தேவர்களும் வியந்து பாராட்டுமாறு மிகக் கொடிய போரைச்செய்கிறான். மேரு மலைக்கு ஒப்பான தன் வில்லில் கர்ணன் ஒரே நேரத்தில் நூறு நூறு பாணங்கள் ஏவுகின்றான். பாண்டவர் தளபதியான திட்டதுய்மனையும் அவனுடன் திரண்டு வந்திருக்கும் துணைப்படைகளையும் கதிகலங்க வைக்கின்றான் கர்ணன். திட்டதுய்மனின் தேர்க் குதிரைகளையும் தேர்ப்பாகனையும் அழிக்கின்ற கர்ணன், இடையீடின்றிப் பலநூறு பாணங்களைப் பெய்து அவன் ஏறியிருக்கும் தேரையும் கூட சிதைத்தழித்து விடுகிறான்.

உடைந்த தேரிலிருந்து விழுந்து உருளும் திட்டதுய்மன் வேறொரு தேரில் பாய்ந்து ஏறுகிறான். ஆனால் கர்ணனுடன் மீண்டும் அவன் போரிடத் துணிவு கொள்ளாமல் அந்தத் தேரைத் திருப்பி ஓட்டுமாறு தேர்ப் பாகனிடம் கூறிப் புறங் கொடுத்து ஓடிவிடுகிறான். இதைக் காணும் தருமர் தன்னுடைய தேரைக் கர்ணனை நோக்கிச் செலுத்தச் செய்து தானே கர்ணனை எதிர்த்துப்

போரிடுகிறார். தருமருக்கு பாஞ்சாலர் மற்றும் கேகயர் துணையாக வருகின்றனர். கர்ணனுக்குக் கிருதவன்மன் கிருபன், சகுனி, அசுவத்தாமா முதலியோர் துணையாக வருகின்றனர். கர்ணன் தருமரின் இரு தோள்களில் எட்டு அம்புகளையும் மார்பில் ஏழம்புகளையும் செலுத்த ஆண் சிங்கம் போன்று அஞ்சிடாமல் நின்று போர் புரியும் தருமரும் ஒப்பற்ற இரண்டு அம்புகளை மட்டுமே செலுத்தி ஓர் அம்பினால் கர்ணனுடைய தோளினைப் பிளப்பதுடன் மற்றொரு அம்பினால் கர்ணனின் வில்லையும் அறுத்து விடுகிறார். தேவர்களும் தருமரின் போரைப் பார்த்து ''ஆஹா! தருமரின் வீரமல்லவா! வீரம்'' என்று புகழ்ந்துரைக்கிறார்கள். தருமர் தம் மாமனான சல்லியனையும் விட்டு வைக்கவில்லை. அவனுடைய மார்பிலும் போய் ஆழமாகத் தைக்குமாறு ஓர் அம்பினைச் செலுத்துகிறார் தருமர். சல்லியன் தன் தேரைத் தருமருக்கு அஞ்சித் திருப்பி ஓட்ட கர்ணனுக்குத் துணையாக வந்த கலிங்கதேசத்தார் மகததேசத்தார், குகுரதேசத்தார், ஒட்டிய தேசத்தார், முதலான பல தேசத்து மன்னர்களையும் அவர்தம் படை வீரர்களையும் வீர சுவர்க்கத்திற்குத் தருமர் அனுப்பி வைக்கிறார். வெற்றிச் சங்கினைத் தம் பவள வாயில் வைத்தும் தருமர் முழங்கிட அண்ட கோளம் வெடிக்கிறது. அட்டதிக்குகளும் செவிடுபடுகின்றன. மேலுள்ள தேவலோகமும் கீழுள்ள நாகலோகமும் நடுங்க உலகம் அழியும் கற்பாந்த ஊழி வந்துற்றதோ என்று எல்லோரும் அஞ்சி நடுங்கும் படியாக ஏழு கடல்களும்கூட பொங்குகின்றன.

''விசயனை வெல்வேன்'' என்று எப்பொழுதும் வீரம் பேசும் கர்ணன் தருமரின் சங்கநாதத்தைக் கேட்டுத் தருமரையும்கூட வெல்ல முடியாத தன்மேல் தானே ஆத்திரம் கொண்டு மீண்டும் விரைந்து வந்து தருமருடன் போர் புரிகிறான். கர்ணன் இரண்டு கணைகளை வீசி தருமரின் தேர் குதிரைகளை அழிக்க, தருமரும் இருகணைகளை ஏவி கர்ணனின் தேர்க்குதிரைகளை அழிக்கிறார்.

கர்ணன் மேலும் இரு கணைகளால் தருமரின் கொடியை அறுத்து தருமரும் அவ்வாறே கர்ணனின் தேர்க்கொடியை அறுத்துவீழ்த்துகிறார். கர்ணன், தருமரின் தேர்ப்பாகனைக் கொல்ல தருமரும் கர்ணனின் தேர்ப்பாகனை மாய்க்கிறார். அநுகாணும் அசுவத்தாமா போன்றோர் கர்ணனுக்கொப்பான தருமரின் வில்லாற்றலைப் போற்றி வியக்கின்றனர்.

இவ்வாறு மாற்றாரும் பாராட்டப் போர் புரிகிற தருமரின் தேரினைக்கர்ணன் பல அம்புகளை ஏவிச்சிதைத்து அழித்து விடவே, தருமர் சிதைந்த தன் தேரிலிருந்து தாவி மற்றொரு தேரில் ஏறுகிறார். தேர்ப் பாகனிடம் அவர் தேரைத் திருப்பி ஓட்டுமாறு கூற சாரதியும் அவ்வாறே செய்கிறான். அப்பொழுது கர்ணனும்கூட தருமரின் வீரத்தையும் அருங்குணங்களையும் பாராட்டி 'அறிவாற்றல் மிக்கு, ஆன்றோர்கள் போற்றும் புகழ்மிக்கு, சத்திய குணங்கள் மிக்கு; உலகெல்லாம் ஒருங்காளக் கூடிய அதிகாரம் பெற இருக்கிற தருமரா எனக்குப் புறங் கொடுத்துப் போவது? போகாதீர் நில்லும்! என்கணை களுக்குப் பதில் சொல்லும், என்னை வெல்லும்'' என்று கூவத் தருமரும் அதுகேட்டு கர்ணனுக்கு முன் தன் தேரைக் கொண்டு வரச் செய்து மீண்டும் அவனுடன் போர் புரிகிறார்.

அப்பொழுது தருமருக்கு உதவியாக உடுக்கை இழந்த வனுக்கு உதவும் கைபோல் வீமனும் விரைந்து வந்து சேர்கிறான். இது கண்டு சல்லியனும் ''கர்ணா! இனி வீமனிடத்தில் செல்லாதுன் வீரம்'' என்று கூற கர்ணனும் ''வீமனே யாகட்டும், அர்ச்சுனனே யாகட்டும்; என் ஒரு பாணத்துக்கு ஆற்றாமல் அவர்கள் அழிவது திண்ணம். நீ தேரைப் பேசாமல் ஓட்டு'' என்று கூறி வீமனோடு போரிடு கிறான். கர்ணனின் வாய் வீரம் சிதையும் வகையில் ஒரே அம்பினால் கர்ணனின் வில்லை வீமன் உடைத்துவிட வேறொரு வில்லை வேகமாக எடுத்துக் கொள்ளும் கர்ணன்

அதில் பன்னிரண்டு அம்புகளைச் செலுத்துகிறான். அப்பன்னிரண்டு அம்புகளையும் தன் மேனி மேல் பாயாமல் வீமன் தடுத்துத் தன் ஒரு கையினாலேயே அவற்றை பிடித்துப் பொடியாக்கி விடுகிறான். பிறகு கொடிய ஒரு பாணத்தை மட்டுமே கர்ணனின் மார்பில் செலுத்தி அவனை மூர்ச்சையாக்குகிறான்.

''சல்லியா! இன்னொரு பாணம் நான் செலுத்தினால் கர்ணனின் இன்னுயிர் இப்பொழுதே விண்ணுக்குப் பறந்து விடும். என் தம்பி அர்ச்சுனன் சபதம் பொய்த்துவிடக் கூடாதென்றே கர்ணனுக்கு உயிரை வழங்கிச் செல்கிறேன். அவனுடைய மயக்கம் தெளிந்த பிறகு இதை அவனிடத்தில் கூறு'' என்று கூறி வீமனும் தன் தேரைச் செலுத்தி அப்பால் செல்கிறான்.

பாரதப்போரில் பாண்டவர்களுக்குத் துணையாக நம் தமிழ் மன்னர்களும் கலந்து கொண்டு வீரப் போர் புரிந்து வருவதை நாம் அவ்வப்போது பார்த்து வருகிறோம். சித்திரவாகனப் பாண்டியன் அசுவத்தாமாவுடன் மிக உக்கிரமாக இன்றைய தினம் போர் புரிகிறான். சித்திர வாகனப் பாண்டியன் அசுவத்தாமாவுடன் போர் புரிந்து அவனுடைய தேர்ப்பாகனையும் தேர்க்குதிரைகளையும் அழித்து, அவனுடையவில்லையும் கூட சிதைத்தழித்து விடு கிறான். சித்திரவாகனப் பாண்டியனைப் போல வீரமாக வேறு யாரும் இன்றைய தினம் போர் செய்யவில்லை என்ப தாகக் கூறித் தம் நாட்டுப்பற்றைப் புலப்படுத்துகிறார் வில்லிப்புத்தூரார்.

**''சென்றெதிர் ஊன்றி வெவ்வேற் சேயனான் தேரின்மேலும்**
**வன்திறல் வலவன் மேலும் பரிமாவின் மேலும்**
**துன்றிய கணைகள் ஏவி தொடுசிலை துணித்துவீழ்த்தான்**
**இன்றவன் செய்த வீரம் அரசரில் யார் செய்தாரோ?''**

(பதினேழாம் போர்ச் சருக்கம், 108)

தமிழ் மொழியானது தம்மைக் கற்பார் நெஞ்சில் பாய்ந்து ஆழமாகப் பதியக் கூடிய மிகச் சிறந்த மொழி. அத்தகைய முத்தமிழைப் போல சித்திரவாகனப் பாண்டியன் ஏவிடும் அம்புகளும் கூட அசுவத்தாமாவின் மார்பிலே பாய்ந்து ஆழமாகப் பதிகின்றன என்று கூறுவதன் மூலம் தம்முடைய தமிழ்ப்பற்றையும் கூட இங்கே வில்லிப்புத்தூரார் காட்டியிருப்பதைப் படித்து நாம் மகிழ முடிகின்றது.

''அந்தணன் ஏவை எல்லாம் அவனிபன் அவ்வவ்வம்பால்
முந்துற விலக்கித் தங்கள் மூவகைத் தமிழும்போல
சிந்தையிற் குளிக்குமாறு சீலிமுகம் மூன்றுவிட்டான்
தந்தையை முதுகுகண்டோன் தனயனுக்கு
இளைக்குமோதான்''

(பதினேழாம் போர்ச் சருக்கம், 110)

பிட்டுக்கு மண் சுமக்கும் கூலியாளாகச் சிவபெருமான் வந்தபோது, பாண்டியன் பிரம்பினால் சிவபெருமானையே அடித்தார். அப்படி சிவபெருமானையே அடித்த பாண்டியன் மரபில் வந்த இந்தச் சித்திரவாகனன் சிவகுமாரனாகிய அசுவத்தாமாவை விட்டுவிடுவானா? என்கிற பொருளில் ''தந்தையை முதுகு கண்டோன் தனயனுக்கு இளைக்குமோ தான்'' என்று கவிநயம்பட பாடியிருப்பதையும் கண்டு மகிழ்கிறோம். சித்திரவாகனப் பாண்டியன் இவ்வாறு வீரப் போர் ஆற்றிக் கொண்டிருக்கும் போது அசுவத்தாமா வெகுண்டு தன் கொடிய வில்லை வளைத்து அம்பு மழையைப் பொழிந்து பாண்டியனின் செம்பொன் தேரைச் சிதைத்து அழித்து விடுகிறான். தேர் சிதைவுபட பாண்டியன் மாற்று தேர் ஒன்றும் கிடைக்காமல் போகவே, அருகிலிருக்கும் ஒரு யானை மேல் தாவி ஏறி யானையிலிருந்தபடியே அசுவத்தாமா மேல் தானும் அம்புகளைப் பொழிகின்றான். பாண்டியனின் தேரை அழித்ததைப் போலவே கொடிய கணைகள் பல

வற்றை யானையின் மேலும் எய்து, யானையையும் கூட அசுவத்தாமா கொன்றுவிட பாண்டியன் தரைக்குத் தாவிக் குதிக்கின்றான். தரைக்குத் தாவிய பாண்டியன் தன்னை சுதாரித்துக் கொள்ளும் முன்பாகவே அசுவத்தாமா கணை கள் பலவற்றை ஏவ, பாண்டியனும் வீர மரணத்தைத் தழுவி விடுகிறான்.

சித்திரவாகனப் பாண்டியன் இவ்வாறு வீர மரணம் தழுவ பாண்டவர்க்காகச் சத்தியப் போர் புரியும் தன் அற உணர்வோடும், பாண்டியனை வென்ற அசுவத்தாமாவை வென்று பழிவாங்க வேண்டும் என்கிற இன உணர்வோடும் அங்கே விரைந்து வந்து சேருகிறான் நம் சோழ மன்னன். ''உன் தந்தை துரோணரைக் கொன்ற திட்டதுய்மனை வெல்வதற்கு உனக்கு ஆற்றல் இல்லை. பாண்டியனை வென்றுவிட்டதாக ஆர்ப்பரிக்கிறாயா அசுவத்தாமா? யானை மேல் நின்றவனை தேரின் மேல் நின்று கொல் வதுவா வீரம்? அது வீரமல்ல, கோழைத்தனம்'' என்று இகழ்ந்து கூறி அசுவத்தாமனிடம் வீரப் போர் புரிகிறான் சோழன். அசுவத்தாமா, சோழ மன்னன் இருவரும் தத்தம் வில்லை வளைத்துக் கணைகளைப் பொழியவே ஆகாயமே தெரியவில்லை. அவர்கள் விடும் அம்புகளே எங்கும் தெரி கின்றன. சோழர் குலத்தில் தோன்றிய சிபி என்ற மன்னன் புறாவிற்காகத் தன் சதையை அரிந்து வழங்கிய போது அவர் மேனி இரத்தத்தால் சிவந்ததைப் போலவே அசுவத் தாமா ஏவும் கணைகளாலும் சோழனின் மேனி எங்கும் காயமுண்டாகி இரத்தம் பீறிடுகிறது.

அப்பொழுதும் அஞ்சிப் பின்வாங்கிடாமல் சோழ மன்னன் ஒரு வலிய வேலினை எடுத்து அசுவத்தாமா மேல் வீசுகிறான். அவ்வேலும் குறி தவறிடாமல் போய் அசுவத் தாமாவின் மார்பில் பாய, அவனும் சுருண்டு மயங்கித் தேரில் வீழ்கிறான். அசுவத்தாமாவிற்குத் துணையாக வந்த துரியோதனின் தம்பிகளின் புதல்வர்களாகிய சுவாது, சுவாகு, கர்ணனின் புதல்வனாகிய சங்கன் மற்றும் பலரும்

சோழனின் கணைக்குப் பலியாகி மடிகிறார்கள். சகுனி தன்னுடைய தலை தப்பித்தால் போதும் என்று அஞ்சி ஓடி ஒளிந்து கொள்கிறான்.

சோழனின் வீரத்தைப் பாராட்டும் வகையிலும், சோழர் களுக்குரிய 'சென்னி' எனும் பட்டப் பெயர் எப்படி வந்திருக்க இயலும் என்று தெளிவுபடுத்தும் வகையிலும் வில்லிப்புத்தூரார் ஓர் அழகிய பாடலை வடித்திருக்கிறார்.

''முன்னிய சிலைமறை முனிவன் மைந்தனும்
தன்னிக ரிலாவிறல் சகுனி யாதியாய்த்
துன்னிய நிருபரும் தொல்லமர்க்கு நீ
சென்னிஎன் றவன் புகழ் செப்பி மீளவே''

(பதினேழாம் போர்ச் சருக்கம், 134)

''அசுவத்தாமாவும், சகுனி முதலான மற்ற மன்னர்களும் வீரப் போருக்கு நீயே தலையானவன். தொல்லமர்க்கு நீ சென்னி'' என்று கூறி சோழனுக்கு அஞ்சிப் புறம் கொடுத்து ஓடிவிடுகிறார்கள்.

சோழனுடன் பொருது அசுவத்தாமா முதலானோர் புறமுதுகிடும் இவ்வேளைதான் வீர வீமனுக்கொரு பொன் வேளையாகவும் அமைகிறது. அவனிடம் துச்சாதனனும் அவன் தம்பிகள் ஒன்பது பேரும்வந்து வசமாக அகப்பட்டுக் கொள்கின்றனர். வீமன் துச்சாதனனைக் கண்டவுடனே களிபேருவகை அடைகின்றான்.

''இன்றோ உன்றன் சென்னி துணித்து இழி செம்புனலிற்
குளித்திடுநாள்
இன்றோ அழலினுள் உற்பவித்தாள் இருள் ஆரகம்
முடித்திடுநாள்

**இன்றோ தாகம் கெட நாவுக்கிசைந்த தண்ணீர் பருகிடுநாள்**
**இன்றோ உரைத்த வஞ்சினங்கள் எல்லாம் பயன்பெற்றிடு நாளே''**

(பதினேழாம் போர்ச் சருக்கம், 138)

என்று கூறி வீமன் மகிழ்கின்றான்.

துச்சாதனனே அன்றைக்குத் துரோபதையின் கூந்தலைப் பற்றித் தரதரவென இழுத்து வந்த மாபாவி; அரசவையில் எல்லோரும் காணப் பாஞ்சாலியின் துகிலை உரிந்த மாபாதகன். அவளை வீடுமர் முதலான சான்றோர்களும் கேட்க வேசி என்று வைத குணக்கேடன். அன்றைக்கு அன்னை துரோபதை சிந்திய கண்ணீர்தான் இன்றைக்குக் குருசேத்திரப் போர்க்களத்தில் கௌரவர்கள் சிந்தக் கூடிய செந்நீர். துச்சாதனன் பலரும் காண அரசவையில் பாஞ்சாலியின் துகிலை உரிந்து அவமானப்படுத்திய போது அன்னை ஆறாகக் கண்ணீரை ஓட விட்டாள். கோவிந்தா கோவிந்தா என்று வேறொரு சொல்லைக் கூறாமல் துச்சா தனன் பிடித்திழுத்த சேலையைத் தன் கைகளால் பற்றித் தடுத்தவாறு அன்னை அரற்றி அழுதாள். கோவிந்தன் அருளால் பாஞ்சாலி உடுத்திருந்த ஓர் ஆடை, ஓர் ஆயிரம் கோடி ஆடைகளாகப் பெருகி மானத்தைக் காப்பாற்றிய போது பாஞ்சாலியின் பத்தினித் தன்மையைப் பாரே) வியந்து போற்றியது.

ஆனால் அப்பொழுதும் துரியோதனன் தன் சித்தம் தெளிந்திடாமல் 'துச்சாதனா! அவளைப் பற்றி இழுத்து வந்து என் தொடைமேல் அமர்த்து'' என்று ஆணவத்தோடு கட்டளையிட்டான். அதற்குப் பிறகு தான் பாஞ்சாலிக்குப் பொங்கியது ஆத்திரம். ''எந்தத் தொடையில் என்னைத் துரியோதனன் அமர்த்தச் சொன்னானோ அந்தத் தொடையில் இரத்தம் பீறிட, கழுகுகளும் கொத்தஅவன் சாகட்டும்'' என்று சாபமிட்டாள். ''என் தலைமுடியைப் பிடித்திழுத்தும்,

ஆடையைத் தொட்டு அவிழ்த்தும். அடாதன செய்த துரியோதனன் துச்சாதனன் மாண்டுபட, பெருகிடும் அவர்கள் குருதியினைப் பூசி என் கூந்தலை நான் முடிப்பேன். அதுவரை துச்சாதனனால் அவிழ்க்கப்பட்ட என் கூந்தலை முடியேன்'' என்றும் அன்னை பாஞ்சாலி வீரசபதம் புரிந்தாள். அப்பொழுதுதான் வீமனும் ''கௌரவர் நூறு பேரையும் கொல்வேன். துச்சாதனன் இரத்தத்தில் குளித்த பிறகுதான் நான் என் கைகளினால் நீரையே அருந்துவேன். அதுநாள்வரை என் கைகளினால் நீரை அருந்த மாட்டேன். 'கதாயுதத்தினால் நீரை மோதி அதனால் சிதறும் நீர்த்துளிகளையே பருகிடுவேன்'' என்று வீரசபதம் புரிந்தான்.

''வண்டாரும் குழல் பிடித்துத் துகிலுரிந்தோன்
உடற்குருதி
உண்டாகம் குளிர்வதன்முன் இக்கரத்தாற்
புனலுண்ணேன் ஒருகால் என்கைத்
தண்டால் வெம்புனல்எற்றி மீதெழுந்து
விழுந்திவலை தண்ணீராகக்
கொண்டாவி புரந்திடுவேன் இது விரதம்
எனக்கெனவும் கூறினானே''

(சூது போர்ச் சருக்கம் 257)

இவ்வாறு சொன்ன தன் விரதப்படியே வீமன் கடந்த 13 ஆண்டுக் காலமாகத் தன் கைகளினால் நீரைப் பருகிடவில்லை.

இன்றைக்குத் துச்சாதனன் தப்பி ஓடிவிட முடியாதபடி வசமாக வந்து அகப்பட்டுக்கொள்ள, தன வஞ்சினம் வெல்ல நல்ல வேளைவந்து வாய்த்ததெனப் பூரிக்கின்றான் வீமன். வீமனுக்கு அதிகச் சிரமம் கொடுத்திடாமல் துச்சாதனனுடன் வந்திருக்கும் அவன் தம்பிகள் ஒன்பது பேரும் வீமன் விடும் கணை ஒவ்வொன்றினாலேயே தங்கள் தலை அறுபட்டு தேரில் சாய்ந்து உயிர் விடுகிறார்கள். துச்சாதனன்

உயிரைப் பறிப்பதற்குத்தான் வீமன் கொஞ்ச நேரம் போரிட வேண்டி இருக்கிறது.

முதலில் இருவரும் விற்போர் புரிகிறார்கள். துச்சாதனன் விடும்கணைகள் வீமன் அங்கமெல்லாம் துளைத்து நிற்க, அவையனைத்தும் பாறைமேல் விழும் மழைத்துளிகளைப் போல் வீணாகிப் போகும் வண்ணம், வீமன் அவற்றை உதறி எறிந்து விடுகிறான். துச்சாதனன் மீண்டும் ஏழுகணைகளைத் தொடுக்க அவற்றில் நான்கு கணைகள், வீமனின் தேர்க்குதிரைகள் நான்கினையும், ஒரு கணை வீமன் தேர்க்கொடியையும், ஒரு கணைவீமன் ஏறி நிற்கும் தேரினையும், எஞ்சிய ஒரு கணை வீமன் பிடித்திருக்கும் கைவில்லினையும் சிதைத்து அழித்துவிடுகின்றன. வேறு ஒரு தேரில் பாய்ந்து ஏறும் வீமன் தானும் பத்து கணைகளைத் தொடுத்து மந்திரமலையால் பாற்கடலைக் கலக்குதலைப் போலத் துச்சாதனனைக் கலக்கித் துச்சாதனனின் அங்கமெல்லாம் அம்புகளால் துளைத்தெடுத்து அவனுடைய கைவில்லையும் உடைத்துத் தேரையும் அழித்து விடுகிறான்.

இதற்குப்பின் துச்சாதனன் தரையில் குதித்து தன்னுடைய கதாயுதத்தை ஏந்தி வேகமாகப் பாய்ந்து வந்து ஒரே அடியால் வீமனின் தேரை அடித்து நொறுக்கிவிட, வீமனும் தன் கதையுடன் தரைக்குப் பாய்கின்றான். பிறகு இருவரும் வீராவேசமாகக் கதாயுத்தம் புரிகிறார்கள். வீமன் துச்சாதனன் இருவரும் கதையை தூக்கி ஆகாயத்தில் வீசி, ஒரு கையாலேயே அதை மீண்டும் [illegible] கிறார்கள். கண்டோர் அஞ்சி ஓடுமாறு கதையைச் சுழற்றுகிறார்கள். ஒருவரை ஒருவர் கோபாவேசத்துடன் அதட்டிக் கொள்கிறார்கள். அட்டதிக்கு யானைகள் அஞ்சவும், ஏழுலகிலும் உள்ளோர் காதுகள் செவிடுபடும்படியாகவும், ஆதிசேடனும் அச்சத்தால் நெளியும்படியாகவும் வலசாரி, இடசாரியாகச் சுற்றிச் சுழன்று வந்து இருவரும் கதாயுத்தம் புரிகிறார்கள். இவர்கள் இரு

வரும் ஆற்றக்கூடிய போரைத் திரண்டு வந்து வேடிக்கை காண்கிற தேவர்களும் ஏனையோரும் மானிடர் செய்யும் போராக இதை உணரவில்லை. மந்திரமலையும் இமய மலையும் காலும் கையும் முளைத்து எழுந்து நின்று, கதையைப் பிடித்துப் போரிடுவதாகவே உணர்கிறார்கள். வீமன் துச்சாதனனின் மார்பு, தோள்கள், கழுத்து என ஒவ்வொரு இடமாகப் பார்த்துப் பார்த்து ஓங்கி ஓங்கி அடிக்கிறான்.



# 30

வீமனும் துச்சாதனனும் இவ்வாறு சளைக்காமல் கதாயுத்தம் புரிய இறுதியில் அவர்களுடைய கதாயுதங்களே பிளவுபட்டு ஒடிந்துவிடுகின்றன. பிறகு இருவரும் வேறு ஆயுதங்கள் எதையும் எடுத்துக் கொள்ளாமல் தங்கள் தங்கள் கரங்களையே பயன்படுத்தி முட்டி யுத்தம் புரிகிறார்கள். ஐந்து விரல்களையும் ஒன்றாகக் குவித்து, விரல் நகங்களால் மேனியைக் கிழித்து இருவரும் முட்டியுத்தம் புரிய, துச்சாதனன் எப்படித் துரோபதையின் கூந்தலைப் பற்றி இழுத்தானோ அப்படியே வீமனும் துச்சாதனனின் முடியைப் பற்றி இழுக்கிறான். துச்சாதனன் எப்படித் துரோபதையின் துகிலை உரிந்தானோ அப்படியே வீமனும் துச்சாதனனின் உடலில் எலும்புகள் மட்டுமே நிற்கச் சதைகளைத் தனியே பிய்த்து இழுக்கிறான். வீமனின் நகங்களே ஆயுதங்களாய் துச்சாதனன் மார்பைப் பிளக்க அவனுடைய குடலும் அறுபட்டு வயிற்றுக்கு வெளியே வந்து தொங்க, இரத்தமும் கங்கை போல் பீறிட்டுப் பாய்கிறது.

அப்படிப் பீறிடும் இரத்தத்தில் அருவருப்பு சிறிதும் இல்லாமல், ஆகாயக் கங்கையில் நீராடினால் எப்படி மகிழ்ச்சி கொள்வானோ அப்படியே மகிழ்வுடன் நீராடுகிறான் வீமன். துச்சாதனன் மடிந்தான் என்பதும் அவன் இரத்தத்தில் வீமன் மகிழ்ந்து நீராடிக்கொண்டிருக்கிறான் என்பதும் குருச்சேத்திரக் களமெங்கும் வேகமாகப் பரவ, கிருஷ்ணார்ச்சுனர் உள்ளிட்ட எல்லோரும் திரண்டு வந்து இந்தக் காட்சியை வேடிக்கை பார்க்கிறார்கள். வீமன், துரோபதையின் கூந்தலைப் பற்றிய விரல்கள் இவைதானே என்று கேட்டு துச்சாதனனின் கைவிரல்கள் பத்தையும்

அறுத்து எறிகின்றான். துச்சாதனன் அன்று அரசவையில் துரோபதைக்கு இழைத்த கொடுமையை எண்ணி எண்ணி ஆத்திரம் அடங்கிடாமல் கொதிக்கின்ற வீமன், துச்சா தனன் செந்நீரையும் தண்ணீராக நினைத்துப் பருக முற்பட பார்த்தசாரதி 'வேண்டாம்' எனக்கூறித் தடுத்துவிடுகிறார். வீமனும் கையில் ஏந்திய துச்சாதனன் செந்நீரைக் குடிக்கா மல் தன் வாயில் விட்டு நன்குகொப்பளித்துக் கீழே உமிழ்ந்து தன் எண்ணம் நிறைவேறியதென்று மகிழ்ந்து கூத்தாடு கிறான்.

> ''குடியாமல் அக்குருதி கொப்பளித்து வாகை
> முடியாநின்று என் எண்ணம் முற்றினன் என்று ஆங்கண்
> படிஆரும் செங்கோன்மை பார்த்திவருக் கெல்லாம்
> கொடிஆர் மடங்கல் எனக் கூத்தாடி நின்றார்த்தான்''

(பதினேழாம் போர்ச்சருக்கம் 161)

வெற்றிக் களிப்பில் வீமன் இவ்வாறு கூத்தாட கௌரவர் சேனை நாலாபுறமும் சிதைந்து பறந்தோடு கிறது. இதைக் கண்டும், கர்ணன் தன் சேனையை ஒருங்கு திரட்டவோ, பாண்டவர்களுடன் ஆவேசமாகப் போரி டவோ முயலாமல் திக்பிரமை பிடித்தவன்போல் தன் தேரி லேயே திகைத்து நிற்க சல்லியன் கர்ணனைக் கடிந்து உரைக் கிறான். ''இதுபோன்ற நேரத்தில் அல்லவா தானைத் தளபதி மனங்கலங்கிடாமல் நின்று போர் செய்யவேண்டும்'' என்று சல்லியன் இடித்துரைக்கக் கர்ணனும் ''என் ஆருயிர் நண்பன் துச்சாதனன் மறைவால் ஏற்பட்ட சோகம் இது. இனிமேல் பார், நான் கொதித்துப்போர் செய்து பாண்டவர் களைக் கொன்றொழிக்கிறேன்'' எனக் கூறித் தன் தேரை அர்ச்சுனனை நோக்கி திருப்புமாறு ஆணையிடுகிறான் கர்ணன்.

இதே நேரத்தில் கர்ணனின் மகன் விடசேடனும் நகுல னும் ஒருவரையொருவர் எதிர்த்து வீரப் போர் புரிந்து

கொண்டிருக்கிறார்கள். புலிக்குப் பிறந்தது பூனையாகா தல்லவா! கர்ணனின் மகன் விடசேனன் நகுலனுடன் ஆற்றும் வீரப்போரைக் கண்டு அனைவருமே வியந்து நிற்கிறார்கள். நகுலனின் கணைகளை மாற்றுக்கணைகளால் அறுத்து நகுலன் ஏறிநிற்கும் தேர்களின் சக்கரங்களையும் விடசேனன் அழிக்க, சிதையும் தேரிலிருந்து தரைக்குத்தாவி நகுலனும் விடசேனனை எதிர்க்கிறான். விடசேனனின் தேர்க்கொடியை அறுத்து வீழ்த்தி, அவன் பிடித்திருக்கும் வில்லையும் நகுலன் அறுத்து வீழ்த்த நகுலனின் வீரத்தையும் வானவர்கள் பாராட்டுகின்றனர். ஆனாலும் விடசேனன் மற்றொரு வில்லைத் தாமதமின்றித் தன் தேரிலிருந்து எடுத்துக்கணைகளை ஏவ, நகுலன்மூர்ச்சையாகி தரையில் சாய்ந்து விடுகிறான். வீமன் அங்கே விரைந்து வந்து நகுலனைத் தன் தேரில் ஏற்றிக்கொண்டு பறந்துவிட, விடசேனனால் வீழ்த்தப்பட்டிருக்க வேண்டிய நகுலன் தப்பி உயிர் பிழைத்துவிடுகிறான். வீடசேனனின் வீரத்தைக் கண்ணுற்று வியக்கும் விசயன், தானே வலியவந்து, விடசேனனை எதிர்த்துப் போரிடுகின்றான்.

அர்ச்சுனனே தன்னை எதிர்த்துப் போரிட வரக்கண்டும் விடசேனன் அஞ்சிடாமல் "நகுலனை ஓடவைத்ததுபோல் உன்னையும் ஓட வைக்கிறேன் பார்" என்று வீரம் பேசி அம்புமழையைப் பொழிந்து அர்ச்சுனனின் அனுமக் கொடியையே கண்களுக்குத் தெரியாமல் மறைத்து விடுகிறான். அர்ச்சுனனும் கொதித்து சில கொடிய கணைகளை விட்டு விடசேனனின் விரல்கள் அனைத்தையும் அறுத்தெறிந்து ஓர் அர்த்தசந்திரப் பாணத்தால் விடசேனனின் கிரீடம் தாங்கிய தலையையும் அறுத்துவிடுகிறான். அர்ச்சுனனோடு போர் புரிய அவனை நோக்கி வந்து கொண்டிருக்கும் கர்ணன் தன் கண் எதிரிலேயே தன் மகன் தலைவேறு உடல் வேறாகி சாயக்கண்டு மீண்டும் மயங்கித் தேரினில் சாய்ந்து விடுகிறான். சல்லியனும் தேரைத் தனி இடத்திற்கு ஓட்டிச் சென்று கர்ணனை ஆசுவாசப்படுத்துகிறான்.

விடசேனனின் மரணமும், அதனால் கர்ணனின் சோக மும் காணும் அசுவத்தாமா, துரியோதனனைத் தேடிச் சென்று அவனுக்குச் சில அறிவுரைகளைக் கூறுகின்றான். "துரியோதனா ! துச்சாதனன் மடிந்த சிறிது நேரத்திற்குள் விடசேனனும் வீழ்ந்துவிட்டான். நம் அணியில் நமக்கு அரணாய் நின்று போரிட்ட வீடுமர் துரோணர் உள்ளிட்ட வீராதி வீரர்களை எல்லாம் கூட நாம் பறிகொடுத்து விட்டோம். இனிப் பாண்டவர்களை வெல்ல முடியும் என்று எனக்குக் கொஞ்சமும் நம்பிக்கை இல்லை. நீ எஞ்சியிருக்கும் உன் தம்பிகளோடு நீண்ட காலம் வாழ்ந்திருக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன். அதற்கு ஒரே வழி நீ தருமரோடு இந்தக் கடைசி நேரத்திலேனும் சமாதானமாகப் போகவேண்டும். அவர்களுக்குரிய நாட்டை நீஅவர்களுக்குக் கொடுத்துவிட்டு, உனக்குரிய நாட்டை நீ ஆட்சி செய்து சுகமுற வாழலாம். போரை நிறுத்திவிடு" என்று அசுவத்தாமா துரியோதனனுக்கு அறிவுரை பகர்கிறான். ஆனால் மூர்க்கனும் முதலையும் கொண்டது விடமாட்டார்கள் அல்லவா! துரியோதனனும் "பாண்டவர்க்கு அவர்கள் பங்கு இராச்சியத்தை நான் கொடுக்கவேண்டுமா? அது என் உயிர் இருக்கும் வரை நடக்காது" என்று திட்டவட்டமாக மறுத்து "அசுவத்தாமா ! நீ போய் கர்ணனுக்கு ஆறுதல் சொல்லி அர்ச்சுனனைக் கொல்லுமாறு சொல்" என்று துரியோதனன் அசுவத்தாமாவைத்திருப்பி அனுப்ப "இவன் கேட்கமாட்டான்" என்பதாக மனம் நொந்து அசுவத்தாமாவும் கர்ணனைக்கண்டு அவனுக்கு "மனம் கலங்காதிரு கர்ணா !" என்று தேறுதல் கூறுகிறான்.

**"மலைகலங்கினும் மாதிரம் கலங்கினும் மாதிரங்களில் விண்ணோர்**
**நிலை கலங்கினும் நெடுங்கடல்கலங்கினும் நிலம்கலங்கினும் சேடன்'**
**தலை கலங்கினும் பேரவை மூன்றிலும் தளர்வில்லாதவர் கற்ற**
**கலை கலங்கினும் போர் முகத்தென் மனம் கலங்குமோ கலங்காதே"**

என்று கர்ணனும் தன் மன உறுதியைக் கூறி "என் மகன் விடசேனனின் தலையை அறுத்து வீழ்த்திய அர்ச்சுனன் தலையை நானும் அறுத்து வீழ்த்துகிறேன். பாருங்கள்" என்று கூறி அர்ச்சுனனை எதிர்த்து வீரப்போர் புரியப் புறப்படுகிறான்.

கடந்த 16 நாட்களிலும் இவ்வளவு கடுமையாக கர்ணனும் அர்ச்சுனனும் போர் செய்யவில்லை என்று பார்ப்பவர்கள் எல்லாம் கூறுமாறு கர்ணார்ச்சுனர்கள் மிகக் கடுமையாகப் போர் புரிகிறார்கள். "உலகம் அழியும் ஊழிக்காலம் வந்துற்றது போலும்" என்று எண்ணி அஞ்சியவர்களாய், அதே நேரத்தில் கர்ணார்ச்சுனர்களின் போரைக் காணும் ஆர்வமும் மிகக் கொண்டவர்களாய் தேவர்கள் எல்லாம் கூட வந்து வானில் கூடி நின்று வேடிக்கைப் பார்க்கிறார்கள். கர்ணனும் அர்ச்சுனனும் ஏவும் கணைகள் ஒன்றோடொன்று முட்டி, நுனியோடு நுனி பொருந்தி ஒன்றினை ஒன்று வெல்ல முடியாமல் பயனின்றிப் போய் விடுகின்றன. இன்னும் சில கணைகள் ஒன்றினை மற்றொன்று சிதைக்க இரண்டு கணைகளுமே பயனின்றிச் சிதைந்து போய் விடுகின்றன.

காண்டீபத்திலிருந்து புறப்படும் தன் வலிய கணைகளும் கர்ணனுடைய கணைகளை வெல்ல முடியாமல் பயனின்றி அழிவதைக் காணும் அர்ச்சுனன், அக்கினி தேவன் தனக்கு அளித்த தேவதத்தம் எனும் சங்கினை முழக்கிக் கர்ணனின் தேர் நகராவண்ணம் தன் அம்புகளினாலேயே ஒரு சர கூடத்தை உண்டாக்குகிறான். தன் தேரை நகர விடாமல் அர்ச்சுனன் சரகூடம் அமைத்துவிடக் கர்ணனும், அர்ச்சுனனின் தேரை நகரவிடாமல் தானும் மறுசர கூடத்தை உண்டாக்குகிறான். இதனால் இருவருமே அவரவர் நின்ற இடத்தில் நின்ற படி சற்றுநேரம் கணைகள் ஒன்றும் ஏவாமல் செயலற்று நிற்கிறார்கள். கர்ணன் அமைத்த சரகூடத்தைப் பிளக்க அர்ச்சுனன் முயலும் போது அவனுக்கு எதிரில் நிற்கும் கர்ணனோ தர்மபுத்திரன்

போல் காட்சியளிக்க, அர்ச்சுனனால் கிலைகள் ஏவ முடிவதில்லை. ''கண்ணா! என் எதிரே இப்போது நின்று போர் செய்துகொண்டிருப்பது கர்ணனா? அல்லது தருமரா? எனக்கு ஒரே மயக்கமாக இருக்கிறதே'' என்று அர்ச்சுனன் வினவ அங்கிருந்து தேரைத் திருப்பி விடுகிறார் பார்த்த சாரதி.

இதே நேரம் உண்மையான தருமரும் அர்ச்சுனனைத் தேடி வருகிறார். ''என்ன கண்ணா? இன்றைக்குள் கர்ணன் மடிவான் என்று சொன்னாயே! கர்ணன் மடிந்தானா?'' என்று ஆர்வமுடன் அவர் வினவ, கண்ண பெருமானும் 'இல்லை' என்று தலையசைக்க அதனால் கோபம் கொள்ளும் தருமர் ''அர்ச்சுனா! என்ன உன் காண்டீபம்! அதன் வலிமை குறைந்து போனதா என்ன?'' என்று கேட்டுவிடுகிறார். அவ்வளவு தான் அர்ச்சுனனுக்குப் பொங்கி வருகிறது ஆத்திரம். தன் பாசத்திற்குரிய அண்ணா என்றும் பாராமல் அர்ச்சுனன் சீறி, ''என் காண்டீபத்தைப் பழித்த உன் தலையை அறுத்துவிடுகிறேன்', என்றுவில்லையும் வளைக்க பார்த்தசாரதி, ''அர்ச்சுனா! என்ன இது?'' என்று அவனைத் தழுவிச் சமாதானப் படுத்துகிறார். அர்ச்சுனன் தன் வில்லைப் பழிப்பவர் யாராயினும் அவரைக் கொல்லாமல் விட மாட்டேன் என்று சபதம் செய்திருக்கிறான் ஆகவே தான் ''என்ன உன் காண்டீபம்?'' எனத் தருமர் அர்ச்சுனனின் வில்லைக் குறைத்துக் கூறிவிடவே தானும் கொதித்து தர்மரின் தலையையே அறுப்பதாக ஆத்திரப்படுகிறான்.

அர்ச்சுனனைத் தருமருக்கெதிராகக் கணை ஒன்றும் தொடுக்காமல் தடுத்துவிடும் கண்ணபெருமான் ''அர்ச்சுனா! பெரியோர்களைப் பழித்து நிந்தையாகச் சில சொற்களைக் கூறுவதும்கூட அவர்களுடைய தலை யறுப்பதற்குச் சமமே. நீயோ தருமரை ஏகவசனத்தில் பேசி' தலை அறுக்கிறேன்' என்றும் வசை கூறிவிட்டாய். இதுவே அவருடைய தலையை நீ அறுத்ததற்குச் சமமே, ஆகவே இனிநீ சாந்தம் கொள்'' என்று சமாதானப் படுத்த

அர்ச்சுனனும் சாந்தம் கொள்கிறான். ஆனால் தருமரோ மனம் மிக நொந்தவராய் தம் தேரிலிருந்து கீழே இறங்கி "நான் கானகம் போகிறேன். இனி எனக்கு இந்த இராச்சியமும் வேண்டாம். ஒன்றும் வேண்டாம், நீங்களே வென்று ஆண்டு கொள்ளுங்கள்'' என்று விடுவிடெனத் தேரிலிருந்து இறங்கி நடக்கத் தொடங்கி விடுகிறார். அர்ச்சுனனும் ஆத்திரத்தில் தருமரின் மனம் மிகப் புண் படும்படியாகப் பேசித் தான் நடந்து கொண்டதற்கு உண்மையில் மிக வருந்தித் தருமரின் கால்களில் விழுந்து தன்னை மன்னிக்குமாறு வேண்டுகிறான்.

பார்த்தசாரதியும் தருமரைச் சாந்தப்படுத்தி ''அர்ச்சுனனை மன்னித்து விடு. இனி அவன் கர்ணனைக் கொல்லாமல் திரும்பமாட்டான்'' என்று ஆறுதல் மொழிகளைக் கூறி தருமரை அவருடைய தேரில் ஏற்றுகிறார். பொறுமையின் வடிவமான தருமரும் ஒரு நொடியிலே பொறுமை மாறி ஆத்திரப்பட்டுவிட, அந்த ஆத்திரத்திற்குப் பரிசாகத் தன் தம்பியிடமே வாங்கிக் கட்டி கொள்ள வேண்டிய சிறுமைக்கு ஆளாவதை இச் சம்பவம் நமக்கு உணர்த்துகிறது. இவ்வாறு அறியாமல் நிகழ்ந்து விடக் கூடிய தவறுகளை 'மறப்போம் மன்னிப்போம்' என ஏற்று மன்னித்து விடுவதே மகத்தான மனித தருமம் ஆகும். அப்படித் தான் தருமரும் அர்ச்சுனனும் நிகழ்ந்ததை மறந்து ஒருவரை ஒருவர் மன்னித்து, நிகழவேண்டிய காரியத்தில் ஊக்கம் கொள்ள, எல்லாம் வல்ல எம்பெரு மானாகிய கண்ண பெருமான் அவ்விருவரையும் சமாதானப் படுத்தி ஆற்றுப்படுத்துவதையும் இச்சம்பவத்தில் காண்கிறோம்.

தருமர்மேல் மிக்கபாசமும் பக்தியும் கொண்டவன் அர்ச்சுனன். அத்தகையபாசம் அவனுக்கு இருப்பதனாலேயே கர்ணன் கூட தருமராக அர்ச்சுனனுக்குத் தோன்றினான். அர்ச்சுனன் தர்மர் மேல் கொண்ட பாசம் கர்ணனுடன் அவன் ஆற்ற வேண்டிய கடுமையான போருக்குத் தடையாக அமைகிறது. ஆகவே தருமரைச் சிறிது நேரம்

ர்சுனன் வெறுக்கும்படியாக இத்தகைய ஒரு சம்பவத்தை
டாக்கினால்தான் அர்ச்சுனன் கண்களுக்குக் கர்ணன்
ராகத் தோன்றமாட்டான் என்று எண்ணி பார்த்த
தியான கண்ணபெருமான் பொறுமையின் வடிவமான
மரை அர்ச்சுனனின் காண்டீபத்தைப் பழிக்கச் செய்து
படி ஒரு நாடகத்தை ஆடி இருப்பாரோ என்றும் கூட
க்குத் எண்ணத் தோன்றுகிறது. காண்டீபத்தைப்
த்த தருமரை அர்ச்சுனன் மன்னித்து மறந்து
டாலும்கூட, "என்ன உன் காண்டீபம்?" என்று அவர்
ய அந்த ஏளனச் சொல் அர்ச்சுனனுக்கு மிக்க
திரத்தை தூண்டிக் கொண்டிருக்கும் படியால் அவன்
னுடன் மீண்டும் போரிடும் போது மிகுந்த
வசத்தைக் காட்டுகிறான். சரகூடத்தை அறுத்துத்
ரிக் கர்ணனுடன் வீமன் அப்பொழுது உக்கிரமாகப்
ரிட்டுக் கொண்டிருக்க "வீமா! இனி நான் கர்ணனை
த்துக் கொள்கிறேன். நீ போ" என்று கூறி அர்ச்
ன் வீமனை விலக்கித் தான் கர்ணனுடன் போரிடு
ன்.

அர்ச்சுனன் அக்கினியாஸ்திரத்தை ஏவ, பெருத்த
யோசையுடன் அனலினைப் பொழிந்து கொண்டு எதிர்
ந்ம் கௌரவர் சேனைகளை எல்லாம் நீறுபடுத்திக்
ண்டு கர்ணனை நோக்கிப் பாய்கிறது அக்கினியாஸ்
ம். கர்ணன் அக்கினியாஸ்திரத்திற்கு மாற்றாக
ணாஸ்திரத்தை ஏவுகிறான். ஏழு மேகங்களும் சேர்ந்து
நமழையைப் பொழிவதைப் போல் நீரைப் பொழிந்து
ண்டு சென்ற அவ்வருணாஸ்திரம் அக்கினியாஸ்
த்தைத் தணியச் செய்து விடுகிறது. அர்ச்சுனன் அடுத்து
யுவாஸ்திரத்தை ஏவ, கர்ணனும் அதற்கு மாற்றாக
பாஸ்திரத்தை ஏவுகிறான். காற்றினை உணவாக
டு வாழ்வது சர்ப்பம். ஆகவே கர்ணன் சர்ப்பாஸ்
த்தை ஏவ, அர்ச்சுனனின் வாயுவாஸ்திரத்தால்
டான பேருழிக் காற்றினை எல்லாம் சர்ப்பாஸ்திரம்

உண்டு தணித்து விடுகிறது. அர்ச்சுனன் அந்தகாராஸ் திரத்தை ஏவ, குருசேத்திரக்களம் முழுதும் எங்கும் இருளாகக் காட்சி அளிக்கிறது. உடனே கர்ணன் பூர்ண சந்திராஸ்திரத்தைச் செலுத்த, இருள் முற்றும் நீங்கிப் பேரொளி உண்டாகிறது.

இந்திரன் தனக்கு அளித்த இந்திராஸ்திரத்தை அர்ச்சுனன் செலுத்த கர்ணனும் சூரியன் தனக்கு அளித்த சூரியாஸ்திரத்தைச் செலுத்துகிறான். இந்திராஸ்திரமும் சூரியாஸ்திரமும் சமவல்லமை வாய்ந்தவை ஆதலால் ஒன்றோடு மற்றொன்று முட்டி ஒன்றை ஒன்று வெல்ல முடியாமல் இரண்டு அஸ்திரங்களும் தம்தம் முனை முறிந்து பயனின்றிப் போகின்றன. அர்ச்சுனன் "கர்ணா! இதோ பிரம்மாஸ்திரம். முடிந்தால் தடுத்துக் கொள்" என்று பிரம்மாஸ்திரத்தை ஏவுகிறான். கர்ணனும் ருத்திராஸ் திரத்தை ஏவிப் பிரம்மாஸ்திரத்தைத் தடுத்து விடுகிறான். தங்கள் அஸ்திரங்கள் அனைத்தும் இவ்வாறு வெற்றி தோல்வியின்றி வீணாகிப் போவதைக் காணும் கர்ணார்ச் சுனர்கள், இனி எந்த அஸ்திரத்தைத் தொடுப்பது என்று தெரியாமல் அயர்ச்சியால் மயங்கி நிற்க, கர்ணன் அர்ச்சுனனைக் கொல்லும் பொருட்டு தான் போற்றி வைத்திருக்கும் நாகாஸ்திரத்தை எடுக்கிறான்.

"நாகாஸ்திரத்தை வெற்றி கொள்ள அர்ச்சுனனால் முடியாது. இன்று அர்ச்சுனன் மடிவது திண்ணம்" என்று வானவர்களும் அஞ்சியவராய் ஒதுங்கி நின்று போரைக் கருத்தூன்றிக் காண்கிறார்கள். தன் மகன் விடசேனன் தலையை அர்ச்சுனன் அறுத்து வீழ்த்தியதைப் போலவே கர்ணனும் அர்ச்சுனன் தலையை அறுத்து வீழ்த்த ஆசை கொண்டு நாகாஸ்திரத்தைக் கர்ணனின் கழுத்திற்கு நேராகக் குறி வைக்கிறான். அப்பொழுது சல்லியன் "கர்ணா! அர்ச்சுனன் கழுத்துக்குக் குறி வைக்காதே! மார்புக்குக் குறி வை" என்று கூற, கர்ணனோ அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் அர்ச்சுனன் கழுத்தையே குறி

வைத்து நாகாஸ்திரத்தை ஏவுகிறான். காண்டவ வன தகனத்தின் போது தன் குடும்பத்தையே பலி கொண்ட அர்ச்சுனனைப் பலி கொள்ளும் ஆவலுடன் நாகாஸ்திரமும் நெருப்புப் பொறிகளைக் கக்கிக் கொண்டு சீறிப் பாய்கிறது. அர்ச்சுனனின் கழுத்தினை நோக்கிச் சீறிப் பாய்ந்து வரும் நாகாஸ்திரத்திலிருந்து அர்ச்சுனனின் உயிரைக் காக்க, தக்க தருணம் பார்த்து பார்த்தசாரதி ஒரு உபாயம் செய்கிறார். பன்னிரண்டு அங்குல ஆழம் மண்ணிற்குள் இறங்கி நிற்கு மாறு பார்த்தசாரதி தம் தேரை அழுத்த தேரும் சடாரென மண்ணிற்குள் இறங்கி நிற்கின்றது. இதனால் அர்ச்சுனனின் கழுத்து இருந்திருக்க வேண்டிய இடத்தில் தலையின் கிரீடம் வந்து நிற்க நாகாஸ்திரமும் அர்ச்சுனனின் அந்தக் கிரீடத்தை மட்டுமே தாக்கிக் கீழே தள்ளி விட்டு பறக்கின்றது.

அர்ச்சுனனின் தலைக்கு வந்த ஆபத்தை தலைக் கிரீடத் திற்கு வந்த ஆபத்தாக்கி அர்ச்சுனன் உயிரைத் தக்க உபாயம் செய்து காப்பாற்றி விடுகிறார் நம் பார்த்தசாரதி. கண்ண பெருமான் அர்ச்சுனனைக் காக்க செய்த இந்தத் தந்திர உபாயத்தைப் போற்றி மலர்மாரி பொழிந்து அவரைப் போற்றிக் கொண்டாடுகிறார்கள் தேவர்கள்.

நாகாஸ்திரம் தன் தலைக் கிரீடத்தைத் தட்டிச் சென்ற ஒரு நொடி நேரம் அர்ச்சுனன் தடுமாறி நின்றாலும் தன் முகத்தைத் திருப்பாமலே அவன் ஒரு மாற்றுக் கணையை ஏவி, நாகாஸ்திரத்தை இரண்டு துண்டுகளாக்கி விடுகிறான். தலைக் கிரீடத்தைத் தட்டித் தலைக்குப் பின் பறந்த நாகாஸ்திரத்தைத் தலையைத் திருப்பாமலே இவ்வாறு அர்ச்சுனன் இரண்டு துண்டுகளாக்கி விடுவதைப் போற்றும் வில்லிப்புத்தூரார் ''அர்ச்சுனனுக்கு பிடரியிலும் கூடவா கண்கள் இருக்கின்றன?'' என்று கூறி வியக்கிறார். அர்ச்சுனன் கணையால் இரண்டு துண்டான போதும் நாகாஸ்திரம் கர்ணனிடம் பறந்து வந்து தன்னை மீண்டும் அர்ச்சுனன் மேல் ஏவுமாறு வேண்ட, கர்ணனோ தான் குந்திக்குச் செய்து கொடுத்த சத்தியத்தை நினைவு

கூர்ந்தவனாய் ''இரண்டாவது முறையாக உன்னை ஏவ மாட்டேன்'' என்று மறுத்து விடுகிறான். நாகாஸ்திரமும் கர்ணனை நொந்தவாறு சிதைந்து அழிந்து உயிர்விடுகிறது.

இதே நேரத்தில் கர்ணனின் தேர்ச் சக்கரங்களும் மண்ணில் புதைந்து நின்று விட, தேரிலிருந்து இறங்கிக் கொள்ளும் சல்லியனும் கர்ணனை வைகிறான். ''கர்ணா; நான் கூறியபடி அர்ச்சுனன் மார்பிற்கு நீ குறி வைத்திருந் தால் அர்ச்சுனன் உயிர் பிழைத்திருக்கவே முடியாது. இவன் என்ன சொல்வது, நாம் என்ன கேட்பது என்ற அகம்பாவம் கொண்ட உன்னால் இனி பாண்டவர்களை வெற்றி கொள்ளவும் முடியாது. நான் உனக்கு இனி தேர் செலுத்த வும் மாட்டேன் போ'' என்று கூறிக் கர்ணனைக் கோபித்தவ னாய் சல்லியனும் தனியே விட்டுப் போய் விடுகிறான். ''பட்ட காலிலே படும் கெட்டு குடியே கெடும்'' என்பதற் கேற்ப நாகாஸ்திரம் பயனின்றிப் போக, தேர்ச் சக்கரங் களும் நிலத்தில் புதைந்து விட, சல்லியனும் தன்னை நிராதரவாய் விட்டுப் போய்விட, கற்ற வித்தைகள் எல்லாமும் கூட தன் நினைவிற்கு வராமல் மயங்கி நிற்கிற கர்ணன் ''எல்லாம் பரசுராமனின் சாபமே'' என நினைத்து வருந்துகிறான்.

பரசுராமரின் தந்தை ஜமதக்கினி முனிவர். இவரைக் கார்த்தவீரியார்ச்சுனன் என்ற சத்திரியன் கொன்றுவிடவே பரசுராமரும் கார்த்தவீரியார்ச்சுனனைக் கொன்று பழி தீர்த்துக் கொள்வதோடு சத்திரியர் அனைவர் மீதும் வெறுப்பு கொண்டு சத்திரியர் எவருக்கும் வித்தை கற்றுத் தரமாட்டேன் என்ற ஒரு வைராக்கியமும் அவர் கொண் டிருந்தார். அப்படிப்பட்ட பரசுராமரிடத்தில் கர்ணன் சத்திரியனான அதிரதன் என்னும் தேர்ப்பாகன் வளர்த்த மகன் தான் என்பதை மறைத்து வித்தைகளைக் கற்றுக் கொண்டான். கர்ணன் சத்திரியனே என்பதைப் பரசு ராமருக்குக் காட்டிக் கொடுக்க நினைத்தார் கண்ண பெருமான். கர்ணனின் மடிமீது தலை வைத்துப் பரசு

ராமர் உறங்கிக் கொண்டிருந்த ஒரு வேளையில் கண்ண பெருமான் ஒரு வண்டின் வடிவெடுத்துக் கர்ணனின் தொடையைத் துளைத்துப் புண்ணாக்கிவிட, தொடையில் பீறிட்ட இரத்தம் பரசுராமரின் மேனியையும் ஈரமாக்கி அவர் உறக்கத்தைக் கலைத்து விட்டது.

கண் திறந்து பார்த்த பரசுராமர் கர்ணன் தன் தொடையிலிருந்து இரத்தம் பீறிடவும், மனம் கலங்கிடாம லும் தன்னைத் துயிலெழுப்பாமலும் இருந்ததைக் கொண்டு கர்ணன் ஒரு சத்திரியனே என்பதைத் தெளிந்து கொண் டார். சத்திரியன் என்பதை மறைத்துத் தன்னிடம் கர்ணன் கற்றுக் கொண்ட வித்தைகள் ''தக்க சமயத்தில் உதவாமல் போய் விடும்'' என்று பரசுராமர் அன்றைக்குக் கர்ண னுக்குச் சாபம் கொடுத்தார். அவர் அன்று கொடுத்த சாபமே இன்று பலித்து கற்ற வித்தைகள் ஒன்றும் தன் நினைவில் வராமல் மயக்கத்தை உண்டாக்குவதைக் கர்ணன் தெரிந்து கொள்கிறான்.

மண்ணில் புதையுண்டு போன தன் தேரை விட்டு வேறொரு தேரில் ஏறி கர்ணன் அர்ச்சுனனோடு போரிட்டா லும் அவனால் முன் போல் அர்ச்சுனனுக்கு ஈடுகொடுக்க முடியவில்லை. 'அர்ச்சுனா! கர்ணன் தான் பெற்ற சாபங் களால் வலிமை குறைந்து நிற்கிறான். இதுவே நல்ல தருணம். வலிமை மிக்க கணைகளால் அவன் மேனியைத் துளைத்திடு'' என்று பார்த்தசாரதியும் அர்ச்சுனனுக்குச் சொல்லிக் கொடுக்க, அர்ச்சுனனும் அவ்வாறே கர்ணனின் மேனி முழுவதும் அம்புகளால் துளைக்க, அவன் மேனியில் இருந்து இரத்தம் பீறிட்டுப் பாய்கிறது. தான் ஏறியிருக்கும் தேரிலிருந்து கர்ணன் தரைக்கு உருண்ட போதும் வில்லினை விடாமல் பிடித்து நின்றன அவன் கைகள். கர்ணன் ஏவாமலே அவன் செய்த தருமமே அவனுக்காக மாற்றுக் கணைகளை இடைவிடாது அர்ச்சுனனை நோக்கி ஏவும் அற்புதமும் அங்கே நிகழக்கண்டு தேவர்கள் வியக்கிறார்கள். அப்பொழுதுதான் பார்த்தசாரதி ''பொறு

அர்ச்சுனா பொறு! தருமம் தலைகாக்கும் என்பது எத்தகைய மெய்யான பொன்மொழி என்பதைத்தான் இப்பொழுது நீ கண்டு கொண்டிருக்கிறாய். நீ ஏவும் கணை களுக்குக் கர்ணன் ஏவிடாமலே மாற்றுக் கணைகள் வருவதைப் பார். அவன் செய்த தருமமே கவசமாய் நின்று அவனைக் காத்து நிற்கிறது. சிறிது நேரம் நீ அம்புகளை ஏவாமல் இங்கிரு. நான் வருகிறேன்'' என்று கூறிக் கண்ண பெருமான் ஒரு மறையவராய் வேடம் தாங்கிக் கர்ணன் சாய்ந்திருக்கும் இடத்திற்கு வருகிறார்.

அங்கமெல்லாம் அம்புகள் துளைத்திருக்க மயங்கிச் சாய்ந்திருக்கும் கர்ணனை நெருங்கி வரும் மறையவர், ''சூரிய குமாரனே! நான் இதுகாறும் மேருமலையில் தவம் செய்து கொண்டிருந்தேன். நலிந்தவர்களுக்கு நீ வேண்டிய தெல்லாம் வேண்டியவாறே கொடுக்கிறாய் என்பதைக் கேள்விப்பட்டு நானும் உன்னிடம் யாசகம் பெற வந்தேன். நான் வேண்டியதை நீ எனக்குக் கொடுக்க வேண்டும்'' என்று கூறி மயங்கியிருக்கும் கர்ணனை எழுப்புகிறார். கர்ணனும் மறையவரின் வார்த்தைகளைக் கேட்டு தன்னிரு காதுகளிலும் அமுதம் பாய்வதைப் போல் மனம் மகிழ்ந்து முகம் மலர்ந்து, ''உமக்கு என்ன வேண்டுமோ அதைக், கேளும்'' என்று கூற மறையவராய் நிற்கும் மாயக் கண்ணனும் ''நின் புண்ணியம் அனைத்தும் எனக்கு உதவ வேண்டும்'' என்று கேட்டதும் கர்ணன் மேலும் மகிழ்ச்சி கொண்டு முகம் பூரிக்கின்றான்.

''நானோ என் உயிர் உடலுக்குள்ளே நிற்கிறதா அல்லது வெளியே போய் விட்டதா என்றும் தெரியாத நிலையில் இக்களத்தில் இருக்கிறேன். வேண்டியவர்க்கு வேண்டியதை எல்லாம் கொடுக்கும் நிலையில் நான் இப்பொழுது இல்லையே, என்னிடம் நீர் என்னகேட்பீரோ அதைக் கொடுக்க முடியாமல் போய்விடுமோ? என்று கலங்கி னேன். நான் மனம் மகிழ என்னிடம் உள்ளதையே—என் புண்ணியத்தையே நீர் கேட்டதனால் இல்லை என்று கூறும்

அவச் சொல்லுக்கு ஆளாகாமல் என்னை வாழ வைத்தீர் நான் செய்த புண்ணியம் அனைத்தும் தருகிறேன். பிரம தேவனையும் மிஞ்சிய புண்ணியர் ஆகிய உமக்கு நான் உதவும் புண்ணியமோ பெரிது'' என்று சாகும் தருவாயிலும் கூட மனம் மகிழப்பேசி முகமும் அகமும் மலர்ந்து கர்ணன் ஈத்துவக்கும் இன்பமே இன்பமாக உவந்தான் என்றால் அவனுடைய கொடை உள்ளத்தை என்னவென்று போற்றுவது?

''ஆவியோ நிலையிற் கலங்கியது யாக்கை
அகத்ததோ புறத்ததோ அறியேன்
பாவியேன் வேண்டும் பொருளெலாம் நயக்கும்
பக்குவம் தன்னில் வந்திலையால்
ஒவிலாது யான் செய் புண்ணியம் அனைத்தும்
உதவினேன் கொள்க நீயுனக்கு
பூவில்வாழயனும் நிகரிலன் என்றால் புண்ணியம்
இதனினும் பெரிதோ''
(பதினேழாம் போர்ச் சருக்கம் 240)

என்றுகர்ணன் கூறக்கேட்டு மறையவராம் பார்த்தசாரதியும் மனம் மகிழ்ந்து நெகிழ்ந்து கர்ணனை நோக்கித் தம் இரு கரங்களை நீட்ட, கர்ணன் தன் மேனியில் பீறிடும் இரத்தத்தினாலேயே தாரை வார்த்துத் தன் புண்ணியம் அனைத்தையும் மறையவருக்குக் கொடுக்கிறான்.

கர்ணன் அளித்த புண்ணியங்களை எல்லாம் மறையவராய்ப் பெற்றுக்கொண்ட பார்த்தசாரதி கர்ணன் காணச் சங்கு, சக்கரம், கதை, வாள், வில் ஆகிய பஞ்சாயுதங்களையும் தாங்கிய தம் மெய்யான நாராயண சொரூபத்தைக் கர்ணனுக்கு காட்டுகிறார். 'கர்ணா! கவச குண்டலங்களை இந்திரன் மூலமாய் உன்னிடம் கவர்ந்தது, நாகாஸ்திரத்தை அர்ச்சுனன் மேல் ஒரு முறைக்குமேல் ஏவக்கூடாது என்று குந்தியின் மூலமாய் உன்னிடம் வரம் பெற்றது, எல்லாம் நானேதான். உனக்கு என்ன வரம் வேண்டுமோ அதைக் கேள். தருகிறேன்'' என்று கூறுகிறார். ''நாராயண

மூர்த்தியாகிய தங்களைக் காணப்பெற்ற பாக்கியசாலியான எனக்கு வேறென்ன வேண்டும்? இருந்தாலும் ஒரு வரம் கேட்கிறேன். நான் இனிப் பிறக்க நேர்ந்தாலும் பிறவிகள் தோறும் இரப்பவர்க்கு இல்லை என்று உரையா இதயம் நீ அளித்தருள்'' என்று கர்ணன் வேண்ட, ''அப்படியே தருகிறேன் கர்ணா! நீ எத்தனைப் பிறவி எடுத்தாலும் தானம் செய்தலையும் செல்வத்தையும் பெறுவாய். அப்பிறப்புகளின் முடிவிலே முக்தியும் நீபெறுவாய்'' என்று அருள்புரிகிறார் நாராயணமூர்த்தி. பின் கர்ணனிடம் விடைபெற்று பார்த்தசாரதியாகத் தம் கோலத்தை மாற்றி அர்ச்சுனனை வந்தடைகிறார். ''அர்ச்சுனா! இப்பொழுது நீ கர்ணனைக் கொல்'' என்று அவர் கூற, அர்ச்சுனனும் தன் காண்டீபத்தை வளைத்துக் கர்ணன் மார்பினை நோக்கி கணைதொடுக்க தர்மத்தின் தலைவனான கர்ணனும் தான் பார்த்தசாரதிக்கு வழங்கிய தருமம் காரணமாகவே உயிரினை விடுகிறான். அப்பொழுது 'கர்ணன் சாய்ந்தான்' என்ற அசரீரீ ஒலிக்க, அது கேட்கும் குந்தி 'மகனே கர்ணா! மாண்டுவிட்டாயா?'' என்று கோ என்று அலறி அரற்றியவாறு கர்ணன் மாண்டுகிடக்கும் களம் நோக்கி ஓடி வருகிறாள்.



# 31

திருமத்தாய் தன் ஒரே புதல்வன் என்று மகிழ்ந்து போற்றிட்ட கர்ணனை உண்மையில் பெற்ற தாயாகிய குந்தி, அவன் குழந்தையாக இருந்தபோதும் அவனைத் தன்மடியில் வைத்துக் கொஞ்சக் கூடிய பாக்கியத்தைப் பெறவில்லை. அதனால் கர்ணன் மாண்டான் என்ற அசரீரீயைக் கேட்டதும் தன்னிரு கரங்களாலும் தலையிலே அடித்துக்கொண்டு கோவெனக் கதறியவாறு கர்ணன் மாண்டு கிடக்கும் களம்நோக்கி ஓடிவரும் குந்தி அவனுடைய மேனியைத் தன் மடியிலே வாரி ஏந்திக் கொண்டு ''மகனே கர்ணா, போய் விட்டாயா! இந்த அபாக்கியவதியான அன்னையை விட்டுப் போய் விட்டாயா?'' என்று அரற்றி அழுது புலம்புகிறாள்.

''நீ பிறந்த உடனே உன் அழகு முகத்தைப் பார்த்துப் பார்த்துப் பூரிக்கக் கொடுத்து வைக்காத நான், பெட்டியிலே உன்னை வைத்துக் கங்கையிலே விட்டு விட்டேன். நீ என்ன ஆனாயோ, ஏது ஆனாயோ என்று தெரியாத சோகத்தில் தவித்துக் கொண்டிருந்த எனக்கு நீ கர்ணனாய் துரியோதனனின் தோழனாய்-மாவீரனாய் வாழ்கின்றாய் என்பதை அறிந்தபோது ''என்மகன் இருக்கிறான்! நான் செய்ததவம் வீணாகவில்லை'' என்று நான் மகிழ்ச்சியடைந்தேன். என் மகிழ்ச்சியை குலைத்து நீ இன்று வானகம் சென்று விட்டாயே ! நான் இதை எப்படி தாங்குவேன்? பாண்டவர் ஐவரும் உன் தம்பிகளே! கௌரவர் நூறுபேரும் உன் தம்பிகளே! இத்தனைத் தம்பிகளும் உனக்கு ஏவல் செய்ய உலகை ஒரு குடைக்கீழ் ஆளவேண்டிய கர்ணா! உனக்குச் சேரவேண்டிய சிறப்புகள் உனைச் சேராவிடாமல்

விதி தடுத்ததோ? அந்தத் தெய்வம் தடுத்ததோ? தேவர்கள் வஞ்சித்து விட்டார்களோ? ஐயோ உன்னைப் பறிகொடுத்து விட்ட இந்தப்பாவி இனி என்ன புலம்பி என்ன பயன்'' என்பதாகக் கதறிக்கதறி அழுகிறாள் குந்தி. அவளுடைய அன்பின் பெருக்கினால் அவள் தனங்களில் பால்சுரக்கவும், மாண்ட மகனை நோக்கிக் கண்கள் நீர் சுரக்கவும், ஈன்ற கன்று இறந்துவிட்டால் தாய்ப்பசு எப்படித் துடிக்குமோ அப்படித் துடித்து அவள் அழுது அரற்றுகிறாள். மாண்ட கர்ணனை மடியில் வைத்து குந்தி புலம்புவதைக் காணும் இரு அணியைச் சார்ந்த மன்னர்களும் ''இது என்ன விந்தை! கர்ணனைப் பயந்த தாய் குந்தியாமே'' என்று கூறி அதிசயித்துக் குந்தியின் பாசத்துடிப்பைக் கண்டு அவர்களும் கண்ணீர் சிந்துகிறார்கள்.

கர்ணனைப் பறிகொடுத்த துரியோதனனின் துக்கமோ சொல்லி முடியாது. குந்தி பெற்ற முதல் மகன் கர்ணன் என்ற உண்மையைத் துரியோதனன் அறிந்து அதனாலும் கர்ணனின் தியாகத்தை-நட்பின் ஆழத்தை எண்ணி எண்ணி வியந்து உருகிக் கண்ணீர் விடுகிறான். ''என் வாழ்விற்கே காரணமான கர்ணா! என் மனத்துணிவாகத் திகழ்ந்த கர்ணா! உன்னை இழந்துவிட்ட பிறகு இனி நான் யாரைக் கொண்டு என் இராஜ்ஜியத்தைக் காத்துக் கொள்ளப் போகிறேன். அது வீண் கனவு! இனி நான் உயிர்வாழப் போவதில்லை. நீ சென்ற இடத்திற்கே நானும் விரைந்து வந்து விடுகிறேன் விரைந்து வந்து விடுகிறேன்'' என்று துரியோதனனும் கதறி அழுகிறான்.

குந்தியும், துரியோதனனும் இவ்வாறு கர்ணனை நினைத்துப் புலம்பிக் கதறிஅழ, தம் அன்னை குந்தி ஏன் கர்ணனை மடியில் வைத்து அழவேண்டும் என்று புரியாதவர்களாய் பாண்டவர் ஐவரும் பார்த்தசாரதியை வினவுகிறார்கள். பார்த்தசாரதியும் பாண்டவர்களுக்குக் கர்ணன் யார் என்ற உண்மையை இப்பொழுது தான் உணர்த்துகிறார். அதைக் கேட்கும் அவர்கள் ''அண்ணா'' என்று அரற்றியவாறு ஓடிப்

போய் கர்ணனின் மேனி மேல் விழுந்து அழுகிறார்கள். ''பிள்ளைகளாகிய எங்களிடம் கூட கர்ணன் உங்கள் அண்ணன் தான் என்ற உண்மையை மறைத்து விட்டாயே! தாயே! இது தானா பெற்ற தாய், தன் பிள்ளைகளிடம் காட்டும் வாஞ்சை?'' என்று குந்தியை நொந்து கர்ணனுக் காகக் கதறுகிறார் தருமர். ''அண்ணா! உன்னை அண்ணன் என்று தெரிந்து கொள்ளாமல் போனேனே! தெரிந்திருந் தால் துரியோதனன் சூடிக் கொண்டிருக்கும் மணிமகுடத்தை உன் தலையில் சூட்டி நாங்கள் ஐந்து பேரும் உனக்குத் தொண்டு செய்து பூரித்திருப்போமோ'' என்று புலம்பு கிறான் வீமன். ''நாகாஸ்திரத்திற்குத் தப்பினேன் என்று அகம் மகிழ்ந்த நான், உன் மேனியில் எய்த பாணங்கள் ஒவ்வொன்றும் என்னையே அழிப்பது என்று உணராமல் இத்தகைய கொடுமையைச் செய்து விட்டேனே'' என்று அர்ச்சுனனும் கலங்குகின்றான்.

கர்ணன் யார் என்ற உண்மையை மறைத்ததற்காக கண்ணபெருமானை நொந்து கொள்கிறார்கள் நகுல சகாதேவர்கள் ''மகன் பிரகலாதனைக் கொண்டே இரணியனை அழிப்பித்தாய். தம்பி வீடணனைக் கொண்டே இராவணனை அழிப்பித்தாய். அதே போல் எங்களைக் கொண்டே எங்கள் மூத்தவன் ஆன கர்ணனைக் கொன்று விட்டாய். உன்னை விடவும் கொடிய சூழ்ச்சிக்காரரர்கள் வேறு யார் இருக்க முடியும்?'' என்று நகுல சகாதேவர்கள் கண்ணனை நொந்தவாறு கர்ணனுக்காகத் துடிக்கிறார்கள். இவ்வாறு கர்ணனை இழந்து அவனை ஈன்ற தாய் குந்தி அழ, ஆருயிர் நண்பன் துரியோதனன் அழ, உடன்பிறந்த சகோதரர்கள் பாண்டவர்கள் அழ, இரு திறத்து மன்னர் களும் படைவீரர்களும் அழ, தன் புகழை நிலை நிறுத்தி வாழ்ந்த தருமத்தின் காவலன் ஆன தன் மகன் கர்ணன் மடிந்த சோகத்தைத் தாங்கிக் கொள்ள இயலாத வனாய் சூரியனும் ஓடிப்போய் மேலைக் கடலில் விழுந்து அழுதுகொண்டே மறைய பதினேழாம் நாள் பாரதப் போரும் நிறைவு பெறுகிறது.

பதினேழாம் நாள் இரவு கர்ணனை இழந்த சோகத்தில் பாண்டவர்கள் ஒருவரும் உறங்கவில்லை. கர்ணன் பாண்டவர்களின் உடன் பிறப்பாக இல்லாமல் மடிந்திருப்பானே ஆனால் அர்ச்சுனனும் மற்றவர்களும் அடைந்திருக்கக் கூடிய மகிழ்ச்சிக்கு எல்லையே இருந்திருக்க முடியாது. ஆனால் இத்தனை நாளும் எதிரியாகத் தான் எண்ணிக்கொண்டிருந்த கர்ணன் தன் மூத்த முதல் சகோதரனே என்பதை எண்ணும் போது அர்ச்சுனனுக்கு அவன் இதயமெல்லாம் பிசைந்து சொல்லவொண்ணா வேதனையில் அவனைத் துடிக்க வைக்கிறது. அபிமன்யு இறந்த பதின் மூன்றாம் நாள் இரவு எத்தகைய துயரில் அவன் துடித்தானோ அதைப் போன்ற வேதனையில் பதினேழாம் நாள் இரவும் துடிக்கிறான்.

''கர்ணனைப் பலிகொடுத்த அவன் தந்தை சூரியனின் மனம் எப்படி என்னைப் பழித்திருக்கும்? சூரியனின் மனைவி சாயாதேவியின் மனம் எப்படிப் பழித்திருக்கும்? கொடை குணத்திற்கு உலகிற்கே ஒருவனாய் திகழ்ந்த கர்ணனைக் கொன்று விட்டதற்காகப் பூமிதேவி என்னை எப்படிப் பழிப்பாள்? இவர்கள் எல்லோருடைய வெறுப்பிற்கும் என்னை ஆளாக்கி விட்டாரே கண்ணன்! பூமி பாரத்தைக் குறைப்பதற்காக உடன்பிறந்த சகோதரன் என்ற உண்மையைக் கூடவா மறைத்து இப்படி வஞ்சம் புரிவார்கள்'' என்று பார்த்தசாரதியையும், தன்னை ஈன்ற குந்திதேவியையும் நொந்தவாறு அர்ச்சுனனும், இதேபோல் மற்றவர்களும் உறங்காமல் புலம்பித் தவிக்கும் அந்த இரவில் தன்னுயிர் நண்பன் மறைவதை எண்ணித் துரியோதனனும் கூடச் சோகக்கடலில் மூழ்கி உறக்கம் வராமல் தத்தளிக்கிறான். சகுனி, கிருபர், அசுவத்தாமா ஆகியோர் துரியோதனனைத் தேற்றுகிறார்கள். சேனைத் தலைவன் ஆன கர்ணன் மாண்டு பட்டமையால் மற்றொருவரைச் சேனைத் தலைவராகத் தேர்ந்தெடுக்க வேண்டிய கடமை இருப்பதையும் துரியோதனனுக்கு நினைவுபடுத்துகிறார்கள். துரியோதனனும் தன் கடமையை உணர்ந்து மகாவீரனான

சல்லியனைக் கௌரவ சேனைக்குத் தளபதியாகத் தேர்கிறான்.

மகன் மறைந்த மறைவும் கூட சூரியனைத் தன் கடமையிலிருந்து விலக்கி விடவில்லை. அதனால் வழக்கம் போல் சூரியன் பதினெட்டாம் நாள் காலையும் தன் சோகத்தையும் கோபத்தையும் இரவின் மீது காட்டிய வனாய் தன் ஆயிரம் கிரணங்களாலும் இருளை விரட்டி யடித்தவாறு விரைந்து வர இருதிறத்துச் சேனைகளும் இரண்டில் ஒன்று பார்ப்பதெனத் திரண்டுவந்து குரு சேத்திரக் களத்தில் அணி வகுந்து நிற்கின்றன. துரியோ தனன் சல்லியனுக்குத் தானை தளபதி பட்டம் கட்டித் தன் சேனையிலுள்ள மகுட வர்த்தனர்களும் பட்டவர்த் தனர்களும் சல்லியன் சொல்லும் ஆணை வழி போர் புரியுமாறு உத்திரவிடுகிறான். சல்லியனை வாழ்த்திக் கௌரவ சேனையினரும் ஆரவாரம் செய்ய சல்லியனும் தன் சகோதரி மக்கள் என்ற வாஞ்சை சிறிதும் எண்ணாத வனாய் பாண்டவர்களை வெல்லஆவேசத்துடன்வருகிறான்.

''மகா வீரனான சல்லியனை வெல்ல தம் சேனையில் ஆற்றல் வாய்ந்தவர் யார்?'' என்று தருமரும் பார்த்த சாரதியை வினவ அவரும் ''தருமா! நீ தான் சல்லியனை வீழ்த்தும் வலிமை கொண்டிருக்கிறாய்'' என்றுகூற அதைக் கேட்டுத் தருமரின் தோள்களும் வீரத்தால் பூரிக்கின்றன. மேலும் பார்த்த சாரதி ''அர்ச்சுனன் அசுவத்தாமனுடனும், சகாதேவன் சகுனியுடனும், நகுலன் கர்ணன் மக்களுடனும், வீமன் துரியோதனன் உடனும் போர் புரிக'' என்று கூற அவருடைய ஆலோசனையின்படியே பாண்டவர் ஐவரும் கௌரவ சேனையை எதிர்த்துப்போர் தொடங்குகின்றனர்.

கடந்த பதினேழு நாட்களில் அர்ச்சுனனும் வீமனுமாகச் சேர்ந்து கடலளவு ஆக இருந்த கௌரவர் சேனையைக் கையளவாகக் குறைத்துச் சிதைத்து அழித்து விட்டார்கள். எஞ்சியிருந்தது ஓரளவு சேனை தான். அந்தச் சிறிய அளவு சேனையையும் ஒரு முகப்படுத்திப் பாண்டவர்

அணியுடன் போரிடச்செய்கிறான் சல்லியன். சல்லியன் தானும் ஒரு தேரிலேறித் தருமனை நோக்கி விரைந்து வந்து வலியகணைகளைத் தருமர் மேல் ஏவுகிறான். சல்லியன் ஏவிடும் கணைகளுக்குத் தருமரும் மாற்றுக் கணைகளை விரைந்து ஏவ அவ்வம்புகள் இருவர் மேனி மேலும் பாயாமல் இடையிலேயே ஒன்று மற்றொன்றை மோதிச் சிதைக்க வீணே அழிந்துபடுகின்றன. இருவரும் தத்தம் சங்குகளை முழக்கி விழிகள் சிவக்க மிகச் சிறந்த அத்திரங்களை ஏவி நீண்ட நேரம் போர் செய்கின்றனர். இறுதியில் மகாவீரனான சல்லியன், தருமரின் தேர்ப் பாகனின் தலையை ஓர் அம்பினால் அறுத்து தேர்க்குடை யையும் கூட மற்றொரு அம்பினால் அறுத்து வீழ்த்து கிறான். இதைக் கண்ணுறும் வீமன் உடனே தருமர் இருக்கும் இடத்திற்கு விரைந்து வந்து சல்லியனின் தேர்ப்பாகனுடைய தலையைத் தானும் ஓர் அம்பால் அறுத்து, மற்றொரு அம்பால் சல்லியனின் தேர்க் குடை யையும் அறுத்து வீழ்த்துகிறான்.

தருமர் தான் அம்பொன்றும் ஏவிடாமல் சல்லியனுடன் வீமன் ஆற்றிடும் வீரப்போரை வியந்து பார்த்தவாறு நிற்கிறார். சல்லியனுடன் சிறிது நேரம் விற்போர் புரியும் வீமன், பிறகு அதில் மனம் சலிப்படைந்து தன் சத்துரு காதினி கதையை ஏந்தியவாறு தேரிலிருந்து குதித்து தாவிச் சென்று சல்லியனுடைய தேரைக் கதாயுதத்தால் தாக்கு கிறான். சல்லியனுடைய தேர்க் குதிரைகள் அத்தனையும் வீமனுடைய கதையின் தாக்குதலுக்குப் பலியாகி மாய அதனால் கோபம் கொள்ளும் சல்லியனும் இரும்புலக்கை ஒன்றை எடுத்து வீமன் நெற்றியிலே ஓங்கி அடிக்கின்றான். சல்லியனின் இரும்புலக்கை மகா பலசாலியான வீமனை யும் நிலைகுலையச் செய்ய வீமன் மயங்கிச் சாய்கிறான். அதைக் காணும் தருமர் உடனே சல்லியனைத் தான் இடைமறித்து அவன் மேல் வலிய கணைகளை ஏவி மீண்டும் போரைத் தொடங்க, தருமருக்குத் துணையாக நகுலன்.

சகாதேவன், சாத்தகி ஆகியோரும் வந்து சல்லியனை எதிர்க்கின்றனர்.

இராமனுக்கொப்பான வில்லாற்றல் படைத்த சல்லியன், தான் ஒருவனாகவே தருமர், நகுலன், சகா தேவன், சாத்தகி ஆகிய அனைவரையும் தன் கணைகளால் துளைத்துப் போர்புரிகிறான். இந்நால்வருக்கும்துணையாக வந்த சுமித்திரன் முதலான மன்னர்கள் சிலரும் சல்லியன் கணைகளுக்குப் பலியாகி மாள, தருமர் சல்லியனை எதிர்த்து மிக ஆவேசமுடன் போர் புரிகிறார். இதே நேரம் வீமனும் தன் தளர்ச்சி நீங்கி எழுந்து வந்து சல்லியனை எதிர்க்கிறான். வீமன் ஏவும் அம்புகள் பல பாய்ந்து சென்று சல்லியனின் தேர்ப்பாகனையும் குதிரைகளையும் கொன்று அழிக்க, அப்பொழுதும் பின்வாங்கிடாமல் சல்லியன் தான் ஒருவனாகவே நின்று அனைவரையும் எதிர்த்துப் போர் புரிகின்றான். எனினும் தன்னை எதிர்த்து போர் புரிவோர் மிகப் பலராக விளங்கவே சல்லியன் அவர்களுக்கு ஈடு கொடுக்க முடியாமல் பின்வாங்கி விட நேரிடுகிறது.

சல்லியனின் தளர்ச்சி காணும் துரியோதனன்அசுவத்தா மனைச் சல்லியன் இருக்கும் இடத்திற்கு விரைந்து வந்து சேருமாறு கூறி சில வீரர்களை அவனிடம் அனுப்புகிறான். ஆனால் அசுவத்தாமன் அங்கிருந்து புறப்பட இயலாமல் அர்ச்சுனன் அவனை வழி மறித்து மிக உக்கிரமாகப் போர் புரிகிறான். அர்ச்சுனன் ஏவும் எட்டு பாணங்களால் அசுவத்தாமன் தேரும் சிதைந்து கை வில்லும் சிதைவுபட்டு அழிகிறது. அசுவத்தாமன் தன் சிதைந்த தேரிலிருந்து இரும்புலக்கை ஒன்றை எடுத்து அர்ச்சுனன் மேல்வீச அவ்வுலக்கையை எட்டுத் துண்டுகளாக்கிச் சிதைக்கிறான் அர்ச்சுனன். காதயுதம் ஒன்றை வீச அக்கதாயுதமும்அநேக துண்டுகளாகுமாறு அர்ச்சுனன் அம்புகளைப் பொழிகிறான். அர்ச்சனனுடைய வில்லாற்றலுக்கு முன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவுமே முடியாமல் மிகத் தடுமாறி தத்தளிக்கும் அசுவத்தாமா சல்லியனுக்குத் துணை புரிய

எப்படி இயலும்? அர்ச்சுனன் தன்னை விட்டால் போதும் என்பதாக எண்ணி அர்ச்சுனனுக்குப் புறம் கொடுத்து அசுவத்தாமன் ஓடி விட, தருமர் மற்றும் வீமனுக்குத் துணையாக வந்து அர்ச்சுனனும் சல்லியனை எதிர்த்து போர் புரிகிறான்.

இதே நேரம் சல்லியனுக்கு துணையாக துரியோதனன் வீமனுக்குப் பலியாகாமல் எஞ்சியிருக்கும் தன்தம்பிகள் சிலரோடு வந்து போர் புரிய வீமனுக்கு ஆவேசம் அதிகமாகிறது. ஜெயகாந்தன், ஜெயசேனன், சேனாவிந்து, ஜெயத்திரதன், ஜெயவிந்தன், ஜெயவிக்ரமன் ஆகிய துரியோதனனின் ஏழு தம்பியரை ஒரே நேரத்தில் ஏழு பாணங்களை எய்து எமனுலகிற்குத் துரியோதனன் காணவே அனுப்பி வைத்து விடுகிறான் வீமன், அதைக் கண்டு கொதித்துச் சித்திரவாகு, பலசேனன், ஜெயசூரன், சித்திரன், உத்தமவிந்து ஆகிய துரியோதனனின் தம்பிகள் மேலும் ஐவர் வந்து வீமனோடு போரிட ''உம் உடன் பிறந்தோர் சென்ற இடமே நீங்களும் விரைந்து செல்லுங்கள்'' என்று வீமன் அவர்களையும் ஐந்து கணைகளால் எமனுலகிற்கு அனுப்பி வைக்கிறான். துரியோதனன் தம்பிகள் இவ்வாறு விரைந்து வந்து வீட்டில் பூச்சிகளைப் போல் வீமன் எனும் பெரு நெருப்பில் வீழ்ந்து பொசுங்குதல் கண்டு தன்னுடைய பூமிபாரம் தீர்க்கும் கடமை விரைவில் ஈடேறப் போகிறது என்று எண்ணி மனம் பூரித்து மகிழ்ச்சியை முகத்தில் காட்டிப் புன்னகை பூத்து நிற்கிறார் பார்த்தசாரதி.

வீமன் தன் பங்கிற்கு இவ்வாறு துரியோதனன் தம்பிகளை வதைத்து அழித்துக் கொண்டிருக்க, நகுலன் கர்ணனின் மைந்தர்களாகிய சித்திரசேனன், சூரியவர்மன், சித்ரகீர்த்தி ஆகிய மூவரையும் தன் அண்ணன் கர்ணன் சென்று இனிதே வீற்றிருக்கும் சொர்க்க உலகிற்கு அனுப்பிவைக்கிறான். சகுனியின் மைந்தர்கள் உலூகன், சைந்தவன் ஆகிய இருவரும் வந்து நகுலனுடன் போரிட்டுத் தோற்

றுப் புறமுதுகு காட்டி ஓடிவிடுகிறார்கள். சகுனியுடன் சகாதேவன் வீரமுடன் போர் செய்து கொண்டிருக்க அர்ச்சுனன் கிருபருடன் போரிட்டு அவரைப் புறமுதுகு காட்டி ஓடச் செய்கிறான்.

''சல்லியனை நீயே கொல்வாய்'' என்று கண்ணன் ஆசிகூறியிருந்தும் அவனை இன்னும் கொன்று வீழ்த்த இயலாமல் இருப்பதை எண்ணிக் கொதித்து தருமர் மீளவும் சல்லியனுடன் வந்து உக்கிரமாகப் போர் புரி கிறார். வீமனும் தருமருக்குத் துணையாக வந்து சல்லி யனை எதிர்க்கின்றான். அணையும் முன் தீபம் முன்னை யிலும் சுடர்விட்டுப் பிரகாசிப்பதைப் போலவே சல்லிய னுடைய முகமும் அவன் மறைய இருக்கும் இப்பதினெட் டாம் நாள் போரில் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. சகா தேவன் மேல் ஓரம்பினை எய்து அவனைப் புறம்கொடுத்து ஓடச் செய்தும், வீமன்மேல் இரண்டு அம்புகளை எய்து அவனைக் காயப்படுத்தியும், அர்ச்சுனன்மேல், மூன்றம்பு களை எய்து அவன் தோளிரண்டையும் மார்பையும் காயப் படுத்தியும், சல்லியன் வீரப் போர் புரிகிறான். தருமரின் நெற்றியில் சல்லியனின் கணைகள் பாய்ந்து குருதி பெருக்குவதைக் கண்டதும் வீமன் கொதித்து எழுகிறான். கதாயுதத்தை ஓங்கியவாறு ஓடி சல்லியன் மேல் பாய்ந்து அவனுடைய நெற்றியில் வீமன் ஓங்கி அடிக்கிறான். சல்லியன் மகுடமும் இதனால் அவன் தலையிலிருந்து கழன்று பறந்து போய் தரையில் விழுகிறது.

வீமன் இவ்வாறு சல்லியனை மகுடபங்கம் செய்ய, சல்லி யனைக் காப்பதற்காக துரியோதனன் எஞ்சியிருக்கும் தன் ஒன்பது தம்பிகளோடு வந்து வீமனோடு போரிடுகிறான். தன் தொன்னூற்றொன்பது தம்பிகளில் துரியோதனன் இதுவரை 90பேரை வீமனுக்குப் பலிகொடுத்துவிட்டான். இன்னும் எஞ்சியிருப்பதோ உத்தமன், உதயபானு, கீர்த்தி, பலவர்மன், பலபீமன், பிரபலதானன், விக்கிரபாகு, சுசீலன் சீலன் ஆகிய ஒன்பது பேர் மட்டுமே. இந்த ஒன்பது பேரை

யும் வீமன் ஒருவர் கூட தப்பி ஓடிவிடாதபடி வளைத்துத் தன் கதாயுதத்தால் மோதி அவர்களின் தலைகளை ஆகாயத்தில் பறக்கச் செய்கிறான்.

''தன்கிளையோர் தொண்ணூற்றொன்பதின்மர்
தாமும் சயவீமன்
சரத்தாலும் தண்டினாலும்
கனக்குடிலிற் குடியேறக் கண்டுகண்டு கைசோர
மெய்சோரக் கண்ணீர் சோர
எனக்குறுதி உரைத்தவர் வம்முரை கேளாமல்
என் செய்தேன்
எப்பொருளும் இழந்தேன் என்று
மனக்கவலையுற மன்னன் தன்னை நோக்கிமாமனும்
மற்றொரு கோடி மாற்றம்சொன்னான்''
—(பதினெட்டாம் போர்ச் சருக்கம் 86)

''ஐயோ! எனக்குப் பலரும் அறிவுரைகள் கூறியபோதெல்லாம் அவற்றை என் காதுகளில் வாங்கிக் கொள்ளாமல் அலட்சியம் செய்தேனே; இப்பொழுது என்ன ஆயிற்று? எனக்குத் தம்பிகள்தொண்ணூற்று ஒன்பதுபேர். தருமருக்குத் தம்பிகள் நால்வர். தம்பிகள் நால்வரில் ஒருவரும் குறைவின்றித் தருமர் விளங்குகிறார். ஆனால் நானோ என்னுடன் பிறந்த அனைவரையும் இழந்து நான் ஒருவன் மட்டும் தனியனாகி நிற்கின்றேனே'' என்று கண்ணீர் விட்டுக் கதறி அழுகிறான் துரியோதனன். துரியோதனனின் மாமன் சகுனி ''இறந்துபட்ட உன் சகோதரர்கள் எல்லாம் வீரர்களுக்குரிய சொர்க்கத்தில் சகல நலன்களையும் அனுபவித்துச் சுகமாக வாழ்வார்கள். ஆதலால் அவர்கள் மாண்டுபட்டார்கள் என்று நீ கவலை கொள்ளல் ஆகாது'' என்று கூறித் தேற்றுகின்றான்.

துரியோதனன் சேனையில் ஒவ்வொருவராக மடிந்து இவ்வாறு வீழ்வதனால் உற்சாகம் மிகக் கொள்ளும் தருமனும் சல்லியனுடன் ஆவேசமாகப் போர் புரிந்து சல்லியனின் தோள்களிலும், மார்பிலும், அவன் உடல் முழுவதும் போய்

தைத்துக் குருதி பெருக்குமாறு மிகுதியான அம்புகளைப் பொழிகிறார். சல்லியனும் மனம் தளராமல் நெருப்புப் பொறி பறக்கும் பல கணைகளை ஏவித் தருமரின் உடலைக் காத்து நிற்கும் கவசங்களைச் சிதைத்து அழித்து, அவர் நின்றிருக்கும் தேரையும் சிதைத்து விடுகிறான். மற்றொரு தேருக்குப் பாய்ந்து தாவிடும் தருமர், வலிமைமிக்க வேல் ஒன்றை எடுத்து வாயு வேகத்தில் அதை விரைந்து சல்லியன் மேல் ஏவ, சல்லியன் தலையின் ஒருபுறமாகப்பாய்ந்து மறு புறமாக வேல் வெளியே சீறிப்பாய்கிறது. சல்லியனின் தலையின் இருபுறமும் இரு நதிகளைப் போல் குருதி பெருக் கெடுத்து ஓட சல்லியனும் மடிந்து கீழேசாய்ந்து உயிர்விடு கிறான்.

சேனைத் தலைவனான சல்லியன் இவ்வாறு தருமரால் கொல்லப்பட்டதும், கௌரவ சேனையில் எஞ்சியிருக்கும் ஓரளவு சேனையும் நிலை குலைந்து நாலாபுறமும் ஓடுகிறது. சல்லியனை உயிராகப் போற்றிடும் அவனைச் சேர்ந்த 700 வீரர்கள் மட்டும் அஞ்சிடாமல் வந்து தருமரை எதிர்த்துப் போரிட்டு அவர்களும் தீ பிடித்த தினைக் காட்டினைப் போலவே அழிந்து, சல்லியன் புகுந்த வீரசுவர்க்கமே தாமும் சென்றடைகிறார்கள்.

இவ்வாறு கௌரவ சேனையில் அழிந்தவர்போக துரி யோதனனுடன் சகுனி, அசுவத்தாமா, கிருபன் கிருதவன்மா ஆகியமிகச் சிலரே மிஞ்சுகின்றனர். இவர்களும் தங்கள் தங்கள் சேனா வீரர்களுடன் தாமும் ஆனவரை பாண்டவர் களை வெற்றி கொள்வது என்ற உறுதியுடன் நின்று போர் புரிய சகாதேவன் சகுனியுடன் வந்து போர் புரிகிறான். வஞ்ச மனச் சகுனியைக் கொல்வதாகச் சகாதேவன் முன்பு வஞ்சினம் புரிந்திருந்தான். தன் வஞ்சினம் வெல்லும் வேளை வந்ததெனச் சகாதேவன் சகுனியுடன் போர் புரிய, மாமனுக்கு உதவியாக வந்த துரியோதனன் சகாதேவன் மீது ஒரு வேலை ஏவுகிறான். அவ்வேலும் சகாதேவனைக் காயப்படுத்தி அவனை மூர்ச்சையடையச் செய்கிறது. சகா

தேவனுக்குத் துணையாக விரைந்து வரும் வீமன் சகுனியின் மேலும் துரியோதனன் மேலும் நூறு நூறு பாணங்களை ஏவுகின்றான். அப்பொழுது அசுவத்தாமன் ஒரு வலிய வேலாயுதத்தை வீமன்மேல் செலுத்த, வீமனுக்குத் துணையாகவரும் சோழமன்னன் ஏழு அம்புகளை ஏவி அவ் வேலைச் சிதைக்கிறான். மேலும் பல கணைகளை அசுவத்தாமனின் தோள்களை ஊடுருவிக் குருதியைப் பெருக்குமாறு ஏவுகின்றான். பாண்டவர்க்குத் துணைபுரியும் சோழ மன்னன் இறுதிவரை இறவாமல் நின்று பதினெட்டாம் நாள் போரிலும் இவ்வாறு வீரம் காட்டி தருமம் வெல்ல துணை புரியும் இவ்வீரச் செய்தி ''பாரத முடிப்பளவு நின்று தருமன் தன் கடற்படை தனக்கு உதவி செய்தவன்'' எனக் கலிங்கத்துப் பரணி என்ற 12ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்ட நூலிலும் போற்றப்பட்டிருப்பதும் இங்கு நாம் நினைவு கூர்ந்து மகிழத்தக்கதே.

இத்தகைய மாமன்னன் வீரசோழனின் கணைகள் பாய அசுவத்தாமன் தன் மேனியெங்கும் புண்ணாகி புற முதுகு இட்டு ஓடிவிடுகிறான். சகுனிக்குத் துணையாக வரும் கிருபனும் சோழனுக்குத் தோற்றுப்பின் ஓடிவிட, சகுனி யின் மேல் வலிய வேல் ஒன்றை ஏவி, இனி அவன் சூதாடி இவ்வையகத்தில் யார் குடியையும் கெடுக்க இயலாத வகை யில் அவனைக் கொன்று கொடுநரகிற்கு அனுப்பி வைத்து விடுகிறான் நம் வீரசகாதேவன்.

சகுனி மாண்டு மண்மேல் விழுந்ததும், துரியோதனன் தன் உடலிலும் உயிர் நீங்கியதைப் போன்ற துயரத்தை அடைகின்றான். அவனுக்கு உற்ற துணையாகத் திகழ்ந்த ஒருவர் கூட அவனருகில் இப்பொழுது இல்லை. வீடுமர் இல்லை, துரோணர் இல்லை. ஆருயிர் நண்பன் கர்ணன் இல்லை, தம்பிகள் ஒருவரும் இல்லை. தனக்கு உற்ற துணை யாக விளங்கிய சகுனியும் மடிந்து விட்டான் என்பதை எண்ணும் போது துரியோதனன் நிலைதடுமாறி மனம்கலங் கித் தன் தேரிலேயே மயங்கிச் சாய்ந்துவிடுகிறான். தேர்ப்

பாகன் தேரைக் களத்திற்கு அப்பால் ஓட்டிச் சென்று துரி யோதனன் மயக்கத்தைத் தெளிவிக்க, மயக்கம் நீங்கி எழும் துரியோதனன் தான் எப்பொழுதோ கற்றுக் கொண்டு மாண்டவர்களை எழுப்பவல்ல சஞ்சீவிநி மந்திரத்தை நினைத்துக்கொண்டவனாய், மனம் மகிழ்கிறான்.

''வாழ்ந்தேன் பாண்டவர்களை அழிப்பேன். கண்ணா உனக்குத்தான் மாயமந்திரங்கள் தெரியுமா? எனக்கும் சஞ்சீவிநி மந்திரம் தெரியும். அந்தமந்திரத்தை உபயோ கித்து மாண்ட என்நண்பன் கர்ணன் உள்ளிட்ட அனை வரையுமே மீண்டும் உயிர்ப்பிக்கச் செய்து பாண்டவர்களை அழிக்கிறேனா இல்லையா பார்'' என்று மனத்திற்குள் நினைத்தவனாய் ஒருவருக்கும் தெரியாமல் தான்மட்டும் தனியே புறப்பட்டுச்சென்று அருகிலிருக்கும் ஒரு குளத்தினை அடைகிறான். தன்னுடையகாலடிச் சுவடுகளைக் கொண்டும் யாரேனும் தான் குளத்திற்குள் இருப்பதை அடையாளம் கண்டுவிடவும்கூடும் என்று எண்ணிக் குளத்திற்குவந்து, தான் பின் திரும்பிச் சென்று விட்டதைப் போலகாலடிச் சுவடு களையும் போலியாக அமைத்துக் குளத்து நீருக்குள் மூழ்கி அதன் ஆழத்தில்போய் அமர்ந்து கொள்கிறான் துரியோ தனன். தன் மனத்தை ஒருமுகப்படுத்தியவனாய் சஞ்சீவிநி மந்திரத்தை உச்சாடனம் செய்யத் தொடங்குகிறான் துரியோதனன்.

''அங்நெடு மாமறையால் அமரத்திடை அழிசேனை
இன்னுயிர் பெற்றிடும் வகைகொடு மீளவும்
இகல்வேன் என்று
உன்னி உளந்தெளிவுற்று ஒருவர்க்கும் இஃதுஉரையாதே
தன்னொரு வெங்கதையோடு தராபதி தனிசென்றான்.''

—(பதினெட்டாம் போர்ச் சருக்கம். 102)

# 32

சஞ்சீவிநி மந்திரம் இறந்தவர்களை எழுப்பிட வல்ல மந்திரம் ஆகும். இம்மந்திரத்தைப் பிரம்மாவிடமிருந்து அசுரர்களின் குருவான சுக்கிராச்சாரியர் முதலில் கற்றுக் கொண்டார். சுக்கிராச்சாரியாரிடமிருந்து தேவகுருவான பிரகஸ்பதியின் மூத்தமகன் கசன் கற்றுக்கொண்டான். கசனிடமிருந்து முறையே பிரகஸ்பதியும் தேவர்களும் முனிவர்களும் கற்றுக்கொண்டார்கள். அம்மந்திரத்தைக் கற்று வைத்திருந்த முனிவர் ஒருவரிடமிருந்தே துரியோ தனனும் அம்மந்திரத்தைக் கற்று வைத்திருந்தான். அம்மந்திரத்தின் வலிமையால் மாண்ட துரோணர், கர்ணன் சல்லியன், சகுனி உள்ளிட்ட அனைவரையும் மீண்டும் உயிரெழச் செய்து பாண்டவர்களை வென்றுவிட ஆர்வம் கொண்டவனாய், தன் திட்டம் பாண்டவர்களுக்குத் தெரிந்துவிடக் கூடாது என்ற முன்னெச்சரிக்கையோடு குளம் ஒன்றில் மூழ்கி சஞ்சீவிநி மந்திரத்தைத் துரியோதனன் ஜெபிக்கவும் தொடங்குகிறான்.

நெடுநாள் யோகம் பயின்ற துறவிகளைப் போல துரியோதனனும் தன் ஐம்புலன்களை அடக்கி, மூலாதார மான தனது இதயத் தாமரையை மலரச் செய்து தவம் புரிகிறான்.

> **''பன்னாளும் யோகம் பயில்வோரிற் பதின்மடங்காத்**
> **தன்னாக முற்று மெலிவின்றித் தயங்குமாறு**
> **நன்னாளௗ, மூல நளினத்தை மலர்த்தி நாவால்**
> **உன்னாமல் உன்னுமுறை மந்திரம் ஓதினானே''**
>
> (பதினெட்டாம் போர்ச் சருக்கம் 105)

துரியோதனன் இவ்வாறு குளத்தினுள் மூழ்கிமந்திர உச்சாடனம் செய்துகொண்டிருக்க, துரியோதனனைக்

காணாமல் அவனை இருதிறத்தாரும் தேடுகிறார்கள். அசுவத்தாமன் கிருபரையும், கிருதவன்மனையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு துரியோதனைத் தேடி வரும் வழியில் மாண்டுகிடக்கும் சகுனியைக் காண்கிறான். ''ஆ! எல்லாம் போயிற்று, சகுனியும் சாய்ந்தான். பாண்டவர்களே வென்றார்கள்'' என்று வியக்கும் அவன் ''துரியோதனனும் மாண்டுவிட்டிருப்பானோ?'' என்று மனச்சோகத்தோடு துரியோதனனைத் தேடிப்பார்க்க அவன் உடலும் அக்களத்தில் காணப் படாமையால் ''துரியோதனன் என்ன ஆனானோ தெரியவில்லையே!'' என்றுகூறி மயங்குகிறான்.

அப்பொழுது திருதராட்டிரனின் உற்ற துணைவரும், பாரதப்போர் நிகழ்ச்சிகளை அப்போதைக்கு அப்போதே சென்று திருதராட்டிரனுக்கு எடுத்துக் கூறும் தூதுவரும் ஆகிய சஞ்சய முனிவர் எதிர்வரக் கண்டு அவரை வணங்கித் துரியோதனனைப் பற்றி விசாரிக்கிறான். துரியோதனன் இறக்கவில்லை என்பதையும், இழந்த துணைவர்களை உயிர்ப்பிக்க வேண்டி குளத்திற்குள் மூழ்கி மந்திரம் ஜெபிக்கிறான் என்பதையும் சஞ்சய முனிவர், அசுவத்தாமனிடம் கூறுகிறார். ''நீங்கள் போய் துரியோதனனைப் பாருங்கள், நான் சகுனி இறந்ததைத் திருதராட்டிரனிடம் சென்று தெரிவிக்கிறேன்'' என்று கூறி முனிவர் விடைபெற்றுப் போக அசுவத்தாமன் முதலியோர் துரியோதனன் மூழ்கி இருக்கும் குளத்திற்கு வந்து சேருகிறார்கள்.

துரியோதனன் மூழ்கியுள்ள குளத்தில் நீரும் ஆடவில்லை; மீன்களும் துள்ளவில்லை. அசைவற்றிருக்கும் மலர்களை வண்டுகளும் நாடவில்லை. பறவைகளும் ஒலி அடங்கியிருக்கும் அக்குளத்தினைத் தன் நண்பர்களுடன் சென்று அசுவத்தாமன் காண்கிறான். அங்கிருக்கும் காலடிச் சுவடிகள் குளத்தை நோக்கியிராமல் மாறி இருப்பதைக் கண்டும் அசுவ்த்தாமன் துரியோதனனின் தந்திர உபாயத்தை எண்ணி மகிழ்ந்து அவன் குளத்திற்குள்தான் இருகக வேண்டும் எனத் தெளிகிறான், ''துரியோதனா!

மன்னர்களும், நண்பர்களும் படையினரும் மாண்டார்கள் எனநீ வருந்த வேண்டாம். என் ஆற்றலை நானே எடுத்துக் கூறுவது சரியல்ல. இருந்தாலும் நான் சொல்கிறேன் கேள். என்வில்லை ஏந்தி நான் போர் புரிவேனே யானால் அர்ச்சுனனும் வீழ்வான்; மற்ற பாண்டவர்களும் மடிவார்கள். இன்று சூரிய அஸ்தமனத்திற்கு முன்பே நான் பாண்டவர்களைவென்று என் வல்லமையை உனக்கு உணர்த்துகிறேன். அப்படி நான் செய்யாவிட்டால் துரோணனின் வீரமகன் என்ற பெயரும் எனக்கு இனி வேண்டாம். பிறகு நான் என் வில்லையும் கைகளால் தொட மாட்டேன். இது என் சபதம்'' என்று விளம்புகிறான் அசுவத்தாமன்.

'வீரியம் விளம்பல் போதாதாயினும் விளம்புகின்றேன்
போரியல் அமரில் என்நேர் பொருசிலை எடுத்துநின்றால்
தேரியல் விசயனோடு நால்வரும் சேர என்கை
மூரிவெங் கணைகளாலே முடித்தலை துணிவர்
கண்டாய்.''

''எல்லவன் வீழுமுன்னம் யாரையும் தொலைத்து வேலைத்
தொல்லைமண் அளித்திலேனேல் துரோணன் மாமதலை
அல்லேன்
வில்லவன் படையுந் தீண்டேன் விடையவன்
முதலோர் தந்த
வல்லிய கணையும் பொய்த்தென் மறைகளும் பொய்க்கு
மாதோ''

(பதினெட்டாம் போர்ச் சருக்கம் 118, 119,)

இவ்வாறு அசுவத்தாமா சபதம் செய்தும்கூட துரியோதனன் தன் தவத்தைக் கைவிட்டுக் குளத்திலிருந்து வெளிப்படவில்லை. ''துரியோதனா! நான் ஒருவனாகவே பாண்டவர்களை அழித்து உனக்கு அரசை நல்குகிறேன். அதற்குப் பிறகு நீ தவம் செய்து மாண்ட உன் துணைவர்களை உயிர் எழச் செய்து கொள்ளலாம்'' என்றும் அசுவத்தாமா கூறுகிறான். ஆனால் அப்பொழுதும் துரியோதனன்

தன் தவத்தைக் கைவிடாமல் நீரோடு நீராக ஒன்றி விட்டதைப் போல தன் தவத்திலேயே ஒன்றியிருக்க அசுவத்தாமன் 'சரி! நாம் யுத்தகளம் செல்வோம்' என்று கூறி கிருபர், கிருதவன்மன் ஆகியோரையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டுச் சென்றுவிடுகிறான்.

இதே நேரத்தில் துரியோதனனைக் குருச்சேத்திரக் களமெங்கும் தேடியும் காணாமல் பாண்டவர்களும் திகைக்கிறார்கள். துரியோதனனையும் கொன்றால் அல்லவா பாண்டவர்களின் சபதம் பூர்த்தியாகும், அவன் எங்குப் போய் ஒளிந்து கொண்டுவிட்டான்? என்று பார்த்த சாரதியை வினவ அவரும் பாண்டவர்களை அழைத்துக் கொண்டு துரியோதனன்மூழ்கியுள்ள குளத்திற்கு வருகிறார். வரும் வழியில் எதிர்ப்படும் வேடுவர்கள் சிலரும் 'இதோ இந்தக் குளத்தில்தான் துரியோதனன் உட்புகக் கண்டோம்', என்று கூற, வீமன் குளக்கரையில் துரியோதனனின் காலடிச் சுவடுகள் இறங்குமுகமாக இல்லாமல் ஏறுமுகமாக இருப்பதைக் காட்டுகிறான். கண்ணன் ''வீமா! இது துரியோதனன் நம்மைத் திசை திருப்பச் செய்திருக்கும் தந்திரம். அவன் குளத்திற்குள் தான் இருக்கிறான். நீ அவனை கூப்பிடு'' என்று கட்டளையிட, வீமனும் 'துரியோதனா! வெளியே வா! கங்கைமகன் வீடுமர் முதலாக காந்தாரமன்னன் சகுனி வரை கணக்கிலாதோர் மாண்டுமுடியக் கண்ட நீ ஒரு கோழையைப் போல் வந்து குளத்திற்குள் ஒளிந்துகொண்டு விட்டாயே! பாராளும் மன்னர்கள் இந்த உன் பேடித் தனமான செயலை எண்ணிக் கைகொட்டி நகைத்திடமாட்டார்களா? நீ நீருக்குள் ஒளிந்து கொண்டால் உன்னை நான் விட்டுவிடுவேன் என்றா நினைத்தாய்? நீர் சூழ்ந்த இந்நில உலகைவிட்டே உன்னை விரட்டும் வரை நான் ஓயமாட்டேன். மூன்றுலகை ஆண்ட மாமன்னனாகிய உனக்கு குளத்து நீருக்குள் ஒளிந்து கொள்ளும் இச்செயல் பெருமை ஆகாது. நீயாக வெளியே வருகிறாயா? இல்லை, இராம பிரான் தன் அக்கினியாஸ்திரத்தால் கடல்நீரை முன்பு

வருத்தியதைப் போல் நானும் இக்குளத்துநீரை வற்றச் செய்து உன்னை வெளியே வரச் செய்யட்டுமா?'' என்று வினவுகிறான்.

''திரிபுவனங் களுஞ் சேரச் செங்கோன்மை
செலுத்தியநின் சீர்த்திஇந்த
விரிபுவனந் தனில் ஒளித்தால்
மிகு வசையாய்ப் போகாதோ வெருவலாமோ?
புரிபுவனம் உண்டுமிழ்ந்தோன் போரிலங்கை
வழிகாணப் பொருத வாளி
எரிபுவனம் நுகர்ந்ததுபோல் இத்தடமும்
புகையாமுன் எழுந்திராயே''

(பதினெட்டாம் போர்ச் சருக்கம் 137)

வீமன் தன்னைக் கோழையெனத் தூற்றியது கேட்டும், குளத்துநீரை வற்றச்செய்து வெளிவரச் செய்வேன் என்று எச்சரித்தது கண்டும் துரியோதனன் தானும் வீமன் மேல் ஆவேசம் கொண்டவனாய் தன் கை தண்டாயுதத்தோடு குளத்திலிருந்து வெளிப்பட்டு வருகிறான். வருகிறவன் குளத்தைச் சுற்றிலும் பாண்டவர்களும் அவர்களுடைய படை வீரர்களும் யானைகள், குதிரைகள் மற்றும் தேர் களோடு சூழ்ந்து நிற்பதையும், தன்னைச் சார்ந்த ஒருவரும் அங்கே இல்லாமல் இருப்பதையும் காண்கிறான். 'நான் தனி ஒருவன், என்னிடம் இருப்பதும் இந்த ஒரு தண்டாயு தம் மட்டுமே. என்னுடன் யார் போர் செய்யப் போவது? என்று துரியோதனன் வினவ, கண்ணபெருமானும் 'இது என்ன கேள்வி துரியோதனா? உன்னைக் கொல்வதாகச் சபதம் செய்திருக்கிற வீமன்தான் உன்னோடு போர் புரி வான். எல்லோரும் காண, நீங்கள் இருவரும் கதாயுதம் கொண்டு தாக்கிப் போர்புரியுங்கள். உங்களில் யார் வெல் கிறார்களோ அவர்களுக்கே இந்தநாடு இனி உரிமை உடைய தாகட்டும்' என்று கூறுகிறார்.

''எங்கு நாங்கள் போரிடுவது? இந்தக் குளக்கரையிலா அல்லது குருச்சேத்திரக் களத்திலா அல்லது வேறு எங்காகிலுமா?' என்று துரியோதனன் மீளவும் வினவுகிறான். அப்பொழுது தீர்த்த யாத்திரைக்குச் சென்றிருந்த பலராமரும் விதுரரும் அவ்விடத்திற்கு வந்து சேரவே அவர்களைக் கண்ணபெருமானும், பாண்டவர்களும் முகமலர்ந்து வரவேற்கிறார்கள். கண்ணபெருமான் போர் தொடங்கியது முதலாக இதுகாறும் நடந்து முடிந்திருக்கும் நிகழ்ச்சிகள் அனைத்தையும் இருவருக்கும் எடுத்துக் கூறுவதுடன் ''இவர்கள் இருவரும் கதாயுத்தம் புரிவதற்கான இடத்தையும் கூறுக'' என்று பலராமரை வேண்டுகிறார். அவரும் ''கண்ணா! இதுகாறும் நீதானே எல்லாவற்றையும் செய்திருக்கிறாய்! இவர்களுக்குக் களம் காட்டும் அந்தப் பணி மட்டிலும் எனக்கு ஏன்? அதையும் நீயே கூறி முடித்து விடு'' என்று கூறுகிறார். கண்ணபெருமானும் 'பரசுராமர் இருபத்தியொரு தலை முறை சத்திரியர்களைக் கருவறுத்து நரமேதயாகம் செய்து அவர்கள் குருதியைக் கொண்டு உண்டாக்கிய சமந்தபஞ்சகமே இவர்கள் போர்புரிவதற்கு உகந்த இடம்' என்று கூறுகிறார்.

''சமந்தபஞ்சகத்தை விடவும் இவர்கள் போரிடுவதற்கு உகந்த ஓரிடம் இப்பூவுலகில் வேறு எதுவுமே இல்லை'' என்று கண்ணபெருமான் கூற, அவ்விடத்திற்கு எல்லோரும் விரைகிறார்கள். யானை, குதிரை, தேர் என்னும் மூன்று வகையான வாகனங்களிலும் ஏறிப் பாண்டவர்கள் செல்ல, துரியோதனனோ தன் கைகளில் கதாயுதம் ஒன்றை ஏந்தியவனாய், ஏற ஒரு வாகனமும் இன்றிக் கால் நடையாக நடந்து செல்கிறான். இப்பொழுதும் ''தருமர் தம் தம்பிகள் புடைசூழச் சிறப்பாக வருகிறாரே; நான் என் தம்பிகளை இழந்து உறவினர்களை இழந்து தனியாகி விட்டேனே'' என்று பொறாமை உள்ளத்தோடு குமுறுகிறான் துரியோதனன்.

''தம்பியர்கள் புடைசூழத்
தருமன்மகன் பல்லியமும்
பம்பியெழ நடக்கின்ற
பரிசுதனை முகநோக்கி
எம்பியரும் எங்கிளையும்
இறக்க இருந்தனமென்றே
வெம்பிமனம் மிகத்தளர்ந்தான்
விதிதனக்கு விதிபோல்வான்''

(பதினெட்டாம் போர்ச்சருக்கம் 156)

விதிகூட தன் விதிவழி நடக்க வேண்டுமென்று அறம் நோக்காது அடம்பிடித்த துரியோதனனுக்கு தருமம் தந்த மிகப் பெரிய தண்டனையைப் பார்த்தீர்கள் அல்லவா! நாம் யாரைப் பின்பற்றக்கூடாது என்பதற்கு துரியோதனன் எடுத்துக் காட்டு. நாம் யாரைப் பின்பற்ற வேண்டும் என்பதற்குத் தருமரே எடுத்துக்காட்டு. தருமரைக் கண்டு துரியோதனன் பொறாமை கொள்ள, தருமரோ துரியோதனன் மேல் பரிவும் கருணையும் கொண்டு, தாம் தம் தேரிலிருந்து இறங்கி, நடந்து அவனருகில் செல்கிறார். ''தம்பி துரியோதனா! நீயே இவ்வுலகை எல்லாம் ஆண்டுகொள். நானும் என் தம்பிகளும் நீ இடும் பணிகளைச் செய்ய சித்தமாய் இருக்கிறோம். நாம் ஒற்றுமையாக வாழ்ந்து குருகுலத்திற்குப் பெருமை சேர்ப்போம். நீ சம்மதம் என்று ஒரு வார்த்தை சொல் போதும். பரந்த இந்த இராஜ்ஜியம் அனைத்தையும் உனக்கே உரிமையாக்குகிறேன்' என்று இனிமையான மொழிகளைக் கூறுகிறார் தருமத்தின் வடிவமான தருமர்.

''என் துணைவருடன் யானும்
மேவியநின் தொழில் புரிந்து
வன்துணையாய்ச் சேவிப்ப
மடங்கலாசனம் ஏறி

இன்துணைவர் குருகுலத்தார்
எனும் இசை போய்த் திசையேற
நன்துணைவா ஆளுதியோ
ஞாலமெலாம் நின் குடைக்கீழ்''
(பதினெட்டாம் போர்ச்சருக்கம், 158)

தருமர் 'தப்பாது என்மொழி' என்று கருணை கொண்டு கூறவும் துரியோதனன் அவர்மொழிகளை மதித்திடாமல் 'உன் கருணை எனக்கொன்றும் வேண்டுவதில்லை. என் தம்பிகளைப்போல், என்தோழர்களைப்போல் நானும் என் அங்கமெல்லாம் சிதைந்து, இரத்தம் ஆறாக ஓட, கழுகு களும் காகங்களும் என் மேனியைக் கொத்த சாகவே விரும்பு கிறேன். எனக்கு அந்தப் புகழே போதும். உன் கருணை வேண்டுவதில்லை'' என்று மறுத்து விடுகிறான்.

''என் இளைஞர் என் துணைவர்
என்பொருட்டால் இறந்தேக
உங்களருள் பெற்றிருக்கும்
உயிர் வாழ்வின் இனிதன்றோ
அங்கமெலாம் வேறுபட
ஆறுபடு குருதியின்வாய்க்
கங்கமும் காகமும் கொத்தக்
களத்தவிந்தான் எனும் பேரே.''
(பதினெட்டாம் போர்ச் சருக்கம் 160)

'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடார்'' என்று மூதுரைக்கிணங்கவே துரியோதனன் தன் பிடிவாத குணத்தை தன் வாழ்நாளின் இறுதிநாளிலும்கூட கைவிட வில்லை. தருமரும் வேறு வழியின்றி, 'விதிப்படியே எல்லாம் நடக்கும்' என்பதாகத் தம்மைச் சமாதானப்படுத்திக் கொண்டு விடுகிறார். அப்பொழுது கண்ணபெருமான் யுத்தத்திற்குக் குறித்த சமந்த பஞ்சகம் எனும் இடமும்

வந்துவிடவே, வீமனும் துரியோதனனும் கதாயுத்தத்திற்கு சித்தமாகிறார்கள்.

வீமன் துரியோதனனை நோக்கி 'நாம் இருவரும் இறு யாகக் கதாயுத்தம் புரியப் போவதும் இன்றுதான். து துடிக்க உன்னை மோதி நான் கொன்று வீர சுவர்க்கத்திற் அனுப்பிட போவதும் இன்றுதான். உன் இரத்தத்தை வா உண்டு, நீர்வேட்கை தணிய என் கைகளால் நீரை வா அருந்திடப் போவதும் இன்றுதான். அவிழ்ந்த த கூந்தலைப் பாஞ்சாலி அள்ளி முடிந்திட்ப் போவதும் இன் தான்' என்று பல வீர மொழிகளைப் புகல துரியோதனனு அஞ்சிடாமல் 'வீமா! போதும் உன் வாய்ப் பேச்சை நிறுத்து நீ என்னைக் கொல்கிறாயா அல்லது நான் உன்னை கொல்கிறேனா என்பதை இப்பொழுதே பார்த்துவிடுவோம் என்று கூறி வீமன் மேல் பாய்கிறான்.

வீம துரியோதனர்கள் தங்கள் கதைகளை ஆகாய திற்கு வீசிப் பிறகு பிடித்துக் கொள்கிறார்கள். வலசாரி இடசாரியாகச் சுற்றி வந்து கதையுடன் கதையை மோதி ஆக்ரோஷமாக யுத்தத்தைத் தொடங்குகிறார்கள் அவர்கள் ஒருவரை ஒருவர் அதட்டிக் கொள்வதும், அடிக்கடி உரக்கச் சிரித்துக் கொள்வதும், கோபத்தால் கண்களை உருட்டிக் கொள்வதும், வாயிதழ்களை அவ்வப்போது மடித்துக் கொள்வதும், ஆகாயத்தில் தாவிப் பிறகு பூமியில் குதிப்பதுமாகக் கண்டோர் அஞ்சப் போர் புரிகிறார்கள் வீம துரியோதனர்களின் இத்தகைய வீரப் போரினைக் காணும் வானவர்கள் பலரும் செவிடானார்கள் என்று கூறு கிறார் வில்லிப்புத்தூரார்.

வீம துரியோதனர்களின் கதைகள் ஒன்று மற்றொன் றோடு மோத உண்டாகும் ஒலியின் மிகுதியாலோ? வீம துரியோதனர்கள் உரக்கச் சிரிக்கும் ஒலியின் மிகுதியாலோ? இருவரும் முழங்கும் வீர முழக்கமாம் இடியின் ஒலிய

னாலோ? இருவரும் தம்தம் பருத்த உடல்களால் மோதும் இடியினாலோ? இருவரும் தம்தம் கால்களை எடுத்து வைத்து அதிர நடப்பதாலோ? இவர்கள் போருக்குத் தோதாக இடைவிடாது ஒலிக்கப்படும் யுத்தப் பேரிகைகளின் ஒலியினாலோ? வானவர்கள் பலரும் செவிடானார்கள் என்று கூறி வில்லிப்புத்தூரார்,

> ''கதை கதையோடே அடிக்கும் ஓதைகொல்?
> கதைஉடையோர் தாம் நகைக்கும் ஓதைகொல்?
> எதிர்மொழி ஓவாது இசைக்கும் ஓதைகொல்?
> இணைஉடல் ஊடே இடிக்கும் ஓதைகொல்?
> பதயுகம் மாறாடி வைக்கும் ஓதைகொல்?
> பணைபல சூழ்போதி எற்றும் ஓதைகொல்?
> திதியொடு வானூடு செற்றும் வானவர்
> செவி செவிடாமாறு அதிர்க்கும் ஓதையே''
>
> (பதினெட்டாம் போர்ச் சருக்கம், 172)

என்று நயம்படப் பாடியிருக்கிறார்.

இவ்வாறு வீம துரியோதனர்கள் நீண்ட நேரம் கதாயுத்தம் புரிகிறார்கள். வீமனின் ஆவேசத் தாக்குதலுக்கு ஈடு கொடுக்க இயலாமல் தளர்ந்து போகும் துரியோதனன், போரை விரைவில் ஒரு முடிவுக்குக் கொண்டு வர விழைந்து 'வீமா உன் உயிர் இருக்கும் இடத்தை நீ முதலில் சொல். பிறகு நானும் சொல்கிறேன்' என்கிறான். வஞ்சகம் அறியாத வாய்மையாளனான வீமனும் 'என் உயிர் என் தலையில் இருக்கிறது' என்று மறைக்காமல் கூற, துரியோதனன் வீமனின் தலையில் தன் கதாயுதத்தால் ஓங்கி அடிக்கிறான். மேரு மலையில் இடி விழுவதைப் போன்றே வீமன் தலையிலும் துரியோதனனின் கதை அடி போய் விழ, வீமன் தன் நிலைகுலைந்து தரையில் சாய்ந்து விடுகிறான்.

வீமன் பிறகு தட்டுத்தடுமாறி எழுந்தவாறு "துரியோதனா! உன் உயிர் எங்கே இருக்கிறது? சொல்"

என்று கேட்க பொய்ம்மை நிறைந்த வஞ்சகனான துரியோதனனும் தன் உயிர் இருக்கும் இடம் தன் தொடையே என்பதை மறைத்து 'என் உயிரும் தலையில்தான் இருக்கிறது' என்று பொய் சொல்கிறான். அதை உண்மை எனவே நம்பி வீமனும் தன் சத்துரு காதினி கதையால் துரியோதனன் தலைமேல் ஓங்கி அடிக்கிறான். துரியோதனனின் தலை பிளந்து இரத்தம் அருவியெனக் கொட்டும் போதும், துரியோதனன் சிறிதும் தளர்ச்சி இன்றி வீமனோடு போரைத் தொடர்கிறான். இவ்வாறு இருவரும் மாறி மாறி தலைகளின் மீதே கதைகளை வீசிப் போர் புரிய வீமன் மிகத் தளரவும் துரியோதனன் தளர்ச்சியின்றித் தாங்கிக் கொள்வதுமாகப் போர் புரியக் காணும் அர்ச்சுனன் மனம் மிகப் பதைக்கிறான். 'கண்ணா! துரியோதனன் தன் உயிர் இருக்கும் மெய்யான இடத்தைக் கூறாமல் பொய் கூறி விட்டிருப்பான் என்று நான் அஞ்சுகிறேன்'' என்று கூற கண்ணபெருமானும் ''ஆம்! துரியோதனனின் உயிர் உண்மையில் அவன் தொடையில்தான் இருக்கிறது. அவன் கூறியவாறு தலையில் அல்ல. வீமன் துரியோதனனின் தொடையைச் சிதைத்தால் அவன் உயிரும் சிதைந்து விடும்' என்று கண்ணபெருமான் திருவாய் மலர்ந்து ஓர் சொல் உரைக்கிறார். இவ்வாறு அவர் உரைத்த ஓர் சொல்லைப் பூமிபாரம் தீர்க்கும் ஒப்பற்ற சொல், பாவம் அனைத்தும் போக்கும் புண்ணிய சொல், பாண்டவர்க்கு வாழ்வளிக்கும் மெய்யான சொல் என்பதாகப் போற்றுகிறார் வில்லிப்புத்தூரார்.

கண்ணபெருமான் துரியோதனனின் உயிர் இருக்கும் உண்மையான இடத்தை உரைத்தவுடன் அர்ச்சுனனும் 'பலே வீமா பலே! இப்படியே நீ யுத்தம் செய். துரியோதனனின் உயிர் பறக்கும்' என்று கூறியவாறு தன் தொடைகளைத் தட்டித் துரியோதனனின் உயிர் இருக்கும் உண்மையான இடத்தை அவனுக்குக் குறிப்பால் உணர்த்துகிறான். குறிப்பில் உணரும் குணம் கொண்டவனாகிய வீமனும்

அர்ச்சுனன் கூறிய குறிப்பைச் சட்டெனப் புரிந்து கொண்டு பிறகு துரியோதனனின் தொடையைக் குறி பார்த்துத் தாக்குகிறான். வீமனின் ஓரடியால் ''ஆ! செத்தேன்'' என்பதாக ஏழடிகள் பின்புறம் போய் கீழே விழுகிறான் துரியோதனன். வீமன் உற்சாகம் மிகக் கொண்டு மீண்டும் மீண்டும் தாவிச் சென்று துரியோதனன் தொடையில் ஓங்கி ஓங்கி அடிக்க அவனுடைய தொடைகள் இரண்டும் ஒடிந்து இரத்தம் ஆறாகப் பாய்கிறது. ஒடிந்து விட்ட தொடைகளுடன் துரியோதனன் எழுந்து நிற்க முயலவே வீமன் அவனுடைய மார்பு, கன்னம், கழுத்து முதலான பல இடங்களிலும், ஓங்கிப் பல குத்துகளை விட்டு மீண்டும் அவன் எழாதபடி அவனை அடித்துத் தரையிலே கிடத்தி விடுகிறான் வீமன்.

இதனால் குற்றுயிராகித் தரையிலே சாய்ந்து விடும் துரியோதனன் இந்த நிலையிலும் கண்ணபெருமானைப் பார்த்து ''நீ இடையர் குலத்தில் வளர்ந்த அந்தக் குலச் சிறுமைக்கேற்ப, நாங்கள் இருவரும் போர் செய்து கொண்டு இருக்க எங்கள் இடையில் நுழைந்து, என்னைக் காட்டிக் கொடுத்து விட்டாய் அல்லவா; பாண்டவர்க்கு ஆட்சியைப் பெற்றுத் தரப் பலப்பல சூழ்ச்சிளைப் புரிந்தாய். அச்சூழ்ச்சியாலேயே என்னையும்கூட அழித்துவிட்டாய். இப்போது மகிழ்ச்சிதானே' உனக்கு என்று பழித்துப் பேச, வீமன் அது பொறுத்திடாமல் பொங்கிவந்து துரியோதனன் தலையைத் தன் காலால் எட்டி உதைக்கிறான்.

வீமனின் இச்செயலைக் காணும் பலராமர் கோபம் மிகக் கொண்டு, தன் ஆயுதங்களில் ஒன்றான உலக்கையினை எடுத்துக் கொண்டு வீமன் மேல் பாய்கிறார். கதாயுத்தம் புரிபவர்கள் தொடைக்கு மேற்பட்ட இடங்களிலேயே அடித்துக் கொள்ள வேண்டும் என்ற விதி இருக்கவும் அதைப் பொருட்படுத்தாமல் தொடையில் அடித்து துரியோதனனைச் சிதைத்ததோடல்லாமல் காலால்

அவன் தலையிலும் எட்டி உதைக்கிறாயா? இதுதான் யுத்த தருமமா? வீமா! உன்னை என்ன செய்கிறேன் பார்?' என்று பலராமர் கொதிக்கிறார். துரியோதனன் பலராமரின் மாணாக்கன். துரியோதனனுக்குக் கதை வித்தை கற்பித்த ஆசான் பலராமரே. அதனால் துரியோதனன் மேல் பலராமருக்கு தனிப்பிரியம் எப்பொழுதும் உண்டு. அதனால்தான் வீமனின் செய்கையைக் கடுமையாக ஆட்சேபித்து பலராமர் வீமன் மேல் பாய, கண்ணபெருமான் பலராமரின் பாதங்களில் விழுந்து வணங்கி 'சாந்தம் கொள் அண்ணா! சாந்தம்' கொள்' என்று வேண்டுகிறார்.

"வீம துரியோதனர்கள் புரிந்த இக்கதாயுத்தம் ஒன்றை மட்டுமே பார்த்துத் துரியோதனனுக்கு அநீதி இழைக்கப் பட்டுவிட்டதாக நீ எண்ணுதல் கூடாது. உண்மையில் கடந்த பதினேழு நாட்களிலும் நடந்த போர்களில் அநியாயங்கள் பல புரிந்தவன் துரியோதனனே. இன்றும் கூட வீமன் தன் உயிர் இருக்கும் மெய்யான இடத்தைக் கூறிப் போர் புரிய துரியோதனன் பொய் கூறிப் போர் புரிந்ததை நீயும் கண்டனை அல்லவா! துரியோதனன் தன் தொடை பிளந்து சாதல் வேண்டும் என்பது அவனுக்கு உள்ள சாபம். அதுவே பாஞ்சாலியின் சபதமும் ஆகும். ஆகவேதான் அவன் தன் தொடை சிதைந்து கிடக்கிறான். இதற்கு நீ கோபம் கொண்டு நமக்குப் பிரியனான வீமனுடன் சமர் எண்ணலாமா? சாந்தம் கொள் அண்ணா, சாந்தம் கொள்" என்று பலராமரைக் கண்ணபெருமான் சாந்தப்படுத்துகிறார்.

இதனால் பலராமரும் சமாதானம் ஆகித் தன் தம்பி சாத்தகியுடன் புறப்பட்டுப் போய்விட அப்பொழுது சூரியனும் அஸ்தமனம் ஆகிறான், துரியோதனனை வென்ற மகிழ்வுடன் பாண்டவர்களுடன் பார்த்தசாரதியும் பாசறைக்குத் திரும்புகிறார். குற்றுயிராய்க் கிடக்கும்

துரியோதனன் மேனியைக் கழுகுகளும் காகங்களும் சூழ்ந்து உண்ண முற்படும் அம்முன்னிரவு நேரத்தில் அசுவத்தாமன், கிருபர், கிருதவமன்மா ஆகியோரோடு துரியோதனன் வீழ்ந்து கிடக்கும் சமந்த பஞ்சகத்திற்கு வந்து துரியோ தனனைக் கண்டு துடிதுடிக்கிறான், சிதைந்து கிடக்கும் அவனுடலை ஆதரவாக எடுத்துத் தன் மடிமேல் வைத்துக் கொள்கிறான். கண்விழித்துப் பார்க்கும் துரியோதனனின் கைமேல் தன் கையை வைத்து அசுவத்தாமன் ''இன்றைய இரவு பொழுது விடிவதற்குள் பாண்டவர்கள் ஐவர் தலை களையும் அறுத்து வந்து உனக்குக் காணிக்கை ஆக்குகிறேன் பார்'' என்று வீர சபதமும் புரிகிறான்.

# 33

இரவு விடிவதற்குள் நான் பாண்டவர் ஐவரையும் கொன்று அவர்கள் தலைகளோடு உன்னை வந்து காண்பேன். இந்நிலவுலகம் முழுவதையும் நீயே இனியும் தொடர்ந்து ஆளலாம். ஆகவே நீ உன் இன்னுயிரை விட்டு விடாதே இதோ நான் புறப்படுகிறேன்'' என்று அசுவத் தாமா கூற அவன் வார்த்தைகளைக் கேட்டு துரியோதனன் மிகவும் மகிழ்ச்சி அடைகிறான். தன்மகிழ்ச்சிக்கு அடையாள மாகத் தன் கிரீடத்தை அலங்கரித்திருக்கும் சிரோ மணியை எடுத்து அசுவத்தாமனுக்குக் கொடுத்து அவனை வாழ்த்தி அனுப்புகிறான்.

இந்த நேரத்தில் பார்த்தசாரதி பாண்டவர்கள் ஐவரையும் அழைத்துக் கொண்டு பாசறையை விட்டுப் புறப்படுகிறார். ''கண்ணா'' எங்கே செல்கிறோம்'' என்று தருமரும் வினவ 'பகைவர்களை வென்ற இன்று நாம், பாசறையில் இருப்பது விவேகம் அல்ல' என்று மட்டும் கூறி யருளுகிறார். அசுவத்தாமனால் இந்த இரவு உண்டாகப் போகும் பேராபத்தைப் பார்த்தசாரதி அறிந்திருந்தும் கூட அவர் அதைப் பாண்டவர்களுக்குக் கூறவில்லை. 'வாருங்கள் இன்றிரவு நாம் பாசறைக்கு வெளியே, தங்கியிருந்து விடிந்தவுடன் வருவோம்'' என்று கண்ணபெருமான் கூறித் தாமே ஒரு பூதத்தை தோற்றுவிக்கிறார். அப்பூதத்திடம் 'பாசறையைக் காவல் செய்' என்று கட்டளையிட்டுக் கண்ணபெருமான் பாண்டவர்களை அழைத்துக் கொண்டு அருகில் இருக்கும் ஒரு காட்டிற்குச் செல்கிறார்.

கண்ணபெருமான் இவ்வாறு பாண்டவர்களைக் காட்டிற்கு அழைத்துப் போய் காவல் செய்து நிற்க, அசுவத் தாமன் 'கிருபரையும், கிருதவன்மாவையும் அழைத்துக்

கொண்டு பாண்டவர்களின் பாசறையை நோக்கி வருகிறான்.

"ஒரு நாழிகை நேரம் கழியட்டும். அயர்ந்து எல்லோரும் கண்ணுறங்கும் நேரத்தில் பாசறைக்குள் நுழைந்து ஐவரின் தலைகளையும் நானே அறுத்து வருகிறேன்' என்று அசுவத்தாமன்கூற கிருபர் 'இது கோழைத்தனம். வீரம் ஆகாது, தருமமும் ஆகாது' என்று மறுத்துரைக்கிறார். அப்பொழுது அருகில் இருக்கும் ஓர் ஆலமரத்தில் காகங்கள் அலறி சப்தமிட அசுவத்தாமன் அதைக் காட்டி 'இரவிலே காகங்களுக்குக்கண்கள் தெரியாதென்பதால் கோட்டான்கள் அவற்றின் கூடுகளுக்கே சென்று அவைகளைத் துன்புறுத்துவதைப் பாருங் ள். இதே காகங்கள், கோட்டான்களுக்குப் பகலில் கண்கள் தெரியாதென்பதால் அவற்றைப் பகலில் துன்புறுத்தும். ஆகவே பகைவரை வெற்றி கொள்ள காலமும் இடமும் அறிவது மிக அவசியம். துரியோதனனுக்குச் செய்து கொடுத்த சபதம் நாம் நிறைவேற்றியாகவேண்டும், அதற்குப் பாண்டவர்கள் உறங்குகின்ற இந்த நள்ளிரவு நேரமே நமக்கு உகந்த நேரம், தருமநியாயம் பார்க்க இது சமயம் இல்லை.' என்று அடாத தன் செயலுக்கு நியாயம் கற்பித்து அசுவத்தாமா அவர்களைப் பாண்டவர்களுடைய பாசறைக்கு அழைத்துச் செல்கிறான்.

தான் நினைக்கும் காரியம் மிக எளிதாக நிறைவேறி விடும் என்று எண்ணித்தான் அசுவத்தாமா பாசறையை நோக்கிச் செல்கிறான். ஆனால் பார்த்தசாரதி காவல் வைத்திருக்கும் பூதமோ அசுவத்தாமனையும் அவன் தோழர்கள் இருவரையும் நன்றாக அடித்து நொறுக்கி அவர்களுடைய ஆயுதங்களையும் அபகரித்துக் கொண்டு விரட்டுகிறது. "உயிர் பிழைத்தால் போதும்' எனமூவரும் பூதத்தின் கைகளுக்கு அகப்படாமல் ஓடிவந்து விடுகிறார்கள். 'இந்தப் பூதம் எங்கே வந்தது? இதை வென்றால் அல்லவா பாசறைக்குள் நாம் நுழைய முடியும்?' என்று கிருதவன்மா வினவுகிறான். 'பாண்டவர் தலைகளுடன் வருகிறேன்.

உயிரை விடாமல் இரு என்று வீரம் பேசி வந்தாயே அசுவத் தாமா! இப்போது பூதம் விரட்ட தலை தெறிக்க எங்களையும் முந்தி ஓடிவந்து விட்டாயே! இனி என்ன செய்யலாம்?" என்று கிருபரும் வினவுகிறார்.

"பாண்டவர் தலைகளை அறுப்பேன். இல்லாவிட்டால் பூதத்திடம் மாள்வேன்' இது உறுதி' என்று உரைக்கும் அசுவத்தாமன் 'கொஞ்சம் பொறுங்கள். சிவபூசை செய்து வருகிறேன்' என்று கூறி அங்கிருக்கும் ஒரு குளிர்ந்த தடாகத்தில் நீராடுகிறான். அந்த தடாகத்தின் கரையிலேயே அமர்ந்து, சிவபெருமானைப் பூசிக்கிறான். பஞ்சாட்சர மகாமந்திரத்தைச் செபித்துக் சைவாகம முறைப் படி அசுவத்தாமன் பூசை செய்ய, சிவபெருமானும் தோன்றுகிறார். "பகைவர்களை வெல்ல ஓர் ஆயுதம் தருக'' என்று அசுவத்தாமன் வேண்ட, சிவபெருமானும் ஒரு வாளினை வழங்கி மறைகிறார்.

சிவபெருமான் கொடுத்த வாளுடன் போய் மீண்டும் பூதத்தோடு போர்புரிகிறான் அசுவத்தாமன். பூதநாயகனாகிய சிவபெருமான் கொடுத்த அவ்வாளுக்கு ஆற்றாமல் அப்பூதமும் அஞ்சி ஓடி விடுகிறது. பிறகு கிருபரையும் கிருதவன்மாவையும் பாசறைக்கு வெளியே நிற்க வைத்து, அசுவத்தாமன் மட்டும் உள்நுழைகிறான். பதினெட்டு நாட்களும் பாரதப் போரில் வீரம் காட்டிய பாண்டவர்களின் தானைத் தளபதியான திட்டதுய்மன் அமைதியாக உறங்கிக் கொண்டிருக்கத் தன் தந்தையைக் கொன்றவன் அவனே என திட்டதுய்மன்மேல் அசுவத்தாமன் பாய்ந்து அவனை அசைய விடாமல் இறுகப் பிடித்து அவன் வாயையும் பொத்தி அவனைக் கொன்றுவிடுகிறான்.

நேருக்கு நேர் நின்று போர் புரிந்திடாமல் இவ்வாறு அசுவத்தாமன் ஒரு கோழையைப் போலவே திட்டதுய்மன் அயர்ந்து உறங்கிக் கொண்டிருக்கும் நேரத்தில் அவன் தலையை அறுத்துக் கொன்று விடுகிறான். வீர வீடு

மரைப் பலிகொண்டவனும் திட்ட துய்மனின் சகோதர னும் ஆன சிகண்டியையும் இவ்வாறே அவன் அறைக் குள் நுழைந்து அவனும் அயர்ந்து உறங்கிக் கொண்டி ருக்கும் நேரத்தில் அசுவத்தாமன் கொன்று விடுகிறான், நள்ளிரவில் பாசறைக்குள் அசுவத்தாமன் ஆற்றிடும் பாவச் செயல்கயைப் பார்த்துப் பாஞ்சால வீரர்கள் பலர் பதைபதைத்து ஓடிவர, அவர்கள் அனைவரையும் சிவபெரு மானின் வாளால் கொன்று தீர்த்து விடுகிறான் அசுவத்தாமன்.

இரவில் இவ்வாறு நடை பெற்றுக் கொண்டிருக்கும் போர் அரவம் ஒன்றும் கேளாதவர்களாய் உப பாண்டவர் கள் ஐவரும் ஓரறையில் அயர்ந்து உறங்கிக் கொண்டிருக் கிறார்கள். விந்தன், சோமன், வீரகீர்த்தி, புண்டலன், ஜெயசேனன் ஆகிய இவ் உப பாண்டவர்கள் ஐவரும் பார்ப் பதற்குத் தருமர், வீமன், அர்ச்சுனன், நகுல, சகாதேவர் களைப் போலவே இருப்பார்கள். இவ்வைவரும் உறங்கும் அறைக்குள் நுழைகிற அசுவத்தாமன் அவர்களைப் பாண்ட வர்களாகவே எண்ணிப் பாய்ந்து அவர்களின் தலைகளையும் அறுக்கிறான். அசுவத்தாமன் ஆத்திரத்தோடு நுழைந்ததை யும் தங்கள் தலைகளை அறுப்பதையும் கூட இளம் பஞ்ச பாண்டவர்கள் ஓர் கனவு போலவே உணர்கிறார்கள்.

''பூதல முழுவதும் கவர்ந்த தந்தையர்கள்
புறத்திடைப் போயதும் துயின்ற
மாதுலன் முனிவன் மதலை கைப்படையான்
மடிந்திடத் தடிந்ததும் உணரார்
தாதலர் அலங்கற் சமர வாண் முனியைத்
கழலிடை வருபெருந்தையல்
காதலம் புதல்வர் கண்துயில் புரிவ
ஓர் கனவு கண்டனர் எனக் கண்டார்''

(பதினெட்டாம் போர்ச்சருக்கம் 217)

நெருப்பிலே தோன்றியவளான துரோபதை பெற்ற இளம் பஞ்ச பாண்டவர்கள் தம்தந்தைமார் ஐவரும் கண்ண பெருமானுடன் கண்துயிலத் பாசறையை விட்டு வெளியேபோனதும் துயிலத் தொடங்கினார்கள். தம் மாமனாகிய திட்ட துய்மன் மடிந்ததைக்கூட அவர்கள் அறியமாட்டார்கள். கனவல்ல உண்மைதான் என்று அவர்கள் தங்கள் மரணத்தைக் கூட உணராத வண்ணம் அவர்கள் ஒரு கனவு காண்பதைப் போல உணர்ந்து விழித்தெழு முன்னமே அசுவத்தாமன்வாள் கொண்டு அறுக்க மாண்டு மடிந்து போகிறார்கள். அசுவத்தாமனும் அவர்கள் ஐவரை இன்னாரெனத் தானும் அறிந்து கொள்ளாமலே பாண்ட வர்கள் எனவே எண்ணியவனாய் அவ்விளங் குருத்துக்கள் ஐவரின் தலைகளையும் அவசர அவசரமாக அறுத்து எடுத்துக் கொண்டுப் பாசறைக்கு வெளியே விரைந்து ஓடி வருகிறான்.

அசுவத்தாமனால் காயப்பட்டுத் தப்பி ஓடிச் சென்ற சில காவலர்கள் பாசறையில் படுத்துறங்கிக் கொண்டிருக்கும் சோழமன்னனைப் போய் எழுப்பி அவனிடம் நிகழ்ந்ததைக் கூறுகிறார்கள். அவனும் விரைந்து எழுந்து தன் பரிவாரங் களோடு வந்து "நள்ளிரவில் பாசறைக்குள் நுழைந்த கயவன் நீ யாரடா?" என்று கேட்டவாறு அசுவத்தாமன் மேல் பாய்கிறான். ஆனால் பகலில் சோழனுக்குப் பயந்து புற முதுகு காட்டிய அசுவத்தாமன் இந்த இரவில் சிவபெரு மான் கொடுத்திருக்கும் வாள்படை கொண்டு சோழன் படை முழுவதும் துவம்சம் செய்து நம்வீர சோழனை யும் வீரசுவர்க்கம் அனுப்பி வைத்து விடுகிறான்.

**"பின்னிய சடையோன் வழங்கிய படைமுன்**
**பிழைத்தவர் யாவரே பிழைத்தார்"**

என்று வினவுகிறார் வில்லிப்புத்தூரார். பதினெட்டுநாள் போரிலும் பகைவர்களை எமனுலகிற்கு அனுப்பித் தாம் தப்பிப் பிழைத்திருந்த மகாவீரர்களான திட்ட துய்மன், சிகண்டி, சோழன் உள்ளிட்ட மிகப் பலரையும் இந்தப்

பதினெட்டாம் நாள் இரவில் கொன்று அழித்து விடுகிறான் அசுவத்தாமன். அன்றைய பகல் போரில் இறந்து பட்டவர்களின் தொகையைப் போல் பத்து மடங்கு அதிகமான வீரர்கள் இரவுப்போரில் அசுவத்தாமனால் அழித்தொழிக்கப் பட்ட கொடுமையை என்னவென்பது?

அசுவத்தாமன் இப்படிப் பட்ட கொடுமையைப் புரிந்து பூமிபாரத்தை முற்றிலும் தீர்க்க தமக்கு உதவ வேண்டும் என்பதனால் தானோ எல்லாம் தெரிந்தவரான பார்த்த சாரதியும் பஞ்சபாண்டவர்களை பாசறையை விட்டு வெளியே வெகு தூரத்திற்கு அழைத்துச் சென்று விடுகிறார். பார்த்தசாரதியின் திருவருளால் பாண்டவர்கள் அசுவத்தாமனின் சக்தி வாய்ந்த வாளுக்குத் தப்பிப் பிழைத்துச் சுகமாக ஓரிடத்தில் இருக்க, அசுவத்தாமனோ பாண்டவர்களின் தலைகளையே தான் அறுத்துத் தன் சபதத்தை நிறை வேற்றி விட்டதாக ஆனந்தமும் மிகக்கொண்டு தன் நண்பர்களோடு துரியோதனன் குற்றுயிராய்க் கிடக்கும் இடத்திற்கு விரைகிறான். விடிவெள்ளி முளைக்கும் முன்னமே வேகமாகச் சென்று துரியோதனன் கிடக்கும் இடத்தைச் சேர்கிறார்கள்.

> ''வந்தனேன் ஐய ! மாதவன் ஏவலால்
> முந்து பூத முதுகிட மாமுடி
> சிந்த யாரையும் செற்று அகல் பாசறை
> ஐந்து வீரர்தம் ஆவியும் கொண்டரோ''
> (பதினெட்டாம் போர்ச் சருக்கம், 222)

என்று அசுவத்தாமன் தான் கண்ண பெருமான் ஏவிய பூதத்தையும் கூட விரட்டியடித்துப் பாண்டவர் தலைகளை அறுத்து வந்த தன் வீரப் பிரதாபத்தை முழக்குகிறான்.

''எங்கே ? என் எதிரிகளின் தலைகளைக் காட்டு'' என்று துரியோதனன் பரபரக்க அசுவத்தாமனும் தான் கொண்டு வந்த ஐந்து தலைகளையும் துரியோதனனுக்கு

முன்னால் வைக்கிறான். மின்னும் நட்சத்திரங்களின் வெளிச்சத்தில் அவை பாண்டவர்களின் தலைகள் தானா என்று துரியோதனன் ஆவலோடு உற்றுப் பார்க்கின்றான். அவனுக்கு அதிலும் ஏமாற்றமே மிஞ்சுகிறது.

''அசுவத்தாமா! நன்றாகப் பார். இவை பாண்டவர்களின் தலைகளா? அல்ல. பாண்டவர்களைப் போலவே இருக்கும் இளம் பஞ்ச பாண்டவர்களின் தலைகள். மாமன்னர்களை வெற்றி கொள்ளும் நீ இந்த இளஞ்சிறுவர்களைக் கொன்று உன் வீரத்தை மாசுபடுத்திக் கொண்டு விட்டாய். குருகுலம் தழைக்க எஞ்சியிருந்த இந்த இளம் குருத்துக்களையும் நீ கொன்று விட்டாயே'' என்று துரியோதனன் கூறி உண்மையாகவே இறந்து பட்ட இளம் பஞ்ச பாண்டவர்களுக்காக வருந்துகிறான்.

> ''துன்னு பாரதம் தோன்றிய நாள்முதல்
> மன்னரோடே மலைந்தனை வாளியால் நீ
> சொன்ன பாலர் மகுடம் துணித்தின்று
> என்ன வீரியம் என்நினைந்து என்செய்தாய்?''
> ''இரு குலத்தில் எமக்கும் அவர்க்கும் இங்கு
> ஒரு குலத்தினும் உண்டென வில்லையாற்
> குரு குலத்தின் கொழுந்தினைக் கிள்ளினை
> வருகுலத்தொரு மாசறு மைந்தனே',

என்று துரியோதனன் சுட்டிக் காட்டிய பிறகு தான் அசுவத்தாமனும் இளம் பஞ்சபாண்டவர்களைப் பாண்டவர்களாய் எண்ணிக் கொன்று விட்ட தன் தவறை மெய்யாலும் உணர்ந்து தானும் வருந்துகிறான்.

பதினெட்டு நாள் போரிலும் துரியோதனனின் மக்கள் உள்பட ஒருவரும் இன்றி அனைவரும் மாண்டு மடிந்து போய் விடுகிறார்கள். பாண்டவரின் மைந்தர்கள் வீர அபிமன்யு, கடோற்கஜன், இராவான் ஆகியோரும் மாண்டு மடிந்து விடுகிறார்கள். ஆகவே குருவம்சம் தழைக்கவென்று எஞ்சியிருந்தவர்கள் விந்தன், சோமன், வீரகீர்த்தி,

புண்டலன், ஜெயசேனன் ஆகிய இளம்பஞ்ச பாண்டவர் களே ஆவார்கள். இவர்களையும் கொன்று குருகுலம் தழைக்க ஒரு வாரிசும் இல்லாமல் ஆக்கிவிட்டானே அசுவத் தாமன் என்பதற்காகத்தான் துரியோதனன் பெரிதும் இந்நேரத்தில் வருந்துகிறான். ஆனால் அவன் வருந்து வதைப் போல் குரு குலம் தழைக்க அறவே ஒருவாரிசும் இல்லாமல் போய்விட வில்லை. அபிமன்யுவின் மனைவி உத்தரையின் கருவில் அபிமன்யுவின் வாரிசாகக் குருகுலம் தழைக்க பரிட்சத்து என்பவன் வளர்ந்து வருகிறான் என் பதை துரியோதனன் அறிய மாட்டான். ஆகவேதான் அவன் ''எங்கள் இருவர் பரம்பரையிலும் ஒரு இளைய வாரிசும் இல்லாதபடி குருகுலக் கொழுந்துகளைக் கிள்ளி விட்டாயே'' என்று அசுவத்தாமனிடம் கூறிவருந்துகிறான்.

இவ்வாறு துரியோதனன் சுட்டிக் காட்டிய பிறகே அசுவத்தாமனும் இளம் பஞ்ச பாண்டவர்களைப் பாண்டவர்களாக மயங்கிக் கொன்றுவிட்ட தன் தவறை உணர்ந்து தானும் வருந்துகிறான். 'அசுவத்தாமன் இத்தவற்றினைப் புரிய ஒரு வகையில் தானும் காரணமே, தன்னால் தூண்டப்பட்டல்லவா அவன் இத்தவற்றினைச் செய்து வந்திருக்கிறான்' என்பதையும் துரியோதனன் தன் உயிர் பறக்க இருக்கும் இந்த இறுதி நேரத்தில் உணர் கிறான். ''எல்லாம் என் தவறுதான். பாண்டவர்களோடு நான் பாசம் பாராட்டிப் பெருந்தன்மையோடு நடந்து கொண்டிருந்தால் இவ்வளவு துயரங்களும் நிகழ்ந்துதான் இருக்காது. எமன் வாயில் நுழையப் போகும் இந்த நேரத்தில் எனக்கு இந்த நல்லறிவு வந்து என்ன பயன்? அசுவத்தாமா? இளம் பாலகர்களைக் கொன்ற உன் பாவம் நீங்க இனி நீ போய் தவம் செய். புண்ணியம் தேடு. புறப்படு போ'' என்று அசுவத்தாமனுக்கும், கிருதன், கிருதவன்மா இருவருக்கும்கூட விடை கொடுத்து அனுப்பு கிறான். துரியோதனனுக்கு நம்பிக்கையாக இருந்து அவனுக்காக இறுதி வரையிலும் போராடியவர்களான

அம்மூவரும் துரியோதனனிடம் இருந்து விடைபெற்று அவ்விடத்தை விட்டுச் சென்று விடுகிறார்கள்..

துரியோதனனின் உயிர் இன்னமும் அவனை விட்டு நீங்கிடவில்லை. அந்த நேரம் சஞ்சய முனிவர் அங்கே வந்து துரியோதனனை கண்டு கண்கலங்குகிறார். அவரிடம் துரியோதனன் "என் தாயும் தந்தையும் துயர்க்கடலில் வருந்திடா வண்ணம் என் மறைவைப் பக்குவமாக எடுத்துக் கூறுங்கள். அவருக்குப் பிரியமான அவர் தம்பி பாண்டுவின் புத்திரர்களான பாண்டவர்களையே இனித்தம் புதல்வராக மதித்து சந்தோசமாக அவர்களை இருக்கச்சொல்லுங்கள்' என்று வேண்டுகிறான்.

''யானும் எம்பியரும் இறந்தோமேனும்
மானபங்கம் மறந்து தன்னெஞ்சினுக்கு
ஆன தம்பி அளித்தவர் தம்மொடும்
கோனிலம் புரக்கும் படி கூறுவாய்''
(பதினெட்டாம் போர் சருக்கம் 234)

என்று துரியோதனன் வேண்டுவது கல்லுக்குள்ளும் ஈரம் இருக்கும் என்ற உண்மையை நமக்குக் காட்டுகிறது.

துரியோதனன் கூறியவாறே செய்வதாகச் சஞ்சய முனிவரும் விடைபெற்றுச் செல்ல பூவுலகத்தையே பெரிதும் விரும்பிய தன் பூத உடலை பூமியிலே கிடத்தி விட்டுத் தன் உயிரை ஏந்தி விண்ணிற்குப் பறக்கின்றான் துரியோதனன். மூர்க்கனாக இருந்தாலும் இறுதி வரை வீரனாக வாழ்ந்த துரியோதனனின் மரணத்தைக் கண்டும் தேவர்கள் விம்மிதமுற்று பூமழை பொழிந்து அவனை வாழ்த்துகிறார்கள். தேவமகளிரும் தேவரும் எதிர் கொண்டு வரவேற்க நஞ்சாவட்டை பூமாலையுடைய துரியோதனன் வீரசுவர்க்கம் மேவினன் என்கிறார் வில்லிப்புத்தூரார்.

"கிடந்தவுடல் வானவர்தங் கிளைசொரிந்த
பூமழையாற் கெழுமுற்றோங்க
நடந்தஉயிர் புத்தேளிர் அரமகளிர் விழிமலரால்
நலனுற் றோங்க
அடர்ந்து அளிகள் மொகுமொகெனும் ஆமோதம்
வலம்புரிதார் அண்ணல்யாரும்
மிடைந்துமிடைந் தெதிர்கொள்ள வீரருறை
மேலுலகம் மேவினானே"
(பதினெட்டாம் போர்ச் சருக்கம் 236)

இவ்வாறு துரியோதனன் வீரமரணம் அடைந்த செய்தியைச் சஞ்சயமுனிவரும் அஸ்தினாபுரம் வந்து திருதராட்டினிடமும் காந்தாரியிடமும் கூறுகிறார். போர் தொடங்கிய நாள் முதலாகவே தம்மக்கள் நாள்தோறும் மடிந்து எண்ணிக்கையில் குறைந்து கொண்டிருந்த செய்திகள் யாவும் அறிந்து அப்பெற்றோர்கள் துயர்க் கடலிலேயே தத்தளித்துக் கொண்டிருந்தார்கள். துரியோதனனும் மடிந்தான் என்ற சோகத்தை அவர்களால் தாங்க முடிய வில்லை. சஞ்சயமுனிவரின் வார்த்தையாகிய கொடிய நஞ்சினை உண்ட அளவிலே அவர்கள் துடிதுடித்துத் துயர்க்கடலை நீந்திக் கரை காண முடியாமல் அதில் மூழ்கி ஆழ்ந்து விடுகிறார்கள்.

அஸ்தினாபுரத்தில் திருதராட்டிரன் காந்தாரி நிலை இவ்வாறு இருக்க இங்கே குருசேத்திரத்தில் இரவு விடிந்த அதிகாலை நேரத்தில் பாசறைக்குப் பாண்டவர்களுடன் திரும்பிவருகிறார் பார்த்தசாரதி. பாசறையில் இரவில் நிகழ்ந்த கோர சம்பவங்களைக் கேட்டுப் பாண்டவர்கள் ஐவரும் அதிர்ச்சிக்கும் அளவிலாத் துயரத்திற்கும் உள்ளாகிறார்கள். தலையற்ற மைந்தர்களின் உடலங்கள் மேல் வீழ்ந்து துரோபதை கதறிக் கொண்டிருக்கிறாள். "அசுவத்தாமன் செய்த அக்கிரமத்தைப் பாருங்கள். அவனைக் கொன்றால் ஒழிய என் கோபம் தணியாது"

என்று துரோபதை கொதிக்க "அசுவத்தாமனைக் கொல்லாமல் விடமாட்டோம்" என வீமனும் அர்ச்சுனனும் அவனைத் தேடி ஓடமுற்படுகிறார்கள். அவர்களைப் பார்த்த சாரதிப் பெருமானே தடுத்து நிறுத்துகிறார்.

"அசுவத்தாமன் துரியோதனனுக்கு நேற்று இரவு செய்து கொடுத்த சத்தியமும் அவன் இங்கே வரப் போவதையும் நான் அறிவேன். அவனால் உங்களுக்கு ஆபத்து நேரக்கூடும் என்பதால்தான் உங்களைப் பத்திரமாகத் தனி இடத்திற்கு அழைத்துப் போனேன். நான் காவலுக்கு நிறுத்திச் சென்ற பூதத்தையே அவன் வென்றுவிட்டான் எனும்போது நீங்கள் இங்கிருந்தால் உங்களையும் தான் வென்றிருப்பான். சிவபெருமானின் வாளால் உங்கள் ஐவரையும் வெட்டி இருப்பான். "வன்பாரதப்போரில் வந்தடைந்தேம் ஐவரையும் நின்பார்வையாற் காக்கவேண்டும்" என்று அன்றைக்கு நீங்கள் என்னை சரணம் அடைந்தீர்கள். நானும் இன்று இந்த நேரம் வரை நான் செய்து கொடுத்த வாக்கின்படி உங்கள் ஐவரையும் காப்பாற்றிக் கொடுத்துவிட்டேன். உங்களைக் காப்பதற்காக நான் பட்ட கஷ்டங்கள், நங்ான் செய்த சூழ்ச்சிகள், தந்திர மாயவித்தைகள் எல்லாமும் நீங்கள் அறிவீர்கள். இனி நீங்கள் அசுவத்தாமனோடு போருக்குச் சென்றால் உங்கள் உயிருக்கு நான் உறுதி கொடுக்க முடியாது. அசுவத்தாமனும் தன் தவறை உணர்ந்து தவம் செய்யப் புறப்பட்டு விட்டான். அவனை அவன் வழியில் தவம் செய்ய விட்டு விடுவதே நல்லது. அவ்வாறு அல்லாமல் நீங்கள் அவனோடு போருக்குப் போனால் அவனிடம் பாசுபதாஸ்திரம் உள்ளது. நீங்கள் பிழைப்பது இயலாது. அதைப் புரிந்து கொள்ளுங்கள்' என்று பயமும் நயமுமாகக் கண்ணபெருமான் எடுத்துக்கூறி வீமனையும் அர்ச்சுனனையும் சாந்தப்படுத்துகிறார். அவரே துரோபதையிடமும் "கற்புடைய மங்கையர்க்கு மக்களை விடவும் கணவரே முக்கியம். நீயும் உன் கணவன்மாரும் பிழைத்து இன்று உயிரோடு இருப்பதற்காக மகிழ வேண்டுமே தவிர, மடிந்த

மைந்தர்களுக்காக வருந்தக் கூடாது' என்று கூறி அவளை யும் சாந்தப்படுத்துகிறார்.

கண்ணபெருமான் 'இறந்துபட்டவர்களுக்கான இறுதி சடங்குகளை இனி முறையே ஆற்றிடுக' என்று தருமரிடம் கூற அவரும் உலூக முனிவரை முன் வைத்துத் தம் மூத்த வனாகிய கர்ணன் உள்பட போரில் இறந்துபட்ட தம்மவர் அனைவருக்குமான அந்திமக்கிரியைகளைச் செய்து முடிக் கிறார். அதற்குப் பிறகு அனைவரும் புறப்பட்டுப் போய் அஸ்தினாபுரம் சேர்கிறார்கள்.

துரோபதை தான் செய்திருந்த சபதத்தின்படி துரியோதனன் துச்சாதனன் குருதியைப் பூசி அவிழ்ந் திருக்கும் தன் கூந்தலை அள்ளி முடிக்கிறாள். வீமனும் துரியோதனனைக் கொன்று தன் சபதம் நிறைவேற்றிய படியால் தன் கைகளாலேயே நீரினை பருகத் தொடங்கு கிறான். ஆயினும், வில்லிப்புத்தூரார் தாம் செய்திருக்கும் பாரத காவியத்தில் இவற்றை எல்லாம் விரிவுபடவோ, சுருக்கமாகவோ கூட உரைத்தார் இல்லை. இதற்குக் காரணம் யாதாக இருக்கும் என்று சிந்திக்கும்போது பதினெட்டாம் நாள் இரவில் நிகழ்ந்துவிட்ட உப பாண்டவர் மரணமும்,திட்டதுய்மன்,சிகண்டி போன்றோர் மரணமும் பாண்டவர்களை நிலைகுலையச் செய்து அவர் களைச் சொல்லொணத் துயரத்திற்கு ஆளாக்கி விட்டதையே கூறவேண்டும். எதிர்பாராத அந்த நள்ளிரவு சம்பவங்கள் போரின் கொடுமையை உணர்த்தி பாண்டவர்கள் பெற்ற வெற்றியைப் பெரிதாக எடுத்துக் கொள்ள முடியாமல் அவர்களைப் பெரிதும் பாதித்து விட்டது என்றே கூறவேண்டும்.

'குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை' 'கண்மலரில் கை படாதோ?' என்று தருமர் கூறிய அறிவுரைகளைத் தம்பிகள் ஏற்றுக் கொண்டிருந்தாலும். துரியோதனன் தன் பிடிவாத குணத்தை விட்டுப் பாண்டவர்களோடு சமாதான மாகப் போயிருந்தாலும் பதினெட்டு அக்குரோணி

சேனைகள் பதினெட்டு நாட்களில் அழிவுபட்டிருக்க வேண்டி இருந்திருக்காது. மற்றமற்ற வீரர்கள் மாண்டு மடிகிற போதெல்லாம் போரின் கொடுமையைப் பாண்டவர்கள் ஆகட்டும், அவர்களின் பத்தினியாகிய துரோபதை ஆகட்டும் உணர்ந்து கொள்ளவில்லை. அபிமன்யு, இராவான், கடோற்கஜன் ஆகிய பிரிய மைந்தர்கள் இறந்துபட்ட போதும் அதை அவர்கள் வீரத்தின் பரிசாகவே உணர்ந்தார்களே தவிர அப்போதும் போரின் கொடுமையை அவர்கள் முற்றிலுமாக உணர்ந்து கொள்ளவில்லை.

போர் முடிந்த அந்தப் பதினெட்டாம் நாள் இரவு அநியாயமாக இளம் பஞ்ச பாண்டவர்களின் மரணத்தைச் சந்திக்க நேர்கிறபோது தான் பகையுணர்ச்சி பழியுணர்ச்சி ஆகியவற்றை தூபம் போட்டு வளர்ப்பதான போரின் கொடுமையை அவர்கள் முற்றிலுமாக உணர்கிறார்கள். அதனால் தான் பகையுணர்ச்சியை— பழி உணர்ச்சியை உண்டாக்கிப் போருக்கும் சமுதாய கேட்டிற்கும் காரண மாகும் சபத நிறைவேற்றம் முதலியவைகளைப், பெரிது படுத்திப் பேசக்கூடாது என்பதனால் வில்லிப்புத்தூரார் 'துரோபதை தன் கூந்தலில் சிக்கெடுத்தாள்; முடித்தாள்' போன்ற பாஞ்சாலி சபதம் நிறைவேறிடும் பகுதிகளை விவரிக்கவில்லை என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். பாரதப் போர் முடிந்த நாளில் பாண்டவர்களும் துரோபதையுமே கூட தாங்கள் உற்ற பேரிழப்புகளால் தங்கள் சபதத்தைப் பற்றி நினைக்கவோ அல்லது அதைப் பெருமைப்படுத்திப் பேசவோ இயலாத பேரிழப்பிற்கு ஆளாகிப் போர்க்களம் அவர்களுக்குக் கற்றுத் தந்த போதனையை அவர்களும் செவ்வனே உணர்ந்து கொண்டு விடுகிறார்கள். இவ்வாறு மகாபாரதக் காவியம் சூது போரின் தீமையை மட்டும் அல்ல, மோது போரின் தீமையையும் கூட இப்பேருலகிற்கு எடுத்துக் காட்டும் அற்புதப் பெருங்காவியமாகத் திகழ்கிறது.

பாரதப் போருக்குப் பிறகு அஸ்தினாபுரம் வந்து சேரும் பாண்டவர்கள் தம் பெரிய தந்தை திருத ராட்டிரனைக் கண்டு வணங்கி ஆசி வேண்டுகிறார்கள். தருமரைத் தம்மெய்யாரத் தழுவித் திருதராட்டிரன் ஆசி கூறுகிறான். ''வீமன் எங்கே? ஆசை தீர அவனை நான் கட்டித் தழுவிக்கொள்ள வேண்டும்''என்று திருதராட்டிரன் கூற வீமனும் செல்கிறான். அப்பொழுது பார்த்தசாரதி வீமனை தடுத்து நிறுத்தி விடுகிறார். ''இதோ வீமன் வருகிறான்'' என்று கூறி ஒரு பெரிய இரும்புத் தூணைக் கொண்டு வந்து குருடனான திருதராட்டிரன் முன் நிறுத்தச் செய்கிறார் கண்ணபெருமான். பதினாயிரம் யானை பலம் கொண்ட திருதராட்டிரனும் அவ்விரும்புத் தூணை வீமன் எனவே எண்ணித் தழுவுகிறான். ''இவன் தானே என் மக்களைக் கொன்றவன்'' என்ற கோபமும் திருதராட்டி ரனிடம் உண்டாக அவன் தன் பலத்தை எல்லாம் காட்டி இரும்புத் தூணை நொறுக்க, அத்தூணும் பொடிப் பொடி யாய்ச் சிதைந்து அழிகிறது.

வீமனைக் கொல்ல வேண்டும் என்பது திருதராட்டிர னின் எண்ணம் இல்லை. வீமனைக்கட்டித் தழுவுகிறபோது நொடிநேரம் கோபத்திற்கும் பழி உணர்ச்சிக்கும் ஆளாகி விடுகிறான். பிறகு அவனே ''நான் என் கோபத்தால் இப்படிச் செய்து விட்டேனே'' என்று வருந்தவும் செய் கிறான். இப்படி ஆகும் என்று உணர்ந்துதான் பார்த்த சாரதி வீமனைத் தடுத்து நிறுத்தி இரும்புத் தூணைத் திருதராட்டிரனுக்குக் காட்டினார். பார்த்தசாரதி இவ் வுபாயம் செய்திராவிடில் திருதராட்டிரன் வீமனை அப்பளம் நொறுக்குவதைப் போலவே நொறுக்கிவிட்டிருப்பான்.

கண்ணபெருமான் ''திருதராட்டிரனிடம் கவலை வேண்டாம். வீமன் சாகவில்லை. வீமன் என்று நினைத்து இரும்புத் துணைத்தான் நொறுக்கி விட்டீர்கள்'' என்று கூறி அவன் கவலையை மாற்றுகிறார். திருதராட்டிரனும்

பார்த்தசாரதியைப் போற்றித் தன் தவறைப் பொறுத்திட வேண்டுகிறான். அதற்குப் பிறகு பார்த்தசாரதி அனுமதிக்க வீமனை அன்போடு அணைத்து ஆசி கூறி, அர்ச்சுனன், நகுல, சகா தேவர்களையும் அவர் ஆசீர்வதிக்கிறார்.

பார்த்தசாரதி தம் தமையனாரான பலராமர், தம்பி சாத்தகியோடு வீற்றிருந்து தருமருக்குப் பட்டாபிசேகத்தை யும் தாமே தம்திருக்கரங்களால் செய்து வாழ்த்துகிறார்.

''இனி ஊழி வாழ்திரென இளைஞர் ஒரு
நால்வருடன் அறத்தின் மைந்தன்
தனையிருத்தி மீள்வலெனச் சாத்தகியும்
அலாயுதனுந் தன்னைச் சூழ
வினை அகற்றும் பசுந்துளவோன் துவரைநகர்த்
திசைநோக்கி மீண்டான் கீர்த்திக்
கனைகடல்பார் அளித்தவரும் அந்நகரில்
அறநெறியே கருதி வாழ்ந்தார்''

(பதினெட்டாம் போர்ச் சருக்கம், 250)

''நெடுங்காலம் அரசாண்டு வாழ்வீராக'' என்று வாழ்த் தும் பார்த்தசாரதிப்பெருமான் விடைப்பெற்றுத் தம் உடன் பிறந்தாருடன் துவாரகாபுரியைச் சென்றடைய, பாண்ட வர்கள் தரும ராஜ்ஜியம் நிறுவி அதனைப் பரிபாலித்து சிறப்புற வாழ்கிறார்கள் என்று கூறி இத்துடன் வில்லிப்புத் தூரார் நமது காவியத்தை நிறைவு செய்திருக்கிறார்.

தருமம் வெல்லவும், தருமம் நிலைக்கவும், தருமம் தழைக்கவும் எல்லாம் வல்ல பார்த்தசாரதிப் பெருமான் என்றும் திருவருள் புரிவார். அவர் திருவடிகளைத் தொழுது நாம் உய்வோம்,

''பேர்படைத்த விசயனுடன் மும்மை நெடும்
பிறவியிலும் பிரியான் ஆகிச்
சீர்படைத்த கேண்மையினால் தேரூர்தற்கு
இசைந்தருளும் செங்கண்மாலை
பார்படைத்த சுயோதனற்குப் படைஎடேன்
அமரில் எனப்பணித்த கோவை
கார்படைத்த நிறத்தானைக் கைதொழுவார்
பிறவாழி கரை கண்டாரே''

நிறைவு பெறுகிறது.





## நன்றி

''திருக்கோயில்'' இதழில் கட்டுரைத் தொடராக வந்த இக்காவியத்தை நூலாக வெளியிட அனுமதி வழங்கிய இந்து சமய அறநிலைய ஆட்சித் துறைக்கு என் மனமார்ந்த நன்றியும் வணக்கமும் காணிக்கையாக்குகிறேன்.